# சங்க இலக்கியத்தில் நெய்தல் நில மகளிர்

முனைவர் (பிஎச்.டி.) பட்டப்பேற்றிற்காகச்
சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு
அளிக்கப்பட்ட ஆய்வேடு

ஆய்வாளர்
சா. வனிதா எம்.ஏ.,எம்.ஃபில்.,

மேற்பார்வையாளர்
முனைவர் கு. மங்கையர்க்கரசி
எம்.ஏ.,பி.எட்.,எம்.ஃபில்.,பிஎச்.டி.
இணைப்பேராசிரியர்
தமிழ்த்துறை
எத்திராஜ் மகளிர் கல்லூரி(தன்னாட்சி)
சென்னை – 600 008



தமிழ்த்துறை
எத்திராஜ் மகளிர் கல்லூரி(தன்னாட்சி)
சென்னை – 600 008

ஏப்ரல் – 2013

முனைவர் **கு. மங்கையர்க்கரசி** எம்.ஏ.,பி.எட்.,எம்.ஃபில்.,பிஎச்.டி.

(மேற்பார்வையாளர்)

இணைப்பேராசிரியர்,

தமிழ்த்துறை,

எத்திராஜ் மகளிர் கல்லூரி(தன்னாட்சி),

சென்னை – 600 008.

# மேற்பார்வையாளர் சான்றிதழ்

**"சங்க இலக்கியத்தில் நெய்தல் நில மகளிர்"** என்னும் தலைப்பிலான இவ்வாய்வேடு எத்திராஜ் மகளிர் கல்லூரி (தன்னாட்சி) தமிழ்த்துறையில் முனைவர் (பிஎச்.டி.,) பட்டப்பேற்றிற்காகத் **திருமதி சா. வனிதா,** 2010–2013 ஆம் கல்வியாண்டில் நிகழ்த்தி வழங்கியதாகும். இவ்வாய்வேடு இதற்கு முன் வேறு ஆய்வுபட்டத்திற்கோ, ஆய்வரங்கிற்கோ அனுப்பப் பெறவில்லை எனவும் இந்த ஆய்வு அவர் தம் சொந்த முயற்சியால் உருவானது எனவும் சான்றளிக்கிறேன்.

கு மங்கையர்க்கரசி 29/4/13

**(கு. மங்கையர்க்கரசி)**

**மேற்பார்வையாளர்**

இடம்: சென்னை – 600 008.

நாள்: 29.04.2013




முனைவர் திருமதி கு. மங்கையர்க்கரசி
எம்.ஏ., பிஎட்., எம்.ஃபில்., பிஎச்.டி.
இணைப் பேராசிரியை - தமிழ்த்துறை
எத்திராஜ் மகளிர் கல்லூரி (தன்னாட்சி)
சென்னை - 600 008

**சா. வனிதா,** எம்.ஏ.,எம்.ஃபில்.,
முழுநேர முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழ்த்துறை,
எத்திராஜ் மகளிர் கல்லூரி(தன்னாட்சி),
சென்னை – 600 008.

# ஆய்வாளர் உறுதிமொழி

**"சங்க இலக்கியத்தில் நெய்தல் நில மகளிர்"** என்னும் தலைப்பில் முனைவர் பட்டப்பேற்றிற்காக எத்திராஜ் மகளிர் கல்லூரி (தன்னாட்சி) தமிழ்த்துறையில் **முனைவர் கு. மங்கையர்க்கரசி** அவர்களின் மேற்பார்வையின்கீழ் செய்யப்பட்ட இவ்வாய்வு எனது சொந்த முயற்சியில் உருவானதாகும். இதற்கு முன் எந்த ஆய்வுபட்டத்திற்கும், இவ்வாய்வேடு அளிக்கப் பெறவில்லை என்றும், இத்தலைப்பில் வேறு எவரும் ஆய்வு நிகழ்த்தவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.

வனிதா

இடம்: சென்னை – 600 008. **(சா. வனிதா)**

நாள்: 29.04.2013 ஆய்வாளர்

# நன்றியுரை

இன்று வரையில் பல சாதனையாளர்களை உருவாக்கியுள்ள சென்னைப் பல்கலைக்கழகம் எனது ஆய்வினை மேற்கொள்ள அனுமதி அளித்ததற்கு நன்றி. புகழ்பெற்ற எத்திராஜ் மகளிர் கல்லூரி என்னையும் தத்தெடுத்துக் கொண்டதற்கு நன்றியைக் காணிக்கையாக்குகிறேன்.

எனக்கு இக்கல்லூரியில் இடமளித்த மேனாள் கல்லூரி முதல்வர் முனைவர் தவமணி அவர்களுக்கும், இன்னாள் முதல்வர் முனைவர் ஜோதிகுமாரவேல் அவர்களுக்கும் நன்றி.

எனது ஆய்வினை மேற்கொள்ளத் தமிழ்த்துறையில் அனுமதியளித்த தமிழ்த் துறைத் தலைவர் முனைவர் நித்யகல்யாணி அவர்களுக்கும் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

எனது ஆய்வுத் தலைப்பைத் தேர்ந்தெடுத்துக் கொடுத்ததிலிருந்து ஆய்வு முடியும் வரை சென்ற போதெல்லாம் இன்முகத்தோடு வரவேற்றுப் பல கருத்துக்களை வழங்கி வழி நடத்திச் சென்ற என் நெறியாளர் முனைவர் கு.மங்கையர்க்கரசி அவர்களுக்கு நான் என்றும் நன்றி சொல்லக் கடமைப்பட்டுள்ளேன்.

ஆய்வு செம்மையாக நிகழ ஆய்வு சார்ந்த நூல்களையும்,கருத்துக்களையும் வழங்கியதோடு ஆய்வேட்டினைச் செம்மைப்படுத்திய முனைவர் ப. கிருஷ்ணன் அவர்களுக்கு என்றும் என் நெஞ்சார்ந்த நன்றியை உரித்தாக்கிக் கொள்கிறேன்.

எப்போதும் மாணவர்களிடம் அன்போடும் பாசத்தோடும் நடந்துகொள்வதோடு புதுப் புதுச் சிந்தனைகளை வழங்கி வழிநடத்திவரும் எம் தமிழ்த்துறைப் பேராசிரியர்கள் ஒவ்வொருவருக்கும் என் தனிப்பட்ட நன்றியை உரித்தாக்குகிறேன்.

இக்கல்லூரியில் சேர்ந்து பயில உதவி புரிந்த பச்சையப்பன் கல்லூரிப் பேராசிரியர் அமரர் முனைவர் இராம. வேணுகோபால் அவர்களை என்றும் நினைவு கூரக் கடமைப்பட்டுள்ளேன்.

என்னை இம்மண்ணுலகிற்கு அறிமுகப்படுத்திய என் தாய் தந்தைக்கும், எனது சிந்தனை, செயல், எண்ணம் ஆகிய எல்லாவற்றிற்கும் உயிரூட்டிக்கொண்டிருக்கும் என் கணவர் கோ. முத்து கணபதி அவர்களுக்கு என்றும் என் நன்றி. என் ஆய்விற்கு ஊக்கம் அளித்துப் புத்துணர்ச்சி ஊட்டி என் ஆய்வோடு வளர்ந்த என் கண்மணிகள் தனவைஷ்ணவி, வர்ஷினி விசாலாட்சியை என்றும் மனதில் நிறுத்தி மகிழ்கின்றேன்.

என் ஆய்விற்கு உறுதுணையாக இருந்த முனைவர் பட்ட ஆய்வாளர் தங்கை ம. விசயலட்சுமி அவர்களை என்றும் அன்புடன் எண்ணுகிறேன்.

எனது ஆய்வுப் பணிக்குத் தேவையான புத்தகங்களை உரிய நேரத்தில் கொடுத்துதவிய எத்திராஜ் மகளிர் கல்லூரி நூலகத்தாருக்கும், கன்னிமார பொதுநூலகத்தாருக்கும், உலகத்தமிழாராய்ச்சி நிறுவனத்தாருக்கும், அண்ணா நூற்றாண்டு பொதுநூலகத்தாருக்கும், தேவநேயப்பாவாணர் நூலகத்தாருக்கும், மறைமலையடிகள் நூலகத்தாருக்கும், பச்சையப்பன் கல்லூரி நூலகத்தாருக்கும், ரோஜா முத்தையா நூலகத்தாருக்கும் எனது உளமார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

ஆய்வுக் காலத்தில் ஆய்விற்குத் தேவையான நூல்களையும், கருத்துக்களையும் வழங்கிய சகதோழிகளுக்கும் நன்றி தெரிவித்துக்கொள்கிறேன். ஆய்வு தொடர்பான அலுவலக உதவிகளை நல்கிய கல்லூரி அலுவலர்களுக்கு நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

என் ஆய்வேட்டைச் சீரிய முறையில் வடிவமைத்துக் கொடுத்த தெ. முத்து அவர்களுக்கு என்றும் என் நன்றி உரியது.

என் ஆய்வு நன்முறையில் நிகழ உதவிய அனைத்து உள்ளங்களுக்கும் மனமார்ந்த நன்றி.

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகத். | – | அகத்திணையியல் |
| அகம். | – | அகநானூறு |
| ஐங். | – | ஐங்குறுநூறு |
| கலித். | – | கலித்தொகை |
| களவு. | – | களவியல் |
| கற்பு. | – | கற்பியல் |
| குறிஞ்சி. | – | குறிஞ்சிப்பாடல் |
| சிறு. | – | சிறுபாணாற்றுப்படை |
| தொல். | – | தொல்காப்பியம் |
| நற். | – | நற்றிணை |
| நூ.எண் | – | நூற்பா எண் |
| நெடு. | – | நெடுநல்வாடை |
| ப. | – | பக்கம் |
| பக். | – | பக்கங்கள் |
| ப.ஆ. | – | பதிப்பாசிரியர் |
| பட்டி. | – | பட்டினப்பாலை |
| பரி. | – | பரிபாடல் |
| பா.எண் | – | பாடல் எண் |
| புறம். | – | புறநானூறு |
| பெரும். | – | பெரும்பாணாற்றுப்படை |
| மது. | – | மதுரைக்காஞ்சி |
| மரபு. | – | மரபியல் |
| மு. நூ. | – | முந்நூல் |
| P | – | Page |

# பொருளடக்கம்

## முன்னுரை

இலக்கு உள்ளது இலக்கியம். சங்க கால மக்களின் வாழ்வினைச் சித்தரிப்பதை இலக்காகக் கொண்டு எழுதப்பட்டவை சங்க இலக்கியங்கள். காலப்போக்கில் என்றும் அழியாமல் பழமையும் பெருமையும் மிக்கதாகப் பண்டைத் தமிழரின் வாழ்வினைப் பறைசாற்றி நிற்கும் கருவூலமாக அவ்விலக்கியம் திகழ்கிறது. இயற்கையோடு இயைந்து வாழ்ந்த வாழ்வினை எடுத்துக்காட்டுவதோடு அளவான கற்பனையும், விழுமிய உணர்ச்சியும், ஆழ்ந்த கருத்தும், எளிய வடிவமும் கொண்டிருப்பது அதன் தனிச்சிறப்புகள் ஆகும்.

சங்க இலக்கியம் மனித வாழ்வை அகம்,புறம் என்ற இருநிலைகளில் பிரிக்கிறது. தமிழ் அகஇலக்கியம் போன்று திட்டப்பாங்கான கட்டமைப்பில் வேறு எந்த மொழியிலும் பாடல்கள் இல்லை என்று கூறப்படுகிறது. சங்கத் தமிழரின் ஒழுக்கம், ஏற்றுக் கொண்ட பண்பாடு முதலியவற்றை அகஇலக்கியங்கள் சாற்றுகின்றன. பண்டைத் தமிழரின் வீரவாழ்வைப் புற இலக்கியங்கள் பகர்கின்றன.

அகத்துறைப்பாக்கள் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் , பாலை எனும் ஐந்திணைகளை அடிப்படையாகக் கொண்டு பாடப்பட்டவை. இவ்வந்திணைகளில் ஒன்றாகிய நெய்தல் கடலும் கடல் சார்ந்த இடமுமாகும். இந்நிலத்தில் வாழ்ந்த பரதவப் பெண்களின் வாழ்வியலைப் பொதுவான நோக்கில் அலசிப் பார்ப்பது காலத்திற்குத் தேவையான ஒன்றாகும்.

### ஆய்வுத் தலைப்பு

சங்க இலக்கியத்தில் நெய்தல் நில மகளிர் என்பது ஆய்வுப் பொருளாக அமைகின்றது.

## ஆய்வு நோக்கம்

சங்க இலக்கியம் காட்டும் ஐவகை நிலங்களில் ஒன்றாகிய நெய்தல் நிலத்தில் வாழ்ந்த பெண்களின் வாழ்வியல் பொதுவான நேக்கில் ஆராயப்படுகிறது. கடல் சார்ந்து வாழ்ந்த அப்பெண்கள் குடும்பத்தில் சமூகத்தில் எந்நிலையில் இருந்தனர் என்பது விளக்கமான முறையில் ஆராயப்படுகிறது. பரதவப் பெண்களின் அக,புற வாழ்க்கை நிலையில் இல்லறம், விருந்தோம்பல், பணிகள், கடமைகள், உறவுகள், தொழில்முறைகள், இடர்பாடுகள் போன்ற பதிவுகள் ஆய்வின் எல்லையாக வரையறை செய்யப்பட்டு அவற்றைச் சங்கஇலக்கிய நெய்தல் பாடல்கள் வழி இனம்காணும் முயற்சியில் இவ்வாய்வு மேற்கொள்ளப்படுகிறது.

## ஆய்வு எல்லை

தமிழ் இலக்கியங்களில் முதன்மையாகக் கருதப்பெறும் சங்கஇலக்கி நூல்களான பாட்டும் தொகையுமாகிய பதினெட்டு நூல்களே இவ்வாய்வுக்கான எல்லையாக வரையறை செய்யப்பட்டுள்ளன.

## ஆய்வு அணுகுமுறை

இவ்வாய்வு முழுவதும் பகுப்பாய்வு முறையும், விளக்கமுறைத் திறனாய்வு முறையும் கையாளப்பட்டுள்னன.

## ஆய்வு மூலங்கள்

ஆய்வுக்குத் தேவையான மூலங்கள் இரண்டு வகைகளில் திரட்டப்பட்டுள்ளன. அவை,

1. முதன்மை நூல்கள்
2. துணைமை நூல்கள்

என்பனவாகும்.

**முதன்மை நூல்கள்**

பாட்டும் தொகையும் என்று சுட்டப்படுகின்ற சங்க இலக்கியங்களான பதினெட்டு நூல்கள் முதன்மை நூல்களாகக் கொள்ளப்பட்டுள்ளன.

**துணைமை நூல்கள்**

ஆய்வு தொடர்பான நூல்கள், கட்டுரைகள், ஆய்வேடுகள், கலைக்களஞ்சியங்கள், அகராதிகள், இலக்கண நூல்கள் போன்றவை துணைமை நூல்களாகக் கொள்ளப்பட்டுள்ளன.

## ஆய்வேட்டின் அமைப்பு

இவ்வாய்வேடு முன்னுரை முடிவுரை நீங்களாக ஆறு இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. அவை ,

1. நெய்தல் நிலம் ஓர் அறிமுகம் .
2. குடும்ப நிலையில் பரதவ மகளிர் .
3. சமூக நிலையில் பரதவ மகளிர் .
4. பரதவ மகளிர் விளையாட்டுகள் ஆடை அணிகலன் ஒப்பனை.
5. நெய்தல் புலவர்களின் பார்வையில் இரங்கல்.
6. நெய்தல் திணை கட்டமைக்கும் பரதவப் பெண் என்பனவாகும் .

## இயல்–1 : நெய்தல் நிலம் ஓர் அறிமுகம்

நெய்தல் நிலம் ஓர் அறிமுகம் என்ற முதல் இயல் நிலம் பாகுபாடு : நெய்தல் நிலம் – பெயர்க்காரம் . நெய்தல் மலர் – தோற்றம் . நெய்தல் – சொல்லாட்சி . நெய்தல் நில அமைப்பு . நெய்தல் நிலத்தில்காணப்படும் செடி , கொடி ,மரவகைகள். மரங்கள்–புன்னை, ஞாழல், தில்லை, நாவல்,வேம்பு, செருந்தி, குரவம், புன்கு. செடி, கொடிகள்– அடும்பு, தாழை, முண்டகம், ஈங்கை. பறவைகள்– அன்னம், அன்றில், சிறுவெண் காக்கை, குருகு, நாரை, கொக்கு, ஆந்தை, வௌவால். கடல் கழிமுகம் வாழ் உயிரினங்கள்– சுறா மீன்கள், அலவன், முத்துச் சிப்பிகள், சங்குகள், இப்பிகள், தாலி, சிறுமீன்கள், யாமை,

நீர்நாய், முதலை. நெய்தல் நிலக்குடியிருப்புகள்– சேரி, பட்டினம், பாக்கம் விளக்கம். குடிசையமைப்பு, மக்கள், தொழில். நெய்தல் திணையில் இடம்பெற்றுள்ள கூற்றுகள்– தலைவன் கூற்று, தலைவி கூற்று, தோழி கூற்று, கண்டோர் கூற்று, பரத்தை கூற்று, வாயில்கள் கூற்று, நெய்தல் திணை பாடிய புலவர்களின் பெயர்கள் மற்றும் எண்ணிக்கை. நெய்தல் பாடல்களை ஆராய்ந்த அறிஞர்களின் ஆய்வுகள் பற்றிய செய்திகள் விளக்கமாகக் கூறப்பட்டு ஆராயப்பட்டுள்ளன.

**இயல்– 2 : குடும்ப நிலையில் பரதவ மகளிர்**

குடும்ப நிலையில் பரதவ மகளிர் என்ற இரண்டாம் இயல் குடும்பம்– விளக்கம். களவு – பொய்யும் வழுவும், கற்பு, அருங்கலம், திருமணம், இல்லறம், இல்லறப்பாங்கு, விருந்தோம்பல், பணிகள், பிள்ளைப்பேறு. குடும்ப வகைகள் – தனிக்குடும்பம், பெருங்குடும்பம், விரிந்த குடும்பம். இக்குடும்ப அமைப்பில் பெண்களின் பங்கு பற்றிய செய்திகள் கண்டறியப்பட்டுத் தெளிவுபடுத்தப்பட்டுள்ளன.

**இயல்– 3 : சமூக நிலையில் பரதவ மகளிர்**

சமூக நிலையில் பரதவ மகளிர் என்ற மூன்றாம் இயல் சமூகம் – விளக்கம். காதல், புறம்பேசுதல், உடன்போக்கு.திருமணம் – மடலேறுதல், பொருள் கொடுத்து மணம் முடித்தல், சேவை மணம், திணைக் கலப்பு மணம். பரத்தமையொழுக்கம். மகளிர் தொழில்கள் – மீன் விற்றல், உப்பு விற்றல். இடற்பாடுகள் – நிலம் சார்ந்து தொழில் சார்ந்து அவர்கள் அடைந்த துயரங்கள். நம்பிக்கைகள் – கடவுள், அணங்கு, ஞாயிறு, ஊழ், பேய், இம்மை மறுமை, ஆறு கடலில் கலக்குமிடத்தில் நீராடல், தும்முதல் புரையேறுதல், கனவு, முருகன், சிவன், திருமால். பழக்கவழக்கங்கள் –வழிபாடு, மாலையில் விளக்கேற்றுதல். விழாக்கள் குறித்த செய்திகள் ஆய்ந்து சுட்டிக்காட்டப்பட்டுள்ளன.

## இயல் – 4 : பரதவ மகளிர் விளையாட்டுகள் ஆடை அணிகலன் ஒப்பனை

பரதவ மகளிர் விளையாட்டுகள் ஆடை அணிகலன் ஒப்பனை என்ற நான்காம் இயல் விளையாட்டுகள்: விளையாட்டு – விளக்கம், தோன்றிய காரணங்கள். ஓரை விளையாட்டு – செய்பொருள், ஆடிய முறை, பாவையிடம் அன்பு, நீரில் ஓரையாட்டம். சிற்றில் இழைத்தல். வண்டலம் பாவை – விளையாடிய இடம், ஆடிய முறை. அலவனாட்டம் – ஆடிய இடம், ஆடிய முறை. கடற்கரையில் பொழுதைக் கழித்தல், அலையோடு விளையாடல். ஊசல் – ஆடிய முறை, ஊசல் பாடல்.

ஆடை: ஆடையின் தோற்றம். தழையாடை – தழையாடைக்குப் பயன்பட்ட தழைகள், தழையாடை உடலில் அணியப்பட்ட இடம். கச்சு அணிதல்.

அணிகலன்: அணிகலன் – தோற்றம், காதணி, கழுத்தணி, தோளணி, மார்பணி, கையணி.

ஒப்பனை : ஒப்பனை – விளக்கம். மாலை – அணியும் பழக்கம், பயன்பட்ட மலர்கள். கூந்தல் ஒப்பனை– பின்னலிடல், மலர் அணிவது, மணமூட்டுதல். மையிடுதல். தொய்யில் . கரும்பு. திலகமிடுதல் போன்ற செய்திகளை விளக்கமாக ஆய்கிறது.

## இயல்– 5 : நெய்தல் புலவர்களின் பார்வையில் இரங்கல்

நெய்தல் புலவர்களின் பார்வையில் இரங்கல்என்ற ஐந்தாம் இயல் காதல் – புலவர்களின் பார்வையில் விளக்கம். இரங்கல் – காரணம். தலைவனைப் பிரிந்த தலைவியின் நிலை – மாலை கண்டு வருந்துதல். அஃறிணை உயிர்களுடன் பேசுதல் – அன்றில், நாரை, வண்டு. இயற்கை சக்திகளோடு பேசுதல் – கடல், காற்று, ஆகாயம், திங்கள், ஞாயிறு. ஊரோடும் உலகோடும் பகைத்தல். இரவில் துயிலாத நிலை. பசலை. பிரிவில் அழுதல். காமம். ஒப்பனையில் ஆற்றியிருத்தல் போன்ற செய்திகளை ஆராய்கிறது.

**இயல்–6 : நெய்தல் திணை கட்டமைக்கும் பரதவப் பெண்**

நெய்தல் திணை கட்டமைக்கும் பரதவப் பெண் என்ற ஆறாம் இயல் பெண் – விளக்கம். தோற்றம் – கூந்தல், உடல்,பற்கள், நிறம். வன்மை, மென்மை, பாச உணர்வு, பேதமை, உலகியலறிவு, பெண்களின் நிலம் சார்ந்த அறிவு ஆகிய குணங்கள் போன்ற செய்திகள் அறியப்பட்டுள்ளன.

ஒவ்வோர் இயலின் பின்னும் அந்தந்த இயலில் கண்ட உண்மைகள் தொகுப்புரைகளாகக் கூறப்பட்டுள்ளன. முடிவுரைப் பகுதியில் ஆறு இயல்களின் வழியாகப் பெறப்பட்ட உண்மைகள் தொகுத்துக் கூறப்பட்டுள்ளன. நிறைவாகத் துணைநூற்பட்டியலில் இவ்வாய்வுக்காக எடுத்தாளப்பட்ட நூல்களின் அகர நிரலும், இவ்வாய்வு தொடர்பான பிற ஆய்வுக் கட்டுரைகளும், ஆய்வேடுகளும், அகராதிகளும் , இதழ்களும் பட்டியலிட்டுக் காட்டப்பட்டுள்ளன.

# இயல் ஒன்று
# நெய்தல் நிலம் – ஓர் அறிமுகம்

இலக்கியங்கள் உலக மொழிகள் அனைத்திலும் தோன்றி வளர்தல் இயல்பு. அவை இனம், மொழி, மதம், நாடு ஆகிய எல்லாவற்றையும் கடந்து கருத்தாலும், உணர்வாலும், கற்பனையாலும் ஒன்றுபட்டு படிப்பவர் மனங்களை மகிழ்விப்பன.

அவ்வகையில் இலக்கியம் என்பது, மனித உள்ளங்களின் திரைப்படம்; மனித குலத்தின் ஆசைகளை உணர்ச்சிகளை விளைவுகளை முடிவுகளை இலக்கியத்தில் கற்றுக் கொள்கிறோம்[1] என்பார் வ.சுப. மாணிக்கம்.

சு. இராசாராம் குறிப்பிடுகையில்,

இலக்கியம் வாழ்க்கையை அடிப்படையாகக் கொண்டது. மக்கள் வாழ்க்கையை அடிப்படையாகக் கொண்டு தோன்றும் இலக்கியங்களே கால வெள்ளத்தில் அழியாது நிலைத்து நிற்கும். சங்க இலக்கியங்கள் அக்கால மக்கள் நடைமுறை வாழ்க்கையைப் பாடுவதால் இன்றும் நிலைத்து நிற்கின்றன[2] என்பர். மேலும் அவர்,

வாழ்க்கையிலிருந்து தோன்றுவது இலக்கியமாகும். வாழ்க்கையில் நிகழும் நிகழ்வுகள் எண்ணங்கள், செயற்பாடுகள், நினைவுகள், கனவுகள் அனைத்தும் இலக்கியத்திற்குப் பாடுபொருளாக அமையும்[3] என உரைப்பர்.

இவ்வாறு காலம் கடந்தும் மக்கள் மனங்களில் இன்றளவும் நிற்கக் கூடியதாக உள்ளது சங்க இலக்கியங்கள். சங்கப் பாக்கள் பல்வேறு காலக் கட்டங்களில் வாழ்ந்த புலவர்களின் எண்ணச் சிதறல்கள் ஆகும். இவற்றில் புலவர்கள் மக்கள் வாழ்வில் நிகழ்ந்த எல்லா நிகழ்வுகளையும் பாடல்களாகப் பாடியுள்ளனர்.

சங்க இலக்கியங்களைப் பாடுபொருள் அடிப்படையில் அகம் புறம் என்ற இருபெரும் பிரிவுக்குள் அடக்குவர். அகப்பாடல்கள் கணவன் மனைவி மற்றும் காதலன் காதலி ஆகியோரின் இல்லற, காதல் வாழ்வை எடுத்துரைப்பன. புறப்பாடல்கள் அரசர் முதலான புரவலரின் வீரம், கொடை, புகழ், வெற்றி முதலியவற்றைப் பாடுவன. மேலும், சங்கப் பாடல்கள் நிலத்தை அடிப்படையாகக் கொண்டு பாடப்பெற்றுள்ளன.

**நிலப் பாகுபாடு**

அகத்துறைப்பாக்கள் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்னும் ஐந்திணைகளை அடிப்படையாகக் கொண்டு பாடப்பட்டவை. அகத்திணைப் பாடல்களில் முதல், கரு, உரி என்னும் முப்பகுப்பு உண்டு.நிலப்பாகுபாட்டைப் பற்றித் தொல்காப்பியர் குறிப்பிடுகையில்,

**மாயோன் மேய காடுறை உலகமுஞ்**
**சேயோன் மேய மைவரை உலகமும்**
**வேந்தன் மேய தீம்புனல் உலகமும்**
**வருணன்மேய பெருமணல் உலகமும்**
**முல்லை குறிஞ்சி மருத நெய்தலெனச்**
**சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே**[4]

என்பர். இந்நூற்பாவில் சொல்லிய முறை என்பதற்கு நச்சினார்க்கினியர் தரும் விளக்கமாவது,

"இவ்வொழுக்கமெல்லாம் இல்லறம் பற்றிய ஒழுக்கமாதலின் கற்பொடு பொருந்திக் கணவன் சொற்பிழையாது இல்லிருந்து நல்லறஞ்செய்தல் மகளிரது இயற்கை முல்லையாதலின் அது முற்கூறப்பட்டது. புணர்தலின்றி இல்லறம் நிகழாமையிற் புணர்தற்பொருட்டாகிய குறிஞ்சியை அதன்பின் வைத்தார். புணர்ச்சிக்குப் பின் ஊடல் நிகழ்தலின் அதன்பின் மருதத்தை வைத்தார். பரத்தையிற் பிரிவுபோலப் பிரிவொப்புமை நோக்கி நெய்தலை ஈற்றின் கண் வைத்தார்"[5] என்பார். ஆனால் இளம்பூரணர் கூறுகையில்,

உம்மை எதிர்மறையாகலான் இம்முறையன்றிப் பிறவாய்பாட்டாற் சொல்லவும் படும் என்றவாறு, காடு, நாடு, மலை, கடல் என்பதே பெரு வழக்கு[6] என உரைப்பர். முறை வைப்பு பற்றி வ.சுப. மாணிக்கம் உரைக்கையில்,

முல்லைத் திணையினர் எவ்வகை வினைக்கும் தெய்வம் பரவுவர்; எல்லாம் தெய்வச் செயலெனக் கருதுவர்; அதனாற் போலும் தெய்வ வரிசையில் முல்லைக்கு முதலிடம் தந்தனர்[7] என்பர். இவ்வாறு அறிஞர்கள் பலர் பல காரணங்களைக் கூறுகின்றனர்.

தொல்காப்பியர் குறிப்பிடும் நானிலம் முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தலாகும். பாலை என்பதைத் தனி நிலமாகக் குறிப்பிடவில்லை.

பாலை நிலம் என்பது, முல்லை குறிஞ்சி நிலப் பகுதிகள் சிலபல ஆண்டுகள் வான்வளம் பொய்க்குமாயின், ஞாயிற்றின் வெப்பத்துக்கு இலக்காகி, பசுமை தவழ்ந்த மரஞ்செடி கொடிகள் அனைத்தும் கருகித் தீய்ந்து விடும். வறட்சியுடன் அழகொழிந்து காணப்படும் காலங்களில் மட்டுமே அப்பகுதிகள் பாலை நிலமாய் கருதப்படும். பின்னர் மழை பொழிந்து மீண்டும் பழமை போல் வளமை பெற்று, முல்லை குறிஞ்சி என அழகுபெறும் காட்சி பெற்று மாட்சியுடன் காணப்படும்.

எனவேதான், சான்றோர்கள் பாலையைத் தனி நிலமாய்க் கொள்ளாது, இயற்கையால் அமைந்த ஏனைய நான்கு நிலங்களை மட்டுமே சிறப்பாகக் கருதி நானிலம் என வழங்குவராயினர்.

இந்நானிலத்தில் ஒன்றாகிய நெய்தல் கடல் சார்ந்த பகுதியாகும். நெய்தலைத் தொல்காப்பியர் சொல்லிய முறையால், வருணன் மேய பெருமணல் உலகம் என்று நான்காவதாக வைத்தார்.

**நெய்தல் நிலம்**

கடலும் கடல் சார்ந்த பகுதியும் நெய்தலாகும்[8]. இந்நெய்தல் நிலம் பற்றித் தொல்காப்பிய உரையாசிரியருள் ஒருவரான நச்சினார்க்கினியர் விளக்குகையில்,

கருங்கடற் கடவுள் காதலித்த நெடுங்கோட்டெக்கர் வருணனைத் தங்கள் தெய்வமாக வழிபடும் மக்கள் வாழ்கின்ற, கடல் கொழித்த மணல் மேடுகள் மல்கிய கடற்கரைப் பகுதி[9] என்பர்.

ச. சாம்பசிவன் குறிப்பிடுகையில்,

கடற்கரை சார்ந்த நிலப்பகுதி நெய்தல் எனப்படும்[10] என உரைப்பர்.

கடற்கரையை அடுத்த பெருமணற்பகுதியில் கடல் வளத்தை நம்பி வாழும் மக்கள் உறைந்தனர். இங்குள்ள ஊர்கள் கடலையடுத்தும் உப்பங்கழியையடுத்தும் தாழை வேலிகளுடன் காணப்பட்டன[11] என்பது மு.சண்முகம் பிள்ளை தரும் விளக்கம்.

இவ்வாறு மேற்சுட்டிய விளக்கங்கள், கடற்கரையை ஒட்டி அமைந்த பகுதியே நெய்தல் நிலம் என்பதை உணர்த்துகின்றன.

**நெய்தல் நிலம் பெயர்க் காரணம்**

முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை என்ற இந்நிலங்களின் பெயர்கள் அந்நிலங்களில் மிகுதியாகக் காணப்படும் பூக்களால் பெயர் பெற்றன என்பர்

ஒருசாரார்; மற்றொரு பிரிவினர் இருத்தல், புணர்தல், ஊடல், இரங்கல், பிரிதல் என்ற திணை ஒழுக்கமாகிய உரிப்பொருளால் பெயர் பெற்றன என்கின்றனர். இவை எவ்வாறு பொருந்தும் என்பதையும், நெய்தல் நிலம் பெயர்பெற்ற காரணத்தையும் ஆராய்ந்து அறிதல் இன்றியமையாதது.

மாயோன் மேய காடுறை யுலகமும்[12]

என்று தொடங்கும் தொல்காப்பியச் சூத்திரத்துக்கு உரை எழுதிய உரையாசிரியர் இளம்பூரணர்.

முல்லை குறிஞ்சி யென்பன இடுகுறியோ காரணக்குறியோ எனின், ஏகதேச காரணம் பற்றி முதலாசிரியர் இட்டதோர் குறியென்று கொள்ளப்படும். என்ன காரணம் எனின், நெல்லொடு, நாழி கொண்ட நறுவீ முல்லை யரும்பவி ழலரி தூஉய் (முல்லைப்பாட்டு) என்றமையால், காடுறை யுலகிற்கு முல்லைப்பூச் சிறந்ததாகலானும் கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு பெருந்தேனிழைக்கும் நாடனெடு நட்பே (குறுந். 3) என்ற வழி மைவரை யுலகிற்குக் குறிஞ்சிப் பூச் சிறந்ததாகலானும், ஆரலருந்திய சிறுசிரல் மருதின், தாழ்சினையுறங்குந் தண்டுறையூரன் (அகம்) என்ற வழித் தீம்புனலுலகிற்கு மருது சிறந்தமையானும், பாசடை நிவந்த கணைக்கால் நெய்தல், இனமீனிருங்கழியோத மல்குதொறும், கயமூழ்கு மகளிர் கண்ணின் மானும் (குறுந். 9) என்ற வழிப் பெருமணல் உலகிற்று நெய்தல் சிறந்தமையானும் இந்நிலங்களை இவ்வாறு குறிபிட்டாரென்று கொள்ளப்படும்[13]

என்று கூறி அந்நிலத்தின்கண் சிறந்து விளங்கும் பூவின் காரணமாகவே அந்நிலத்திற்கு அப்பெயர் வழங்கலாயிற்று என்று கூறியுள்ளார்.

பூக்களால் பெயர் பெற்றன என்ற கருத்தை உரையாசிரியர் நச்சினார்க்கினியர் மறுக்கிறார். எவ்வாறெனின்,

முல்லை முதலிய பூவாற் பெயர் பெற்றன இவ்வொழுக்கங்களெனின், அவ்வந் நிலங்கட்கு ஏனைப் பூக்களும் உரியவாகலின் அவற்றால் பெயர் கூறலும் உரியவெனக் கடாயினார்க்கு விடையின்மை உணர்க என்கிறார். மேலும்,

அவரது கொள்கை, குறிஞ்சிக்குரியதாகப் புலனெறி வழக்கம் செய்யப்பட்ட ஒழுக்கம்; புணர்தல் என்பது இப்புணர்ச்சியொழுக்கத்திற்கே குறிஞ்சி என்பது ஒருபெயர். இங்ஙனமே, இருத்தலாகிய ஒழுக்கத்திற்கு மறுபெயர் முல்லை;

ஊடலாகிய ஒழுக்கத்திற்கு மறுபெயர் மருதம்; பிரிதலாகிய ஒழுக்கத்திற்கு மறுபெயர் நெய்தல் இவ்வாறு அவ்வவ்வொழுக்கம் நிகழ்ந்த நிலம் அவ்வப் பெயரினைப் பெற்றது[14] என்பதே நச்சினார்க்கினியர் கருத்தாகும்.

பூக்களின் பெயர் அடிப்படையில் நிலப்பெயர்கள் ஏற்பட்டன என்பதற்குச் சான்றுகள் ஆதரவாக உள்ளன. இக்கருத்தை பேராசிரியர் தி.முத்து கண்ணப்பன் மேலும் வலுப்படுத்துகிறார்.

ஒவ்வோரொழுக்கத்தை உணர்த்தற்கு ஒவ்வொரு பூவை அடையாளமாகக் கொண்டொழுகுவது பண்டைத் தமிழரது வழக்கமேயாம். இது புறத்திணை யொழுக்கமாகிய நிரை கவர்தல், மீட்டல் முதலியவற்றுக்கு வெட்சி, கரந்தை முதலாய பூக்களைக் குறியாகக் கொண்டமையாலும் விளங்கும். எனவே, அகத்திணை யொழுக்கங்கட்கும் அங்ஙனம் பூக்களை அடையாளமாகக் கொண்டு முன்னோர் வழங்க, அவற்றினடியாக இருத்தல் கொள்ளுதல் இழுக்காகாதென்பது என்று கூறி, மீண்டும் இனி, நிரை கோடல் மீட்டல் முதலிய திணைகள் (ஒழுக்கங்கள்) வெட்சி முதலாகப் பெயர் பெற்றதற்குக் காரணம் – வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை என்னும் பூ விசேடங்களை அவ்வொழுக்கத்தின் அடையாளமாகக் கொண்டு பண்டைத் தமிழ் மக்கள்வழங்கி வந்தமையாகும்[15] என்பர்.

இவரது கருத்தின்படி நெய்தல் என்பது பூவால் பெயர்பெற்றது என்ற கருத்து உறுதிப்படுத்தப்படுகிறது. மேலும் நெய்தல் எவ்வாறு பூவால் பெயர் பெற்றது என்பதை விளக்கும் ஆசிரியர்,

பல்வேறு மலர்கள் ஒரு நிலத்தில் காணப்படுமாயின் அந்நிலத்தில் சிறப்பாக மிகுதியாகக் காணப்படுவது எப்பூவோ அப்பூவாலேதான் அது அப்பெயர் பெற்றுள்ளது [16] என விளக்குவார்.

இவரது கருத்தை வலுப்படுத்தும் கலைக்களஞ்சியம் நெய்தல் நிலப் பகுதியிலே நெய்தல் மலர் மிகுந்திருப்பது கொண்டு இப்பெயர் வந்ததென்பர்[17] என்று குறிப்பிடுகிறது.

மேலும், நெய்தல் நிலத்தில் தாழை, புன்னை, ஞாழல், செருந்தி, அடும்பு போன்ற எண்ணற்ற பூக்கள் உள்ளன. எனினும் அங்கு மிகுதியாக, சிறப்பாக ஏனைய நிலங்களிற் காணப்படுவதினும் அதிகமாக நெய்தற் பூவே

காணப்படுகிறது. கண் காணும் இடமெல்லாம் நெய்தல் மலர்கள் பூத்துக் குலுங்குவதாக இலக்கியங்கள் கூறுகின்றன. ஆதலின், நெய்தற் பூவின் சிறப்பினாலேயே அந்நிலம் நெய்தல் என்ற பெயர் பெற்றது[18] என்பது தெளிவாகிறது.

மேலே கூறப்பட்ட கருத்துக்களின்படி நெய்தல் நிலம் என்பது நெய்தல் பூக்கள் மிகுந்திருப்பதால் பெற்ற பெயர் என்பது எண்ணதக்கதும் ஏற்றுக்கொள்ளத்தக்கதுமாகும்.

**நெய்தல் மலர்**

நெய்தல் என்பது ஒரு கொடி வகையாகும்.

நெய்தல் கொடியைச் செடி நூலார் Nymphae stellate என்று பெயரிட்டழைப்பர். இதையே நீலோற்பலம், நீலம், கருநெய்தல், கருங்குவளை, பானல் எனப் பல பெயரால் மயங்கிக் கூறுவர். ஒரே இனமான Nymphae stellate என்பதில் வெண்மை, சிவப்பு, நீலம், கருநீலம் ஆகிய நிறங்களுடைய பூக்கள் கொண்டவை உள்ளனவாகச் செடி நூல் கூறும். அதில் கருநீல நிறமுடையதையே நெய்தல் என்று சங்க நூல்கள் கூறுவதாகத் தெரிகிறது[19] எனக் கூறுகிறார் பி.எல். சாமி.

நெய்தல் கொடி பற்றி பேராசிரியர் தி. முத்து கண்ணப்பன் கூறுகையில், நெய்தல் என்பது ஒரு நீர்ப்பூக்கொடி; இதனாலே கடல் சார்ந்த நிலம் நெய்தனிலமெனப்பட்டதென்பர். இக்கொடி திரண்ட தாளையும் பசிய இலையையும், நறுமணமுள்ள பூவையுமுடையது. இதன் இலை யானைக்கன்றின் காதிற்கும், இதன் முகிழ் மாணாக்கர் குடுமிக்கும், இதன் பூவிதழ் வேலுக்கும் உவமையாய் வந்துள்ளன[20] என்பர். மேலும் அவர் விளக்குகையில்,

நெய்தல் மலர் இரண்டு சாதி உடையது. இம்மலரில் கருநிறமுடைய சாதி கருநெய்தலென்றும், வெண்ணிறமுடைய சாதி வெண்ணெய்தலென்றும் வழங்கப்பெறும்[21] என்பர்.

இப்பூவானது விடியற்காலத்தில் மலர்ந்து மாலைக் காலத்தில் குவிதலும் உடையது என்ற செய்தியைச் சங்கப்பாடல்கள் வழி அறியலாம்.

**நெய்தல் கூம்ப, நிழல் குணக்கு ஒழுக,**

**கல் சேர் மண்டிலம் சிவந்து நிலம் தணிய** (நற். 187: 1)

**தண்சேற்று அடைஇய கணைக்கால் நெய்தல்**

------------------------------------------------------------------------------------

**அந்தி வானமொடு கடல்அணி கொளாஅ,**( அகம். 360: 4–9)

**நெய்தல் – சொல்லாட்சி**

நெய்தல் என்பது கடல் சார்ந்த நிலத்தைக் குறித்தாலும், நெய்தல் என்ற சொல்லாட்சி இலக்கியங்களில் மிக அருகியே காணப்படுகிறது.

சங்க இலக்கியங்களுள் எட்டுத்தொகையில் ஐங்குறுநூறு ஒன்றில் மட்டுமே, நெய்தல் என்ற சொல் கடல் சார்ந்த இடம் என்ற பொருளைக் குறிப்பதாக ஆளப்பட்டுள்ளது.

பத்துப்பாட்டில் சிறுபாணாற்றுப்படையில் ஓரிடத்தும், மதுரைக்காஞ்சியில் ஓரிடத்துமாக ஈரிடங்களில் மட்டுமே நிலத்தைச் சுட்டும் பொருளில் நெய்தல் என்ற சொல் ஆளப்படுகிறது. ஏனைய இடங்களிலெல்லாம் நெய்தல் என்பது கொடியையோ, பூவையோ மட்டும் குறிக்கும் சொல்லாகத்தான் ஆட்சியில் உள்ளது[22].

**நெய்தல் இருங்கழி நெய்தல் நீக்கி (ஐங்.184–1)**

**பாடல் சான்ற நெய்தல் நெடுவழி (சிறு.–151)**

**நெய்தல் சான்ற வளம்பல பயின்று (மது.–325)**

**நெய்தல் நில அமைப்பு**

கண்ணுக்கு எட்டிய தூரம் வரை நீலக் கடலும், கரையை அழித்துச் செல்லும் அலைகளும், மணல் மேடுகளும் உள்ள தோற்றத்தையுடையது நெய்தல் நிலம்.

நீல நெடுங்கடலின், வெண்ணுரைப் பிசிர் சிதறும் அலைகள் மோதிக் குவித்த மணல் மேடுகள் மலிந்த கரையே நெய்தல் நிலப்பகுதியாகும்[23] என்பார் பேராசிரியர் தி. முத்து கண்ணப்பன்.

கடற்கரைப் பகுதி மென்மை வாய்ந்த நிலமாகக் கொள்ளப்படுகிறது. நிலவொளியைப் பரப்பினாற் போல மணலானது காணப்பட்டது. இம்மணற் பரப்பு சங்க இலக்கியத்தில், அடைகரை, எக்கர், புலம்பு, பரப்பு, சேர்ப்பு[24] என்று வழங்கப்படுகிறது.

**இளமணல் எக்கர்** (அகம். 250: 4)

**நுண்மணல் அடைகரை** (ஐங். 115: 2)

**பூமணல் அடைகரை** (நற். 11:6)

என்று கடற்கரையின் மென்மைத் தன்மை கூறப்படுகிறது.

கடல் பரப்பில் ஏற்படும் அலைகள் கடற்கரையில் மோதி வெண்மணலைக் குவிக்கின்றன. சில நேரங்களில் கரையைச் சிறிது சிறிதாக உடைக்கின்றன. கடற்கரையின் தோற்றத்தினை விளக்கும் சங்கப் பாக்கள் பின் வருமாறு இயம்புகின்றன. கரையை மோதும் அலைகளை,பொங்கியெழும் திரை மோதியதால் திரண்ட வெண்மணல் அடைகரை என்றும் நற்றிணை கூறுகிறது.

**பொங்குதிரை பொருத வார்மணல் அடைகரை** (நற். 35:1)

வில்லால் அடிபட்டுச் சிதறும் பஞ்சுபோல் நிரம்பிய அலைகளைக் காற்று உந்துவதால் பொங்கியெழும் நீர்த்துளிகள் மோதும் கடற்கரை என்றும் அலைகள் சிறப்பிக்கப்படுகின்றன.

**வில்எறி பஞ்சுபோல, மல்குதிரை**

**வளிபொரு வயங்குபிசிர் பொங்கும்**

**நளிகடல் சேர்ப்பன்** (நற். 299: 7–9)

மணல் மேடுகள் பற்றிக் கூறும் நற்றிணைப் பாடல், மோதித்தள்ளும் அலைகொழித்த மணல் திடரான கடற்கரை என்று சாற்றுகிறது.

**எறிதிரை தொகுத்த எக்கர் நெடுங் கோட்டுத்**

**துறு கடல்** ........................ (நற். 211: 6–7)

மேலும், வெள்ளிய மணற்பரப்பிலே கடல் அலை பரந்து ஏறுகின்றதும், வெண்மணல் கடற்கரையினை மோதிக் குவித்தலையும், கரை தோன்றிய வகையினையும் விவரிக்கின்றனர். இவ்வாறு நல்லிசைப் புலவர் இனிது பாடுதற்கு ஏற்றதானது நெய்தல் நிலம். இதை,

**கானல் வெண்மணல் கடல் உலாய் நிமிர்தர**

**பாடல் சான்ற நெய்தல்** (சிறு. 150–151)

எனச் சிறுபாணாற்றுப் படை கூறும்.

**நெய்தல் நிலத்தில் காணப்படும் மரம் செடி கொடி வகைகள்**

தொல்காப்பியர் திணை ஒவ்வொன்றையும் முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என மூன்றாக வகுத்துள்ளார். அவற்றுள் முதற்பொருள், அவ்வத்திணைக்குரிய நிலமும் பொழுதும் ஆகும். நிலம், காலம், பொழுது, ஆறு பெரும் பொழுதும், எற்பாடும் ஆகும். இரண்டாவதாகிய கருப்பொருள் இன்ன என்பதை தொல்காப்பியர்,

**தெய்வம் உணவே மாமரம் புட்பறை**

**செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ**

**யவ்வகை பிறவுங் கருவென மொழிப**[25]

எனும் நூற்பாவின் மூலம் விளக்குகிறார். இந்நூற்பாவில் வரும் 'பிற' என்ற குறிப்பின்படி உயர்ந்தோர், தாழ்ந்தோர், ஊர், நீர், பூ, பண் ஆகியனவும் கொள்ளத்தக்கன என்பர்.

நெய்தல் கருப்பொருள் பற்றிக் கூறும் உரையாசிரியர் நச்சினார்க்கினியர்,

நெய்தற் குணா, மீன் விலையும் உப்பு விலையும்; மா, உமண்பகடு போல்வன; முதலையும் சுறாவும் மீனாதலின் மாவென்றல் மரபன்று. மரம், புன்னையும் ஞாழலும் கண்டலும்; புள், அன்னமும் அன்றிலும் முதலியன. பறை மீன் கோட்பறை; செய்தி, மீன்படுத்தலும் உப்பு விளைத்தலும் அவை விற்றலும்; யாழ், நெய்தல் யாழ்; நெய்தலும் பிறவும் என்றதனால், பூ கைதையும், நெய்தலும்; நீர், மணற்கிணறும் உவர்க் குழியும்; ஊர், பட்டினமும் பாக்கமும்[26] என நெய்தலின் கருப்பொருளை விளக்கிக் கூறுகிறார்.

உரையாசிரியர் இளம்பூரணர், "தெய்வம் உணவே" என்னும் நூற்பா உரையில் நெய்தல் நிலத்துக்குரிய மரங்களையும், பூக்களையும் பற்றி,

மரம், புன்னையும் கைதையும், பிறவும் என்றதனால் பூ நெய்தல்; பிறவும் அன்ன[27] என்று கூறுகிறார்.

மேற்கூறிய நூற்பா உரை விளக்கத்தில் நெய்தல் நிலத்தைச் சூழ்ந்து காணப்பட்ட மரம் செடி கொடிகளைப் பற்றி விளக்கமாகக் அறியலாம்.

**மரங்கள்**

**புன்னை**

நெய்தல் நிலத்தில் சிறப்பு மிக்க மரம் புன்னை. இப்புன்னை மரங்களின் தோற்றத்தைப் பற்றிக் கூறும் பேராசிரியர் தி. முத்து கண்ணப்பன்,

இதன் இலை கரும் பசுமை நிறமுடையது; அகன்றது; மலர், கொத்துக் கொத்தாக இருக்கும். அரும்புகள் வெண்மையானவை. மகரந்தம் பொன்னிறமானது. இதன் அரும்புகள் நீண்ட காம்புகளையும், உருண்டை வடிவினையும் உடையன; முத்துப் போல் தோற்றமுடையன. அரும்புகள் மலர்ந்து நறுமணம் வீசும். இதன் பொன்னிறத் தாது உதிர்ந்து வெண்மணல் பரப்பெங்கும் பொலிவூட்டும்[28] என்கிறார்.

இப்புன்னை மரங்கள் மக்கள் வாழ்மனைகளையடுத்தும், கடற்கரையில் அலைகள் தொடுமாறும் வளர்ந்திருந்தது என்ற செய்தி பல நெய்தல் பாடல்களில் விளக்கப்பட்டுள்ளது. சான்றாக நற்றிணைப் பாடல்வரிகளில்,

கடற்கரைச் சோலையிலும், மக்கள் வாழ் மனை முற்றத்திலும் மன்றங்களிலும், புன்னையின் கருங்கிளைகளிற் பூத்த மலர்களோடு தாழை மலரும் விரவி மணம் வீசுகிறது என்று கூறுகிறது.

**மன்றப் புன்னை மாச்சினை நறுவீ**

**முன்றில் தாழையொடு கமழும்** (நற். 49: 8–9)

மேலும், புன்னை மரத்தின் நுண்ணிய பொன் துகள் அடியிலுள்ள நீலநிற நெய்தலில் நிறைந்து கிடந்தது! அவை பொன்னும் மணியுமாய்ப் பொலிந்து தோன்றியது. இதனை,

**புன்னை நுண் தாது உறைத்தரு நெய்தல்**

**பொன்படு மணியின் பொற்பத் தோன்றும்** (ஐங். 189: 1–2)

என்ற வரிகள் உணர்த்துகின்றன.

**ஞாழல்**

நெய்தல் நிலத்துக்குரிய மற்றொரு சிறந்த மரம் ஞாழல். இதன் தோற்றம் பற்றி விளக்கும் பேராசிரியர் தி. முத்து கண்ணப்பன்,

ஞாழல் என்பது புலிநகக் கொன்றை என்றே பெரிதும் வழங்கப் பெறுகிறது. அதன் காய் நுனியிலே சற்று வளைந்து புலிநகம் போன்றிருத்தலின் இது புலிநகக் கொன்றை என்று அழைக்கப்படுகிறது. இது பொன்றை வகையைச் சேர்ந்தது. ஞாழலின் கிளைகள் கருமையானவை; பக்கவாட்டில் அடுக்கடுக்காய் உள்ள சின்னஞ்சிறு இலைக் கொத்துக்களையுடையவை. மலர்கள் மிகச் சிறியவை; செம்பொன்னிறமானவை; நறுமணம் வீசுபவை[29] என்பார். மேலும்,

இம்மரங்கள் கடலை அடுத்து வளர்வன. வெள்ளம் பெருகுங்கால் அலைகள் அவற்றின் அடியினை அலம்பும். அலவன்கள் அவற்றின் வேரருகே வளையமைத்து வாழும். செம்பொன்னிறச் சின்னஞ்சிறு மலர்கள் மணமிக்கவை. அப்பூக்களும், ஞாழலை அடுத்து வளர்ந்துள்ள புன்னையின் வெண்ணிறப் பூக்களும், பொன்னிறத் தாதுக்களும் தரையில் உதிர்ந்து, கரையில் பூத்து விளங்கும் நீலநிற நெய்தல் மலர்களோடு விரவிப் பரவிக் கிடப்பது, கதம்ப மலர்க்காட்சியாய்க் கண்ணுக்கு நல் விருந்தளிக்கும்! இம்மூவகை மலர் மணத்தோடு பக்கத்தே வளர்ந்துள்ள தாழையின் நறுமணமும் சேர்ந்து கலப்புத் திருமணம் கரையெலாம் பரவிக் கடிமணமாய் வீசும்[30] என்றும் உரைப்பார்.

ஞாழலின் விதை மிளகு போல் உருவும் கைப்புச் சுவையும் உடையது[31].

இளைய ஞாழலின் குழைந்த தழை, அலையின் கரிய புறத்தை மெல்ல வருடிக் கொண்டிருக்கும். இதனை,

**கொய்குழை அரும்பிய குமரி ஞாழல்**

**தெண்திரை மணிப்புறம் தைவரும் ..........** (நற். 54: 9–10)

எனக் கூறும் நற்றிணை.

**பெண்ணை**

இது பனை மரம் என்று அழைக்கப்படுகிறது. இது இலக்கியத்தில் போந்தை என்று குறிப்பிடப்படுகிறது. இம்மரம் நெய்தல் நிலத்தில் அதிகமாகப் பெருகிக் காணப்படும்.

நெய்தல் நில மணல் மேடுகளில் கும்பல் கும்பலாக வளர்ந்திருக்கும். அதனைப் பனந்தோப்பு என்று கூறுவர். இது இளவேனில் காலத்தில் காய்க்கத் தொடங்கும். முற்றாத காய் நுங்கு என வழங்கப்படும். நுங்கு கண்களைப் போலிருக்கும். இனிய நீரோடு அருந்துவதற்கு மிகவும் சுவையாக இருக்கும். காய் முற்றிப் பழமாகும். பழத்தில் மூன்று கொட்டைகள் இருக்கும். கொட்டைகள் முளைத்துக் கிழங்குகளாகும். கிழங்குகள் அடிபெருத்து நுனி சிறுத்து நீண்டிருக்கும்[32].

கடற்கரை மணற்பரப்பில் பனைமரங்கள் பெருகி வளர்ந்திருப்பதைச் சங்கப் பாடல்கள் பல நுட்பமாக எடுத்துரைக்கிறது.

**பெண்ணை அம் படப்பை நாடுகிழ வோயே..........** (புறம். 126: 23)

**பெண்ணை ஓங்கிய வெண்மணல் படப்பைக்**

**கானல் ..........................................................** (நற். 123: 4–5)

மேலும், நெய்தல் நில மக்கள் தம் குல தெய்வத்தையும், ஊர்ப் பொதுத் தெய்வத்தையும் பனையிலேற்றுவித்து வணங்கி வருவது தொன்றுதொட்டு வரும் வழக்காக இருந்துள்ளது. இதனை,

**தொன்றுறை கடவுள் சேர்ந்த பராரை**

**மன்றப் பெண்ணை ...............................**[33]

என்னும் நற்றிணைவரிகள் உணர்த்துகின்றன.

**தில்லை**

இது நெய்தல் நிலத்துக்கே உரிய மர வகையாகக் கருதப்படுகிறது. கடற்கரை மணல்திட்டுக்களில் கருநிறங் கொண்ட கழிமுள்ளியும் தில்லை மரமும் ஒருங்கே வளர்ந்திருக்கும்.

**மாமலர் முண்டகம் தில்லையொடு ஒருங்கு உடன்**

**கானல் அணிந்த உயர்மணல் எக்கர்** (கலித். 133: 1–2)

இதன் தளிர் புற்கென்ற நிறமுடையதென்பதும் பன்முறை அருவி நீராடும் தாபதர் சடையின் நிறத்திற்கு உவமை கூறப் பெறுவதென்பதும் அறியப்படுகின்றன. இதன் பால் மிக்க கொடுமைத் தன்மையுடைது[34] என்பார் இ.வை.அனந்தராமையர்.

நெய்தல் நிலத்தில் இத்தில்லை மரங்கள் ஊரைச் சுற்றி வேலியாக அமைந்திருந்தன. இதனை,

**தில்லை வேலி இவ்வூர்** (ஐங். 131:20)

என்ற வரி உணர்த்துகின்றது. மேலும்,

தென்னாட்டில் சிறப்பு மிக்க சிவத்தலங்களுள் ஒன்றான சிதம்பரத்துக்குத் தில்லை என்ற பெயர் வந்ததன் காரணம் அது முன்னர்த் தில்லை மரங்கள் அடர்ந்த காடாய் இருந்தது பற்றியே[35] என்கிறார் பேராசிரியர் தி.முத்து கண்ணப்பன்.

**நாவல்**

வெண்மணல் கடற்கரையில் ஒரு சில இடங்களில் நாவல் மரங்கள் வளர்ந்திருக்கும். இதனை நெய்தல் பாடல் கீழ்வருமாறு விளக்குகிறது.

பொங்கியெழும் அலைமோதிய வெண்மணல் கரையில் நாவல் மரம் வளர்ந்திருந்தன. அதன் கனிகளை நண்டுகள் திண்ணும்; வண்டுகள் மொய்க்கும் என விளக்குகிறது.

**பொங்குதிரை பொருத வார்மணல் அடைகரை**

**புன்கால் நாவல் பொதிப்புற இருங்கனி** (நற். 35: 1–2)

**வேம்பு, செருந்தி**

கடற்கரை மணற் பரப்பில் வேப்ப மரங்களும், செருந்தி மரங்களும் ஆங்காங்கே அருகிக் காணப்படும்.

கடற்கரைச் சோலையில், எங்கோ ஒரு மூளையிலே பருத்த அடியையுடைய வேப்ப மரம் ஒன்று பெரிய கிளைகளை விரித்துக் கொண்டு நிற்கிறது.

**....................................................... பாரிய**

**பராரை வேம்பின் படுசினை இருந்த** (நற். 218: 6–8)

செருந்தி மலரோடு நெய்தல், குவளை, புன்னை, ஞாழல் போன்ற மலர்களும் விரவிக் காணப்படும். மணல் விரவிய கடற்கரைச் சோலையில் செருந்திப் பூவும், ஞாழல் பூவும் செறிந்து மணம் கமழ்கின்றன.

**எக்கர் ஞாழல் செருந்தியொடு கமழ** (ஐங். 141: 1–2)

மேலும், செருந்தி மரங்கள் பெருங்கழிகளின் மருங்கே பசிய இலைகளையுடைய கிளைகளை விரித்து நிற்கின்றன.

**.............................................................. பாசிலைச்**

**செருந்தி தாய இருங்கழிச் சேர்ப்பன்** (ஐங். 112: 1–2)

**குரவம் புன்கு**

குரவம் புன்கு போன்ற மரங்களும் கடற்கரைச் சோலையில் ஒரு சில இடங்களில் பூத்துப் பொலிவுடன் விளங்கின.

**பல் வீ படரிய பசு நனைக் குரவம்**

**பொரிப் பூம் புன்கொடு பொழில் அணிக் கொளாஅ** (குறுந். 341: 1–3)

என்பது குறுந்தொகை.

**செடி கொடிகள்**

**அடும்பு**

இது கடற்கரை மணற்பரப்பில் படர்ந்து கிடக்கும் கொடி; அடம்பென்றும் அடம்பங் கொடியென்றும் இலக்கியத்தில் வழங்கப்படுகிறது. இதன் அமைப்பு;

இலை பிளவுபட்டிருக்கும். இதன் கொடி சற்று செந்நிறமாக இருக்கும். சிறிது மங்கிய கருநிறமுடைய கொடி வகையடும்பும் உண்டு. இதன் பூ வெண்ணிறமாயும் மங்கிய செந்நிறமாயும் மணி போன்ற வடிவினையுடையதாயும் இருக்கும்.[36]

ஔவை துரைசாமிப்பிள்ளை,

'கடற்கரைப் பகுதியில் வளரும் ஒருவகைக் கொடி. இதனை அடம்பங்கொடி, அடப்பங்கொடி யென்றும் கூறுவர். இதன் பூ வெண்ணிறம் பெற்றுக் காண்பதற்கு அழகாய் இருக்கும். இலைகள் கவடுபட்டு மான் குளம்பு போலக் காட்சி தருகின்றன. இதன் கொடி சிவந்து இருக்கும்'[37] என்பார்.

பழந்தமிழ் நெய்தல் பாடல்களில் அடும்பங் கொடிகள் வெண்மணல் கடற்கரையில் படர்ந்துள்ள சிறப்பினை,

**அடும்பு இவர் அணி எக்கர்** (கலித். 132: 6)

**குன்று ஓங்கு வெண்மணல் கொடியடும்பு** (நற். 254: 2)

என்று சிறப்பிக்கின்றன.

அடும்பங் கொடிகள் கழிக்கரைகளிலும், கடற்கரையில் அலைமோதும் நிலையில் கடலுக்கு மிக அண்மையிலும் காணப்படும்[38].

**தாழை**

நெய்தல் நிலத்தில் ஏற்படும் புலால் நாற்றத்தை மாற்றி நறுமணம் வீசச் செய்வது தாழை. கண்டல் கைதை என்னும் பெயர்களாலும் தாழை வழங்கப்படுகிறது. தாழையின் தோற்றத்தினை விரிவாகஆய்வுசெய்த பேராசிரியர் தி.முத்து கண்ணப்பன் கீழ் வருமாறு விளக்குவார்.

தாழை புல் வகையினைச் சார்ந்ததாகவே கருதப்படுகிறது. இது கடல் ஓரத்திலும் கழியோரத்திலும், அடர்ந்து, மதர்த்துச் செழித்து வளர்ந்திருக்கும். அடிமரம் வளைந்த சருச்சரையுடையதாகவும், (சொரசொரப்பாக) வெளுத்துத் திரைத்த மெல்லிய தோல் போர்த்தியதாகவும் காணப்படும். இலைகள்

கொத்துகளாக மேலெழுப்பிப் பரவி வளைந்து தோன்றும். அவை நீளமாகவும் இரு விளிம்புகளிலும் நடு நரம்பிலும் கூரிய சிறு முட்களையுடையனவாகவும் இருக்கும்.

அடுக்கடுக்கான மடல்களுக்குள்ளே மிகுந்த பாதுகாப்பமைந்தது போன்ற நடுவிடத்தே தாழை அடும்பிப் பூக்கும். இஃது ஓலைப்பூ என்றும் வழங்கப்படும். பூ மடலுக்குள் நீறு போன்ற பொடியுடன் கூடிய கொத்துக் கொத்தான மெத்தென்ற பஞ்சுருண்டைகள் போன்ற பகுதிகள் காணப்படும். இதனைச் சோறு என்று கூறுவர். இப்பூக்களில் சில வெண்ணிறமுடையன; சில பொன்னிறமுடையன; அவை முறையே வெண்டாழை யென்றும் செந்தாழையென்றும் வழங்கப்பெறும்.

இதன் காய் ஒரு சிறு பலாக்காயையொத்திருக்கும். அன்னாசிப் பழம் என்ற மேலை நாட்டுப் பழத்தினைப் போன்றே தோன்றும். முள்போன்ற மேற்புறத்தையுடைய பல சுளைகள் ஒருங்கே செறிந்துள்ளமை போன்ற தோற்றத்துடன் காணப்படும்[39].

தாழையின் அமைப்பினை இலக்கியவரிகளில் கீழ்வருமாறு நோக்குவோம். தாழையின் தோற்றத்தைப் புலவர் வெண்கண்ணனார் பேய் எனக் கூறுகிறார்.

**பேஎய்த் தலைய பிணர் அரைத்தாழை** (அகம். 130: 5)

மற்றொரு புலவர் வடம வண்ணக்கன் பேரி சாத்தனார் கூறுகையில்,

அச்சத்தைத் தரும் பெரிய யானை, ஆடையை அணிந்து கொண்டது போன்றது. நெருங்கிய பிணிப்பு அவிழ்ந்த உயர்ந்த படர்ந்த தாழைப்புதர்; கோடைக்காற்று மோதுதலால் அதன் நுண்ணிய மலரிலுள்ள தாதுக்கள் சிதறிச் சிந்திக் கிடக்கும். அவை விளங்கிழை மகளிரின் வண்ண வளைகள் உடைந்து உதிர்ந்து பரவிய பாங்கினை ஒத்திருக்கும் என்று தாழையின் தோற்றத்தை விளக்குகிறார்.

**உருகெழு யானை உடைகோடு அன்ன**
**ததர்பிணி அவிழ்ந்த தாழை வான்பூ**
**தயங்கு இருங்கோடை தூக்கலின், நுண்தாது**
**வயங்கு இழை மகளிர் வண்டல் தாஅம்** (நற். 299: 1–4)

என்பன அவரது பாடல் வரிகள்.

தாழை, கடற்கரையில் வீசும் புலால் நாற்றத்தை மாற்றி நறுமணத்தைப் பரப்பிய செய்தி பாடல்களில் பல இடங்களில் கூறப்படுகிறது.

**வீழ்தாழ் தாழைப் பூக்கமழ் கானல்** (நற். 78:4)

**முள்ளிலைத் தாழை ............ கமழும் பல்பூங் கானல்** (நற். 235: 2–4)

**முண்டகம்**

முண்டகம் என்பது கழிமுள்ளியென்னும் பெயரால் வழங்கப்பெறும் ஒரு செடி வகை. நெய்தல் நிலத்தில் அதிகம் வளர்ந்து காணப்படுவது.

இது கத்தரி வகையுள் ஒன்றாகும். பெரும்பாலும் கழிமுள்ளி என்றே வழங்கப்படும். கடல் முள்ளியென்று அருகியே வழங்கப்படும். இது மற்றைய நீர்நிலைகளிலுமிருக்கும்[40] என்கிறார் இ.வை. அனந்தராமையர்.

இச்செடி பற்றி பேராசிரியர் தி. முத்துகண்ணப்பன் கூறுகையில்,

இதன் மலர் கருநிறமுடையது; குளிர்ச்சியுடையது. இச்செடியுள் உள்ள முள் வளைந்திருக்கும்; அதற்கு அணிற் பல்லை உவமிப்பர்[41] என்கிறார்.

முண்டகம் கடற்கரையிலும், கழிக்கரையிலும் செழித்து வளரும் என்பது பழந்தமிழ்ப் பாடல்களில் பலவிடங்களில் குறிப்பிடப்படுகிறது.

**முண்டகம் மலரும் தண்கடல் சேர்ப்பன் ..................** (ஐங். 108: 1–2)

**முண்டகம் கலித்த முதுநீர் அடைகரை** (அகம். 80: 7)

**இவர்திரை திளைக்கும் இடுமணல் நெடுங்கோட்டு**

**முண்டகம் நறுமலர் கமழும்** (ஐங். 177: 2–3)

**ஈங்கை**

ஈங்கை ஒரு வகை மலர்க்கொடி. ஈங்கை மலரும், அதிரல் என வழங்கும் புனமல்லிகை மலரும் விரவிக் கடற்கரை மணல் மேடுகளில் அடுகிக் காணப்படும்.

ஈங்கை கொடியில் உருக்கிய அரக்குப் போன்ற சிவந்த வட்டமாகிய முகையையுடையது. வளைந்த முள்ளையும், நெடிய கரிய அழகிய தளிரையும் உடையது. அதன் மலரில் பஞ்சு போன்ற துய் இருக்கும். அந்த ஈங்கை இண்டு என்றும் வழங்கப் பெறும்[42].

நெய்தல் நிலத்தில் நெய்தல் மலர்களோடு நீலம், காவி, குவளை போன்ற பூக்களும் ஆங்காங்கே பூத்துக் கிடந்தன என்ற செய்தியும் நெய்தல் பாடல்களில் கூறப்படுகிறது.

கானலில் உள்ள கழிகளில் தேனொழுகும் காவியும், பிற மலர்களும் பூத்திருந்தன என்பதை,

**கள் நாறு காவியொடு தண்ணென மலரும்**

**கழியும் கானலும் ..........................................** (அகம். 150: 11–12)

என வரும் வரிகள் எடுத்துக் காட்டுகின்றன.

மேற்கண்ட விளக்கங்களால் நெய்தல் நிலத்தில் வளர்ந்துள்ள மரங்கள் மற்றும் செடி கொடிகளின் சிறப்பையும், பல வண்ண மலர்கள் பூத்துக் குலுங்கிப் புதுமணம் பரப்பிய சிறப்பையும் சங்கப் புலவர்கள் மாண்புறச் சொல்லோவியமாகத் தீட்டியுள்ளதிறம் அறியப்பட்டது. இனி பறவைகள் பற்றி விளக்கமாக அறியலாம்.

**பறவைகள்**

நெய்தல் நிலத்திற்குரிய பறவைகள் பற்றிக் கூறும்போது, நச்சினார்க்கினியர் நெய்தற்கு – புள், அன்னமும் அன்றிலும் முதலியன என்று குறிப்பிட்டார். தொல்காப்பிய நூற்பா உரையில் இளம்பூரணர்,

**நெய்தற்குப் புள் கடற்காக்கை**[43]

எனக் கூறியுள்ளார். எனவே நெய்தல் நிலப் பறவைகள் அன்னமும், அன்றிலும் கடற்காக்கையும் ஆகும்.

**அன்னம்**

இது நெய்தல் நிலத்தில் காணப்படும் பறவைகளில் ஒன்று. இது வெண்ணிறமானது; வானில் மிக உயரத்தில் பறக்கக் கூடியது; கால்களில் நீரில் நீந்துவதற்கு ஏற்ற தோலடிகளையுடையது; கடலிலும், கழியிலும் நீரைத் துழாவி மீன்களைப் பற்றி உண்ணும்; கடற்கரை மணலிலும், அங்கு படர்ந்துள்ள அடும்புக் கொடிகளின் மீதும் தங்கி இருக்கும்.[44]

இப்பறவை பற்றி நெய்தல் வரிகளில் காணும் போது,

நெய்தல் நிலத்தே படகில் ஏறி மீன் வேட்டை ஆடுவோர் எறியுளியைக் கொம்பினையுடைய கொடுஞ்சுறா மீது வீசி எறிவர். அதனைக் கண்டு அங்கிருந்த குறுகிய கால்களையுடைய வெண்ணிற அன்னப் பறவைக் கூட்டம் பறந்தோடி விடும் என இயம்புகிறது.

**.................................................... எறியுளி**

**தாங்கு அரு நீர்ச் சுரத்து எறிந்து வாங்கு விசைக்**

**கொடுந்திமிர் பரதவர் கோட்டுமீன் எறிய**

**நெடுங்கரை இருந்த குறுங்கால் அன்னத்து**

**வெண்தோடு இரியும்** (குறுந். 304: 1–6)

**அன்றில்**

இது நெய்தல் நிலத்தில் கழிகளிலுள்ள மீன் முதலியவற்றை உண்டு, பனைமரத்தில் கூடமைத்து வாழும் பறவை. ஆண் அன்றிலின் உச்சிக் கொண்டை நெருப்புப் போல் சிவந்து தோன்றும். சிவந்து வளைந்த வாயினையுடையது. இதன் கால்கள் கரியது. ஆணும் பெண்ணும் இணைபிரியாது வாழும் இயல்பின. ஒன்றைவிட்டு ஒன்று பிரிய நேரின் சற்றும் துயிலாது வேதனையில் ஆழ்ந்து நடுங்கி நலியும். உளமார்ந்த அன்பில் ஆழ்ந்து இணைபிரியாது வாழும் காதலர்க்கு ஆணும் பெண்ணுமான அன்றில்களையே உவமை கூறுவர். பனை மரக் கூட்டில் இருந்து கொண்டு நள்ளிரவில் துணையை உருக்கமுடன் அகவி அழைக்கும். இப்பறவையினம் இப்பொழுது வாழ்வதாகத் தெரியவில்லை[45].

அன்றில்களைப் பற்றிய செய்திகள் பல பாடல்களில் காணப்படுகின்றன. குறுந்தொகைப் பாடலில் அன்றிலைப் பற்றி விளக்குகையில், நெருப்பினைப் போன்ற சிவந்த உச்சிக் கொண்டையை உடைய ஆண் அன்றில் இறாவினைப் போன்ற வளைந்த வாயினையுடைய பெண் அன்றிலோடு, தடா மரத்தின் உயர்ந்த கிளையில், தன் கூட்டிலிருந்து கொண்டு, காதலரைப் பிரிந்தோர் நினைந்து வருந்துமாறு நடுயாமத்தே நரலும் என்கிறது.

**நெருப்பின் அன்ன செந்தலை அன்றில்**

**இறவின் அன்ன கொடுவாய்ப் பெடையொடு**

**தடவின் ஓங்குசினைக் கட்சியில் பிரிந்தோர்**

**கையற நரலும் நள்ளென் யாமத்து** (குறுந். 160: 1–4)

அன்றிலைப் போல மகன்றில் என்னும் ஒரு பறவையும் குறிப்பிடப்படுகிறது. பூக்களில் பயில்வது, நிலத்தில் வாழும் அன்றில் பறவையைப் போல ஆணும் பெண்ணும் பிரிவின்றி எப்பொழுதும் இணைந்தே வாழ்வது. இதனை,

**பூ இடைப்படினும் யாண்டு கழிந்தன்ன**

**நீ உறை மகன்றிற் புணர்ச்சி போலப்**

**பிரிவு அரிது ஆகிய** (குறுந். 57: 1–3)

என்னும் பாடல் அடிகள் உணர்த்துகின்றன.

**சிறுவெண் காக்கை**

நெய்தல் நிலத்தில் வாழக்கூடிய பறவைகளில் ஒன்று. இது கடற்கரையிலும் நெய்தல் நிலக்கழிப் பகுதிகளிலும் காணப்படும் ஒரு வகைக் காக்கை. கடற்கரையில் வாழும் பழங்குடி மக்கள் இதனைக் கடற்காக்கை என்றே கூறுகின்றனர். இதன் கழுத்தின் கீழ்ப்புறம் மட்டும் சிறிது வெளுத்து ஏனைய உடல் முழுவதும் மங்கிய கருமையோடு இருப்பதால் இது சிறுவெண் காக்கை என வழங்கப்பெறுகிறது. இதன் வாயினுடைய உட்பகுதி செந்நிறமாய் இருக்கும். இது நீர்நிலைகளில் மீன் பிடித்துண்டு கடற்கரையில் உள்ள மரங்களில் கூடு கட்டி வாழும். இதனை நீர்க்காக்கை என்றும் கூறுவர். இச்சிறுவெண்காக்கைகள் நெய்தல் நிலத்து மரங்களாகிய புன்னை, தாழை, புலி நகக்கொன்றை, பனை முதலியவற்றில் தங்கியுரையும். இப்பறவைகள் சிறுசிறு அயிரை மீன்களைப் பிடித்துண்ணும்.

இவை, கடற்கரைத் துறையின்கண், கரைதட்டிப் பயனற்றுக் கிடக்கும் தோணியில் வெண்காக்கைகள் கூடுகட்டி முட்டையிடும்.

**பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை**
**துறைபடி அம்பி அகமணை ஈனும்** (ஐங். 168: 1–2)

பூங்கொத்துக்களையுடைய புலிநகக்கொன்றையில் தங்கி அலுத்துப் போன சிறுவெண்காக்கை புதிய இருக்கையை அமைக்க முயன்று, பக்கத்தில் முகையவிழ்ந்து மணக்கும் புன்னை மரத்தின் எழிலோங்கும் பூங்கிளையை அடைந்து அதில் மகிழ்வுடன் கூடு அமைத்துத் தங்கியது.

**பெருங் கடற்கரையது சிறுவெண் காக்கை**
**ஒள் இணர் ஞாழல் முனையின், பொதி அவிழ்**
**புன்னை அம் பூஞ்சினைச் சேக்கும் துறைவன்** (ஐங். 169: 1–3)

என்ற இவ்வரிகளால் இப்பறவை உறையும் இடத்தை பற்றி அறியமுடிகிறது.

**குருகு**

நெய்தல் நிலத்துக்குரிய மற்றொரு சிறந்த பறவை குருகு. இதன் தோற்றம்,: கால்கள் கரியவை; உடல் வெண்மையானது. பனை மரத்தின் மடலில் கூடுகட்டி வாழ்ந்து, கடலிலும் கழியிலும் மீன் யாமை முதலியவற்றைப் பிடித்துண்டு வாழ்வது; இதன் உடலுக்குச் சங்கு, வெண்கூதாளம்பூ, வெண்டாழம்பூ முதலியவையும்,

காலுக்குத் திணையரிதாளும் உவமையாகக் கூறப்படுகின்றன. நீர்வாழ்ப் பறவைகள் எல்லாம் பொதுப்பட கொக்கு என்றே வழங்கப்படுவதுண்டு. ஆனால் கொக்கினங்காள்! குருகினங்காள்! என்று தனித்தனியாக விளிக்கப்படுவதால் வேறுவேறென்பது தெளிவாகிறது. மேலும் இதன் கால் கருமை நிறமானது என்று அறியக்கிடப்பதால் நாரையும் அன்னமும் வேறுவேறானவை என்பது உறுதியாகிறது. குருகும் அன்றிலைப் போலத் துணையைப் பிரிந்திருப்பின் நள்ளிரவில் அமைதியுறாது வருந்தி அகவி அதனையழைக்கும்[46]. என அதன் தோற்றம், செயலை விளக்குகிறார் பேராசிரியர் தி.முத்து கண்ணப்பன்.

இக்குருகு பற்றி ஔவை துரைசாமிப் பிள்ளை கூறுகையில்,

உள்ளாங் குருகு எனப் பொதுமக்கள் கூறும் பறவையே இவ்வெண்குருகு என்று கூறுகிறார்.

இக்குருகுகள் பற்றிச் சங்க நெய்தல் பாடல்களில் பார்க்கும்போது, குருகுகள் பனை மரத்தில் கூடுகட்டி வாழும். கரிய கழியின் மீனைத் தின்று, இரவு நெருங்கியதும் தம் பனை மடற் கூடுகளிற் சென்று துஞ்சும் என இப்பறவை பற்றி விளக்கப்படுகிறது.

**............................................ இருங்கழி**

**இரை ஆர் குருகின் நிரை பறைத் தொகுதி**

**வாங்கு மடற் குடம்பை, தூங்கு இருள் துவன்றும்**

**பெண்ணை ஓங்கிய வெண்மணற் படப்பை** (நற். 123: 1–4)

இக்குருகுக் கூட்டம் கடற்கரை மணல்திடலிலே பரவி நிற்கும் தோற்றம், சிறிய தலையினையுடைய வெள்ளாட்டு மந்தை மேய்ந்து கொண்டிருக்கும் காட்சியை நினைவூட்டுகிறது என்பதை குறுந்தொகைப் பாடல் வரிகள் உணர்த்துகின்றன.

**..................................................... பூழியர்**

**சிறுதலை வெள்ளைத் தோடு பரந்தன்ன**

**மீன் ஆர் குருகின் கானல் அம் பெருந்துறை** (குறுந். 163: 1–3)

**நாரை**

இதுவும் நெய்தல் நிலத்தில் காணப்படும் பறவை. இதன் தோற்றம்: வெண்மையான சிறகினையும், சிறிய பசுமை நிறமான காலையும், செவ்வாயையும்

உடையது. இதன் இறகின் இடையேயுள்ள தூவி, மங்கிய செந்நிறமாகவிருக்கும். இதன் தாளுக்குத் திணைத் தாளையும் உவமை கூறுவதுண்டு. சிலவகை நாரைகளின் கால்கள் கருமையாகவும் இருக்கும். குருகும் நாரையும் ஒன்றென்று பல அறிஞர்கள் கருதுகிறார்கள்.[47]

இப்பறவையினம் பற்றிக்குறிப்பிடும் ஆ. சிங்காரவேலு முதலியார் தனது அபிதான சிந்தாமணியில்,

இவை கொக்கினத்தைவிடப் பெரியவை. இவ்வினத்தில் பல வேறுபாடுகள் உண்டு. இவைகளுக்குக் கழுத்தும், மூக்கும், காலும் மிக நீளம். உடல் சற்றுப் பருத்தது. காலும் மூக்கும் மஞ்சள் கலந்த செந்நிறம். உடம்பு வெண்மை முதலிய பலநிறம் ஆகும்[48] என்பார்.

இலக்கியத்தில் இப்பறவைகளின் செயற்பாடு பற்றி அகநானூற்றுப் பாடல் பின்வருமாறு குறிப்பிடுகிறது, நெல்விளை வயலின் ஒருபுறம் தங்கியிருந்த நாரையொன்று அங்கு அறுவடை செய்வோர் முழங்கும் மத்தளவொலிக்கு அஞ்சிப் பறந்து, கடற்கரையடைந்து அங்குள்ள பனை மடலில் தங்கி நரலுகிறது என உணர்த்துகிறது.

**-------------------------------------------- கழனி**

**வெண்ணெல் அரிநர் பின்றை ததும்பும்**

**தண்ணுமை வெரீஇய தடந்தார் நாரை**

**செறிமடை வயிரின் பிளிற்றிப் பெண்ணை**

**அகமடல் சேக்கும் துறைவன்** (அகம். 40:12–16)

இந்நாரை, ஆரல், அயிரை போன்ற சிறுமீன்களை உண்ணும் செய்தியைக் குறுந்தொகையும் நற்றிணையும் குறிக்கின்றன.

**ஆரல் அருந்த வயிற்ற** (குறுந். 114: 4)

**ஐயசிறுகண் செங்கடைச் சிறுமீன்** (நற். 91: 5)

### கொக்கு

கொக்கும் நெய்தல் நிலப் பறவைகளில் ஒன்று. கடற்கரையிலும் கழிகளிலும் ஆடாமல் அசையாமல் நின்று கொண்டு தனக்குரிய மீன் வந்ததும் வெடுக் கெனக் குத்தி எடுத்துத் தின்று அயலிலுள்ள மரங்களில் கூடுகட்டி வாழும்

பறவை. அதன் முதுகுப்புறம் சற்று மங்கிய சாம்பல் நிறமாக இருக்கும். சிலவகைக் கொக்குகளின் நிறம் மங்கிய செந்நிறமாகவும் காணப்படும் என்பர்[49].

நெய்தல் வரிகளில் இப்பறவை பற்றிக் காணும்போது, பனை மரத்தில் பெண் கொக்கு ஒன்று புலம்புகின்ற காட்சியைப் பாங்குற எடுத்துக் கூறுகிறார் சங்கப் புலவர் நக்கீரர்.கொழுமீனை உண்ணும் புன்தலைச் சிறுவர்கள் ஒரு நாள் காலையில் கருஞ்சேற்றுக் கழனியின்கண் மீன் வேட்டைக்குச் சென்றார்கள். நுண்ணிய கயிற்றால் அழகுறப் பின்னப்பட்ட வலையினை விரித்தார்கள். அகப்பட்டுக் கொண்டது ஓர் ஆண் கொக்கு! அதனைக் கண்ட பெண் கொக்கு துடிதுடித்தது! அங்கிருந்த பனைமரத்தில், இரையினையும் தீண்டாது, தனியே புலம்பித் தவித்தது! தன் சின்னஞ்சிறு பார்ப்பினைத் தழுவிக் கொண்டு இரக்கக் குரலெழுப்பி ஏங்கி நின்றது எனச் சுட்டுகிறது அகநானூற்றுப் பாடல்.

**குடுமிக் கொக்கின் பைங்கல் பேடை**
**இருஞ்சேற்று அள்ளல் நாட்புலம் போகிய**
**கொழுமீன் வல்சிப் புன்தலைச் சிறாஅர்**
**நுண்ஞாண் அவ்வலைச் சேவல் பட்டென**
**அல்குறு பொழுதின் மெல்கு இரை மிசையாது**
**பைதல் பிள்ளை தழீஇ ஒய்யென**
**அம்கண் பெண்ணை அன்புற நரலும்** (அகம். 290: 1–7)

**ஆந்தை**

ஆந்தை கடற்கரைச் சோலையில் அருகித் தோன்றுகின்ற பறவை.இதனை நற்றிணைப் பாடல்வரிகள் பின்வருமாறு உணர்த்துகின்றன.

பருத்த அடியுடன் பெருத்து வளர்ந்துள்ள வேம்பின் கிளையிலிருந்து பேராந்தை இரவெல்லாம் இரைந்து திரிந்தது.

**............................................. பாரிய**
**பராரை வேம்பின் படுசினை இருந்த**
**குராஅற் கூகையும் இராஅ இசைக்கும்** (நற். 218: 6–9)

இதனை இவ்வரிகள் புலப்படுத்துகின்றன.

**வெளவால்**

இதுவும் நெய்தல் நிலத்தில் காணப்படும். இது வாவல் என்றே பேசப்படுகிறது. பழுமரம் நாடித் திரியும் வெளவாலின் பார்வையும், அந்த வெண்மணல் சோலையின் பக்கம்படத் தவறவில்லை[50].

கடற்கரையூரினுள்ளே ஒரு மாமரம்; பகற்பொழுதில் முள் போன்ற மெல்லிய பற்களையுடைய ஒரு வெளவால் உயர்ந்த கிளையைப் பற்றித் தொங்கிக் கொண்டிருக்கிறது.

**"உள்ஊர் மா அத்த முள் எயிற்று வாவல்**

**ஓங்கல் அம்சினைத் தூங்கு துயில் பொழுதின்"**(நற்.87:1–4)

இங்ஙனம் நெய்தல் நிலத்தின் கண் வாழக் கூடிய பறவைகள் அவற்றின் செயல்கள் பற்றியும் புலவர்கள் தங்கள் கற்பனையில் இன்சுவை ததும்பக் கூறியுள்ளனர்.

**கழி–கடல் வாழ் உயிரினங்கள்**

ஆழமான கடல் பகுதியிலும்,கடலைவிட ஆழம் குறைந்த கழிமுகத்திலும் சுற்றித் திரிந்த உயிரினங்கள் பற்றிக் கூற வந்த நச்சினார்க்கினியர்,

நெய்தற்கு மா உமண்பகடு போல்வன;முதலையும் சுறாவும் மீனாதலின் மா வென்றல் மரபன்று எனக் கூறியுள்ளார்.

இதே நூற்பாவுக்காண விளக்கத்தை இளம்பூரணர் கூறும் போது,

**நெய்தற்கு .......... மா கராவும் சுறவும்** என்கிறார்.

நெய்தல் நிலத்தில் உறைந்த உயிரினங்கள் பற்றி நுட்பமாக விளக்கும் தி.முத்து கண்ணப்பன்,

சங்கப் இலக்கியத்தில் நெய்தல் நிலத்தில் முதலை, சுறா போன்றனவும்,உமண்பகடும் குதிரையும் குறிப்பிடப்படுகின்றன. முதலை, சுறா என்ற மீன்களோடு இறா, யாமை, அயிரை, ஆரல், அயிலை, கெடிறு, கயல் போன்ற மீனினங்களும் காணப்படுகின்றன. அலவன், சங்கு, இப்பி போன்ற நீர் வாழ் உயிரினங்கள் பற்றிய செய்திகளும் கூறப்படுகின்றன. முத்து,பலகறை என வழங்கும் சோழி முதலிய கடற்படுபொருள்களும் காணப்படுகின்றன. நீர் நாயும் குறிப்பிடப்படுகிறது[51] என்பார்.

இவ்வாறு நெய்தல் நிலத்தில் காணப்பட்ட உயிரினங்களைப் பற்றி விளக்கமாகக் காணலாம்.

**சுறா**

கடலில் வாழும் மீனினங்களில் அச்சமூட்டவல்லதும் கொடூரமானதும் சுறாமீனாகும். இம்மீனைப் பற்றி தி.முத்து கண்ணப்பன் குறிப்பிடுகையில்,

கடலில் வாழும் மீனினங்களில் சுறா பெயர் போனது. இது பெரும்பாலும் கடலில்தான் காணப்படும். ஆறுகளிலும், கழிகளிலும் சிற்சில சமயங்களில் காணப்படுவதும் உண்டு. ஆறுகள் கடலோடு கலக்குங்கால், சுறாமீன்கள் கடலிலிருந்து கழிமுகங்களின் வழியே ஆற்றுக்குள் சென்றுவிடும். பின்னர் ஆற்றுடன் இணையும் கழிகளிலும் புகும். சுறா, பெரும்பாலும் கடல்நீரில், அதாவது உப்பு நீரில்தான் வாழும். கடல் நீர், ஆறுகளுக்குள் பாயும்போது குறிப்பிட்ட தொலைவு வரையில் உப்பு நீராகவே இருக்கும். உப்புநீர் இருக்கும் வரை சுறா வாழும். உப்பு நீர் நன்னீராக மாறிவிட்டபின் சுறா அந்நன்னீரில் ஒரு சில நாட்களே உயிரோடு வாழக்கூடும்[52]என்பார்.

சங்க பாக்களில் சுறாமீன்கள் கடல் நீரில் வாழ்வதாகவே சுட்டப்படுகின்றன. கழிகளில் அருகியேக் காணப்படுவதாக அப்பாடல்கள் சுட்டுகின்றன. இச்சுறாமீன்களின் தன்மை மற்றும் வகைகள் பற்றி பின் வருமாறு விளக்குவார் பேராசிரியர் தி.முத்து கண்ணப்பன்.

சுறா மிகவும் பயங்கரமானது. மீன்களுக்குள் சிறப்பு மிக்கது. தலைமையானது. ஏனைய மீனினங்களை அடக்கிப் பிடித்து அடித்துத் தின்றே வாழும் இயல்பினது. சுறாக்களில் சில முப்பது அடிக்குமேல் பெரிதாக இருக்கும். சில ஒன்று அல்லது இரண்டடி இருக்கும்[53] என்பார்.

இச்சிறப்புமிக்க சுறாமீன்களில் பல வகைகள் காணப்படுகின்றன. அவை,

**1. கார்ச்சாரடான் என்ற வெண் சுறா மீன்.**

**2. ஸ்டிகோஸ்டோமா புலிச்சுறா என்று வழங்கப்படும்.**

**3. கொம்பன் சுறா.**

**4. வாள் சுறா[54]**

என்பவைஆகும்.

சங்க இலக்கியப் பாடல்களில் கடலில் வாழக்கூடிய சுறா மீன்கள் பின்வரும் அடிகளில் விளக்கப்படுகின்றன.

சங்குகள் வாழும் கடலில் கொடிய சுறா மீனை வளைந்த படகில் ஏறிச்சென்று பிடிக்கும் பரவதர் என்றும்,சுறா மீன்கள் மிகுதியாக உள்ள கடற்பரப்பு என்றும் வருணிக்கப்படுகிறது.

**வளைநீர்க் ..........................................**

**கடுஞ்சுற எறிந்த கொடுந்திமில் பரதவர்** (நற். 199: 5–6)

**சுறவினம் கலித்த நிறை இரும் பரப்பின்** (நற். 223: 7)

**இறா**

இம்மீன் கடல், கழி நன்னீரில் வாழக்கூடிய சிறிய மீனினம். இறா கடலிலும், கழிகளிலும், ஆறு, ஏரி, குளம் முதலிய நன்னீர் நிலைகளிலும் வாழும் சிறிய மீனினமாகும். இலக்கியங்களில் இறா எனவும் இறவு எனவும் வழங்கப்படுகிறது. இறாக்களில் பெரும்பாலானவை கடலிலும், உப்பங்கழிகளிலும் வாழும். நன்னீரிலும் வாழ்வதுண்டு. உப்பு நீரில் வாழும் இறாக்கள் நன்னீரில் நீண்ட நாட்கள் உயிருடன் இரா. அவ்வாறே நன்னீர் இறாக்கள் உப்புநீரில் வாழா. கடலில் ஆழமில்லாத கரைப் பகுதிகளில் இறாக்கள் கூட்டமாக இயங்கும்[55] மேலும்,

இறாவின் உடல் சற்று நீண்டு இருபுறங்களிலும் ஒடுங்கியிருக்கும். அதன் உடல் முழுவதும் வளையங்களால் ஆனது. கைட்டின் என்னும் கொம்புப் பொருளாலான தோல் மூடியிருக்கும். மேலோட்டின் முன்முனையின் நடுவே வாயின் பற்கள் போன்ற கூரிய முட்களையுடைய வலுவான கொம்பு ஒன்று முன்னுக்கு நீட்டிக்கொண்டிருக்கும். இறாவின் ஓட்டை நீக்கினால் வயிறு முழுவதும் பருத்த தசைக் கண்டங்கள் இருக்கும். இதன் கறி முள்ளோ, எலும்போ, நாரோ ஒன்றுமில்லாதது. தசையை மிகவும் சுவையான உணவாக மனிதர்கள் விரும்புவார்கள். இறா தான் இருக்கும் இடத்துக்கு ஏற்ப தன் நிறத்தை மாற்றிக் கொள்ள வல்லது. இறாக்களில் பட்டை விழுந்தவையும், பழுப்பு, ஊதா நிறமானவையும் உண்டு. சிறிதாக இருக்கும் இறா பூச்சியிறா. இறாவினை வற்றல் போடுவதுண்டு. இலக்கியங்களில் சேயிறா, வெள்ளிறா என இருவகை இறாக்கள் கூறப்பட்டுள்ளன.[56]

சிறிய கடல் வாழ் உயிரியான இறாவினை உற்று நோக்கி ஆய்ந்த தமிழ்ப் புலவர்கள் தங்கள் பாடல்களில் பின்வருமாறு குறிப்பிடுகிறார்கள்.இறாவின் கால்கள் முட்கள் போன்ற அமைப்பினை உடையவை என்று குறுந்தொகைப் பாடலும்,இம்மீன்களை முடிமிக்க வலைகளால் திரளாகப் பிடித்துக்கொண்டு வந்து உலர வைத்து, அதனைக் கவரவரும் புள்ளினங்களை விரட்டுவதிலேயே மீனவப் பெண்களின் பகல் பொழுது கழியும் என நற்றிணைப் பாடல் அடிகளும் எடுத்தியம்புகின்றன.

**முட்கால் இறவின் முடங்குபுறப் பெருங்கிளை** (குறுந். 109: 1)

**முடிவலை முகந்த முடங்கு இறப் பரவை** (நற். 49: 3–4)

**அலவன்**

நெய்தல் நிலத்தில் கரை வாழ் உயிரியாக நண்டு கூறப்படுகிறது. சங்க இலக்கியத்தில் அலவன் என்ற சொல் ஞெண்டு என்றே வழங்கப்படுகிறது. நண்டு என்ற சொல் தொல்காப்பியத்தில் மட்டுமே பயன்படுத்தப்பட்டுள்ளது.

**நண்டும் தும்பியும் நான்கறிவினவே**[57]

இலக்கியத்தில் நண்டு என்ற சொல் கள்வன், களவன் என்ற சொற்களால் ஆளப்பட்டுள்ளது.

' நண்டுகள் கடற்கரையிலும் கழிக்கரையிலும் வளையமைத்து வாழ்வன. கரையை அடுத்து நீருக்குள்ளே வாழ்கின்ற நண்டுகளும் உள்ளன. அவை பெரும்பாலும் நிலத்தில் இயங்குவதில்லை. நெய்தல் திணையில் குறிப்பிடப்படுவனவெல்லாம் கடற்கரையிலும் கழிக்கரையிலும் வாழும் நண்டுகளேயாம். நண்டுகளுக்குப் பக்கவாட்டில், பக்கத்துக்கு ஐந்தாகப் பத்துக் கால்கள் உண்டு. முதலில் உள்ள இரு பக்கக் கால்களும் சற்று பருமை உள்ளனவாகவும், வலுவுள்ளனவாகவும் நுனியில் வலிய இடுக்கி போன்ற கொடுக்கினையுடையனவாகவும் இருக்கும். நண்டுகள் பக்கவாட்டிலேயே நடக்கும். நேராக முன்னோக்கிச் செல்வதில்லை. நண்டுகளின் கண்கள் சிறிய மலர் மொட்டுகள் போன்ற தோற்றமுடையன'.[58]

கடற்கரையில் நண்டைப் பிடித்து மகளிர் விளையாடுவதைப் பற்றிப் பழந்தமிழ்ப் பாடல்கள் பல எடுத்துரைக்கின்றன. இந்நண்டுகளை மகளிர் பிடித்து

விளையாடுவது அலவன் ஆட்டம் எனப்படும். மகளிர் அலவனாட்டம் ஆடுவதை இலக்கிய வரிகள் கீழ்வருமாறு எடுத்துரைக்கின்றன.

கடற்கரையில் மணற்பரப்புச் சிதையுமாறு, விரைந்தோடும் நண்டினை விரட்டிப் பிடிக்க ஓடிஓடி ஓய்ந்து போனாள் ஒரு மங்கை. மேலும், அதனைத் தொடர முடியாமல் அலுத்து அயர்ந்து அமர்ந்துவிட்டாள் என்பதை,

**எறிதிரை கொழீஇய எக்கர் வெறிகொள**

**ஆடுவரி அலவன் ஓடுவயின் ஆற்றாது**

**அசைஇ உள்ஒழிந்த வசைதீர் குறுமகட்கு** (நற். 106: 2–4)

என்னும் நற்றிணைவரிகள் விளக்கி நிற்கின்றன. மேலும், கும்பலாக மேய்ந்து கொண்டிருக்கும் இறாக்களை நண்டுகள் தாக்குவதுண்டு. இதனை, ஐங்குறுநூறு பின்வறுமாறு கூறுகிறது.

**அலவன் தாக்கத் துறை இறப் பிறழும்** (ஐங். 179: 2)

**முத்துச் சிப்பிகள்**

சிப்பிகளிலிருந்து முத்துக்கள் கிடைக்கின்றன. தமிழ்நாட்டில் கிடைக்கக்கூடிய முத்துக்கள் சிறப்புப் பெற்றவை. மேல்நாட்டவர் தமிழ்நாட்டு முத்தினை வாங்குவதில் ஆர்வம் காட்டியிருக்கின்றனர்.

முத்துக்களின் தோற்றம் பற்றி கலைக்களஞ்சியத்தில் காணும் விளக்கம்,

கடலிலுள்ள முத்துச்சிப்பி என்னும் ஒருவித ஆளியின் சிப்பியினுள் ஒரு மணலோ, வேறு உறுத்தும் பொருளோ புகுந்தால் அப்போது அப்பிராணி தன் புறத்தோல் அடுக்காகிய எப்பிதீலியம் என்னும் படலத்தால் அதைப் பொதிகின்றது. அந்தப் பையினுள் பிராணி சுரக்கும் மெல்லிய அடுக்கடுக்காக வந்து சேர்ந்த பொருளைப் பொதிகின்றது. முற்றிலும் நன்கு பொதியப் பெற்ற பொருள்தான் முத்து[59] என விளக்குகிறது.

சங்க நெய்தல் பாடல்கள் முத்து எடுத்தல் பற்றியும், அதன் சிறப்புப் பற்றியும் கூறி நிற்கின்றன. மீனவர்கள் கடலினின்று மிகுதியாகத் திரண்ட முத்துக்களையுடைய முத்துச்சிப்பிகளைக் கொண்டு வந்து கரையில் குவித்து அவற்றைத் தங்களுக்குள் பங்கீடு செய்து கொள்வர் என்ற செய்தியை அகநானூற்று வரிகள் விளக்குகின்றன.

**........................................... விரிதிரைக்**

**கண்டிரள் முத்தங் கொண்டு ஞாங்கர்த்**

**தேனிமிர் அகன்கரைப் படுக்குங்**

**கானலம் பெருந்துறைப் பரதவன்** (அகம். 280: 11–14)

முழங்குகின்ற கடல் தந்த விளங்கு கதிர் முத்தமும் பிற பொருள்களும் நெய்தல் நிலத்தே நாடோறும் நனி சிறந்து மலிந்து கிடந்தன என்ற விளக்கத்தை மதுரைக்காஞ்சி வரிகள் வழி உணரலாம்.

**முழங்கு கடல் தந்த விளங்குகதிர் முத்தம்**

**..........................................................................**

**.................................................... அனைத்தும்**

**வைகல் தோறும் வழிவழிச் சிறப்ப** (மது. 315, 323–324)

**சங்குகள்**

இவை கடல், ஆறு, ஏரி, குளங்கள் ஆகிய நீர்நிலைகளில் வாழும் உயிரினம். சங்கு திருகலான ஓட்டுக் கூடுள்ள உயிரி. இவை வளையென்றும் வழங்கப்படுகிறது. சங்குகள் பல வகைப்பட்டன. தென்னாட்டுக் கடலில் மிகப் பெருகி காணப்படுகின்றன[60]என்பர்.

சங்குகளில் சிறந்தவற்றை இடம்புரி, வலம்புரி, சலஞ்சலம், பாஞ்சசன்னியம் என நால்வகைப் படுத்தி, இப்பி ஆயிரம் சூழ்ந்த இடம்புரி, இடம்புரி ஆயிரம் சூழ்ந்த வலம்புரி, வலம்புரி ஆயிரம் சூழ்ந்த சலஞ்சலம், சலஞ்சலம் ஆயிரம் சூழ்ந்தது பாஞ்சசன்னியம் எனத் தமிழ் நிகண்டுகள் கூறுகின்றன.

சங்க இலக்கியப்பாடல்களில் சங்குகள் வலம்புரி, வளை என்ற பெயர்களாலேயே வழங்கப்படுகின்றன. அதே போல சங்கப் பாடல்களில் குறிப்பிடப்படுபவை கடலில் வாழும் சங்குகளே.

கடலில் வாழும் சங்குகள் அடிக்கடி கரையின் மேல் மேய்ந்து செல்லும் என்பதை அகநானூறு,

**வளைமேய் பரப்ப** (அகம். 200:7)

என்று எடுத்துரைக்கிறது. பரதவர் பரந்த கடலுக்குள் முத்துக் குளிப்பது போல் வலம்புரிச் சங்குகளையும் மூழ்கித் திரட்டி வருவர். அவை விலை மதிப்புள்ளவை . இதனையும் அகநானூற்றுப் பாடல் வரிகள் கீழ்வருமாறு புலப்படுத்துகின்றன .

**இலங்கு இரும் பரப்பின் எறிசுற நீக்கி**

**வலம்புரி மூழ்கிய வான்திமில் பரதவர்** (அகம். 350: 10–11)

மேலும், இச்சங்குகளை அறுத்து மகளிர் அணியும் அழகிய சங்கு வளையல்களும் செய்யப்பட்டன.

**முழங்கு கடல் தந்த விளங்குகதிர் முத்தம்**

**அரம் போழ்ந்து அறுத்த கண்நேர் இலங்குவளை** (மதுரை. 315–316)

இன்றைய காலக்கட்டங்களிலும் இச்சங்கு வளையல்கள் அனைத்து மகளிரும் அணியும் அணியாகத் திகழ்கிறது. வடமாநிலங்களில் இது மங்கல அணியாக அணியப்படுகிறது.

**இப்பிகள்**

கடற்கரை ஓரத்தில் வாழக்கூடிய மிகச் சிறிய மெல்லுடலி உயிரினம் இப்பியாகும்.இவை,

இப்பிகள் கடல் அலையடிக்கும் கரையோரத்தில், மண்ணுக்குள் புதைந்து வாழும் ஓடுகள் பொருந்திய சிறிய உயிரினம். இவை சிப்பிகள் என்றும் முரல் என்றும் வழங்கப்படும். இவற்றின் உள்ளிருக்கும் இறைச்சியை உண்ணுவர். இவற்றின் ஓடுகளே கிளிஞ்சல்கள்[61] எனப்படும்.

இப்பிகள் பற்றிச் சங்கப் பாடல் வரிகள் பின்வருமாறு பகர்கின்றன.

கடற்கரையிலுள்ள புன்னை மரங்கள் உதிர்க்கும் பூந்தாதுக்கள் கடற்துறையில் மேயும் இப்பிகளின் ஒட்டை மறைத்து விடும்.

**பனியரும்பு உடைந்த பெருந்தாள் புன்னை**

**துறைமேய் இப்பி ஈர்ம்புறத்து உறைக்கும்** (நற். 87: 6–7)

**தாலி**

தாலி என்பது மிகச்சிறிய சங்கினத்தைச் சேர்ந்தது.

சோழி என்று வழங்குவது இந்தத் தாலியைத்தான்[62]

தாலிகள் அலைகளால் கரைகளில் எற்றி ஒதுக்கப்பட்டுக் கிடக்கும்; இவற்றை மீனவர்கள் தங்களின் வலைகளின் விளிம்பில் வரிசையாகக் கட்டுவர். அதனை வலையென்று காக்கைகள் அஞ்சியோடும் என்று ஐங்குறுநூற்றுப் பாடல் வரிகள் சுட்டுகின்றன.

**பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை**

**வரிவெண் தாலி வலைசெத்து வெரூஉம்** (ஐங். 106: 1–2)

**சிறுமீன்கள்**

நெய்தல் நிலக் கடற்பரப்பில் சுறா மீன்களும், இறா மீன்களும் சிறப்பாகப் பேசப்படுகின்றன. இம்மீன்களைத் தவிர அயிலை, அயிரை, ஆரை, கெடிறு போன்ற சிறுமீன்களும் குறிப்பிடப்பட்டுள்ளன.

அயிரைகள் சேறுமிக்க கழிகளில் மிகுதியாகக் காணப்பட்டது. கழிகளில் கெடிறு என்ற ஒரு வகை மீன்கள் கூட்டம் கூட்டமாக வாழும் என்று நெய்தல் பாடல் வரிகள் புலப்படுத்துகின்றன.

**இருஞ்சேற்று அயிரை தேரிய** (நற். 272: 1–6)

**இருங்கழி இனக்கெடிறு ஆறும்** (ஐங். 167: 1–2)

**யாமை**

யாமை, கடல், ஏரி, குளம் போன்ற நீர்நிலைகளில் வாழ்வது.

கடல்யாமையும் நன்னீர் யாமையும் வெவ்வேறானவை[63]

இவ்வாமைகள் பற்றிய சுவையான செய்திகளைச் சங்க நெய்தல் பாடல்கள் தெரிவிக்கின்றன.அகநானூற்றுப்பாடலில், நிறைந்த சூல் கொண்ட யாமைகள் கழியருகே உள்ள குவிந்த மணற்கரைகளில், மணலை ஆழப்படுத்தி முட்டைகளை இட்டு மூடிவிடும். அதன்மேல் அடும்பங் கொடிகளைப் பெயர்த்து இழுத்து மறைத்து விடும். அம்முட்டைகள் பொரிந்து குஞ்சுகளாகும் வரை ஆண் யாமையே காவல் காக்கும் என்று விளக்கி நிற்கிறது.

**அடும்பு கொடி சிதைய வாங்கிக் கொடுங்கழிக்**
**குப்பை வெண்மணல் பக்கம் சேர்த்தி**
**நிறைச்சூல் யாமை மறைத்து ஈன்று புதைத்த**
**கோட்டுவட்டு உருவின் புலவுநாறு முட்டை**
**பார்ப்புடன் ஆடும் அளவை, பகுவாய்க்**
**கணவன் ஓம்புங் கானல் ........** (அகம். 160: 3–8)

**நீர்நாய்**

இந்நீர்நாயும் நெய்தல் நிலக் கடல் பகுதியில் வாழக்கூடிய ஓர் உயிரி.

நீரில் வாழும் நாய் போன்ற ஒரு வகை உயிரினம்[64] என்கிறார் பேராசிரியர் தி.முத்து கண்ணப்பன்.

இலக்கியத்தில் இது நீர்நாய் என வழங்கப்படுகிறது. நீர்நாய் கொழுவிய மீன்களைத் தின்று உயிர்வாழும்; நீர்க் கரைகளில் மல்கி வளர்ந்துள்ள தில்லை மரங்களில் பொந்தமைத்துக் கொண்டு மீனை உண்டு மகிழ்ந்துறங்கும் என்ற செய்தியை நற்றிணைப் பாடல் ஒன்று உணர்த்துகிறது.

**.......................................... இருங்கழிக்**

**குருளை நீர்நாய் கொழுமீன் மாந்தித்**

**தில்லை அம் பொதும்பில் பள்ளி கொள்ளும்** (நற். 195: 1–3)

**முதலை**

முதலைகள் ஆழம் அதிகமான கடலில் வாழாது. நன்னீர் நிலைகள், கழிகளில் வாழும் இயல்பினது.

முதலை கரையில் மணலைத் தோண்டி, அதில் முட்டையிட்டு மூடிவிடும். முட்டைகளை, அவை அடைகாப்பதில்லை. ஞாயிற்றின் வெப்பத்தாலேயே குஞ்சுகள் முட்டையினின்று தோன்றும். தாய் முதலை அடிக்கடி தான் முட்டையிட்ட இடத்துக்கு அருகில் வந்து காத்திருக்கும். முட்டைகள் பொரிக்கும் சமயம் மணல் சற்று விலகுவது தோன்றும். பொரித்த குஞ்சுகள் குரலெழுப்பும். உடனே தாய் முதலை மணலை விலக்கிக் குஞ்சுகளை அழைத்துக் கொண்டு நீருக்குள் சென்றுவிடும்[65].

பழந்தமிழ் நெய்தல் பாடல்களில் குறிப்பிடப்பட்டிருப்பன கழியில் வாழ்ந்த முதலைகளே. வளைந்த கால்களையுடைய முதலையும், கொம்பினை உடைய சுறாவும் கழிகளில் உறைந்தன என்பதை அகநானூற்றுப் பாடல் மூலம் அறியலாம்.

**கொடுங்கால் முதலையொடு கோட்டுமீன் வழங்கும்**

**இருங்கழி** (அகம். 80: 1–2)

மேலே அறியப்பட்ட உயிரினங்கள் யாவும் கடலிலும் கழியிலும் வாழ்ந்தவை. இவை இரண்டிலும் வாழ்ந்த பல்வேறு உயிரினங்கள் பற்றியும், அவற்றின் செயல்கள் பற்றியும் சங்கப் புலவர்களின் நிலம் பற்றிய நுட்பமான அறிவால் அறிந்தோம். இனி இந்நிலத்தில் வாழ்ந்த மக்கள், தொழில், அவர்களது குடியிருப்புகள் பற்றியும் காணலாம்.

**நெய்தல் நிலக் குடியிருப்புகள்**

நெய்தல் நில மக்கள் கடல் கரையை ஒட்டி மணல் பரப்பில் சிறுசிறு குடிசைகள் அமைத்துக்கொண்டு வாழ்ந்தனர்.

நெய்தல் நில மக்கள் வாழக்கூடிய குடியிருப்புகள் சேரி என வழங்கப்படுகிறது. இக்குடிசைகள் கும்பலாகக் காணப்படும். ஒரே இனத்து மக்கள் சேர்ந்து வாழ்வதால் அது சேரி[66] என அழைக்கப்படுகிறது.

கடற்கரை மணற் பரப்பில் சிறுசிறு குடிசைகள் கும்பல் கும்பலாக அமைந்த சிறப்பினை விளக்கும் சங்கப்பாடல் வரிகள் கீழ்வருமாறு விளம்புகின்றன.

**கானலம் சிறுகுடி** (நற். 4:1)

**கல்லென் சிறுகுடி** (அகம். 110: 13)

**சிறுகுடிப் பரதவர்** (அகம். 130: 17)

இக்குடியிருப்புகள் சேரி என்று வழங்கப்பட்டுள்ளன என்பதை,

**புன்னையம் சேரி** (குறுந். 320:7)

**புன்னை ஓங்கிய புலால் அம் சேரி** (குறுந். 351: 6)

**புலால் அம்சேரி** (அகம். 200:2) என்ற வரிகள் புலப்படுத்துகின்றன.

மேலும், கடற்கரையில் அமைந்திருந்த குடியிருப்புகளின் ஊர்கள், சீறூர், சிற்றூர் என வழங்கப்பட்டுள்ளன.

**சிறு நல்லூர்** (குறுந். 55:5)

**பெண்ணை வேலி உழைகண் சீறூர்** (நற். 392: 6)

**தன்குடி வாழ்நர் அக்குடிச் சீறூர்** (நற். 135:4)

நெய்தல் நில ஊர்கள் பட்டினம், பாக்கம் எனவும் சங்கப் பாடல்களில் இடம்பெற்றுள்ளன. தொல்காப்பிய உரையாசிரியர் நச்சினார்க்கினியர் கருப்பொருள் பற்றிய உரை விளக்கத்தில்,

நெய்தற்கு ஊர் பட்டினமும் பாக்கமும்[67] என்று கூறியுள்ளார்.

பாக்கம் என்ற பெயரில் பலவிடங்களில் வழங்கப்பட்டு வருகின்றது எனினும் குடி, சிறுகுடி, ஊர் என்ற பெயர்களாலேயே மிகுதியாய் வழங்கப்பட்டுள்ளன. பட்டினம் என்பது சிறப்பாக நெய்தல் நிலத்துள்ள நகரத்தைக் குறிப்பதாகவே வழங்கப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது[68].

ரா.பி. சேதுப்பிள்ளை சுட்டுகையில்,

கடற்கரையில் உண்டாகும் நகரங்கள் பட்டினம் என்று பெயர் பெறும் என்றும்,கடற்கரைச் சிற்றூர்கள் பாக்கம் என்றுபெயர் பெறும்[69] என்றும் கூறுவார்.

**குடிசையமைப்பு**

நெய்தல் நிலத்தில் காணப்பட்ட குடிசையமைப்பினைப் பழந்தமிழ்ப் பாடல்கள் பலவற்றில் அறிய முடிந்தாலும், பெரும்பாணாற்றுப்படையில் கடியலூர் உருத்திரங் கண்ணனார் குடிசை அமைப்பினை நம் மனக்கண்முன் நிறுத்துகிறார்.

மூங்கிற் கோல்களை வரிசையாகச் சார்த்தி, வஞ்சி, காஞ்சி ஆகிய மரங்களின் வெண்மையான கொம்புகளை இடையிடையே விரவிப் பொருத்தி, தாழை நாரினைக் கொண்டு வலித்துக் கட்டி, மேலே தருப்பைப் புல் வேய்ந்த குறுகிய தாழ்வாரம் இறக்கி அமைத்த பரதவரின் குடிசை. இதனை,

**வேழம் நிரைத்து வெண்கோடு விரைஇ**

**தாழை முடித்துத் தருப்பை வேய்ந்த**

**குறியிறைக் குரம்பை** (பெரும். 263–265)

என்ற வரிகள் மூலம் குடிசையமைப்பை நாம் நேரில் காண்பது போலக் காட்சியாக்கியுள்ளார்.

இக்குடிசைகள் காய்ந்த ஓலைகளாலும் புல்லாலும் வேயப்பட்டன.

**காயன் வேய்ந்த தேய நல் இல்** (அகம். 370: 5)

இத்தகைய குடிசைகள் கும்பலாக அமைந்துதிருந்தன. இதனைப் பாக்கம் எனக் குறிப்பிட்டனர்.

**ஓங்கித் தோன்றும் தீம்கள் பெண்ணை**

**நடுவணதுவே...............................................**

**............................ சிறுகுடிப் பாக்கம்** (நற். 323: 1–3)

இவ்வாறு நெய்தல் நிலக் குடிசையமைப்புகள் மற்றும் குடிசைகள் பற்றிச் சங்கப் புலவர்கள் பலர் தம் பாக்கள் மூலம் நம் கண்முன் காட்சிகளாகக் காட்டியுள்ளனர். இக்குடிசையில் வசித்த மக்களைப் பற்றி அறியலாம்.

**மக்கள்**

**பெயரும் வினையும் என்று ஆயிரு வகைய**

**திணை தொறு மரீஇய திணை நிலைப் பெயரே**[70]

என்ற தொல்காப்பிய நூற்பாவிற்கு உரை கூறிய நச்சினார்க்கினியர், நால்வகை நிலத்தும் மருவிய குலப்பெயராவன என்று தொடங்கி, நெய்தற்கு நுளையர், திமிலர், பரதவர், நுளைத்தியர், பரத்தியர், ஏனைப் பெண் பெயர் வருமேனும் உணர்க எனக் கூறியுள்ளார். மேலும் இனி உரிப்பொருட்குரிய தலைமக்கள் பெயராவன, பெயர் பெயரும் நாடாட்சிபற்றி வரும் பெயருமாம் என்று தொடங்கி நெய்தற்குக் கொண்கன், துறைவன், சேர்ப்பன், மெல்லம் புலம்பன், தலைவி பெயர் வந்துழிக் காண்க என்று கூறியுள்ளார்.

இளம்பூரணர் விளக்குகையில்,

நெய்தற்கு மக்கட்பெயர், நுளையர், நுளைச்சியர் என்பன; தலைமக்கட் பெயர் சேர்ப்பன், துறைவன், கொண்கன் என்பன; பிறவும் அன்ன[71] என்று குறிப்பிடுகிறார்.

நெய்தல் நில மக்களைப் பற்றி நம்பி அகப்பொருள் விளக்கம் பின் வருமாறு பகர்கிறது.

**.............................................. சேர்ப்பன் விரிதிரைப் புலம்பன்**

**பரத்தி நுளைச்சி ..............................................................**

**..................................................................................................**

**நுளையர் நுளைச்சியர் பரதர் பரத்தியர்**[72]

வி.கனகசபை இம் மீனவ மக்கள் பற்றி குறிப்பிடுகையில்,

மீனவர் அல்லது செம்படவர் ஆற்றுத்தீரங்கள்,தாழ்வெளிகள்,கடற்கரை ஆகிய பகுதிகளில் வாழ்ந்தவர்கள்[73] என்பர்.

நெய்தல் நிலத்தில் வாழ்ந்தவர் வலையர் என்றும்,செம்படவர்என்றும்,பரதவர் என்றும், வழங்கப்பெறுவர்[74] என்பது ரா.பி.சேதுப்பிள்ளை தரும் விளக்கமாகும்.

சங்க இலக்கியத்தில் நெய்தல் நில மக்கள் பற்றி பேராசிரியர் தி. முத்து கண்ணப்பன் பின்வறுமாறு விளக்குகிறார்:

நெய்தல் நில மருவிய குலப்பெயரால் பரதவர், நுளையர், திமிலர் என்ற ஆண்களைக் குறிக்கும் பெயர்களில் முதலாவதான பரதவர் என்ற பெயர் மட்டுமே சங்க இலக்கியத்துள் பல்கி வழங்கப்பட்டுள்ளது. நுளையர் என்ற பெயர்

எட்டுத்தொகையுள் அகநானூற்றில் ஓரிடத்தும், திமிலர் என்ற பெயர் பத்துப்பாட்டினுள் மதுரைக்காஞ்சியில் மட்டுமே காணப்படுகிறது. திமிலோன் என அகநானூற்றில் ஒரேயிடத்தில்தான் உள்ளது.

பெண் மக்கள் பெயரான நுளத்தியர், பரத்தியர், நுளைச்சியர் என்பனவற்றில் எப்பெயருமே சங்க இலக்கியத்தில் எங்கும் காண்பதாகத் தெரியவில்லை. ஆனால் நுளைமகள் எனச் சிறுபாணாற்றுப்படையில் ஓரிடத்து வந்துள்ளது. பரத்தியர் என்ற பெயரும் எங்கும் காணப்படவில்லை. ஆனால் பரதவர் மகள் என நற்றிணையில் ஈரிடத்தும், பரதவ மகளிர் என மதுரைக்காஞ்சியில் ஓரிடத்தும் வழங்கப்பெற்றுள்ளது. பரதவர் மடமகள் எனக் குறுந்தொகையுள் ஓரிடத்தும் வழங்கப்பட்டுள்ளது[75]எனத் தெளிவுபடுத்தியுள்ளார்.

இவற்றைத் தவிர பரதர், பரதவர், கரையர், முக்குவர் என்ற சொற்கள் தற்காலத்தில் பயன்படுத்தப்படுகிறது. இம்மீனவமக்கள் ஈடுபட்ட தொழிலைப் பற்றிக் காணலாம்.

## தொழில்

நெய்தல் நில மக்கள் கடலில் மீன் பிடித்தலையே தலையாயத் தொழிலாகக் கொண்டவர்கள். கடலிலும், கழியிலும் மீன் பிடித்தல், கடல் நீரைக் கொண்டு உப்பு விளைவித்தல் அவர்கள் தொழிலாகும். இவற்றில் வரும் பொருளைக் கொண்டே வாழ்க்கை நடத்தினர். இதனை நச்சினார்க்கினியர் தமது தொல்காப்பிய உரையில்,

**நெய்தற்கு உணா, மீன் விலையும் உப்பு விளையும்**[76] என்கிறார்.

மீனவர் தங்கள் தொழிலாகிய மீன் பிடித்தலைப் பற்றிய நெய்தல் பாடல்கள் பின்வருமாறு விளக்கி நிற்கின்றன. காற்று கடுமையாக வீசிக் கொண்டிருந்தது. அக்காற்றுக்கேற்ப பரவதர் தம் தோணியைப் பதமாய் இயக்கிக் கொண்டிருந்தனர். அளவற்ற சுறாமீன்கள் அகப்பட்டன. இரவு முழுவதும் அவ்வாறு தூண்டிலைக் கொண்டு வேட்டையாடிப் பின்னர் வைகறைப் போதில் மீன் வளத்தோடு கரை திரும்பினர் என்ற செய்தியை நற்றிணை வரிகள் இன்சுவையோடு எடுத்து இயம்புகின்றன.

**............................................................ வளைநீர்க்**

**கடுஞ்சுறா எறிந்த கொடுந்திமிற் பரதவர்**

**வாங்கு விசைத் தூண்டில் ஊங்குஊங்கு ஆகி**

**வளிபொரக் கற்றை தாஅய் நளிசுடர்**

**நீல்நிற விசும்பின் மீனெடு புரைய ..................** (நற். 199: 5–10)

மற்றொரு நற்றிணைப் பாடலில், வலைகளைச் சிக்கெடுத்துச் சீர்படுத்தி வெண்மணல் பரப்பில் விரித்து உலர்த்தி அருகில் உள்ள நீல்நிறப் புன்னையின் நிறை நிழலிலே தங்கிக் கடலில் தங்களுக்கு மீன்பாடு கிடைக்கும் நேரத்தைக் கூர்ந்து நோக்கிக் காத்திருப்பர் பரதவர் என்பதை,

**கானல் அம்சிறுகுடிக் கடல்மேல் பரதவர்**

**நீல்நிறப் புன்னைக் கொழுநிழல் அசைஇ**

**தண்பெரும் பரப்பின் ஒண்பதம் நோக்கி**

**அம்கண் அரில்வலை உணக்கும் துறைவன்** (நற். 4:1–4)

நற்றிணை பாடல் வரிகள் உணர்த்துகின்றன. மீனவர்கள் மீன் பிடித்தலோடு உப்பு விளைவித்தும் வருவாயினைப் பெருக்கிக் கொண்டு வாழ்க்கை நடத்தினர். பெருங்கடல் வேட்டையாடும் மீனவர்கள் உழாது விளைத்த வெண்கல் உப்பினை விலை கூறி விற்றுக் கொண்டே கதிரவனின் வெம்மையில் வெடித்த குன்றங்களையும் கடந்து செல்வர் என்பதை அகநானூற்றுப் பாடல் எடுத்துரைக்கின்றது.

**பெருங்கடல் வேட்டத்துச் சிறுகுடிப் பரதவர்**

**இருங்கழிச் செலவின் உழாஅது செய்த**

**வெண்கல் உப்பின் கொள்ளை சாற்றி**

**என்றூழ் விடர குன்றம் போகும்** (அகம். 140: 1–4)

மேற்கண்ட விளக்கங்களால், நெய்தல் திணையின் முதல் பொருள், கருப்பொருள் பற்றி அறிந்தோம். இனி நெய்தல் நில உரிப்பொருள் பற்றிக் காணலாம். நெய்தல் திணையின் உரிப்பொருள் இரங்கலும், இரங்கல் நிமித்தமும் ஆகும். இதனை,

**புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல்**

**ஊடல் இவற்றின் நிமித்தம் என்றிவை**

**தேருங் காலைத் திணைக்குரிப் பொருளே**[77]

எனக்குறிக்கிறது தொல்காப்பியம்.

இரங்கல் நிமித்தம் எவ்வாறு நெய்தல் நிலச்சூழ்நிலையோடு பொருந்துகிறது என்பதை பேராசிரியர் தி.முத்து கண்ணப்பன் பின்வறுமாறு விளக்குகிறார்,

கானலஞ்சோலை; ஞாயிறு மலையிற்படும் மாலை (இதனையே எற்பாடு என்பர் இலக்கண நூலோர்) எதிரே ஓவென ஓலமிடும் நீலக்கடல். அக்கடலும், கழியும், கானலும் தனிமையைப் பிரதிபலித்துக் கொண்டிருக்கும்; புள்ளினமெல்லாம் தம் புகலுக்குத் திரும்பும்; துன்பம் தவழும் சூழ்நிலையே சுற்றிலும் காணும்.

அங்கே சோகமே உருவெடுத்த தலைவி, தோழியின் துணையுடன் வந்து தன் காதலனின் வருகைக்காகக் காத்துக் கிடப்பாள். அவன் வராமையை எண்ணியெண்ணிக் கண்ணீர் ஆறாய்ப் பெருக அழுது புலம்புவாள். உற்றுழியுதவும் அவள் உயிர்த்தோழி பலவாறு ஆறுதல் கூறித் தேற்றுவாள். நேரம் கடந்தும் தலைவன் வராதிருக்கும் காரணங்களை நினைந்து நினைந்து தலைவி மேலும் கலங்குவாள். அவன் வரும் வழியின் ஏதத்தை எண்ணி ஏங்குவாள். சிற்சில இடையீடுகளால், குறிப்பிட்டபடி சந்திக்க இயலாமல் போகும் சங்கடநிலை குறித்துக் குமுறிக் குமைவாள். தலைவனும் ஒரே வழி, அல்ல குறியாலும் இடையீட்டாலும் ஏமாற்றமடைந்து அல்லலுற்று இரங்குவான்[78] என்பார்.

இவ்வாறு தலைவன் தலைவியின் பிரிவுத் துயர் நெய்தல் நிலச் சூழலின் இயற்கை நிகழ்ச்சிக்கு ஒத்துப் போவது வியப்பைத் தோற்றுவிப்பதோடு புலவர்கள் கற்பனைத் திறத்தை எண்ணி இன்புறச்செய்கிறது. இத்தகைய நெய்தல் நில வாழ்க்கை மற்ற நிலத்து வாழ்க்கையை விட மேன்மையாகக் கூறப்படுகிறது. எவ்வாறென ச.சாம்பசிவன் இவ்வாறு உணர்த்துகிறார்:

நெய்தல் நிலத்தில் வாழ்கின்றவர்க்கு இயற்கை நல்ல துணை புரிகின்றது. மழை பெய்தாலும் பெய்யாவிட்டாலும் நெய்தல் நிலத்து மக்கள் கவலை கொள்வதில்லை. எந்த நிலப்பகுதி நீர் வற்றினும் கடலில் நீர் வற்றுதல் இல்லை. வறட்சி என்பதைக் கடல் அறியாது. நெய்தல் நிலத்தார், கடலை விளமாகக் கொண்டு, மேகம் மழைத் தொழில் உதவ வேண்டாமலே ஏர் பூட்டி, உழுதொழில் இல்லாமலே விளைபயன் அடைவர். அவர்கள் மீன்பிடித்தலையும், உப்பு விளைவித்தலையும் சிறப்பான தொழில்களாகக் கொண்டவர்கள். சிறுபான்மை நெல் விளைத்தலையும் கொண்டவர்களாய்த் திகழ்பவர்கள். எனவே, அவர்கள்

வாழும் நிலமானது எந்தக் காலத்தும் வருவாய் உள்ளதாய்ப் பிற நிலங்களைவிடப் பெருமை பெற்றதாய்த் திகழ்வதாகும்[79] என்று கூறுகிறார்.

இவர் கருத்தை உறுதிப்படுத்தும் வகையில் மீனவர் வாழ்க்கைச் சிறப்பினைப் பற்றிக் கூறும் சங்கப் பாடல் வரிகள் கீழ்வருமாறு உணர்த்துகின்றன.

மழையில்லையேயெனக் கவலைப்படாதவர் பரதவ மக்கள். மழை பெய்தாலும், பொய்த்தாலும், ஆக்கமும் ஊக்கமும் குன்றாதது எமது பழங்குடி மூதூர்; பெய்தால் நெற்பயிர் செழித்துக் கொழித்து வளர்ந்து புது வருவாயுடன் பொலியும்; பொய்த்தால் நீர்முள்ளி மல்கும் கழிக்கரையெல்லாம் காய்ந்து, அவ்வுவர் நிலத்தே வெள்ளுப்பு விளைந்து குவியும் என்று தோழி கூறுவதாக நெய்தல் நிலத்தின் வளத்தினை எடுத்தியம்புவார் புலவர் உலோச்சனார்.

**பெயினே விடுமான் உளையின் வெறுப்பத் தோன்றி**

**இருங்கதிர் நெல்லின் யாணர் அஃதே**

**வறவின் மாநீர் முண்டகம் தாஅய்ச் சேறு புலர்ந்து**

**இருங்கழிச் செறுவின் வெள்ளுப்பு விளையும்**

**அழியா மரபின் நம்மூதூர்** ............................ (நற். 311: 1–5)

இத்தகைய வற்றாத சிறப்புப் பெற்ற நெய்தல் நிலப்பாடல்களைச் சங்க இலக்கியத்தில் புலவர்கள் பலர் தம் எண்ணச் சிதறல்கள் மூலம், நெய்தல் நில மக்களின் வாழ்வைப் பாடியுள்ளனர். இத்தகைய புலவர்கள் சங்க இலக்கியத்தில் நெய்தல் நிலம் பற்றி எத்தனை பாடல்களைப் பாடியுள்ளனர் என்பதைப் பின்வருமாறு காண்போம்.

**நெய்தல் திணை பாடிய புலவர்கள், அவர்கள் பாடியுள்ள பாடல்களின் எண்ணிக்கை**

**நற்றிணை:**

அம்மூவனார் – **4, 35, 138, 275, 307, 315, 327, 395**---------------- 8

அல்லங்கீரனார் – **245**---------------------------------------- 1

அறிவுடை நம்பி–**15**---------------------------------------- 1

ஆலம்பேரி சாத்தனார் –**152**---------------------------------- 1

இளந்திரையனார் –**94**---------------------------------------- 1

## 2. குறுந்தொகை

நன்னாகையார் – 118, 325------------------------------ 2

நெய்தற்கார்க்கியார் – 55, 212------------------------------ 2

பருமரத்து மோசி கொற்றன் – 376------------------------------ 1

பதுமனார் – 6------------------------------ 1

பரணர் – 128, 328------------------------------ 2

பொன்னாகன் –114------------------------------ 1

பெருங்கண்ணன்–310------------------------------ 1

பெரும்பாக்கன் – 296 ------------------------------ 1

மதுரை எழுத்தாளன் சேந்தன் பூதன் – 226------------------------------ 1

மாலை மாறன் – 245 ------------------------------ 1

மிளைகிழான் நல்வேட்டன் – 341------------------------------ 1

வாயிலான் தேவன் –103------------------------------ 1

வெண்பூதி – 97,219------------------------------ 2

வெண்மணிப்பூதி – 299------------------------------ 1

வெள்ளிவீதியார் – 386------------------------------ 1

புலவர் பெயர் தெரியாப் பாடல்கள் – 313, 326, 381------------------------------ 3

### 3. ஐங்குறுநூறு

அம்மூவனார் – 101 முதல் 200 வரை ------------------------------ 100

### 4. அகநானூறு

அம்மூவனார் – 10, 140, 280, 370, 390 ------------------------------ 5

உலோச்சனார் – 20, 100, 190, 200, 210, 300, 330, 400 ------------------------------ 8

எழுஉப்பன்றி நாகன் குமரனார் – 240------------------------------ 1

கருவூர்க் கண்ணம்பாளனார் – 180------------------------------ 1

கருவூர்ப் பூதஞ்சாத்தனார் – 50------------------------------ 1

குடவாயிற் கீரத்தனார் –60------------------------------ 1

குமுழி ஞாழலார் நப்பசலையார் – 160------------------------------ 1

குறுவழுதியார் – 150 ------------------------------------------ 1

குன்றியனார் – 40------------------------------------------- 1

சாகலாசனார் – 270------------------------------------------ 1

செல்லூர் கிழார் மகனார் பெரும்பூதங் கொற்றனார் – 250------------ 1

சேந்தங் கண்ணனார் – 350------------------------------------ 1

நக்கீரனார் – 120, 290, 310, 340--------------------------------- 4

போந்தைப் பசலையார் – 110 ------------------------------------- 1

மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனார் – 230-------------------- 1

மதுரைக் கண்ணத்தனார் – 360----------------------------------- 1

மதுரை கள்ளிற் கடையத்தன் வெண்ணாகனார் – 170------------------ 1

மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார் – 320------------------ 1

மதுரைத் தமிழ்க் கூத்தனார் கடுவன் மள்ளனார் – 70 ---------------- 1

மதுரை மருதன் இளநாகனார் – 90, 220, 380 ----------------------- 3

மருங்கூர் கிழார் பெருங்கண்ணனார் – 80 -------------------------- 1

முடங்கிக் கிடந்த நெடுஞ்சேரலாதன் – 30-------------------------- 1

மோசிக்கரையனார் – 260------------------------------------------ 1

வெண்கண்ணனார் – 130------------------------------------------ 1

**5. கலித்தொகை**

நல்லந்துவனார் – 118 முதல் 150 வரை ------------------------------ 33

மேற்கண்ட எண்ணிக்கை விளக்கங்களால் சங்க இலக்கியத்தில் நெய்தல் திணைப் பாடல்களின் எண்ணிக்கை 347, புலவர்கள் 122 பேர் ஆவர். புலவர்கள் தாம் பாடிய இப்பாடல்களைத் தலைவன், தலைவி, தோழி, செவிலி, நற்றாய்,

பாங்கன், கண்டோர் ஆகிய கூற்றுகள் மூலம் வெளிப்படுத்தியுள்ளனர். இனி அக்கூற்றுக்கள் மற்றும் துறைகளின் எண்ணிக்கையை விரிவாக அறிவோம்.

**நற்றிணை**

**1. தலைவன் கூற்று**

1. தோழியிடமும், தேர்ப்பாகனிடமும் தன் நெஞ்சுடனும் தலைவன் பேசுதல் – 101, 106, 152, 155, 319, 349------------------------ 6

**2. தலைவி கூற்று**

1. தோழியிடம் வன்புறை மறுத்தல்–31, 38, 117, 130, 199, 218, 275, 27,338,369 ---------------------------------------- 10

2. வரைவிடை வைத்துத் தலைவன் பிரிந்ததால் வருந்துதல் – 87, 196, 219, 249, 272, 287, 382, 388 ------------------------ 8

3. காமம் மிக்க கழிபட கிளவி (குருகு) – 54 ---------------- 1

4. தலைவியின் அளவற்ற வருத்தம் – 303, 335, 348 ---------- 3

5. பாணனிடமும், தோழியிடமும் தன் நெஞ்சிடமும் பேசுதல்–74, 94, 187– ---------------------------------------- 3

**3. தோழி கூற்று**

1. இற்செறிப்பை சிறைப்புறமாகத் தலைவனுக்கு அறிவித்தல்–27, 63, 78191,258---------------------------------------- 5

2. தலைவியின் ஆற்றாமையும் ஆறுதலும் – 72, 123, 132, 138, 175, 211, 239, 267, 299, 307, 311, 358, 378 ------------------- 14

3. குறியிடம் கூறித் தலைவியை ஏற்கச் செய்தல்–49, 58, 323, 331, 392 ---------------------------------------- 5

4. வாயில் நேர்தலும், வாயில் மறுத்தலும் – 45, 124, 127, 167, 245, 270, 291, 342, 345, 363, 372, 385, 398 -------------------- 13

5. அறத்தொடு நிற்றல் – 207 ---------------------------- 1

6. வரைவு கடாதல் – 4, 15, 19, 67, 96, 135, 145, 159, 172, 183, 195, 203, 215, 223, 227, 231, 263, 283, 295, 354, 375, 395 --------- 22

7. வரைவு மலிதல் – 78, 91, 111, 163, 235, 278 --------------- 6

8. தலைவியை ஆற்றுவித்தல் பற்றித் தலைவனிடம் கூறியது – 35,131 ------------------------------------------ 2

9. உடன்போக்கு வற்புறுத்தல் –149---------------------- 1

10. தலைவனிடம் படைத்து மொழிந்தது பரத்தை கூற்று – 254--- 1

4. **பரத்தை கூற்று** 315---------------------------------- 1

## குறுந்தொகை

1. **தலைவன் கூற்று**

1. பாங்கனுக்குக் கூறுவது – 129, 184-------------------- 2

2. பொருள் வலியுறுத்தும் தம் நெஞ்சிற்குக் கூறுவது– 376------ 1

2. **தலைவி கூற்று**

1. வரைவு நீட்டிப்ப வருந்துவது – 6, 97, 125, 145, 172, 205, 226, 245, 304, 310, 316, 334------------------------------- 12

2. தலைவன் பிரிவில் ஆற்றாமை – 4, 5, 175---------------- 3

3. தலைவன் குறித்த பருவத்தில் வராததால் வருந்துதல் – 92, 103, 118, 122, 195, 197, 200, 341-------------------------------- 8

4. தன் ஆற்றாமையைக் குறிப்பாக வெளியிடுதல் – 49, 57, 102, 163, 219, 228, 243, 246, 269,290, 296, 299, 306, 311, 313, 318, 320, 325, 326, 340, 349, 386, 401---------------------- 23

### 3. தோழி கூற்று

1. வரைவு கடாதல் – 294, 303, 324, 345------------------- 4

2. தலைவியின் ஆற்றாமை பற்றியது – 55, 109, 117, 123, 166, 227, 236, 248, 381, 397------------------------------------ 10

3. வரைவு மலிதல், மகிழ்ச்சியுடன் அறிவித்தல் – 51, 328, 351---- 3

4. வாயில் நேர்தல் – 9, 212, 230------------------------ 3

5. தலைவன் திரும்பி வருதலை அறிவித்தல் – 117------------ 1

6. தலைவியைக் குறியிடத்தில் இடத்துய்த்தல் – 114----------- 1

## ஐங்குறுநூறு

### 1. தலைவன் கூற்று

1. தலைவியிடம் – 171, 175, 188, 197---------------------- 4

2. தோழியீடம் – 176, 178, 185--------------------------- 3

3. பாங்கனிடம் – 172, 191------------------------------ 2

4. தன் நெஞ்சிற்கு – 174, 195--------------------------- 2

### 2. தலைவி கூற்று

1. வரைவு தொடர்பானவை – 111–120, 141, 142, 144, 145, 146, 183, 192------------------------------------------ 17

2. பாணனிடம் வாயில் மறுத்தல் – 131–140------------------- 10

3. தலைவனின் பரத்தமை காரணமாக வாயில்களிடம் பேசியது – 151, 152, 154, 155, 157, 160, 167, 169, 184------------------- 9

4. ஒரு வழித்தணத்தல் – 150, 161, 162, 163----------------- 4

5. தலைவனின் பரத்தமை பற்றி – 164, 165, 170--------------- 3

6. தலைவன் விரைவில் வரைவான் எனல் 181---------------- 1

3. **தோழி கூற்று**

1. களவு வெளிப்பட்ட பின் காலம் தாழ்த்தவே செவிலித் தாயிடம் – 105, 108, 109---------------------------------------- 3

2. தலைவியிடம் – 189, 198, 199, 200------------------------ 4

3. தலைவனிடம் – 177, 196--------------------------------- 2

4. அறத்தொடு நிற்றல் – 106, 107, 110, 168, 182, 190----------- 6

5. வரைவை முடித்து வைக்க முயன்ற மகிழ்ச்சியைக் கூறுதல் – 101, 102, 103, 104, 147, 148, 149--------------------------- 7

6. வரைவு கடாதல் – 179, 180, 186, 193, 194------------------ 5

7. வாயில் மறுத்தல் – 143, 155, 156, 158, 159, 166------------- 6

4. **பாங்கன் கூற்று** 187------------------------------------- 1

5. **பரத்தை கூற்று** – 121–128-------------------------------- 8

**அகநானூறு**

1. **தலைவன் கூற்று.**

1. தன் நெஞ்சிடம் – 230, 280-------------------------------- 2

2. கழற்றெதிர் மறை – 130, 140, 390------------------------ 3

2. **தோழி கூற்று**

1. பகற்குறியும் வரைவு கடாதலும் – 60, 100, 150, 270, 320-------- 5

2. பகற்குறியில், சிறைப்புறமாகத் தலைவனுக்கு–20, 30, 90, 120, 300, 340, 350, 360, 370---------------------------------- 9

3. இரவுக் குறியில், சிறைப்புறமாகத் தலைவனுக்கு– 10, 70, 220, 240, 260, 290------------------------------------------ 6

4. வரைவு மலிதல் – 70, 160----------------------------------- 2

5. வரைந்தெய்தி பின் – 400————————————— 1

6. தலைவன் பொருள் வயிற் பிரிந்தபோது 40—————— 1

7. பாணனிடம் – 50————————————————— 1

8. காமம் மிக்க கழிபடர் கிளவி (அலவன்) 170—————— 1

9. அறத்தொடு நிலை – 110, 190——————————— 2

10. குறை நேர்தல் – 180, 200, 250, 310, 330, 380—————— 6

11. சிறைப் புறமாகத் தலைவனுக்கு 210———————— 1

**கலித்தொகை**

**1. தலைவன் கூற்று**

1. மடலேறுதல் பற்றி – 130, 139—————————— 2

2. மடலேறுவதாக அச்சுறுத்தல் 140————————— 1

**2. தலைவி கூற்று**

1. பருவ வரவுகண்டு வருந்துதல் – 110, 119——————— 2

2. பிரிவுத் துன்பத்தைக் கூறுதல் – 122, 123, 137—————— 3

3. கனவு பற்றிக் கூறியது 128—————————— 1

**3. தோழி கூற்று**

1. வரைவு கடாதல் – 121, 124–127, 129, 132, 133, 135, 136, 149——— 11

2. தலைவியை ஆற்றுவித்தல் – 131, 150———————— 2

**4. கண்டோர் கூற்று**

1. மடலேறுதல் பற்றி – 141————————————— 1

2. பெருந்திணை – 142–147——————————— 6

3. தலைவியது பிரிவுத் துயரைக் கூறுதல் – 148—————— 1

4. தலைவியது மகிழ்ச்சியைக் கூறுதல் – 120——————— 1

5. வாயில்கள் கூற்று – 130–134————————— 5

மேற்கண்ட கூற்றுக்களின் மொத்த எண்ணிக்கை 344. புலவர்கள் தலைவன், தலைவி, தோழி, செவிலி போன்ற கூற்றுக்களின் வாயிலாகத் தங்கள் எண்ணங்களைக் கவிவரிகள் மூலம் காவியமாக்கியுள்ளனர். இக்கவிஞர்களின் எண்ணச் சிதறல்களாகிய நெய்தல் பாடல்களை அறிஞர் பெருமக்கள் திறம்பட ஆய்வும் செய்துள்ளனர். விளக்கமாக ஆய்வு செய்து, சிறப்பான முறையில் நூலாக வெளிவந்த இவர்களின் ஆய்வுகள் குறிப்பிடத்தக்கன.

அவை,

1. தமிழ் இலக்கியத்தில் நெய்தல் திணை – ச. சாம்பசிவன் – 1964

2. நெய்தல் பாடல்கள் – நா. செயராமன்–1978

3. சங்க இலக்கியத்தில் நெய்தல் நிலம் – தி. முத்து கண்ணப்பன் – 1978

நெய்தல் நிலம் பற்றிய விளக்கத்தை நுண்ணிய முறையிலும், நுட்பமான அறிவாலும் ஆய்ந்த இவ்வறிஞர்களின் நூல்கள் என்றும் விளக்கமும் சிறப்பும் ஏற்றமும் பெற்றவை.

**தொகுப்புரை**

இவ்வியலின் ஆய்வு முடிவுகளாகப் பின்வரும் கருத்துக்களைச் சுட்டிக் காட்டலாம்.

1. நெய்தல் என்பதன் பெயர்க் காரணமாக – நெய்தல் பூவினால் அப்பெயர் அமைந்தது எனும் கருத்து வலுவாக இருக்கிறது.

2. நெய்தல் என்னும் சொல்லாட்சி சங்க இலக்கியத்தில் அருகியே காணப்படுகிறது. ஐங்குறுநூற்றில் ஓரிடத்தும் சிறுபாணாற்றுப்படையில் ஓரிடத்திலும் மதுரைக்காஞ்சியில் ஓரிடத்திலும் இடத்தைச் சுட்டுவதத்காக இச்சொல் இடம்பெறுகிறது. ஏனைய இடங்களில் பூவையோ, கொடியையோ குறிப்பதற்காக இடம்பெகிறது.

3. நெய்தல் நிலத்தின் சிறப்பு மிக்க மரமாகப் புன்னை குறிக்கப்படுகிறது.

4. தாலி என்னும் சொல் நற்றிணை (87) நெய்தல் பாடலில் வருகிறது. ஆனால் மிகச்சிறிய சங்கினத்தைக் குறிப்பதற்காக இச்சொல்

கையாளப்பட்டுள்ளது. இக்காலத்தில் சோழியைக் குறிப்பதற்குரிய சொல்லாக அது விளங்குவதாக அறிஞர்கள் கருதுகின்றனர்.

5. நெய்தல் நில ஆடவர் பெயர்களுள் பரதவர் என்ற பெயர் மட்டுமே அதிக வழக்கில் இருந்துள்ளது. பெண்களைச் சுட்டுவதற்கு நுளையர், நுளைச்சியர், பரத்தியர் ஆகிய பெயர்கள் யாண்டும் இடம்பெறுவதில்லை. நுளைமகள் (சிறுபாண்) பரதவர் மகள்(நற்.) பரதவர் மகளிர்(மதுரைக்.) ஆகிய பெயர்கள் ஓரிரு இடங்களில் மட்டும் காணப்படுகின்றன.

6. சங்க இலக்கியத்தில் நெய்தல் திணைப் பாடல்களின் எண்ணிக்கை 347; புலவர்கள் 122 பேர்; நெய்தல் திணையில் இடம்பெற்றுள்ள கூற்றுகள் 344.

## அடிக்குறிப்புகள்

1. வ.சுப. மாணிக்கம்,இலக்கிய விளக்கம், ப. 1.
2. சு. இராசாராம், சங்க இலக்கியத்தில் நடைமுறை வாழ்க்கை, ப. 10.
3. மேலது, ப. 2.
4. தொல். அகத். நூ.எண். 5.
5. தொல் .நச்சினார்க்கினியர் உரை, அகத். 5.
6. தொல் .இளம்பூரணர் உரை, அகத். 5.
7. வ.சுப. மாணிக்கம், மு. நூ, ப. 178.
8. தி.முத்துகண்ணப்பன், சங்க இலக்கியத்தில் நெய்தல் நிலம், ப.10.
9. தொல் .நச்சினார்க்கினியர் உரை , அகத். நூ.எண். 5.
10. ச. சாம்பசிவன்,தமிழ் இலக்கியத்தில் நெய்தல் திணை, ப. 12.
11. மு. சண்முகம் பிள்ளை, சங்கத் தமிழர் வாழ்வியல், ப. 61.
12. தொல். பொருள்.அகத். 5.
13. தொல் .இளம்பூரணர் உரை, பொருள். நூ.எண். 5, ப. 6.
14. தொல்.நச்சினார்க்கினியர் உரை, பொருள். நூ.எண். 5.
15. தி.முத்துகண்ணப்பன், மு. நூ, பக். 13–14.
16. மேலது, பக். 19–20.
17. கலைக்களஞ்சியம், தொகுதி–ஆறு, ப. 589.
18. தி.முத்துகண்ணப்பன், மு. நூ, ப. 20.
19. மேலது, ப. 20.
20. மேலது, பக். 20–21.
21. மேலது, ப. 22.
22. மேலது, ப. 23.

23. மேலது, பக். 23–24.

24. மேலது, ப. 24.

25. தொல். பொருள். அகத். நூ.எண். 18.

26. தொல். அகத். நூ.எண். 18, நெய்தல் கருப்பொருள் உரை விளக்கம்.

27. தொல். இளம்பூரணர் உரை.பொருள். அகத். நூ.எண். 18.

28. தி. முத்து கண்ணப்பன், மு. நூ. ப. 46.

29. மேலது, ப. 56.

30. மேலது, ப. 57.

31. ஔவை துரைசாமிப்பிள்ளை, ஐங்குறுநூறு மூலமும் விளக்க உரையும், ஞாழற் பத்து விளக்கம்,ப. 365.

32. தி. முத்து கண்ணப்பன், மு. நூ, பக். 61–62.

33. பின்னத்தூர் நாராயணசாமி உரை, நற்றிணை மன்றப் பெண்ணை விளக்கம்,
ப. 406.

34. இ.வை. அனந்தராமையர், கலித்தொகை நெய்தற் கலி, ப. 826.

35. தி.முத்து கண்ணப்பன், மு. நூ. பக். 66–67.

36. மேலது,ப. 33.

37. ஔவை துரைசாமிப்பிள்ளை, மு. நூ. தொகுதி –1, ப. 302.

38. தி.முத்து கண்ணப்பன், மு. நூ. ப. 37.

39. மேலது, ப. 38.

40. இ.வை. அனந்தராமையர், நெய்தற் கலி ஆராய்ச்சிக் குறிப்புரை, ப. 827.

41. தி.முத்து கண்ணப்பன், மு. நூ. ப. 65.

42. மேலது, ப. 70.

43. தொல்.பொருள். அகத். நூ.எண். 18. இளம்பூரணர் உரை.

44. தி.முத்து கண்ணப்பன், மு. நூ.ப. 72.

45. மேலது, ப. 74.

46. மேலது, ப. 83.

47. மேலது, பக். 88–89.

48. ஆ. சிங்காரவேலு முதலியார், அபிதான சிந்தாமணி, ப. 971.

49. தி.முத்து கண்ணப்பன், மு. நூ, பக். 93–94.

50. மேலது,பக். 95–96.

51. மேலது, ப. 100.

52. மேலது, ப. 100.

53. மேலது, ப. 101.

54. மேலது, ப. 102.

55. மேலது, ப. 115.

56. மேலது, ப. 116.

57. தொல். மரபியல். 31:1.

58. தி.முத்து கண்ணப்பன், மு. நூ,, ப.121.

59. கலைக்களஞ்சியம், தொகுதி எட்டு, முத்து, ப. 405.

60. தி.முத்து கண்ணப்பன், மு. நூ, ப. 133.

61. மேலது,ப. 136.

62. மேலது, ப. 137.

63. மேலது, ப. 138.

64. மேலது, ப.139.

65. மேலது,ப. 140.

66. மேலது, ப. 147.

67. நச்சினார்க்கினியர் உரை, மு. நூ தொல். நூ.எண். 18, ப. 54.

68. தி.முத்து கண்ணப்பன் மு. நூ,ப. 148.

69. ரா.பி. சேதுப்பிள்ளை,தமிழகம் ஊரும் பேரும்,பக்.37–38.

70. தொல்.நச்சினார்க்கினியர் உரை, பொருள். அகத். 20. ப. 56.

71. தொல். இளம்பூரணர் உரை ,தொல். பொருள், அகத். நூ.எண். 22. ப. 14.

72. நம்பி அகப்பொருள் விளக்கம். நூ.எண். 24.

73. வி.கனகசபை,1800 ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழகம்,ப.74.

74. ரா.பி. சேதுப்பிள்ளை, மு. நூ, பக்.37–38.

75. தி.முத்து கண்ணப்பன், மு. நூ, ப. 169.

76. தொல். நச்சினார்க்கினியர் உரை, பொருள். அகத். நூ.எண். 20.

77. தொல். மேலது,பொருள். அகத். நூ.எண். 14.

78. தி.முத்து கண்ணப்பன்,மு. நூ, ப. 259.

79. ச.சாம்பசிவன், மு. நூ, ப. 13.

# இயல் இரண்டு
# குடும்ப நிலையில் பரதவ மகளிர்

மனித இனம் உறவுகள் மூலம் வளர்கிறது. உறவுகளின் அணைப்பினால் பிணைக்கப்பட்டுள்ளது. அவ்உறவுகளினால் வெளிப்படும் தூய அன்பைக் குடும்பங்களில் பெறமுடியும் என மனித மனம் நாடுகிறது. குடும்பங்களின் தோற்றம் பற்றி விளக்கும் சமூகவியலார்,

மனித இன வளர்ச்சியில் காட்டுமிராண்டி நிலையில் குழுமணமும், அநாகரிக நிலையில் இணை மணமும், நாகரிக நிலையில் ஒருதார மணமும் இடம்பெற்றிருந்ததாகச் சமூகவியல் அறிஞர்கள் கருதுகின்றனர். இனக்குழு வாழ்க்கையின் படிநிலை வளர்ச்சியின் இறுதி நிலையே ஒருதார மணமாகும். இவ்வொருதார மணமே குடும்பத் தோற்றத்தின் அடிப்படையாக அமைகிறது[1] என்பார்.

பசியும் பாலுணர்வும் எல்லா உயிர்களுக்கும் பொதுவானது என்றாலும், மனிதன் மட்டுமே அவ்வுணர்வுகளை நெறிப்படுத்தி வாழத் தெரிந்தவன். அவ்வாறு அவன் நெறிப்படுத்தி வாழத் துணை புரிபவை குடும்பம் என்ற மிக உயரிய அமைப்பாகும்.

குடும்பம் என்பது உடலால் ஏற்பட்ட தேவைகளாலேயே வளருகிறது. குடும்பம் என்பது முதலில் தன் தேவையையும் அடுத்தபடியாகப் பிறர் தேவையையும் நிறைவேற்றி வைக்கும் ஒரு பொருளாதாரத் தனித்தொகுதி[2]என்று குடும்பம் பற்றி விளக்கம் தருகிறார் ம.சு. கோபாலகிருஷ்ணன்.

சமூகவியல் அறிஞர் வில்லியம் கெப்பர்ட் கூறுகையில்,

குடும்பம் என்பது கணவன் மனைவி உறவு மூலம் பால் உணர்வுத் தேவைகளை நிறைவேற்றிக் கொள்வதற்காக அங்கீகரிக்கப்பட்ட அமைப்பாகும் என்றும், பாதுகாப்பு, வாரிசு, சொத்துரிமை, சமூகநெறிகளைப் பின்பற்றுதல், நலிவுற்ற முதியோரைப் பேணுதல், பண்பாட்டுக் கோட்பாடுகளைப் பின்பற்றுதல் போன்ற பிற காரணங்களின்

அடிப்படையிலும் குடும்பம் இன்றியமையாததாகின்றது[3] என்று குடும்பத் தோற்றத்தின் பின்புலத்தைக் குறிப்பிடுகிறார்.

இக்குடும்பத்தின் அவசியம் பற்றி விளக்கும் தமிழ்க் கலைக்களஞ்சியம் பின்வருமாறு விளக்குகிறது.

குடும்பம் எல்லாச் சமூகங்களிலும் உள்ள அடிப்படையான அமைப்பு. குடும்பத்தினின்று உறவு ஏற்படுகிறது. சமூகத்தின் பல்வேறு பிரிவுகளுக்கும் குடும்பம் அடிப்படையானது. இக்குடும்பம் சமூக வழக்காலும் சமயத்தாலும் கட்டுப்படுத்தப்படுகிறது[4] எனக் குடும்பம் பற்றி விளக்கம் தருகிறது.

இக்குடும்பம் என்ற அமைப்பு திருமணத்தின் மூலம் பிணைக்கப்பட்டுக் கணவன், மனைவி, தாய், தந்தை, மகன், மகள் போன்ற உறவு முறைகளால் வளர்ச்சியுறுகிறது. குடும்பத்தின் பிணைப்புக்குக் குடும்ப உறுப்பினர்களிடையே காணப்படுகின்ற ஒரு நெருக்கமும் பற்றும் பாசமும்தான் அதனுடைய இயல்பான ஒற்றுமைக்கும் கூட்டுச் செயலுக்கும் அடித்தளமாக அமைகின்றன.

திருமணமான கணவன், மனைவி இருவரும் தம் மக்களுடன் சேர்ந்து வாழ்வதே குடும்பம் எனப் பொதுவாகக் கொள்ளப்படுகிறது. இக்குடும்பத்தைப் பற்றிப் பழந்தமிழ் இலக்கியமாம் சங்க இலக்கியத்திலோ தொல்காப்பியத்திலோ எந்தச் சொல்லும் இடம்பெறவில்லை. மனை, இல், இல்லம், குடி ஆகிய சொற்கள் குடும்பம் என்ற பொருள் தருவதாகப் பயின்று வந்துள்ளது. குடும்பம் என்ற சொல்லை முதன்முதலில் கையாண்டவர் திருவள்ளுவரேயாவர். தனது குறட்பாவில்,

**இடும்பைக்கே கொள்கலங் கொல்லோ குடும்பத்தைக்**
**குற்றம் மறைப்பான் உடம்பு**[5] என்பர்.

இக்குடும்பமானது சமூகத்துடன் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளது. குடும்பத்தில் உள்ள உறுப்பினர்கள் ஒவ்வொருவரும் மற்றவர்களுடன் தொடர்பு கொண்டுள்ளனர். இக்கருத்தை விளக்கும் அ. ஆறுமுகம்,

ஒவ்வொரு மனிதனும் ஏனைய மனிதர்களுடன் கொண்டிருக்கும் சிக்கலான சமூக உறவுமுறைத் தொடர்புகளைத்தான் சமூகம்[6] என்கிறோம் என்பார்.

மேலும் அவர் குறிப்பிடுகையில்,

சமூக வாழ்க்கையின் மையமே குடும்பமாகும். பிறப்பு, மணம், இறப்பு இவற்றின் மூலம் தோழமை உணர்வு உருவாக்கப்படுகிறது. இளைஞர் முதியவர்கட்கிடையில் நட்பையும், தொடர்பையும் ஏற்படுத்துகிறது. மரபு நிலையை வளர்க்கிறது. உடலையும், உள்ளத்தையும் சீர்படுத்தும் இடமாக அமைகிறது. மனித அடிப்படை உணர்வுகளாகிய அன்பு, காதல், நட்பு, தோழமை, பாதுகாப்பு போன்றவற்றை வளர்க்கக் குடும்பம் காரணமாக அமைகிறது[7] என்பர்.

இத்தகைய உணர்வுகளை வளர்க்கப் பயன்படும் குடும்பத்தில் குடும்பத் தலைவனாகிய கணவன், தலைவியாகிய மனைவி இருவரும் ஒரு நாணயத்தின் இருபக்கம் போன்றவர்கள்.

ஒளி–இருள், பகல்–இரவு, மலை–மடு, ஆக்கம்–அழிவு, தோற்றம்–மறைவு என்பன போன்ற இருமைகள் உலகை இயக்குகின்றன. உலகின் உயிரோட்டம் உயிரினங்களின் ஆண்–பெண் எனும் இருமையால் இயல்கின்றது. ஒரு முழுமையின் சமக்கூறாக இவ்விருமைகள் அமைகின்றனவே அன்றி தம்முள் உயர்வு தாழ்வு கற்பிப்பனவல்ல என்பது இயற்கை நியதி என்று குடும்பத்தில் கணவன் மனைவி உறவின் சமநிலை கூறப்படுகிறது[8].

மேலும்,

பெண் இன்றேல் ஆணில்லை, ஆணின்றேல் பெண் இல்லை என்றபடி ஆணும் பெண்ணும் இணைந்து இல்லற நெறிப்படுகின்ற வாழ்வே முழுமையான வாழ்வு எனக் கொள்ளப்பட்டது[9].

இச்சமநிலைக் குடும்பத்தில் கணவன் பொருளீட்டி வர, தன் குடும்பத்தைப் பேணிப் பாதுகாக்கும் பொறுப்பு மனைவியைச் சேர்கிறது. அவ்வகையில் கடல் சார்ந்த நிலப்பகுதி நெய்தலாகும். இந்நெய்தல் நில மக்கள் கடலை ஒட்டிய கரைகளில் சிறுசிறு குடிசைகளை

அமைத்துக்கொண்டு குடும்பங்களாக வாழ்ந்தனர். இக்குடும்பங்களில் வாழ்ந்த மகளிரின் குடும்ப மாண்பு பற்றி அறிவதே இவ்வியலின் நோக்கமாகும்.

நெய்தல் நிலப் பெண்கள் இலக்கியங்களில் இவ்வாறு அறியப்படுகின்றனர். தொல்காப்பியத்தில்,

**பெயரும் வினையும் என்று ஆயிரு வகைய**

**திணை தொறு மரீஇய திணை நிலைப்பெயரே**[10]

என்கிறது. இந்நூற்பாவுக்கு உரை எழுதிய நச்சினார்க்கினியர், நால்வகை நிலத்தும் மருவிய குலப்பெயரான என்று தொடங்கி, நெய்தற்குப் பெண்கள் நுளைத்தியர், பரத்தியர் எனக் கூறுகிறார்.

நம்பி அகப் பொருள் மீனவப் பெண்களைப் பற்றித் தரும் விளக்கம்,

**பரத்தி நுளைச்சி ..............**

**......................................................**

**.......... நுளைச்சியர் ......... பரத்தியர்**[11]

என்று கூறுகிறது.

பெண் மக்கள் பெயரான நுளத்தியர், பரத்தியர், நுளைச்சியர் என்பவற்றில் எப்பெயருமே சங்க இலக்கியத்தில் எங்கும் காண்பதாகத் தெரியவில்லை. சங்க இலக்கியத்தில் பரதவர் மகள் என நற்றிணையில் இரு இடங்களிலும்,

**மீன்எறி பரதவர் மகளே** (நற். 45:3)

**என் என நினையுங்கொல் பரதவர் மகளே** (349:10)

குறுந்தொகையுள் ஓரிடத்தும்,

**நுண்வலைப் பரதவர் மடமகள்** (குறுந். 184: 6)

சிறுபாணாற்றுப்படையில் ஓரிடத்தும்,

**நுதிவேல் நோக்கின் நுளைமகள்** (சிறும். 153)

மதுரைக்காஞ்சியில் ஓரிடத்தும்,

**.............................. மணல்மலி கானல்**

**பரதவர் மகளிர் குரவையொடு ஒலிப்ப** (மது. 97)

என ஐந்து இடங்களில் வழங்கப்பட்டுள்ளன. இவ்வரிகளால் சங்கஇலக்கியத்தில் நெய்தல் நிலப்பெண்கள் பரதவர் மகள், பரதவர் மடமகள், நுளையர் மகள், பரதவர் மகளிர் என்றே அழைக்கப்பட்டுள்ளனர். வேறு பெயர்களால் அழைக்கப்படவில்லை. இப்பரதவ மகளிர் குடும்ப வாழ்வில் மிகுந்த ஈடுபாட்டுடன் அன்புடையவராகப் பற்றுடையவராக விளங்கினர். இவர்களின் குடும்ப வாழ்வானது களவு, கற்பு, திருமணம் போன்ற நிகழ்வுகளால் அமைகிறது. இதன் தொடர்ச்சியாக உடல் உறவு, மக்களைப் பெற்றெடுத்தல், சுற்றத்தாருடன் உறவு, மக்களை நெறிப்படுத்தல், விருந்தோம்பல் போன்ற செயல்களால் விரிகிறது. இச்செயல்களில் பரதவ மகளிரின் பங்கு பற்றிப் பின்வரும் தலைப்புகளில் அறியலாம்.

**களவு**

சமுதாயத்தில் ஆண்களும் பெண்களும் சிறுவயதில் சேர்ந்து பழகும் வாய்ப்பு எப்போதும் இயல்பாக உள்ள ஒரு செயல்பாடு; விளையாட்டுகள் அதற்கு உறுதுணையாகவும், வாய்ப்பாகவும் இருந்துள்ளது. அவ்வகையில் நெய்தல் நிலத்தில் வாழ்ந்த பரதவ இளம்பெண்கள் தங்கள் தோழியருடன் பலவகை விளையாட்டுக்களை ஆடியுள்ளனர். அவை ஓரை விளையாட்டு, அலவனாட்டம், சிற்றில் இழைத்தல், வண்டல் பாவை செய்தல், அலையில் நீராடல், கடற்கரையில் பொழுதைக் கழித்தல் என இவ்விளையாட்டுக்களில் ஆடித் திளைத்துள்ளனர். இவ்விளையாட்டுக்களில் ஈடுபடும்போது ஆண்களுடன் பழகும் வாய்ப்பு ஏற்பட்டுள்ளது. இவ்வாய்ப்பே களவு வாழ்விற்கு வித்திட்டுள்ளது. இக்களவு வாழ்விற்குத் துணை புரிந்தோர் பாங்கன், தோழி, செவிலி ஆகியோர் ஆவர்.

விளையாட்டுக்கள் எவ்வாறு மீனவப் பெண்களின் களவு வாழ்விற்கு வித்திட்டது என்பதற்குச் சான்று கூறும் சங்கப்பாடல்கள் பல. அவற்றில் எடுத்துக்காட்டாய் அகநானூற்றுப் பாடல் ஒன்றில், பரதவரின் மகள் தம் தோழியருடன் கடற்கரை மணலில் சிற்றில் இழைத்து விளையாடினாள். அவ்வழிச் சென்ற தலைவன் விளையாட்டினை அவளுடன் பேசுவதற்குக் கருவியாகக் கொண்டு கீழ்வருமாறு பேசுகிறான்:

பெண்ணே! நீ சிற்றில் இழைத்துக் கூடி விளையாடி நின் தோழிமார்க்குக் கொடுத்து மகிழ்ந்து இல்லறம் நடத்துகின்றாய்; அவ்வாறு விளையாட்டாக நடத்தும் இல்லறத்தில் எமக்கும் உரிமையுண்டு என்றால் எம்மோடு கூடி எம் இல்லத்தில் இருந்து இல்லறம் நடத்துவதில் உனக்கு உண்டாகும் தீங்கு ஏதேனும் உண்டோ?என்றான்.

**மனைபுறந் தருதி ஆயின், எனையதூஉம்**

**இம்மனைக் கிழமை எம்மொடு புணரின்**

**தீதும உண்டோ மாதாய்? .......................** (அகம். 230: 8–10)

இவ்வாறு அவன் பேசிய தினத்திலிருந்து அவர்களுக்குள் நட்பானது வளர்ந்து காதலாக மலர்ந்தது.

இப்பாடல் போல் மேலும் ஒரு அகநானூற்றுப் பாடலில், பரதவனின் இளமகள் தன் தோழியருடன் சோறாக்கி விளையாடுகிறாள். அவ்வழிச் சென்ற காளை ஒருவன் தலைவியுடன்தான் பேசுவதற்கு விளையாட்டைக் காரணமாக்குகிறான்.

பெரிய மென்மையான தோளினையும், மடப்பத்தினையும் உடைய நல்லோரே! பகலும் ஒளியிழந்தது; யானும் மிகவும் தளர்ச்சி அடைந்தேன்; இம்மெல்லிய இலைப்பரப்பில் நீவிர் ஆக்கிய சிறுசோற்றை (மணலைக் குவித்து அதனைச் சோறு எனக் கூறுவதுண்டு) விருந்துண்டு. நீவிர் உண்டாக்கிய சிறிய குடிலில் தங்கினால் குறை ஏதும் உண்டோ? எனக் கேட்டுவிட்டுத், தோழியர் பலர் விளையாடிய இடத்தில் தான் விரும்பும் பெண்ணைக் குறித்துப் பார்த்து விட்டு யான் செல்லட்டுமா? என்று கேட்டான்.

**தடமென் பணைத்தோள் மட நல்லீரே!**

**எல்லும் எல்லின்று; அசைவு மிக உடையேன்;**

**மெல் இலைப் பரப்பின் விருந்து உண்டு யானும் இக்**

**கல்லென சிறுகுடித் தங்கின் மற்று எவனோ?** (அகம். 110: 10–13)

தலைவன் சின்னாட்கள் தலைவியுடன் இவ்வாறு உரையாட, இது தலைவன் தலைவியின் களவு வாழ்வாக மலர்கிறது. இவ்விதம் நெய்தல்

நில மகளிரின் காதல் வாழ்விற்கு விளையாட்டுக்கள் பெரிதும் துணை புரிந்தன.

இவ்விளையாட்டுக்களின் வாயிலாக மலர்ந்த களவு வாழ்வானது, கற்பில் மலரவேண்டும் என விரும்பியுள்ளனர் பரதவ மகளிர். ஆண் களவொழுக்கமே தொடரவேண்டும் என நினைக்க, பெண் களவு வாழ்விலிருந்து உயர்வு பெற்றுக் குடும்ப வாழ்வில் தன்னை இணைத்துக் கொள்ள விரும்புகிறாள். களவு வாழ்வில் சலிப்படைந்த தலைவி கற்பு வாழ்வில் தம்மை ஈடுபடுத்திக் கொள்ள ஏக்கம் கொள்கிறாள். தனது விருப்பத்தை நெய்தல் நிலக் கடற்கரையில் வசிக்கும் பறவைகளின் செயலுடன் ஒப்பிட்டுப் பார்க்கிறாள்.

கதிரவன் மறைந்த மாலைப்பொழுதில் பறவைகள் கூட்டினுள் இருக்கும் தம் குஞ்சுகளின் வாயில் இரையைச் செருகுவதற்காகத் தம் அலகினால் எடுத்துக் கொண்டு விரைந்து செல்லும். இந்நிகழ்வினைக் கண்ணுற்ற தலைவி ஆணும் பெண்ணுமாகிய பறவைகள் இரண்டும் காதல் செய்து, இன்புற்று, பிள்ளைப்பேறு எய்தி எவ்வாறு தம் குஞ்சுகளை இனிது பாதுகாக்கிறதோ, அது போலத்தானும் தலைவனை மணந்து, மகப்பேறு எய்தி, அவர்களை இனிது பாதுகாத்து மகிழ்தல் வேண்டும் எனத் தலைவி தன்னைக் குடும்ப வாழ்வில் தலைவன் இணைக்கவேண்டும் என அவாவுறுகிறாள்.

**ஞாயிறு பட்ட அகல் வாய் வானத்து**

**அளியதாமே – கொடுஞ்சிறைப் பறவை**

**இறை உற ஓங்கிய நெறி அயல் மரா அத்த**

**பிள்ளை உள்வாய்ச் செரீஇய**

**இரை கொண்டமையின் விரையுமாள் செலவே** (குறுந். 92: 1–5)

இவ்வாறு களவு வாழ்வில் ஒழுகிய கற்புடைய பரதவ இளம்பெண்கள், கற்பு வாழ்வில்தான் நிரந்தர மகிழ்ச்சி நிலைக்கும் என விரும்பி விரைவில் தலைவன் தன்னைத் திருமணம் செய்து கொண்டு, அவன் இல்லத்திற்கு அழைத்துச் செல்லவேண்டும் என விருப்பமுடன் இருந்துள்ளனர்.

## களவில் பொய்யும் வழுவும்

ஊழின் காரணமாகத் தலைவனும் தலைவியும் சந்தித்துக் காதலானது மலர்கிறது. ஒருவருக்கொருவர் தாமே துணையைத் தேர்ந்தெடுத்துப் பழகும் காலத்தில் தலைவன் உன்னைப் பிரியேன் எனச் சூளுரை செய்து காதலைத் தொடர்வான். இவ்வாறு சூளுரை செய்த தலைவன் பிரிதலும் உண்டு. அவ்வாறு பிரிந்த நிலையில் தலைவனின் சூளுரையை எண்ணி எண்ணி வருந்துவாள் தலைவி. ஐங்குறுநூற்றுப் பாடல் தலைவியின் வருத்த மிகுதியைக் கீழ்வருமாறு உணர்த்துகிறது.

**துறைவன் சொல்லிய சொல் என்**

**இறை ஏர்எல் வளை கொண்டு நின்றதுவே** (ஐங். 165: 3–4)

இவ்வரிகளில் சொல்லிய சொல் என்பது தலைவன் களவுக் காலத்தே தலைவியின் முன்கையைப் பற்றித் தெய்வத்தின் முன்னர் சொல்லிய சூளுரை, அது நின்னைப் பிரியேன், பிரியின் உயிர் தரியேன் என்பது. அச்சொல்லை உண்மையென நம்பியதன் பயனே இன்று அவனையே நினைத்து உடல் மெலிந்து என் முன் கையில் கிடக்கும் வளை கழன்றோடக் காரணமாயின எனத் தலைவனின் உறுதிமொழியை நினைவுகொண்டு வருந்துகிறாள் பரதவரின் இளமகள் இது ஒருநிலை. மற்றொரு நிலையில்,

சூள் தவறிய தலைவன் மேல் தலைவிக்கு வருத்தம் இருக்கும் என்றாலும், தனக்குக் கணவனாக வரவேண்டிய அத்தலைவனின் மீது மிகுந்த அன்பு கொண்டிருப்பாள் பரதவர்மகள். எனவே தலைவன் எத்தெய்வத்தின் முன் சூளுரைத்தானோ அத்தெய்வம் அவனை வருத்தக்கூடாது எனப் பயந்த அவள், அவனுக்காகத் தெய்வத்திடம் வேண்டி வருந்துவதாகவும் நெய்தல் பாடல் வரிகள் விளக்குகின்றன.

சான்றாக நற்றிணைப் பாடலில் தலைவி தோழியிடம் கூறுகிறாள், தோழி! தலைவன் முன்னொரு பொழுது அவர் பிரிவினால் நான் உற்ற துன்பத்தை நினைத்து நாணமடைந்து, தெய்வத்தின் முன் என்னிடம் இனி ஒரு பொழுதேனும் என்னைப் பிரியேன் என்று சூளுரை செய்தான். அப்படிச் சூளுரைத்த அவன் பொருள் காரணமாக என்னைப் பிரிந்தான். சூள் தவறிய அவனைத் தெய்வம் சிறிதேனும் வருந்துதல் செய்யாது

காக்கவேண்டும் எனக் கூறி கணங்களையுடைய கடவுளுக்கு உயர்ந்த பலி தூவி வணங்கி வரச் செல்வோமா? எனக் கேட்கிறாள்.

**பெருந் தோள் நெகிழ, அவ்வரி வாட,**
**சிறு மெல் ஆகம் பெரும் பசப்பு ஊர**
**இன்னேம் ஆக, எற் கண்டு நாணி**
**நின்னொடு தெளிந்தனர் ஆயினும்; என்னதூஉம்**
**அணங்கல் ஓம்புமதி, வாழி நீ! என**
**கணம் கெழு கடவுட்கு உயிர் பலி தூஉய்**
**பரவினம் வருக சென்மோ – தோழி!** (நற். 358: 1–7)

மேற்கண்ட வரிகளால் பரதவ மகளிர் களவு வாழ்விலேயே தனக்குக் கணவனாக வரப்போகும் தலைவனின் நலனில் அக்கறை கொண்டிருந்தனர் என்பதும், அவர்கள் கொண்ட அந்த அன்பு கற்பு வாழ்விற்கு வித்திட்டது என்பதும் புலப்படுகிறது.

**கற்பு**

கற்பைப் பற்றித் தொல்காப்பியத்தில்,

**கற்பெனப்படுவது கரணத்தொடு பொருந்திக்**
**கொள்ளுதற்குரிய மரபினையுடைய கிழவன் கொள்ளுதற்குரிய**
**மரபினை உடைய கிழத்தியைக் கொடுத்தற்குரிய**
**மரபினை உடையார் கொடுப்பக் கொள்வது**[12]

என இயம்புகிறது.

மேற்கண்ட நூற்பாவின்படி களவில் ஈடுபட்ட தலைவி, இத்தொடர்பானது கற்பில் முடியவேண்டும் என ஆவாக்கொள்கிறாள். இக்கற்பு வாழ்விற்குத் திருமணம் அடிகோலுகிறது. இத்திருமணமானது களவு வழியும், களவின்றிப் பெற்றோர் பார்த்து நடத்தி வைத்த நிலையிலும் நடைபெற்றுள்ளது.

இம்மண நிகழ்ச்சி நடைபெறுவதற்கு ஊர்ப்பெரியோர்கள் உதவி தேவை. தலைவனின் குடும்பத்திலுள்ள முதியவர்கள் மற்றும் தலைவன், தலைவியின் இல்லத்துக்குச் சென்று பெண் கேட்பர். அவ்வாறு வரும்

அவர்களை மகிழ்வுடன் வரவேற்று, திருமணத்திற்கான ஒப்புதலைத் தெரிவிப்பர் பெண் வீட்டார்.

சான்றாகக் குறுந்தொகைப் பாடல் ஒன்றில், தலைவனின் தமர் பெண் கேட்டு வருகின்றனர். தனது பெற்றோர் சம்மதம் தெரிவிப்பார்களோ? மாட்டார்களோ? என அஞ்சுகிறாள் தலைவி. அந்நிலையில், தோழி வந்து உரைக்கிறாள். தலைவி! அலைகள் மோதி உடைக்கின்ற துறையை உடைய தலைவனுக்கு நம்மைச் சார்ந்த பெற்றோர் முதலியோர் நீ உரிமையுடையாய் என்பதை உடம்பட்டுக் கூறினர். அதனை அறிந்த யான் மகிழ்ச்சியுற்றேன் என்கிறாள்.

**இசைப் புணரி உடைதரும் துறைவற்கு**

**உரிமை செப்பினர் நமரே ......................** (குறுந். 351: 4–5)

இவ்வரிகள் மூலம் பெண் பார்க்கும் நிகழ்ச்சி கண்முன் காட்சியாகத் தெரிகிறது. எல்லாக் காலக்கட்டங்களிலும் நடக்கும் பெண் பார்க்கும் நிகழ்வு போல் சங்க கால நெய்தல் நிலக் குடும்பங்களிலும் நடைபெற்றுள்ளது .

மேலும், பருவமடைந்த பெண்ணை அயலார் பெண் கேட்டு வர, மறுக்கும் நிலையும் பரதவக் குடும்பங்களில் இருந்துள்ளது.

சான்றாக ஐங்குறுநூற்றுப் பாடலில், தலைவன் உறவினர்களுடன் தான் விரும்பும் தலைவியை அவள் சுற்றத்தாரிடம் பெண் கேட்கிறான். முதலில் மறுக்கும் நிலையில் தலைவன் தம்மைச் சார்ந்த சான்றோரை அனுப்ப பிறகு உடன்படுகின்றனர்.

**எக்கர் ஞாழற் சிறியிலைப் பெருஞ் சினை**

**ஓதம் வாங்கும் துறைவன்**

**மாயோள் பசலை நீக்கினன், இனியே** (ஐங். 145: 1–3)

இப்பாடலில் சிறியிலைப் பெருஞ்சினை என்பது முன்னர் உடன்படாமைக்கு நம் சுற்றத்தாருள் தலைவன் மாண்பை உணராச் சிறுமையுடையோரும் இருந்தனர்; பின்னர் உடன்பட்டமைக்கு அவனது பெருமையை உணர்ந்த சிலரும் இருந்தனர் எனவே உடன்பட்டனர் எனக்கொள்ளலாம். இவ்வாறாகப் பரதவக் குடும்பங்களில் இன்றையக்

காலக்கட்டங்களில் உள்ளது போல மணமகள் வீட்டாரிடம் பெண் கேட்டு ஏற்பினைப் பெற்ற பிறகே திருமணங்கள் நடந்துள்ளன.

பெண்கேட்டுவந்த அயலாரின் விருப்பத்தினைப் பெண்ணானவள் மறுக்கும் நிலையும் இருந்துள்ளது. எடுத்துக்காட்டாக, நெய்தல் தலைவி ஒருத்தி காளை ஒருவன் மேல் காதல் கொண்டு ஒழுகினாள். அந்நிகழ்வின்போது அயலார் அவள் தமர்பால் பெண்கேட்டு வந்தனர். அதனைத் தாளாத தலைவி உணவும் உறக்கமும் இன்றி மெலிந்தாள். அவளது மெலிவு பற்றிச் செவிலி தோழியிடம் வினவினாள். அதற்குத் தோழி,

**தண்ணம் துறைவன் நல்கின்**

**ஒண் நுதல் அரிவை பால் ஆரும்மே** (ஐங். 168: 3–4)

என்றாள். அவளது பதிலில் நல்கின் பாலாரும்மே என்றது, பெண் கேட்டு வரும் பிறர்க்கு நல்காமல், அவள் விரும்பும் தலைவனுக்கே நல்கவேண்டும், நல்காவிடின் எதனையும் உணவாகக் கொள்ளாது இறந்து போவாள் என்னும் குறிப்பில் எனலாம். மேலும், நோயிற் படுத்தோர் பிறவுணவு அருந்தாது பால்மட்டும் உண்டு உயிர் வாழ்வர் ஆதலின் உணவுண்ணும் என்னாது பாலாரும் என்றாள்.

இப்பாடலால் பரதவப் பெண்கள் பிற ஆடவர் பெண்கேட்டு வந்தாலும், யாருடன் பழகி களவு வாழ்வில் ஈடுபட்டனரோ அவருடனேயே திருமணம் செய்து குடும்ப அமைப்பில் தம்மை உட்படுத்திக் கற்பு நெறியில் திறம்பட வாழவேண்டும் என எண்ணியுள்ளனர். மேலும், உணவே உண்ணாது தான் எடுத்த முடிவில் மாறாத அவர்களின் உறுதித் தன்மையும் அறியலாம்.

**அருங்கலம்**

களவு வாழ்வில் இருந்து முன்னேறிக் கற்பு மணம் நடைபெறுவதற்குச் செல்வ வேறுபாடு அவசியமாகக் கருதப்பட்டது. இக்காலத்தில் பெண் வீட்டார் பிள்ளை வீட்டாருக்குக் கொடுக்கும் வரதட்சணை என்ற பழக்கத்திற்கு முற்றிலும் மாறாக நுளையர் இல்லங்களில் மணமகளுக்கு அவளது பெற்றோரிடம் பிள்ளை வீட்டார் பரிசு வழங்கி மணம் முடித்துள்ளனர். இவ்வாறு வழங்கப்பட்ட பரிசு அணிகலன்களாகவோ,

பணம், நிலம் போன்ற சொத்துக்களாகவோ வழங்கப்பட்டது. மணமகளின் பெற்றோர் கேட்கும் பரிசுத் தொகை எவ்வளவோ அதைக் கொடுத்தால்தான் திருமணம் நடக்க ஒப்புதல் அளிக்கப்படும் நிலையும் இருந்துள்ளது.

இந்நிகழ்வினை விளக்கும் அகநானூற்றுப் பாடலில் தலைவிக்கு ஈடான பரிசுத் தொகை பற்றிக் குறிப்பிடும் போது, தலைவியின் தந்தையிடம் இவளது பசிய அணிகட்கு வாழும் புதுவருவாயை உடைய நியமம் என்னும் ஊரினைக் கொடுப்பினும் தகும் எனக் கொள்வார் அல்லார் எனக் கூறுவதால் பரிசாக நிலம் வழங்கப்பட்டதை அறியலாம்.

**அருந்திறற் கடவுள் செல்லூர்க் குணா அது**

**பெருங்கடல் முழக்கிற் நாகி யாணர்**

**இருப்பிடம் படுத்த வடுவுடைய முகத்தர்**

**கடுங்கண் கோசர் நியமம் ஆயினும்**

**உறுமெனக் கொள்ளுளர் அல்லர்**

**நறுநுதல் அரிவை பாசிலை விலையே** (அகம். 90: 12–14)

மற்றுமொரு பாடலில், காளை ஒருவன் தான் மணக்கப் போகும் பெண்ணிற்கு ஈடாகத் தன் நாட்டையே வழங்கியுள்ளான்.

**ஒண் தழை அயரும் துறைவன்**

**தண் தழை விலை என நல்கினன் நாடே** (ஐங். 147: 2–3)

இப்பாடலில் தண் தழை விலை என்பது தான் மணக்கப்போகும் பெண் உடுத்தும் தழையுடைக்கு ஈடாகக் கொடுக்கும் விலையாகும். அவ்விலையாகத் தலைவன் தன் நாட்டையே கொடுக்கும் அளவு அத்தலைவி சிறப்புடையவள் ஆவாள் என்கிறான். இவ்வாறாக நெய்தல் நிலக் குடும்பங்களில் தான் மணக்கப்போகும் பெண்ணிற்கு ஈடாகத் தகுந்த அணிகலனை, நிலத்தை வழங்கி மணமுடித்துள்ளனர் ஆடவர்.

**திருமணம்**

ஆணும் பெண்ணும் இணைந்து குடும்ப வாழ்வில் ஈடுபடுவதற்குரிய நிலையினைச் சமூகத்துக்கு அறிவிப்பதே திருமணம் ஆகும்[13].

ஆணும் பெண்ணும் தன்னில் ஒன்றுபட்டு உடலாலும் உள்ளத்தாலும் எல்லாவகையிலும் பொருத்தமுற இணைந்து செயல்படுவதற்குத் திருமணம் உறுதுணையாயிருக்கிறது.

இத்திருமண முறைகள் பற்றிச் சங்க இலக்கியத்தில் அகநானூற்று மருத நிலப் பாடலே தெளிவான குறிப்புகளைத் தருகிறது. நெய்தற் பாடல்களில் திருமண முறைகள் பற்றிய செய்திகள் விளக்கமாக இல்லை. பாடல்களில் ஒரு சில குறிப்புகளே விரவிக் காணப்படுகின்றன.

திருமணமாகும் ஆண்–பெண்ணுக்கிடையே பொருத்தம் பார்த்தல் என்பது இக்காலங்களிலும் உள்ளது. இப்பொருத்தம் பற்றித் தொல்காப்பியத்தில்,

தலைவன் தலைவி இருவருக்கும் பிறப்பு, குடிமை, ஆண்மை, ஆண்டு, உருவம், காமம், நிறை, அருள், உணர்வு, திரு[14] என்று பத்துப் பொருத்தத்தைக் கூறுகிறது.

இப்பத்துப் பொருத்தமும் இருவருக்கிடையே பொருந்தி இருக்கவேண்டும். இவ்வாறு பொருத்தங் கூறுதல் நெய்தல் நிலப் பெண்களிடையேயும் இருந்துள்ளது. இதற்குச் சான்றாக ஐங்குறுநூற்றுப் பாடலில், திருமணத்தை முன் வைத்துக் காத்திருக்கும் தலைவன் தலைவி பற்றித் தோழி தன் தாயிடம் கூறுகிறாள்.

அன்னையே! தலைவன் நின் மகளாகிய இவளுக்கு என்றே அமைந்தவனாவான். அவன் இவட்கு என அமைந்தவன் ஆவான். அது போல இவளுடைய அழகும் அவனுக்கு என்றே அமைந்ததாயிற்று எனக் குடிப்பிறப்பும் உருவும் நலனும் ஒத்தல் பற்றிக் கூறுகிறாள்.

இத்திருமணத்தில் மணமக்களாகிய இருவருக்கும் பொருத்தம் பார்த்ததோடு அல்லாமல், உயர்வு, தாழ்வு, குலமும் போற்றப்பட்டுள்ளது. நற்றிணைப் பாடல் ஒன்றில் செல்வவளம் உள்ள தலைவன் வளமை பொருந்திய இல்லத்தவன் என்பதால் ஏமாற்றி விடுவானோ என ஐயுற்ற தோழி, தலைவனிடம் விரைவில் தலைவியைத் திருமணம் செய்து கொள் என வலியுறுத்தி அத்தலைவனின் எண்ணத்தை அறியும் நோக்கில் தலைவனிடம் உரையாடுகிறாள்.

தலைவனே! தலைவி மீன் ஏறி பரதவர் மகள் சிறுகுடியில் வசிப்பவள். நீயோ நியம மூதூர்க் கடுந்தேர்ச் செல்வன் காதல் மகன். ஆதலிற் குலத்திற்கே பொருத்தமில்லை. நீ உயர்குலத்து அரசன் மகனாதலின் தாழ்ந்த பரதவர் குலத்தாளை மணப்பதற்கு உரிமை உடையவன் இல்லை. எம் உடம்பெல்லாம் புலால் நாற்றம் வீசுகின்றது. கடலை நம்பி நாங்கள் வாழும் வாழ்க்கையானது நும்மைப் போன்ற உயர்வு உடையதன்று; எங்கள் பரதவர் குடியில் உம்மைப் போன்ற செல்வர்களும் உள்ளார்கள் என்று கூறினாள்.

**கானல் நண்ணிய காமர் சிறுகுடி**
**நீல்நிறப் பெருங்கடல் கலங்க உள்புக்கு**
**மீனெறி பரதவர் மகளே நீயே,**
**நெடுங்கொடி நுடக்கும் நியம மூதூர்க்**
**கடுந்தேர்ச் செல்வன் காதல் மகனே**

-----------------------------------------------------------------

**புலவு நாறுதும் செலநின்றீமோ**
**பெருநீர் விளையுளெஞ் சிறுநல் வாழ்க்கை**
**நும்மொடு புரைவதோ அன்றே**
**எம்ம னோரின் செம்மலு முடைத்தே** (நற். 45: 1–11)

இவ்வரிகளால் நெய்தல் நில மகளிர் தங்கள் சமூகம் அல்லாத பிற ஆடவருடன் களவு வாழ்வில் ஒழுகினர் என்பதையும் செல்வ வளத்தின் அடிப்படையில் உயர்வு தாழ்வு போற்றப்பட்டுள்ளது என்பதையும் அறியலாம்.

மேலும், களவு வாழ்வில் ஒழுகிய தலைமக்களைத் திருமணச் சடங்கின் மூலம் பெற்றோரே இணைத்தும் வைத்துள்ளனர். உதாரணமாக ஐங்குறுநூற்றுப் பாடலில் களவில் ஒழுகி வந்த தலைவி பெற்றோர் சம்மதத்துடன் கற்பு வாழ்வில் அடிஎடுத்து வைக்கிறாள். அத்தலைவியிடம் தோழி கூறுகிறாள்,

தோழி! ஊரறியச் சான்றோர் முன்னிலையில் தலைவனோடு வதுவைச் சடங்கில் ஒன்று பட்டமையின் களவுக் காலத்தில் ஏற்பட்ட அச்சம் தவிர்த்து நின் கணவனைத் தழுவி இன்புறுவாயாக என்கிறாள்.

**வீ இனிது கமழும் துறைவனை**

**நீ இனிது முயங்குமதி காதலோமே** (ஐங். 148: 2–3)

களவு வாழ்வில் ஒழுகிய தலைமக்கள் திருமணம் மூலம் இணைக்கப்பட்டு அவர்களின் குடும்ப வாழ்வானது களவு, கற்பு ஆகிய இரு நிலைகளில் நடந்தது என்பதை அறியமுடிகிறது.

**குடும்பம்**

ஒத்த அன்புடைய ஓர் ஆணும் பெண்ணும் திருமண உறவின் மூலம் கூடி வாழும் குடும்ப வாழ்க்கை இல்லறம் அல்லது இல்வாழ்க்கை எனப்படும். இல்லறம் பற்றித் திரு.வி.க. கூறுகையில்,

அறம் என்பது ஒரு மரம் போன்றது, திருமணம், பிள்ளைப்பேறு, அன்பு, விருந்தோம்பல், ஒழுக்கம், பொறை, ஒப்புரவு, ஈகை, அருள், தவம், வாய்மை, துறவு, மெய்யுணர்வு முதலியன. அம்மரத்தின் உறுப்புக்களாகிய வேர், பட்டை, கவடு, கோடு, தளிர், இலை, மலர், காய், கனி முதலியன போன்றன. இவ்வறக் கூறுகள் யாவும் பிறந்து வளர்ந்து பயனளிக்க வேண்டிய தாயகம் இல்லறமாகும் என்று பெண்ணின் பெருமை என்ற நூலில் குறிப்பிடுகிறார்.

இல்லறத்தின் மூலம் இவ்வனைத்துப் பண்புகளும் வளர்க்கப்படுகிறது. இவ்வாறு ஆணும் பெண்ணும் இணைந்து வாழும் குடும்ப வாழ்வாகிய இல்வாழ்வில் மனைவியின் பங்கு அளப்பரியது.

குடும்ப வாழ்வினை அடித்தளமாகக் கொண்டு பாடப்பட்டன தமிழ் இலக்கிய அகத்திணைப் பாடல்கள். இக்குடும்ப வாழ்வின் அடித்தளமாக மனைவி விளங்குகிறாள். சங்கப் பாடல்களில் இம்மனைவியைக் குறிக்கும் சொற்கள் பல இடம்பெற்றுள்ளன.

அவை மனை, மனைவி, மனைமுதல்,மனைவியர், மனையாள், மனையோள், மனையவர், மனையுறை மகளிர், பெண், பெண்டிர், பெண்டு, தையல், மகடூ, மடந்தை, செல்வி, துணை, துணைவி, துணைவியர், இற்கிழத்தி, காதலி, நகர், முதலாட்டி என மொத்தம் இருபத்திரெண்டு சொற்கள் காணப்படுகின்றன[15].

இம்மனைவியானவள் பொதுவாக, மனைவி, பெண்டாட்டி, ஆத்துக்காரி, சம்சாரம் என்றெல்லாம் அழைக்கப்படுகிறாள். அவற்றின் பொருளாழம் எத்தன்மையது எனக் காண்போம்.

அகம் – வீடு, அகத்துக்காரி – வீட்டுக்குரியவள் அது ஆத்துக்காரி எனத் திரிந்தது.

பெண்டாட்டி – பெண் தன்மையாள் ஆள்பவள்.

சம்சாரம் – என்னும் வடமொழி வாழ்க்கை எனும் பொருளுடையது[16].

இத்தகைய பல சொற்களில் அழைக்கப்படும் இம்மனைவியானவள் வீட்டுக்கு விளக்குப் போன்றவள். மனைவிளக்கு என்ற சொல்லே சுருங்கி மனைவி என்று ஆனது எனப் பகர்கிறது தண்டி.

**மனைக்கு விளக்கம் மடவார்**[17]

குடும்பத்தின் அச்சாணியாகிய இம்மனைவியைச் சிறப்பித்து பாரதிதாசன் குடும்பவிளக்கு என்ற குறுங்காவியம் படைத்துள்ளார். இவற்றினின்று மனைவி என்ற சொல்லின் சிறப்பை அறியலாம். இத்தகைய சிறப்பைப் பெற்ற மனைவியானவள் இல்லறமாம் நல்லறத்தின் மூலம் சிறப்படைகிறாள்.

இல்லறம் என்ற இச்சொல்லானது இல்+அறம் எனப் பிரிக்கப்பட்டு இல்லத்திலிருந்து செய்யப்படும் அறம் எனப் பொருள்படுகிறது[18].

இவ்வில்லறத்தில் ஆணுக்கு உறுதுணையாய் இருக்கக் கூடியவள் மனையாள். குடும்பத்தில் அவளது பராமரிப்பு, பணிகள், கடமைகள், குழந்தைகளைப் பேணல், விருந்தோம்பல் எனக் குடும்பத்தில் மனைவியின் பங்கு விரிகிறது.

**இல்லறப் பாங்கு**

இல்லறத்தில் இருந்து அறம் புரியும் உரிமை மனைவிக்கே உள்ளது. எனவேதான் அவள் மனைவி இல்லாள் என்ற பெயர்களால் அழைக்கப்படுகிறாள். இம்மனைவியானவள் தன் துணைவன் மீது வைத்துள்ள அன்பு அளவற்றது. ஒரு பெண் திருமணம் ஆகிப் புகுந்த வீட்டிற்குச் சென்று விடுகிறாள். அவள் நலன் முழுமைக்கும் கணவனே பொறுப்பாகிறான். மனைவி, தன் மீது பற்றுள்ள அக்கணவனையே

எந்நேரமும் நினைத்துக் கொண்டுள்ளதோடு, அளவற்ற பாசமும் அன்பும் வைக்கிறாள். இவளது எண்ணத்திற்கு மாறாக அக்கணவன் பொருள் தேடுதல் பொருட்டும் பரத்தை காரணமாகவும் அவளைப் பிரிந்து செல்லும் நிலையில் அம்மனைவியின் பிரிவுத் துயர் சொற்களால் விவரிக்க முடியாததாக உள்ளது.

சான்றாக, நற்றிணைப் பாடலில் பொருள் தேடப் பிரிந்து சென்ற கணவனின் நினைவால் வாடிய மனைவியின் மனஉணர்வுகள் கீழ்வருமாறு விவரிக்கப்படுகின்றன.

திருமணம் ஆகி சின்னாட்கள் நன்முறையில் இல்லறம் நடத்திய கணவன், இல்லறத்திற்கு வேண்டிய பொருள் தேடவேண்டிய அவசியம் ஏற்பட்டு, அவளைவிட்டுப் பிரிகிறான். அக்கணவனின் பிரிவினால் வருந்தி ஏங்கிய தலைவி தன் கணவன் பற்றித் தோழியிடம் கூறுகிறாள்,

தோழி! நம் தலைவர் இல்வாழ்க்கைச் சிறப்பினும் இனிய பொருள் காட்டில் பிறிதொன்றுளது எனக் கருதி பிரிந்து சென்றார். பிரிந்தவர் நான் எத்தன்மையளாய் இருக்கின்றேன் எனக் கேட்டறியவும் இல்லை என வருந்துகிறாள்.

**எனை விருப்புடையார் ஆயினும், நினைவிலர்;**
**நேர்ந்த நெஞ்சும் நெகிழ்ந்த தோளும்**
**வாடிய வரியும் நோக்கி, நீடாது**
**எவன் செய்தனள், இப்பேர் அஞர் உறுவி? என்று**
**ஒரு நாள் கூறின்றுமிலரே; ...............................** (நற். 130: 5–10)

இவ்வரிகளில், எனை விருப்புடையவர் ஆயினும் நினைவிலார் என்றது அவர் தன்னை நினைத்தலால் ஏற்படும் தும்முதல் புரையேறுதல் முதலாயின நிகழாமையால் தன்னை அவர் நினைத்துப் பார்க்கவில்லையோ? என ஐயுறுகிறாள். ஒரு நாள் கூறின்றும் இலரே என்பது வழிச் செல்வாரிடத்தும் தம்மைக் கருதிக் கூறவில்லை என ஏக்கமுறுகிறாள்.

பொருள் தேடிப் பிரிந்து சென்ற கணவனை எந்நேரமும் நினைத்துக் கொண்டிருக்கும் பரதவனின் மனைவியின் நிலை இவ்வாறு இருக்க, மற்றொரு பாடலில் கணவன் பரத்தை காரணமாகப் பிரிகிறான்.

பிரிந்தவன் மீண்டும் மனைவியிடம் வருகிறான். அவனைக் கண்ட மனைவி,

தலைவனே! இப்பிறப்பு மாறி, மறுபிறப்பு வருவதாயினும், நீயே என் கணவனாக வரவேண்டும். நான் மனைவியாக இருப்பினும், நெஞ்சு நேர்பவளாம் பேறு பரத்தைக்கே வாய்க்கப் பெற்றுள்ளது. மறு பிறவியிலாவது நெஞ்சு நேர்பவளாம் பேறு எனக்கே வாய்க்கவேண்டும் என்று வேண்டுகிறாள்.

**இம்மை மாறி மறுமை ஆயினும்**

**நீ ஆகியர் எம் கணவனை;**

**யான் ஆகியர் நின் நெஞ்சு நேர்பவளே** (குறுந். 49: 3–3)

இப்பாடலில் கற்புடைய மனைவி கணவன் ஒழுக்கம் தவறித் தன்னை மன வருத்தத்திற்கு உட்படுத்திய நிலையிலும் அவனை ஏற்றுக்கொள்ளும் மனப்பக்குவத்துடன் இருந்துள்ளாள் என்பதும் பரத்தையர் இல்லம் சென்று திரும்பும் கணவனை ஏற்று அன்பு செலுத்தக்கூடிய மனப்பாங்கு பரதவ மகளிரிடையே இருந்துள்ளது. இக்கருத்தை வலுப்படுத்தும் மற்றொரு பாடல் அம்மூவனார் கண்ணோட்டத்தில் பின்வருமாறு விளக்கப்படுகிறது.

கணவன் பரத்தையர் வீட்டில் தங்கி இருக்கத் தம் இல்லம் வந்த பாணனிடம் மனைவி கூறுகிறாள். பாணனே! தலைவன் என்னைப் பிரிந்த அப்பொழுதே என் உடல் மெலிவுற்று முன் கையில் செறிவாக இருந்த வளையல்கள் கழன்று வீழ்ந்தன. அவனை நினைத்து என் உடல் மெலிந்த நிலையை என் கணவனிடம் உரைத்து அவனை என்பால் மீண்டு வரச்செய்யும் கடமை உன்னுடையது என வேண்டுகிறாள்.

**காண்மதி பாண! நீ உரைத்தற்கு உரியை**

**துறை கெழு கொண்கன் பிரிந்தென**

**இறைகேழ் எல் வளை நீங்கிய நிலையே** (ஐங். 140: 1–3)

மேற்சுட்டியவரிகளால், கணவன் பரத்தையர் இல்லில் தங்கி தவறான ஒழுக்கத்தைத் தொடர்ந்த நிலையிலும், அவனுடனேயே தன் வாழ்க்கை தொடரவேண்டும் என எண்ணிய மனைவி அக்கணவனைத் தன்னுடன் சேர்த்து வைக்குமாறுப் பாணனிடம் வேண்டியுள்ளாள்.

மற்றுமொரு நிலையில், மனைவியானவள் தூது அனுப்பாமலேயே கணவன் நாடிச் சென்ற பரத்தையிடம் ஊடல் ஏற்பட்டு அக்கணவன் தன் மனைவியை நாடித் தன் இல்லத்திற்குத் திரும்பி வரக்கூடிய நிகழ்வுகளும் பரதவக் குடும்பங்களில் நிகழ்ந்துள்ளது.

எடுத்துக்காட்டாக, நெய்தல் திணை பாடவல்ல அதே அம்மூவனார் வரிகளில் பரத்தையிடம் ஊடல் கொண்ட கணவன் தன் மனைவியிடம் ஊடல் தீர்ந்து தன்னை ஏற்குமாறு வேண்டுகிறான். அதற்கு மறுமொழியாக மனைவி உரைக்கிறாள். தலைவனே! நீ விரும்பும் பரத்தை என்னினும் உன்மேல் மிகுதியாக அன்புடையவள் ஆதலாலும், நீ என்மேல் கொண்ட அன்பினும் அவள் மேல் கொண்ட அன்பு மிகப் பெரியதாகலானும் அவள் ஊடலைத் தீர்ப்பதே உனக்குச் சிறந்தது. ஆகவே அவள் ஊடல் தீர்க்க மீள்வாயாக! என்கிறாள்.

**பண்டையின் மிகப் பெரிது இனைஇ**

**முயங்குமதி பெரும! மயங்கினள் பெரிதே!** (ஐங். 160: 4–5)

என்னும் ஐங்குறுநூற்று பாடல் வரிகள் மனைவியானவள் தன் கணவன் மேல் மேலும் ஊடல் கொண்டு விலக்கியுள்ளாள் என்பதும், தன் கணவனின் தவறான ஒழுக்கத்தைச் சுட்டிக்காட்டிப் பேசும் மனத் துணிவும் பரதவப் பெண்களுக்கு இருந்துள்ளது என்பதை அறிய முடிகிறது.

இன்னும் ஒரு நிலையில், பரத்தையின் இல்லத்தில் தங்கி விடும் கணவன் சில நாட்களுக்குப் பிறகு தன் மனைவியை நாடித் தன் இல்லத்திற்கு வருகிறான். வந்த கணவனை மகிழ்ச்சி மிகுதியால் களிப்புடன் வரவேற்கிறாள் தலைவி.

மாலையில் கூம்பிய நெய்தல் பொறுமையாகக் காத்திருந்து, மறுநாள் கதிரவன் தோன்றிய பின் மலர்கிற தன்மை போலவே, பலநாள் பிரிவைத் தாங்கிய அவன் மனைவி, கணவன் திரும்பியதும் கண்களை அகல விழித்துத் தன் மகிழ்ச்சியை வெளிப்படுத்தினாள்.

**வைகறை மலரும் நெய்தல் போலத்**

**தகை பெரிது உடைய, காதலி கண்ணே!** (ஐங். 188: 3–4)

தகை பெரிது உடைய, காதலி கண்ணே! என்ற வரி கணவன் பரத்தையோடு உறவுடையானாயினும், தன் மனைவியே நெஞ்சமர் காதலியாகக் கருதினான் ஆதலால், பரத்தையர் இல்லம் நாடிச் சென்றாலும், தன் மனைவி தனக்காகக் காத்திருக்கிறாள் என்ற எண்ணம் ஏற்பட தம் இல்லத்திற்கு மீள்கிறான். இத்தகைய கணவன் மேல் நெய்தல் நிலத்தில் வாழ்ந்த தலைவியர் பேரன்பு கொண்டு இருந்துள்ளாள் என்பது தெரிகிறது.

குறுந்தொகைப் பாடலில் நெய்தல் தலைவி, தன் கணவன் மீன் வேட்டைக்குச் சென்ற இடத்தில் சுறாமீனால் தாக்கப்பட்டுப் புண்பட்டு வீட்டில் இருந்து விட்டான். அக்கணவன் மேல் அன்பு கொண்ட மனைவி தான் உப்பு விற்கும் தொழிலுக்குச் செல்லாமல் அக்கணவனுடனேயே இருந்து பணிவிடை செய்துள்ளாள்.

**வயச்சுறா எறிந்த புண்தனிந்து, எந்தையும்**
**நீல்நிறப் பெருங்கடல் புக்கனன்; யாயும்**
**உப்பை மாறி வெண்ணெல் தரீஇய**
**உப்பு விளை கழனிச் சென்றனள்** (குறுந். 269: 3–6)

அக்கணவன் புண் தனிந்து மீண்டும் மீன் வேட்டைக்குச் சென்ற நிலையில் தானும் உப்பு விற்கச் சென்று உள்ளாள். பரதவப் பெண்கள் கணவன் நலனில் மிகவும் அக்கறையுடன் இருந்துள்ளனர் என்பதையும், அவன் மீது பேரன்பு கொண்டிருந்தனர் என்பதையும் இப்பாடல் உணர்த்துகிறது.

**விருந்தோம்பல்**

இல்லறச் சிறப்புகளுள் ஒன்று விருந்தோம்பலாகும். தம் இல்லம் நாடி வருபவரை உபசரித்தல் இல்லறத்தினர் கடமையாகும். இவ்விருந்தோம்பலின் சிறப்பைச் சுட்டுவதற்குத் திருவள்ளுவர் தனி அதிகாரமே எழுதியுள்ளார். ஒரு குறளில்,

இல்லறத்தில் வந்த விருந்தினரைப் போற்றிய பின் இனி வரும் விருந்தினரை எதிர்பார்த்திருப்பவன் வானுலகத்தில் உள்ள தேவர்களுக்கு விருந்தினனாவான் என்கிறார்.

**செல்விருந்து ஓம்பி வருவிருந்து பார்த்திருப்பான்**

**நல்விருந்து வானத்தவர்க்கு**[19]

இவ்விருந்தோம்பல் மாண்பு பெண்களால் போற்றப்படுகிறது. பெண்களின் சிறந்த பண்புகளில் ஒன்றாகிய விருந்தோம்பலைத் தொல்காப்பியம் கீழ்வருமாறு கூறுகிறது.

**கற்பும் காமமும் நற்பால் ஒழுக்கமும்**

**மெல்லியல் பொறையும் நிறையும் வல்லிதின்**

**விருந்து புறந்தருதலும் சுற்றம் ஓம்பலும்**

**பிறவும் அன்ன கிழவோன் மாண்புகள்**[20]

மனைவி இல்லறத்தில் ஈடுபட்டு விருந்தோம்பலையும் பேணுகிறாள். சமுதாயப் பழக்கவழக்கங்களில் இல்லறத்திற்குரியதான விருந்தினரை உபசரிப்பது இல்லறத்தின் கடமையாக மட்டும் இல்லாமல் இன்பமாகவும் அமைந்துள்ளது.

விருந்தினரை ஓம்புதல் விருந்தோம்பல் எனப்படும். புதிதாக வருபவரை உண்டி முதலியவற்றால் உபசரிக்க[21] என்று பொருள் கூறுகிறது கழகத் தமிழ் அகராதி.

விருந்தோம்பல் மனையறமாக அக்காலத்தில் கருதப்பட்டது[22].

இவ்விருந்தோம்பல் பண்பு தோன்றி வளர்ந்ததற்கான காரணத்தை சி. இலக்குவனார் கூறுகையில்,

சிற்றுண்டி விடுதிகளும், பேருண்டி இல்லங்களும் இக்காலத்தில் உள்ளன போல் அக்காலத்தில் இருந்திருக்க இயலாமையால் வெளியூர்களிலிருந்து வருவோர்க்குப் புகலிடம் வீடுகள் தாம். ஆகவே விருந்தினரைப் புதிதாக வருவோரைப் புரக்க வேண்டுவது கடமையாய் விட்டது[23] என்று கூறுகிறார்.

இவரது கருத்தை உறுதிப்படுத்தும் விதமாக அ. ஆறுமுகம் பின்வறுமாறு குறிப்பிடுகிறார்:

சங்கப்பாடல்கள் வழி, எல்லாக் குடும்பங்களிலும் விருந்தோம்பல் ஒரு சிறந்த பண்பாக விளங்கியிருத்தலைக் காணமுடிகிறது. தாம் பசியால் வருந்தி இருக்க, யாராவது பசியைப் போக்கினால் நலமாக இருக்குமே

என்று எண்ணி வழிச்செல்லும் போது பெறும் உதவியே தம்மையும் அவ்வாறு செய்யத் தூண்டியிருக்க வேண்டும்[24] என்று கூறுவதன் மூலம் வழிப்போக்கர்களின் களைப்பைப் போக்குவதற்காக விருந்தோம்பல் பண்பு தோன்றி வளர்ந்தது எனலாம்.

அவ்வகையில் நெய்தல் நிலக் குடும்பங்களிலும் மேற்கூறிய இக்காரணங்களுக்கேற்ப விருந்தோம்பல் பண்பு போற்றப்பட்டுள்ளமையை அறியலாம். இதற்குச் சான்றாக குறுந்தொகைப் பாடல் ஒன்றில், பரதவனின் இளமகள் மாலைப் பொழுதில் தங்கள் இல்லக்கதவை அடைக்கும் முன், விருந்து உண்போர் யாரும் உள்ளனரோ என்று கூவியழைத்துப் பின்பு கதவை அடைத்துள்ளாள்.

**நள்ளென வந்த நார் இல் மாலைப்**

**பலர் புகு வாயில் அடைப்பக் கடவுநர்**

**வருவீர் உளீரோ?** (குறுந். 118: 2–4)

இப்பாடல் வரிகளால், பரதவர் இல்லங்களில் விருந்தினர் வருகையை மகளிர் எதிநோக்கியிருந்த பண்பை அறியலாம்.

இக்கருத்தைப் புலப்படுத்தும் மற்றொரு பாடலில், பரதவ மகளிர் வெப்பமுறும் இயக்கமுடைய பகற்பொழுதில் செல்வம் பொருந்திய அகன்ற மனையில் வரும் விருந்தினரை வரவேற்றுப் போற்றுவதற்காக உணவு சமைத்துள்ளனர்.

**கதிர்கால் வெப்பக் கல்காய் ஞாயிற்றுத்**

**திருவுடை வியல் நகர் வருவிருந்து அயர்மார்**

**பொற்றொடி மகளிர் புறங்கடை உகுத்த**

**கொக்கு உகிர் நிமிரல் மாந்தி** (நற். 258: 3–6)

மேற்கண்ட வரிகளால் பரதவ மகளிர் விருந்தினரை வரவேற்று உபசரிப்பதைத் தங்கள் தலையாயக் கடமையாகக் கொண்டிருந்தனர் என்பதை அறியலாம்.

இக்கருத்தை உறுதிப்படுத்தும் மற்றொரு பாடல் விளக்கத்தில், மணலால் மூடிய நுளையரின் மனை முற்றத்தினிடத்தே அளவிறந்த

உணவுப்பொருள்களை வரும் விருந்தினர்க்குப் பகுத்துக் கொடுத்து வாழும் இயல்புடைய மகளிர் வாழும் ஊர் உள்ளது என்பதை அறிய முடிகிறது.

**மா அரை புதைத்த மணல் மலி முன்றில்,**
**வரையாத் தாரம் வரு விருந்து அயரும்**
**தன் குடி வாழ்நர் அம்குடிச் சீறூர்** (நற். 135: 2–4)

மேலும், இப்பாடலால் பெண்களுக்கு இருந்த பகிர்ந்து கொடுத்துப் பசியாற்றும் உணர்வு வெளிப்படுகின்றது. இதனால் பெண்களுக்கு இருந்த விருந்தோம்பல் பெரும்பண்பு புலனாகிறது.

இவ்விருந்து என்பது புதியவர்களுக்கே என்று இல்லாமல் தலைவனும் புதியவனாக விருந்தில் கலந்து கொண்ட இடங்களும் நெய்தல் பாடல்களில் உள்ளன. களவுக் காலத்தில் தலைவன் தலைவியின் இல்லத்து விருந்தினராக வருவதுண்டு. தலைவிக்கு அறிமுகமானவன் பெற்றோருக்குப் புதியவன் ஆவான். அவ்வகையில் அகநானூற்றுப் பாடலில் தலைவனைத் தம் இல்லத்திற்கு விருந்தினனாக வருமாறு வற்புறுத்தியுள்ளாள் தோழி.

**.............................................. நீயும்**
**இல்உறை நல்விருந்து அயர்தல்**
**ஒல்லுதும் பெரும! நீ நல்குதல் பெறினே** (அகம். 300: 20–22)

இப்பாடல் மூலம் தலைவன் இரவு நேரத்தில் உறவினரல்லாதவன் போல வருவதையும், அவனை அவன் சுற்றத்தார் விசாரித்து விருந்தினராக ஏற்றுத் தங்கிச் செல்லச் சொன்னதால் தலைவி விருந்து செய்ததையும் அறியமுடிகிறது.

மற்றொரு பாடலிலும் தலைவனுக்கு விருந்து செய்த தலைவி அத்தலைவனைப் பெருவிருந்தினன் போலப் போற்றி விருந்து செய்துள்ளாள். அவ்விருந்தின் சிறப்பாவது, மீனை விற்று அதற்கு ஈடாக வாங்கிய வெள்ளிய நெல்லை இடித்து ஆக்கிய மாவின்கண் தயிரிட்டுப் பிசைந்த உணவினைத் தலைவன் ஏறி வந்த குதிரைகளுக்குக் கொடுத்தும், வடவர் கொண்டு வந்து தந்த வெண்ணிற வட்டக் கல்லில், பொதிய மலையில் பிறந்த சந்தனக் கட்டையுடன் பிற

மணப்பொருள்களையும் சேர்த்து அரைத்த மணங்கமழும் சந்தனத்தை அணிவித்ததுமாகும்.

**பசுமீன் நொடுத்த வெண்நெல் மா அத்**

**தயிர்மிதி மிதவை ஆர்த்துவம் நினக்கே;**

**வடவர் தந்த வான்கோழ் வட்டம்**

**குடபுல உறுப்பின் கூட்டுபு நிகழ்த்திய**

**வண்டு இமிர் நறுஞ்சாந்து அணிகுவம்** (அகம். 340: 14–18)

வடமலைக் கல்லும் தென்மலைச் சந்தனமும் சிறந்தனவாக முன்னோர் கருதினர் என்பது,

**வடவர் தந்த வான்கேழ் வட்டம்**

**தென்புல மருங்கிற் சாந்தொடு துறப்ப,** (நெடு. 51–52)

என்ற வரிகளால் அறியலாம். மேலும், இப்பாடலால் ஒருவரைச் சார்ந்து எத்தனை பேர் வந்தாலும் அவர்களது பசியை ஆற்றி உள்ளனர் பரதவ மகளிர் என்பதும், தலைவனுக்கும் அவனுக்குத் தேர் ஒட்டி வந்த பாணனுக்கும் பசியைப் போக்கியதோடு அல்லாமல், அவர்களைச் சுமந்து வந்த குதிரைக்கும் சிறப்பான சுவைமிகுந்த உணவழித்துள்ளனர். விருந்து என்றாலே புதுமை என்ற கருத்திற்கு ஏற்ப, புதுமையான சுவை மிகுந்த உணவுடன், மணப்பொருட்களையும் விருந்தினர்க்கு அளித்துச் சிறப்புச் செய்துள்ளனர் என்பதை அறியலாம்.

விருந்தினர் என்றால் உறவினர் என்று இக்காலத்தில் நினைக்கின்றனர். உறவினர் வேறு, விருந்தினர் வேறு, முன்பின் அறியாத புதியவர்களுக்கே விருந்தினர் என்று பெயர். புதியவர்கள் எவராயினும் அவர்களை வரவேற்றுப் போற்றுவது தமிழர் மரபு[25]என்ற ந. ரேகா பானுவின் கருத்திற்கு ஏற்ப, விருந்தினர் என்றால் நம் உற்றார் உறவினர் என்று நோக்கும் நிலைக்கு மாறாக, முற்றிலும் புதியவர்களை வரவேற்று விருந்தோம்பியுள்ளனர் பரதவக் குடும்பங்களில் இருந்த மகளிர் என்பதை மேற்கண்ட விளக்கங்களால் அறியலாம்.

**மகப்பேறு**

மணம் ஒத்த தலைவனும் தலைவியும் இணைந்து வாழும் இல்லற வாழ்வின் பயன் மக்கட்பேறு ஆகும். மக்கள் பேற்றால்தான் இல்லற வாழ்வு சிறக்கிறது.

**குழல் இனிது யாழ் இனிது என்பதம் மக்கள்**
**மழலைச் சொல் கேளாதவர்[26]**

என்ற வள்ளுவரின்வாக்கிற்கு ஏற்ப நெய்தல் நிலக் குடும்பங்களில் மக்கட் பேற்றைச் சிறப்பாகப் போற்றியுள்ளனர். எடுத்துக்காட்டாக, ஐங்குறுநூற்றுப் பாடலில், புதல்வனைப் பெற்ற தம் மகளைக் காணச் சென்றுவிட்டுத் தன் இல்லத்திற்குத் திரும்பிய செவிலியிடம் தோழி,

**நள்ளென வந்த இயல் தேர்ச்**
**செல்வக் கொண்கன் செல்வனஃது ஊரே** (ஐங். 104: 3–4)

என்கிறாள்.

தலைவிக்குத் தாய்மைப்பேறு கொடுத்தபெருந்தகை என்று பாராட்டச் செல்வக் கொண்கன் என்கிறாள். மேலும், கடற்கரை நாட்டையே உரிமை பெற்ற செல்வம் மிக்கவன் இப்பொழுது அரும்பெறற் புதல்வனைப் பெற்ற செல்வனானன். முன்பு தலைவனுக்கே உரிதாக இருந்த கடற்றுறை நாடு இனி அவன் பெற்ற செல்வனுக்கே உரியதானமை பற்றிக் கொண்கன் செல்வனஃது ஊர் என்கிறாள்.

இவ்வரிகளால் தன் மனைவி பெற்ற மகனால் கணவன் சிறப்படைகிறான் என்பதும்,தலைவன் தன் அன்பின் பயனாகப் பிறந்த தன் மகனை வாரிசாகப் பெறுகிறான் என்பதையும் அறியமுடிகிறது. மகப்பேறு என்பது இக்காலங்களில் தாய் வீட்டில் நடக்கும் வழக்கம் உள்ளது. ஆனால் சங்ககால பரதவக் குடும்பங்களில் தாய் வீட்டில் நடக்கவில்லை என்பதை, கணவன் வீட்டில் மகவு ஈன்றதன் மகளைச் செவிலித் தாய் கண்ணுற்றுத் தன் இல்லத்திற்குத் திரும்புவதன் மூலம் மகப்பேறு என்பது புகுந்த வீட்டில் நடந்துள்ளது என்பது தெரிகிறது.

மற்றுமொறு நிலையில், பரதவப் பெண்ணின் கணவன் அவள் மகவை ஈனுங்காலத்துப் பரத்தையை நாடிச் சென்றான். அவள்

நெய்யாடியதை அறிந்த அக்கணவன் ஊடல் நீக்கப் பாணனை வாயிலாக அனுப்பினான்.

இதில் நெய்யணி என்பது குழந்தை பெற்ற தாய்மார்கள் சிறிது நாட்கள் தனியே இருக்க வைத்து ஒரு நாள் எண்ணெய் முழுக்காட்டி வீட்டிற்குள் அழைத்தனர். இந்நீராட்டு நெய்யணி மயக்கம் எனப்பட்டது[27].

மனைவி பிள்ளைப்பேறு அடைந்து நெய்யணிக்கு முன் இடைப்பட்ட இக்காலத்தே இடையீடு இன்றிப் புணர்ச்சிபெற விரும்பிய கணவன் பரத்தையிடம் சென்றான். தவறிச் சென்ற கணவனுக்காகப் பரிந்து பேசத் தூதாகப் பாணன் வர, கற்புடைய மனைவி பேசினாள்.

பாணனே! தலைவன் எனக்கு நட்புடையவன் அல்லன். அவன் ஏதிலாளன் ஆயினன் என்று பலரும் கூறுவர். அதற்கேற்றவாறு இவ்வூரும் என் கணவனால் விரும்பப்பட்ட பரத்தை அவனுக்கு மனைக்கிழத்தியானாள் என்று கூறிற்று. இத்தகைய ஒன்றிய அவர்களின் நட்பை மாற்றி மொழிதல் அரிதாகும். இங்கு நீ வரவேண்டாம் என்று தன் மனதில் உள்ள கோபத்தைக் கொட்டுவதோடு, பரத்தையை நாடிச் சென்ற கணவனையும் கடிந்தாள்

**........................................ கடற்சேர்ப்பனை**

**ஏதிலாளனும் என்ப; போது அவிழ்**

**........................................................................**

**கண்டல் வேலி ஊர், அவன்**

**பெண்டு என அறிந்தன்று; பெயர்த்தலோ அரிதே!** (நற். 74: 5–11).

இப்பாடல் போல மற்றொரு பாடலிலும், தன் மனைவியை மறந்து பரத்தையை நாடிச் சென்றான் கணவன். மனைவி அவன் மீது ஊடல் கொண்டாள். அவள் ஊடலைத் தீர்க்க எண்ணிய தோழி மகப்பேறு காரணமாகவாவது நீ தலைவனோடு உடம்பட்டு வாழ வேண்டும் என வேண்டுகிறாள். அதற்கு அம்மனைவி கூறுகிறாள்.

தோழி! மகப்பேறு என்பது நான் இனிமேல்தான் அடைய வேண்டுமோ! யான் களவுக் காலத்திலேயே அவர்க்குப் பைஞ்சாய்க் கோரைப்

பிள்ளையைப் பெற்றதுண்டு. அதனையே நினைத்து நிறைவு கொள்வேன் என்கிறாள்.

இவற்றிலிருந்து நுளையர் குடும்பங்களில் மனைவி, பரத்தையை நாடிச்சென்ற கணவனுடன் அவனது தவறான ஒழுக்கத்தைச் சுட்டிக்காட்டிச் சண்டையிட்டாலும், குடும்ப அமைப்பானது சிதையாமல் அவனின் பரத்தமையொழுக்கத்தையும் சகித்துக் கொண்டு வாழ்ந்த கற்புடைய மகளிரைக் காணமுடிகிறது.

**கடமைகள்**

இல்லற வாழ்வில் கணவன் பொருளீட்டி வர, அவன் ஈட்டி வந்த பொருளைக் கொண்டு நன்முறையில் குடும்பம் நடத்துவது மனையாள் பொறுப்பாகிறது. தன்னையும் தன்னைச் சார்ந்த குடும்பத்தினர் மற்றும் இல்லத்தையும் பராமரிக்கும் முழுப்பொறுப்பு மனைவியையே சாரும். கணவனும் மனைவியும் சேர்ந்து இல்லறம் நடத்துவதற்கு வாழிடம் அவசியமாகிறது. வாழிடமாகிய இல்லத்தைப் பராமரிப்பது இல்லாளின் கடமையாகும். உணவு சமைத்தல், இல்லத்தினர் நீர்த் தேவையைப் பூர்த்தி செய்தல் எனப் பெண்களின் பணிகள் அவசியமாகிறது.

இல்லற வாழ்வில் மனைவியின் பணிகள் விரிந்தமைகிறது. வீட்டின் அழகிற்கும் ஒழுங்கிற்கும் மகளிரின் பங்கு முக்கியமானதாக உள்ளது. அவ்வகையில் தம் மனையின் பராமரிப்பில் அழகியல் உணர்வோடு இருந்த பரதவனின் மனைவியின் செயலை வெளிப்படுத்தும் நற்றிணைப் பாடலில், பரதவனின் மனைவி தன் இல்லத்தை மணம் கமழும் நெய்தல் மலர்களால் அழகு செய்துள்ளாள் என விளக்குகிறது.

**ஒள் நுதல் மகளிர் ஓங்கு கழிக் குற்ற**
**கண் நேர் ஒப்பின் கமழ் நறு நெய்தல்**
**அகல் வரிச் சிறு மனை .................... (நற். 283: 1–3)**

இன்றைய காலங்களில் வரவேற்பு அறையில் மணம்மிக்க பூக்களைச் சிறிய கலத்தில் வைத்து வாசனை மற்றும் அழகிற்கு அலங்கரிப்பது போல, அக்கால பரதவப் பெண்கள் வெறும் மலர்களைப் பயன்படுத்தித் தங்கள் இல்லங்களை அலங்கரித்துள்ளனர்.

## நீர்த் தேவையை நிறைவுசெய்தல்

மனித வாழ்க்கைக்கு நீர் மிகவும் இன்றியமையாதது. ஐம்பூதங்களில் ஒன்றான நீரின்றி உலக வாழ்க்கையே இல்லை. நீர்வளத்தைப் பெருக்கச் சங்க காலத்திலேயே ஆறுகள், ஏரிகள், குளங்கள் இருந்தன[28].

மழைநீரைத் தேக்கக் குளம் இன்றியமையாதது. தேவையானபோது தண்ணீர் எடுத்துக்கொள்ளும் வகையில் மழைநீர் தேக்கி வைக்கப்படுவதால் அந்த இடத்தின் நிலத்தடி நீர்மட்டம் குறையாமல் காக்கப்பெறுகின்றது.

இத்தகைய குளங்களில் நீரை உரிய கலங்களில் எடுத்து வந்து குடும்பத்திற்கான நீர்த்தேவையை நிறைவு செய்பவள் பெண். இன்றும் கிராமங்களில் பெண்கள் தன் இல்லத்தின் நீர்த் தேவைக்குக் கிணறு மற்றும் குளங்களில் கலங்களைப் பயன்படுத்தித் தலையால் சுமந்து நீர் எடுத்து வருவதைக் காணலாம். அதே போல நெய்தல் நிலக் குடும்பங்களில் மகளிர் மண்கலங்களைப் பயன்படுத்தி நீர் எடுத்து வந்திருக்கவேண்டும். இவ்வாறு அவர்கள் நீர் எடுத்து வந்த குளம் காவல் போடப்பட்டு பராமரிப்புடன் போற்றப்பட்டுள்ளது. இதனை,

**கோடை நீடினும் குறைபடல் அறியாத்**

**தோள்தாழ் குளத்த கோடு காத்திருக்கும் (பெரும்.** 272–273)

என்னும் வரிகள் புலப்படுத்துகின்றன. இக்குளத்தைப் பரதவர்கள் காவல் காத்து வந்ததால் கோடு காத்திருக்கும் என்றனர். இக்குளங்கள் கோடை காலத்திலும் வற்றாத ஆழம் உடைய நீர்ப் பெருக்கு உடையதாக இருந்தது. இத்தகைய பாதுகாப்புடைய ஆழமான குளத்தில் பரதவப் பெண்கள் தங்கள் இல்லத்திற்குத் தேவையான நீரை எடுத்து வந்துள்ளனர்.

மற்றொரு பாடலில், இவ்வாறு எடுத்து வந்த நீரைத் தெளிவிக்கத் தேற்றாவின் விதையைப் பயன்படுத்தியுள்ளனர். குளத்து நீரானது பழுப்பு நிறத்தில் தெளிவில்லாமல் கலங்கலாக இருக்கும். இந்நீரைத் தெளிவிக்கத் தேற்றா விதையைப் பயன்படுத்தியுள்ளனர். கலித்தொகைப் பாடலில், பரதவனின் இளமகள் கலங்கிய நீரைத் தேற்றாவின் விதையைப் பயன்படுத்தித் தெளிவித்துள்ளாள்.

**கலம் சிதை இல்லத்துக் காழ்கொண்டு தேற்றக்**

**கலங்கிய நீர்போல் தளிந்து,** (கலித். 142: 64–65)

இப்பாடலில் கலம் என்பது மண்ணால் செய்யப்பட்ட கலம் எனக்கொள்ளலாம். சொரசொரப்பான மண்கலத்தில் வழுவழுப்பான தேற்றாவின் விதையால் உரச, உரச சிறிது நேரத்தில் நீரானது தெளிவுபெற்றுவிடும். மற்ற பாத்திரங்களில் மென்மைத் தன்மை காரணமாக அவற்றில் தேற்றா விதையைப் பயன்படுத்த இயலாது. எனவே கலம் என்பது மண்கலத்தையே குறிக்கும். இம்மண் கலங்களில் பரதவப் பெண்கள் குளங்களில் நீரை எடுத்து வந்து தேற்றாவின் விதையைப் பயன்படுத்தி தெளிவித்துத் தங்கள் இல்லத்து நீர்த் தேவையைச் சரி செய்துள்ளனர் என்பதை அறியலாம். மேலும், இப்பரதவப் பெண்கள் குளத்து நீர் மட்டுமன்றிக் கிணற்று நீரையும் இல்லங்களில் பயன்படுத்தியிருக்கின்றனர். பட்டினப்பாலையில் புகார் நகரத்தின் புறத்தே விளங்கிய பரதவச் சேரிகளில் உறைகள் அமைக்கப்பட்ட கிணறுகள் இருந்தன. இதனை,

**உறைக் கிணற்றுப் புறச்சேரி** (பட்டி. 76)

என்ற வரிகளால் அறியலாம். இக்கிணறுகளில் இருந்தும் பரதவ மகளிர் தங்கள் இல்லத் தேவைக்கு நீர் எடுத்து வந்து பயன்படுத்தி இருக்கலாம் எனத் தெரிகிறது.

**உணவு சமைத்தல்**

மனிதனின் அடிப்படைத்தேவைகள் உணவு, உடை,உறைவிடம். இவற்றில் உணவு இன்றி மனித உயிர்கள் வாழ்தல் இயலாது. உணவானது உயிர் வாழ்வதற்கான ஆதாரமாக மட்டுமல்லாமல் அது ஒரு சமுதாயத்தின் பண்பாட்டினையும் வெளிப்படுத்தக்கூடிய ஒன்றாக உள்ளது. பழந்தமிழ் மக்கள் இயற்கையோடு இயைந்த வாழ்வு வாழ்ந்தனர். இயற்கையில் கிடைத்த பொருள்களையே உணவு ஆதாரமாகப் பயன்படுத்தினர். அவ்வகையில் கடல் சார்ந்த நெய்தல் நிலத்தில் உணவு மீனாகும். இவ்வுணவினைச் சமைத்தலில் முக்கியப் பங்கு மகளிர்க்கு இருந்துள்ளது. இல்லற வாழ்வில் தலையாயப் பணி உணவு சமைத்தல் ஆகும். மகளிர் தம்

கையால் உணவு சமைத்துத் தம் அன்பையும் பாசத்தையும் அவ்வுணவில் கலந்து குடும்ப உறுப்பினர்க்கு அளிக்கும் காட்சிகள் நெய்தல் பாடல்களில் இடம்பெற்றுள்ளன.

அகநானூற்றுப் பாடலில் இல்லத்தலைவி மட்டும் உணவு சமைத்தலில் ஈடுபடாமல் அவளது இளமகளும் அட்டிற் தொழிலில் ஈடுபட்டுள்ளாள். அவள் தன்னுடைய தந்தைக்கு உப்பு விற்றுக் கொண்டு வந்த நெல்லினால் சமைத்த வெண்சோற்றை அயிலை மீன் இட்டு ஆக்கிய புளிங்கறியினைச் சொரிந்து கருவாட்டுடன் அவளது பாசத்தையும் கலந்து பரிமாறியுள்ளாள். இதனை,

**நெடுந்திமில் தொழிலொடு வைகிய தந்தைக்கு**
**உப்புநொடை நெல்லின் மூரல் வெண்சோறு**
**அயிலை துழந்த அம்புளிச் சொரிந்து**
**கொழுமீன் தடியொட குறுமகள் கொடுக்கும்** (அகம். 60: 3–6)

என்ற வரிகள் புலப்படுத்துகின்றன. இந்நெய்தல் நிலக் குடும்பங்களில் நிலம் சார்ந்த உணவுப் பொருளான மீனை மட்டும் உண்டதோடு, மற்ற காய்கறிகளையும் பயிரிட்டு அவை படர பந்தலிட்டுப் பெற்றுள்ளனர். இக்காலங்களிலும் வீட்டின் அருகில் பந்தலிடுவதைப் போல, அக்காலங்களிலும் பந்தலிட்டுக் காய்கறிகளைப் பெற்றுள்ளனர். அப்பந்தலில் இல்லத்திற்குத் தேவையான எக்காய்கறிகளின் விதையை போடவேண்டும் என்பதும், அவற்றை எவ்வாறு பராமரிக்க வேண்டும் எப்பருவத்தில் பயன்கொள்ள வேண்டும் என்பதும் இல்லப் பெண்களுக்கே தெரியும்.

அவ்வகையில் பரதவர் இல்லங்களின் முன் புன்னையை வெட்டி அமைக்கப்பட்ட பந்தரின்கண் சுரை, பாகல், புடலை போன்ற கொடிகளில் காய்கள் தொங்கிக் கொண்டிருக்கும். அப்பந்தரின்கண் பரதவ இளைஞரும் முதியவரும் சுற்றத்துடன் கூடி மகிழ்ந்து இருந்துள்ளனர்.

**குறியிரைக் குரம்பை, பறியுடை முன்றில்**
**கொடுங்காற் புன்னைக் கோடுதுமித்து இயற்றிய**
**பைங்காய் தூங்கும் பாய்மணற் பந்தர்**

**இளையரும் முதியரும் கிளையுடன் துவன்றி** (பெரும். 265–268)

மேற்கண்ட வரிகளால் இப்பந்தலின் பராமரிப்பு பெண்களின் பொறுப்பாக இருந்திருக்க வேண்டும் என்பதும், அவற்றிலிருந்து தங்கள் உணவிற்குத் தேவையானதைப் பறித்துப் பயன்படுத்தி இருப்பர் பரதவ மகளிர் என்பதையும் அறியமுடிகிறது.

மேலும், இப்பரதவப் பெண்கள் தங்கள் இல்லங்களில் உணவு சமைத்ததுடன் கள்ளும் சமைத்து இல்லம் நாடி வந்த பாணர்களுக்கு வழங்கியுள்ளனர். கள்ளின் தேவை பற்றி குறிப்பிடும் கோ. சுகன்யா,

சங்க காலத்தில் ஆண்களும் பெண்களுமாகக் கள்ளுண்டு களித்தனர். பழந்தமிழகத்தில் கள்ளும் மதுவும் உற்பத்தி செய்யப்பட்டன. உள்நாட்டிலேயே அதன் தேவை மிகுதியாய் இருந்தது[29] என்பர்.

பரதவப் பெண்கள் தேவை மிகுதியாய் இருந்த இக்கள்ளை இல்லங்களில் தயாரித்துள்ளனர். எவ்வாறெனில், குற்றாத கொழியலரிசியைக் களியாகத் துழாவிக் கூழாக அடுவர். அதனை மலர்ந்த வாயுடைய தட்டுப் பிழாவில் இட்டு உலரும்படி ஆற்றுவர். நல்ல முளைத் தானியங்களைப் பொடித்து அதனுடன் சேர்ப்பர். அதனை இரண்டு பகலும் இரண்டு இரவும் கழித்துச் சாடியில் இட்டு வெந்நீரில் வேகவிடுவர். வேக வைத்ததை நெய்யரியலே வடிகட்டி, விரலாலே அலைத்துப் பிழியப்பட்ட நறிய கள்ளைத் தயாரித்தனர். இதனைப் பச்சைமீன் சூட்டோடு பாணர்களுக்கு வழங்கினர். இதனை,

**அவையா அரிசி அம்களித் துழவை**
**மலர்வாய் பிழாவில் புலர ஆற்றி**
**பாம்பு உறை புற்றின் குரும்பி ஏய்க்கும்**
**பூம்புற நல் அடை அளைஇ, தேம்பட**
**எல்லையும் இரவும் இருமுறை கழிப்பி,**
**வல்வாய்ச் சாடியின் வழைச்சு அற விளைந்த**
**வெந்நீர், அரியல் விரல் அலை, நறும்பிழி**
**தண் மீன் சூட்டொடு, தளர்தலும் பெறுகுவிர்** (பெரும். 275–281)

என்ற வரிகளால் அறியலாம். இக்கருத்தை வலுப்படுத்தும் மற்றொரு சான்றாகச், சிறுபாணாற்றுப்படையில் நுளையர் மகளிர் காய்ச்சி அரித்த தேறலையும், உலர்ந்த குழல் மீனையும் எப்பொழுதும் தம் மனையில் செய்து வைத்திருந்தனர்.

**நுதிவேல் நோக்கின் நுளைமகள் அரித்த**
**பழம்படு தேறல் பரதவர் மடுப்ப**

**.........................................................................**

**தளை அவிழ் தெரியல் தகையோறப்படி**
**அறற்குழல் பாணி தூங்கி யவரொடு**
**வறற்குழற் சூட்டின், வயின் வயின் பெறுகுவிர்** (சிறும். 158–163)

இவ்வரிகளால் மகளிர் தம் இல்லங்களில் வழக்கமாகச் செய்யும் உணவுடன் கள்ளும் இடம்பெற்றிருந்தது என்பதும் அவர்களின் விருந்தோம்பல் சிறப்பும் அறியப்படுகிறது.

**பரதவ மகளிர் பணிகள்**

நுளையர் இளமகளிரின் முக்கிய பணிகளில் ஒன்று மீனை உலர்த்தல் ஆகும். பரவதர் பிடித்து வரும் மீன்களைக் காயவைத்தலும் அதனைக் கவரவரும் பறவைகளை ஓட்டிப் பாதுகாத்தலும் மகளிரின் பெரும்பான்மைத் தொழிலாக இருந்துள்ளது.

அவ்வாறு காய வைக்கும்போது தாம் புன்னையின் கொழு நிழலில் இருந்து கொண்டு மீனை அதன் முன்னிடத்தின் வெயிலில் பரப்பிக் காயவைப்பர்[30].

சான்றாக அகநானூற்றுப் பாடலில், பரதவனின் இளமகள் தன் தந்தை பிடித்துக் கொண்டு வந்த மீனைப் புன்னை மரநிழலில் இருந்துகொண்டு உலர்த்தினாள்.

**பெருநீர் அழுவத்து எந்தை தந்த**
**கொழு மீன் உணங்கற் படுபுள் ஓப்பி**
**எக்கர் புன்னை இன்நிழல் அசைஇ** (அகம். 20: 1–3)

புன்னையின் மரநிழலில் மீனைக் காயவைத்ததோடு பரதவ இளம்பெண்கள் மணல் மேட்டிலும் கிடத்தி மீனைக் காய வைத்துள்ளனர்.

**முடிவலை முகந்த முடங்கு இறாப் பறவைப்**

**படுபுள் ஓப்பலின் பகல் மாய்ந்தன்றே** (நற். 49: 3–4)

மேற்கண்ட பாடல் வரிகள் மூலம், மீனைக் காயவைத்தலில் பரதவ இளம்பெண்களே ஈடுபட்டள்ளனர் என்பதை அறியலாம். இக்கருத்தை வலுப்படுத்தும் நெய்தற் பாடல்களின் வரிகளைக் கீழ்வருமாறு காண்போம்.

களவுக் காலத்தில் தலைவியைக் காணவந்த தலைவனிடம் தோழி கூறுகிறாள்: தலைவனே நிணத்தை உடைய சுறாமீனை அறுத்துக் காயவைத்தல் வேண்டி, அவை வெயிலிற் காயும்போது கூட்டமாய்த் திரளும் பறவைகளை விரட்டும் பணியை மேற்கொண்டுள்ளோம் என்கிறாள்.

**நினச் சுறா அறுத்த உணக்கல் வேண்டி**

**இனப் புள் ஓப்பும் எமக்கு நலன் எவனோ?** (நற். 45: 6–8)

மற்றொரு பாடலில், புலால் மணம் பொருந்திய மீனை உப்பிட்டு வற்றலாய்க் காயவைக்கும் போது அவற்றைக் கொள்ள வந்து வீழும் பறவைகளை பரதவன் மகள் தன் தோழியருடன் விரட்டியுள்ளாள் என்பதை,

**புலவு மீன் உணங்கல் படுபுள் ஓப்பி**

**மடநோக்கு ஆயமொடு ..................** (நற். 331: 4–5)

என்னும் வரிகள் உணர்த்துகின்றன. இன்னும் ஒரு பாடலில், தனது தந்தை கடற்பரப்பில் துழாவிப் பிடித்துக்கொண்டு வந்த பலவகை மீன்களின் வற்றலில் வந்து படியும் பறவைகளை பரதவனின் இளமை பொருந்திய மகள் விரட்டினாள்.

**........................................................ எந்தை**

**புணர் திரைப் பரப்பகம் துழைஇத் தந்த**

**பல் மீன் உணங்கற் படுபுள் ஓப்புதும்** (அகம். 80: 4–6)

மேற்கண்ட பாடல்களின் வரிகளால் மீனை உலர்த்தும் பணியில் இல்லத்தில் இருக்கக்கூடிய இளம்பெண்கள் ஈடுபட்டிருந்தனர் என்பதும், இதனைப் பணியாக மட்டுமல்லாமல் தன் தோழியருடன் பொழுதுபோக்காகவும் விரும்பி ஈடுபட்டனர் பரதவ மகளிர் என்பதையும் அறியலாம்.

### குடும்பம்

தாய், தந்தை, மகள், மகன் ஆகியோர் அடிப்படைக் குடும்ப உறுப்பினர்கள் ஆவர். இவர்கள் இரத்த சம்பந்தமான உறவுமுறை உறுப்பினர்கள் ஆவர். இவர்களுடன் செவிலி, தோழி போன்றோரும் தொடர்புடையவர்களாகச் சங்க இலக்கியப் பாடல்கள் வழிக் கூறப்படுகின்றனர்.

### குடும்ப வகைகள்

சமுதாயத்தில் குடும்பத்தின் தன்மை நான்காகக் காணப்படுகின்றன. அவை தனிக்குடும்பம், பெருங்குடும்பம், விரிந்த குடும்பம், கலப்புக் குடும்பம் என்பனவாகும்.

### தனிக்குடும்பம்

திருமணமான கணவன் மனைவி அவர்தம் பிள்ளைகள் ஆகியோரைக் கொண்டது தனிக்குடும்பமாகும்.

குடும்பத்தின் மூலக்கூறுகளான கணவன், மனைவி ஆகிய இருவரோடு அவர் தம் பிள்ளைகளைக் கொண்ட குடும்பத்தைத் தனிக்குடும்பம் அல்லது கருக்குடும்பம்[31] என்று கூறுகின்றார் ஆ. இராமநாதன்.

அவரது கூற்றுக்கு ஏற்ப நெய்தல் நிலத்தனிக் குடும்பத்தில் தந்தை, தாய், மகன், மகள் ஆகியோர் இருந்திருக்கின்றனர். சான்றாக அகநானூற்றுப் பாடலில், களவிற் கூட்டம் வேண்டிநின்ற தலைவன் சிறைப்புரத்தானகத் தலைவி தோழியிடம் உரைக்கிறாள்.

எனது தந்தை சுறாமீன் எறிந்த புண்பட்டு மீன் வேட்டைக்குச் செல்லாமல் வீட்டிலேயே இருந்தனர். அவரைக் கவனிப்பதற்காக என் தாய் உப்பு வாணிகத்திற்குச் செல்லவில்லை. இப்போது இருவரும் அவரவர் பணிகளுக்குச் சென்றுவிட்டதால் மனைக்கண் ஒருவரும் இலர் என்கிறாள்.

(குறுந். 269: 3–6)

இப்பாடலில் இடம்பெற்ற தலைவி கூற்றால், தம் குடும்பத்தில் தாயும் தந்தையும் தத்தம் பணிகளுக்குச் சென்று விட்டதால், தான் மட்டும் தனியே

இருப்பதாகக் கூறுவதன் மூலம் தந்தை, தாய், மகள் ஆகிய மூவரைக் கொண்ட அழகான தனிக்குடும்பம் என்பதை அறியலாம்.

மற்றொரு பாடலில், தலைவன் தலைவியைக் காண இரவிலேயே வருகின்றான். அவன் பகலில் வருவதற்கான செவ்வியைக் கூறுகிறாள் தோழி இவ்வாறு,

தலைவனே இரவில் இனி நீ வரவேண்டாம். என் தந்தை கடல் மேல் சென்று படகின் விளக்கொளியில், தான் பிடித்து வந்த பலவகை மீன் இனங்களை என் அண்ணன்மார்க்குக் காட்டுவதற்குச் சென்றவர் இரவில்தான் வீட்டிற்கு வருவார்; என் தாயும் தெய்வத்தை வழிபட அவள் தோழிமாருடன் சென்றுவிட்டாள் என்கிறாள்.

**திரைச்சுரம் உழந்த திண்திமில் விளக்கில்**
**பல்மீன் கூட்டம் என்னையர்க் காட்டிய,**
**எந்தையும் செல்லுமார் இரவே; அந்தில்**
**அணங்குடைப் பனித்துறை கைதொழுது ஏத்தி**
**யாயும் ஆயமோடு அயரும்;..........................** (அகம். 240: 5–9)

இப்பாடலால் நெய்தல் நிலத் தனிக்குடும்பக் காட்சி அழகாகச் சித்தரிக்கப்பட்டுள்ளது. தந்தை, தாய், தமையன்மார், மகள் என அழகான குடும்ப நிகழ்வு சுட்டிக்காட்டப்பட்டுள்ளது.

**தனிக்குடும்பத்தில் தாயின் பங்கு**

இருவர் இணைந்து வாழும் தனிக்குடும்ப வாழ்க்கையில் மகப்பேறு எய்தியவுடன் மனைவிக்குப் பெருமை ஏற்படுகிறது. அம்மனைவி தான் பெற்ற மகளை வளர்த்து, வயது வந்த நிலையில் அவளது செயல்களை உற்று நோக்கிக் கவனித்து நன்முறையில் வளர்க்கும் பெரும்பங்கு தாய்க்கு ஏற்படுகிறது.

சான்றாக, நற்றிணை பாடலில் பரதவனின் மனைவி களவு வாழ்வில் ஒழுகிய தமது மகளின் ஒழுக்கத்தைப் பற்றி ஊர்ப் பெண்கள் அலர் பேச அவர்களின் பேச்சுக்கு அஞ்சித் தன் மகளைக் கோபத்துடன் நோக்கினாள்.

**(நற். 175: 5–8)**

மற்றொரு பாடலில், தன் மகளின் களவொழுக்கத்தால் எழுந்த அலரின் காரணமாக அவளின் தாய் இற்செறித்தாள். தாயின் இற்செறிப்புப் பற்றித் தோழி கூறுகையில், தழையாடை சில உறுப்புக்களை மட்டுமே மறைக்கும். ஆனால் தாய் இற்செறித்துத் தலைவியை முழுவதும் மறைத்தாள் என்கிறாள்.

**துத்திப் பாந்தள் பைத்து அகல் அல்கும்**

**திருந்து இழைத் துயல்வுக் கோட்டுஅசைத்த பசுங்குழைத்**

**தழையினும், உழையின் போகான்;**

**தான் தந்தனர், யாய் காத்து ஓம்பல்லே** (குறுந். 294: 5–8)

தாய் முழுவதும் மறைத்தாள் என்று கூறுவது, யாரும் காணமுடியாத அளவு தனிக்குடும்ப அமைப்பில் அருங்கடிப்படுத்தி தன் மகளைக் காத்து ஒழுகிய திறம் அறியப்படுகிறது.

மேலும், மற்றொரு தாய் தன் மகளை அருங்கடிப் படுத்தியதோடு அல்லாமல் தன் மகளின் களவொழுக்கத்தைப் பற்றி ஊரிலுள்ளோர் பழிச்சொல் கூற, அவர்களின் சொல்கேட்டு மனமுடைந்தவள் தன் மகளின் களவுவாழ்வு தொடரக்கூடாதென்று சிறிய கோலினால் அடித்துத் துன்புருத்தினாள். (நற். 149: 3–5)

மேற்கண்ட பாடல் வரிகளால், பெண் பிள்ளைகள் கண்டிப்புடன் ஒழுக்கமாக வளர்க்கப்பட்டுள்ளனர். மேலும், களவுக் காலத்தில் மகளின் மீது கண்டிப்புடன் இருக்கும் அன்னையின் நிலை இவ்வாறு இருக்க, மகளின் நிலையோ தான் ஒழுகும் களவொழுக்கம் தாய்க்குத் தெரிந்து விடுமோ? என அச்சப்படுவதாக உள்ளது. சான்றாக, நற்றிணைப் பாடலில் மகள் தலைவன் தன்னைக் காண வரும்போதெல்லாம், மறைந்து ஒழுகும் இந்நட்பு அன்னைக்குத் தெரிந்து விடுமோ? என அஞ்சுகிறாள். இதனை,

**புலர்வது கொல், அவன் நட்பு! எனா**

**அஞ்சுவள் – தோழி! என் நெஞ்சத்தானே!** (நற். 72: 10–11)

என்ற வரிகள் உணர்த்துகின்றன. மற்றொரு பாடலில், மகளின் அச்சம் கீழ்வருமாறு சுட்டிக்காட்டப்படுகிறது. பிரிவினால் தலைவி மெலிவடைந்தாள். வளையல் நெகிழ, உடலில் அயர்ச்சி தோன்ற

வருத்தத்துடன் இருந்தாள். தன் உடல் மெலிவிற்கான காரணத்தை அன்னை அறிந்தாள் நான் இறவாது உயிருடன் இருத்தல் கூடுமோ? எனத் தன் தாய் மேல் அச்சப்படுகிறாள் அந்நுளையர் மகள்.

**ஆய்வளை நெகிழவும் அயர்வுமெய் நிறுப்பவும்**

**நோய்மலி வருத்தம் அன்னை அறியின்**

**உளெனோ வாழி – தோழி! விளியாது** (குறுந். 316: 1–3)

மேற்கண்ட பாடல் விளக்கங்களால் நெய்தல் நிலக் குடும்பங்களில் பெண் பிள்ளைகளின் ஒழுக்கத்தில் தாய் தனிக்கவனம் செலுத்தியதோடு, கண்டிப்புடனும் இருந்துள்ளாள். அத்தாய்க்குப் பருவம் எய்திய மகளும் அச்சத்துடனும் இருந்துள்ளாள் என்பதும் அறியப்படுகிறது.

**தமையன்மார்கள் பங்கு**

தனிக்குடும்ப அமைப்பில் தந்தை, தாய், மகள், மகன் அடங்குவர். மகனில் தம்பி அல்லது அண்ணன் அடங்குவர். இவர்கள் தன் தந்தைக்குத் தொழிலில் மிகவும் உறுதுணையாக இருந்ததோடு, தன் தங்கை மீதும் பரிவுடனும் பாசத்துடனும் இருந்துள்ளனர்.

எடுத்துக்காட்டாக குறுந்தொகைப் பாடலில், புன்னை மரநிழலில் தோழியுடன் தலைவனை எதிர்பார்த்திருக்கும் பரதவனின் தங்கையாகிய தலைவி, தலைவன் வரவில்லையே என்ற ஏக்கத்துடன் காத்திருந்தாள். அப்போது கடலில் மீன் வேட்டைக்குச் சென்றிருந்த தன் தமையன்மாருடைய படகுகள் திரும்பி வருவதைக் கண்டு அச்சமடைந்தாள்.

**கருங்கோட்டுப் புன்னைப் பூம்பொழில் புலம்ப**

**இன்னும் வாரார்; வரூஉம்**

**பல்மீன் வேட்டத்து என்னையர் திமிலே** (குறுந். 123: 3–5)

இவ்வரிகளால் தன் தமையன்மார் வந்துவிட்டதால் இனி இப்பொழிலில் தலைவனைக் காணமுடியாது எனத் தன் தமையன்மார்க்கு அச்சப்படும் தங்கையின் உணர்வு பிரதிபலிக்கப்படுகிறது.

மற்றொரு பாடலில், பரத்தையை நாடிச்சென்ற தலைவன் பரத்தையைப் பிரிந்து மீண்டும் தலைவியிடம் தன் நட்பைத் தொடர

பாணனைத் தூது அனுப்புகிறான். அப்பாணனிடம் தோழி! பாண! கொழுத்த மீனையுண்டு மாளிகையில் தன் ஐயன்மார் சினமுடையவராய் உள்ளனர். இத்தகைய சூழ்நிலையில் தலைவனைக் காண வர இயலாது எனத் தன் ஐயன்மார்க்கு அச்சப்படும் தங்கையின் குணம் குறிப்பிடப்படுகிறது.

**கொழுமீன் ஆர்கைச் செழு நகர் நிறைந்த**

**கல்லாக் கதவர் தன் ஐயர் ஆகவும்** (நற். 127: 4–5)

மேற்கண்ட வரிகளால் பரதவர்களின் தங்கையர் தன் தமையன்மார்க்கு மதிப்பளித்து அவர்தம் குணங்களுக்கு இசைந்தும் இருந்துள்ளனர் என்பது புலப்படுகிறது.

**பெருங்குடும்பம்**

சங்க இலக்கியத்தில் செல்வ வளத்துடன் கூடிய பெருங்குடும்பங்கள் இருந்த செய்தியையும் அறிய முடிகிறது. அவ்வகையில் பரதவக் குடும்பங்களிலும் பெருங்குடும்ப அமைப்புகள் இருந்துள்ளன. எடுத்துக்காட்டாக குறுந்தொகைப் பாடலில், விருந்தினர் உண்டு செல்வதற்காக அடையா வாயிலை உடைய நெய்தல் நிலச் செல்வப்

பெருங்குடும்பங்கள் இருந்துள்ளன. அவ்வாறு விருந்துண்டு செல்வோரில், அவ்வில்லத்தின் இளமகளைக் காதல் புரியும் தலைவனும் விருந்துண்டு தலைவியை நுகர்ந்து இன்புற்றுள்ளான். மாலைவேளையில் விருந்தினர்களுடன் தலைவனும் வந்து இல்லத்தாரறியாமல் தலைவியைத் தூய்த்துச் சென்றுள்ளான் என்பதன் மூலம் பெருங்குடும்பப் பெருமை விளக்கப்படுகிறது. (குறுந். 118: 2–5)

மேலும், பெருங்குடும்பத்தில் உறுப்பினர்கள் எண்ணிக்கை அதிகமாக இருப்பதால் இல்லப் பணிகளும் மிகுதியாக இருக்கும். அதனால்தான் விருந்தினனாக வந்த தலைவனை யாரும் அறியாமல் விருந்தினனாகப் போற்றியுள்ளனர் என்பதை அறியலாம்.

**விரிந்த குடும்பம்**

ஒரே இல்லத்தில் தங்காமல் அண்மையில் தங்கிப் பொதுவான பணியில் அனைவரும் ஒன்றாக ஈடுபடும் உறுப்பினர்களைக் கொண்டது

விரிந்த குடும்பம். இக்காலத்திலும் சிற்றூர்களில் உறவு முறையில் அமைந்த தனிக்குடும்பங்களின் தொகுதி உண்டு. அறுவடை, நீர் பாய்ச்சல் போன்ற பணிகளைச் சேர்ந்து முடித்துக் கொள்வர், இவ்வாறு அமைந்தவர்களைக் கொத்து என்ற பொதுப்பெயரால் அழைப்பர்[32].

இவ்வாறு கூட்டமாக இணைந்து செயல்படும் வாழ்வை நெய்தல் நிலத்து உமணர்களின் வாழ்வின் வழி அறியலாம். மேலும், பரதவரும் வேட்டை மேற்செல்லும் போது குழுவாகச் சென்றுள்ளனர்.

சான்றாக அகநானூற்றுப் பாடலில், உமணர்கள் உப்பு வாணிகம் பொருட்டுச் செல்லும் போது கூட்டமாகச் செல்வர். மகளிர் வண்டி ஓட்டுவர்; அவர்களில் வலியவர்கள் எருதுகளைக் காத்து ஓட்டிச் செல்வர்; வண்டி சேற்றில் அழுந்தினால் பகடு பற்றிக் கூட்டு முயற்சியால் கரை சேர்ப்பர்.

**உவர்விளை உப்பின் கொள்ளை சாற்றி**

**அதர்படு பூழிய சேண்புலம் படரும்**

**ததர்கோல் உமணர் பதிபோகு நெடுநெறிக்**

**கணநிரை வாழ்க்கைதான் நன்று கொல்லோ?** (அகம். 390: 1–4)

இவ்வாறு வணிகத்தின் பொருட்டுச் சேர்ந்து செல்லும் இவர்களின் குடும்ப வாழ்க்கை விரிந்த குடும்ப வாழ்க்கையாகும்.

மற்றொரு பாடலில், உமணர்கள் உப்பினை மலைநாட்டு ஊர்களில் கொண்டுபோய் விலை கூறி விற்பர். ஓர் இடத்திலும் நிலைத்தலில்லாத வாழ்க்கையைக் கொண்டது உப்பு வணிகர் கூட்டம்; அவ்வணிகர்கள் தம் வண்டியின் அச்சு இயல்பு கெட்டு அழிந்த போது அதனை வீசி எறிந்தபடி செல்வர் என்னும் குறிப்பு வருகிறது.

**உவர் விளை உப்பின்குன்று போல் குப்பை**

**மலை உய்த்துப் பகரும், நிலையா வாழ்க்கை**

**கணம் கொள் உமணர் உயங்குவயின் ஒழித்த**

**பண் அழிப் பழம் பார் ..........................................** (நற். 138: 1–4)

மேற்கண்ட பாடல் வரிகளால் உப்பு விற்கச் செல்லும் தம் கணவன்மார்களுடன் அவர்தம் மனைவியரும் வண்டி ஓட்டிச்

சென்றுள்ளனர் என்பதும், வண்டியின் அச்சுத் தேயத் தேய அதனை எறிந்து விட்டுப் புதியதை மாட்டுவர் என்பதன் வழி, நீண்ட நாட்கள் உமணர்கள் பல ஊர்களில் தங்கி விரிந்தகுடும்பங்களாக வாழ்ந்துள்ளனர் என்பது புலனாகிறது.

இவ்வுமணர்கள் போலப் பரதவரும் கடற்மேற் மீன் வேட்டைக்குச் செல்லும்போது இளைஞர் முதியவர் என்று குழுவாகச் சென்றுள்ளனர். சான்றாக அகநானூற்றுப் பாடலில், மீன் வேட்டைக்கு இளைஞரும் முதியவரும் சென்று உள்ளனர். திரும்பி வரும்போது மீன்பாடு அதிகம் கிடைக்க மகிழ்ச்சியில் தம் மனைவி மற்றும் சுற்றத்தாருடன் மகிழ்ச்சியுடைவராய் அன்று பொழுதைக் கடற்கரையில் கழித்திருந்தனர். இதனை,

**கடல் பாடு அழிய, இனமீன் முகந்து**

**துணை புணர் உவகையர் பரத மாக்கள்**

**இளையரும் முதியரும் கிளையுடன் துவன்றி** (அகம். 30: 2–6)

என்ற வரிகள் புலப்படுத்துகின்றன. இவ்வரிகளால் குழுவாகச் செய்யக்கூடிய பணிகளில் முதியவர்களின் அனுபவத்தை இளைஞர்கள் பெற்று அப்பணிகளைச் செய்துள்ளனர். அதனால் பெற்ற பயனை பரதவப் பெருங்குடும்பங்களில், தம் மனைவியருடன் பங்கிட்டு மகிழ்வுடன் இருந்துள்ளனர்.

சமூகவியலார் குறிப்பிடும் கூட்டுக்குடும்பம், கலப்புக் குடும்பம் பற்றிய செய்திகளைச் சங்க இலக்கிய நெய்தல் நிலக் குடும்பங்களில் அறிய இயலவில்லை.

**தொகுப்புரை**

இவ்வியலில் மேற்கொண்ட ஆய்வின் வழியே ஆய்வு முடிவுகளாகப் பின்வருவனவற்றைச் சுட்டலாம்.

1. குடும்பம் என்னும் சொல் திருக்குறலிலேயே(1029) முதன்முதலில் இடம்பெறுகிறது.

2. நெய்தல் நில விளையாட்டுகளாக ஓரை விளையாட்டு, அலவனாட்டம், சிற்றில் இழைத்தல், வண்டல் பாவை செய்தல், அலையில் நீராடல் போன்ற விளையாட்டுகள் அறியப்படுகின்றன.

3. நெய்தல் நில மகளிரின் காதல் வாழ்விற்கு விளையாட்டுகள் அடிதளமாக விளங்கியிருக்கின்றன.

4. மகளிருக்குப் பரிசுப் பணம் வழங்கித் திருமணம் செய்ததை அறிய முடிகிறது. (அகம்.90: ஐங்.147).

5. தலைவனே விருந்தினனைப் போல் தலைவியின் வீட்டில் உண்டு களித்துச் சென்றதை அறியமுடிகிறது.

6. பிறந்த வீட்டில் மகப்பேறு நடைபெறாமல் வாழ்க்கைப்பட்ட வீட்டிலேயே மகப்பேறடைவதை நெய்தல் பாடல் சுட்டுகிறது.

7. சங்ககால பரதவ மகளிர் வீட்டிலேயே கள் சமைக்கும் கலையைத் தெரிந்து வைத்திருந்தனர்.

8. தனிக்குடும்பம், கூட்டுக்குடும்பம், கலப்புக்குடும்பம் என்னும் அமைப்பு இருந்ததற்கான சான்றுகள் நெய்தல் பாடல்களில் கிடைக்கின்றன.

## அடிக்குறிப்புகள்

1. லெனின் வி.இ.மார்க்ஸ் எங்கெல்ஸ், மொ.பெ. மார்க்ஸியம் ந.கண்ணன், குடும்பம், தனிச்சொத்து அரசு ஆகியவற்றின் தோற்றம், ப. 119.

2. ம.சு. கோபால கிருஷ்ணன், மானிடவியல், ப. 118.
3. William M. Kepbart,The family society and the indivitual P. 3.
4. தமிழ்க் கலைக்களஞ்சியம், ப. 8.
5. குறள். 1029.
6. அ. ஆறுமுகம், சங்க இலக்கியத்தில் குடும்பம் உடைமை அரசு, ப. 11.
7. அ. ஆறுமுகம், மேலது, ப. 11.
8. பதிப்பாசிரியர் அரங்க மு. முருகையன், சங்க இலக்கிய ஆய்வுகள், ப. 77.
9. அ. சுரேஷ் பாபு, சங்க கால மாந்தரின் சமூகநிலை, ப. 8.
10. தொல். பொருள். அகத்திணையியல், நூ.20.
11. நம்பி அகப்பொருள் விளக்கம், நூ. 24.
12. தொல். பொருள். இளம். 140.
13. அ. ஆறுமுகம், மு. நூ, ப. 16.
14. தொல். பொருள். இளம். 269.
15. எச்.சித்திரபுத்திரன்,சங்கத்தமிழ் உறவுமுறைச் சொற்கள், ப. 115.
16. கா. பெ. சந்திர சேகர்,சங்கத் தமிழ் இன்பம், ப. 93.
17. தண்டி. பொருளணி 41 – மாலா தீவகம், உதாரணம்
18. இரா. சுகுமார்,சங்க இலக்கியத்தில் பதிவும் பார்வையும், ப. 1.
19. குறள். 86.

20. தொல். 3: 150.

21. கழகத் தமிழ் அகராதி, கழக வெளியீடு, ப. 856.

22. பொ. அழகு கிருஷ்ணன்,சிலப்பதிகாரம் காட்டும் பண்பாடும் சமுதாய வரலாறும், ப. 71.

23. டாக்டர் சி. இலக்குவனார், வள்ளுவர் கண்ட இல்லறம் அல்லது காதல் வாழ்க்கை, ப. 14.

24. அ.ஆறுமுகம், மு. நூ.ப.51.

25. ந. ரேகா பானு,சங்க இலக்கியத்தில் விருந்தோம்பல், ப. 20

26. குறள். 66.

27. அ. மணமலர்ச் செல்வி, தமிழ் இலக்கியத்தில் மருத்துவம், ப. 381.

28. பதி இரா. சந்திரசேகரன், சங்க இலக்கியம் இலக்கிய வளமும் வாழ்வியல் அறமும், ப. 207.

29. கோ. சுகன்யா,மனித மேம்பாடும் சங்க இலக்கியமும், ப. 22.

30. பதிப்பாசிரியர் – இராம. குருமூர்த்தி சங்க இலக்கிய சிந்தனைகள், தொகுதி–2, ப.10.

31. ஆ. இராமநாதன்,நாட்டுப்புறப் பாடல்கள் காட்டும் தமிழர் வாழ்வியல், ப. 61.

32. அ. ஆறுமுகம், மு. நூ. ப. 35.

# இயல் மூன்று

## சமூக நிலையில் பரதவ மகளிர்

மலை காடுகளில் வாழ்ந்த மனிதன் படிப்படியான நாகரிக வளர்ச்சியின் காரணமாகத் தனக்கென இருப்பிடங்களை அமைத்துக்கொண்டு குடும்பங்களாக வாழ்ந்தான். அதுவே சமுதாயம் எனும் அமைப்பிற்கு முன்னோடியாகும்.

ஆண், பெண் எனும் இருவர் உறவே பின்னர் குடும்பம், சமுதாயம், நாடு, உலகம் எனப் பரந்து விரிந்தது[1].

குடும்பங்கள் மூலம் இணையும் இத்தகைய உறவுகள் தனித்து இயங்க முடியாது. ஒருவரை மற்றொருவர் ஏதாவது ஒரு வகையில் சார்ந்துதான் இருக்கவேண்டும். இதனையே சமூக அமைப்பு என்கிறோம். இச்சமுதாய அமைப்பைப் பற்றிக் குறிப்பிடும் சாக்ரடீஸ்,

மனிதர்கள் எவரும் தனியே வாழ இயலாது, ஏனெனில் தங்களது ஆவல்களையும் தேவைகளையும் நிறைவேற்றிக் கொள்ளப் பிறரது துணை அல்லது உதவி இன்றியமையாததாகிறது. மனிதர்களுக்குப் பலவகைப் பொருள்களும், பிறர்தம் உதவிகளும் தேவைப்படும் போது ஓரிடத்தில் கூட்டாளியாக இணைகின்றனர். இதையே சமுதாயம் எனலாம்[2] என்கிறார்.

இவரது கருத்தை வலியுறுத்தும் இரா. சுகுமார் சமுதாயம் பற்றி விளக்குகையில்,

மனிதன் கூடி வாழும் ஒரு சமூக விலங்கு. ஏனெனில் கூடிவாழும் இயல்புமுறை அவன் கூடவே பிறந்தது. நாகரிகம் பெறுவதற்குப் பன்னெடுங் காலத்திற்கு முன்பே கூடி வாழும் கூட்டு வாழ்க்கையை உடையவனாய் இருந்துள்ளான். அக்கூட்டு வாழ்க்கையில் மனிதனுக்குக் கிடைத்த நன்மைகள் பல. இதனால் மனித இனம் பல கிளைகளாக வளர்ச்சி பெற்றது. வாழும் இடம், செய்யும் தொழில், பேசும் மொழி ஆகியவற்றின் அடிப்படையில் ஒன்றுபட்டுச் சமுதாயமாக வளர்ச்சி பெற்றது[3] என்று கூறுகிறார்.

இச்சமுதாயத்தைப் பற்றித் தமிழ்மொழியகராதி பொருள் பகர்கையில்,

கூட்டம், சங்கம், பின்னணி, பொது, போர்[4] என்று விளக்கமளிக்கிறது.

சங்க காலத் தமிழர் சிறப்பான முறையில் குடும்ப வாழ்வு வாழ்ந்ததோடு நிலம் சார்ந்த சமுதாய வாழ்வையும் போற்றியுள்ளனர். சங்க காலத்தில் வாழ்ந்த தமிழ்ச் சமுதாயம் பற்றிக் கூறும் டாக்டர் ந.சுப்பிரமணியம்,

அது ஓர் இனக்குழு அமைப்பு என்றும், சாதி அச்சமுதாயத்தின் குறிப்பிடத்தக்க அம்சமாக விளங்கினாலும் அதனுடைய இனக்குழுப் பண்புகள் நிலைத்திருந்தன[5] என்கிறார்.

இவர் குறிப்பிடுவது போல, சமுதாயம் என்ற சொல் ஓர் ஊரில் அல்லது மாநிலத்தில், நாட்டில், நிலத்தில் இணைந்து வாழும் மக்களைக் குறிக்கிறது. இச்சமுதாய அமைப்பில் முக்கிய அங்கமாக விளங்குபவள் பெண். பெண்ணே உலக உயிர்களின் ஆதாரமாக இருக்கிறாள். சமுதாயத்தில் பெண்ணின் பங்கு மகத்தானது. அவ்வகையில் சங்கப் பாடல்கள் வழி நெய்தல் நிலப் பரதவர் சமுதாய அமைப்பில் பெண்கள் எவ்வாறு சமுதாயத்துடன் தொடர்பு கொண்டிருந்தனர் என்பதும், சமுதாயத்தில் அவர்கள் செயல்பாடுகள் மற்றும் பொது வாழ்வினைப் பற்றிக் காண்பதே இவ்வியலின் நோக்கமாகும். இவ்வியலில் அப்பெண்கள் கொண்டிருந்த காதல், ஒழுக்கம், புறம்பேசுதல், உடன்போக்கு, திருமணம், பரத்தமையொழுக்கம், மகளிர் தொழில்கள், அவர்கள் உற்ற இடர்ப்பாடுகள், நம்பிக்கைகள் மற்றும் பழக்க வழக்கங்கள் பற்றி விரிவாகக் காணலாம்.

**காதல்**

பருவ வயதுடைய ஆணும் பெண்ணும் உள்ளத்தால் அன்பு கொள்வதே காதல். காதல் பற்றித் திரு.வி.க. குறிப்பிடுகையில்,

காதல் அன்பின் கூறுகளுள் ஒன்று. சிறந்த ஒன்று. அன்பின் உயிருள்ள இடம் காதல். காதல் அன்பின் முழுமையாகும் இயல்புள்ளது[6] என்று கூறுகிறார்.

அவர் கூறுவது போல் காதல்தான் உலகத்தின் அடிப்படை. காதல் இல்லையேல் உலகம் இல்லை. உலகில் உள்ள அனைத்து உயிர்களும் காதல் வயப்பட்டன. சங்க இலக்கியத்தில் அகப்பாடல்கள் அனைத்தும் மேன்மையான காதல் உணர்வை அடிப்படையாகக் கொண்டு படைக்கப்பட்டவை. ஐந்நிலங்களில் வாழ்ந்த மக்களின் காதலைச் சித்தரிப்பது.

அவ்வகையில் நெய்தல் நிலத்தில் வாழ்ந்த பரதவப் பெண்களின் காதல் உணர்வை நெய்தற் பாடல்கள் சிறந்த முறையில் வெளிப்படுத்துகின்றன. இப்பெண்கள் விளையாட்டுப் பருவம் நீங்காத இளம் வயதிலேயே காதல் வாழ்வில் ஒழுகியுள்ளனர். பரதவக் குடும்பங்களில் பெண் பிள்ளைகள் அவர்கள் விருப்பத்தின் போக்கில் விளையாட அனுமதிக்கப்பட்டுள்ளனர். அவ்விளையாட்டே அவர்களின் காதல் வாழ்விற்கு வித்திட்டுள்ளது. இப்பரதவ இளம் பெண்கள் கடற்கரையில் தம் தோழியருடன் குழுவாக விளையாடுவர். அவ்வழியே செல்லும் ஆடவர் தோழியர் கூட்டத்தில் தாம் விரும்பும் பெண்ணைத் தேர்ந்தெடுத்து அவளுடன் பேச முற்படுவர். ஆடவன் பேசக்கூடிய பேச்சு, அவளின் உள்ளே மயக்கத்தை ஏற்படுத்துகிறது. காதல் வயப்படுகிறாள். இதனை இனக் கவர்ச்சி எனலாம்.

ஓர் ஆணைக் கண்டால் பெண்ணுக்கும், பெண்ணைக் கண்டால் ஆணுக்கும் ஒருவித ஈர்ப்பு சக்தி ஏற்படுவது இயல்பு. அவ்வித ஈர்ப்பு சக்தியே விளையாட்டுப் பருவம் நீங்காத அப்பரதவ பேதைப்பெண் காதல் வயப்படவும் காரணமாகிறது. இந்த இளம் வயதுக் காதலைப் பற்றி நெய்தல் பாடல்கள் பல எடுத்தியம்புகின்றன. அவற்றில் ஒரு பாடலில், விளையாட்டுப் பருவம் நீங்காத தலைவி வண்டல் பாவை செய்து கடற்கரையில் விட்டுவிட்டுத் தன் காதலனைச் சந்திக்கச் செல்கிறாள். அத்தகைய இளம் வயதுடையவள் தலைவி எனப் பகர்கிறது குறுந்தொகைப் பாடல்.

**நெய்தல் பரப்பில் பாவை கிடப்பி**

**நின்குறி வந்தனென், இயல்தேர்க் கொண்க!** (குறுந். 114: 1–2)

மற்றொரு பாடலில், தலைவனின் காதலி நண்டினைப் பிடிக்கச் சென்று, அது இயலாது களைப்புற்ற நிலையில் அதற்காக வருந்தி வருந்தி அம்முயற்சியைக் கைவிட்ட இளையோழாவாள் அவள் எனப் பகர்கிறது.

**ஆடு வரி அலவன் ஓடுவயின் ஆற்றாது**

**அசைஇ, உள் ஒழிந்த வசை தீர் குறுமகட்கு** (நற். 106: 3–4)

மேற்கண்ட பாடல்களால், பரதவச் சிறுமியர் விளையாட்டுப் பருவம் நீங்காத இளம் வயதில் களவு வாழ்வில் ஈடுபட்டுள்ளனர் என்பதை அறியலாம். மேலும், இக்கருத்தை வலுப்படுத்தும் இரு நெய்தற் பாடல்கள் கீழ்வருமாறு:

பெண்கள் பருவ வயதை அடையும்போது உறுப்பு நலனில் மாற்றங்கள் ஏற்படுவது உலக இயற்கை. இது பெண் பருவ வயது அடைந்துவிட்டாள் என்பதை உலகிற்கு சொல்லும் அடையாளமாகும். இவ்வாறு உறுப்பு நலனில் மாற்றம் ஏற்பட்ட பரதவப் பெண்ணின் காதலை அகநானூற்றுப் பாடல் வரிகள், புதிதாக வளரும் மார்பகத்தைக் கொண்ட பரதவ இளஞ்சிறுமி தலைவன் ஒருவன் மேல் காதல் வயப்பட்டாள் எனப் பகர்கிறது.

**............................................. பல்நாள்**

**வருமுலை வருத்தா, அம் பகட்டு மார்பின்**

**தெருமரல் உள்ளமொடு வருந்தும்** (அகம். 90: 5–7)

மற்றொரு பாடலில், பகற்குறி வந்து மீளும் தலைவன், நான் செல்கிறேன் எனச் சொல்ல, அதற்கு மறுமொழி கூற இயலாத பரதவனின் இளமகள் புதியனவாய்த் தோன்றுகின்ற மார்பகம் நனையுமாறு அழுதுள்ளாள்.

**சென்மோ, சேயிழை? என்றனம்; அதன் எதிர்**

**சொல்லாள் மெல்லியல் சிலவே – நல் அகத்து**

**யாணர் இளமுலை நனைய**

**மாண் எழில் மலர்க் கண் தென் பனிக்கொளவே** (நற். 398: 7–10)

இத்தகைய இளமைத் தன்மை வாய்ந்த சிறுமியரின் காதல் வலையில் வீழ்ந்த ஆண்கள், அவர்களின் சம்மதத்தைப் பெறுவதற்காகத் தமது தகுதிக்கு ஒவ்வாத பல செயல்களைச் செய்துள்ளனர். சான்றாக நற்றிணைப் பாடலில் தலைவியின் சம்மதம் பெறுவதற்காகத் தலைவிக்கும் அவளது தோழிக்கும் பலவித ஏவல்களைச் செய்துள்ளான் தலைவன். எவ்வாறெனில்,

தேரில் ஏறி வரும் செல்வம் மிக்க தலைவன், தன் காதலிக்காக காலால் நடந்து சென்றும், அடும்பின் மலரைப் பறித்துக் கொடுத்தும், தாழம்பூவைப் பறிக்குமாறு தலைவியைத் தூக்கி நின்றும், நெய்தல் மலரைக் கொய்து கொடுத்தும் ஏவல் பல செய்தும் தம் காதலியின் விருப்பத்தைப் பெற விரும்பியுள்ளான்.

**கடுந்தேர் ஏறியும், காலின் சென்றும்**

**கொடுங் கழி மருங்கின் அடும்பு மலர் கொய்தும்**

**கைதை தூக்கியும், நெய்தல் குற்றும்**

**புணர்ந்தாம் போல, உணர்ந்த நெஞ்சமொடு**

**-------------------------------------------------------------------------**

**பின்னிலை முனியா நம்வயின்**

**என் என நினையும் கொல், பரதவர் மகளே?** (நற். 1–10)

இத்தகைய செல்வம் மிக்க தலைவன், தலைவிக்கும் தோழிக்கும் ஏவல் செய்ததோடு தன்னைத் தன் காதலி ஏற்றுக் கொள்வாளோ? மாட்டாளோ? என்ற ஐயத்தோடு வருந்தித் துன்புற்றுள்ளான். ஆண்கள் மீனவ இளமகளிரிடம் காதலில் சம்மதம் பெறுவதற்காகப் பணிந்தும் நடந்துள்ளனர் என்பதை மேற்கண்ட பாடல் வரிகள் புலப்படுத்துகின்றன. இவ்வாறு ஐயுற்று வருந்திய தலைவனுக்குத் தலைவியின் சம்மதம் கிடைத்து விடுகிறது. எப்போதுமே தலைவியுடன் பிரிவின்றி இணைந்தே இருக்கவேண்டும் என எண்ணுகிறான் தலைவன். இவ்வெண்ணம் ஈடேற கடற்கரையில் தலைவி மற்றும் அவளது தோழியருடன் பிரியும் எண்ணமின்றி விளையாட்டுக்களில் ஈடுபடுகிறான்.

எடுத்துக்காட்டாக அகநானூற்றுப் பாடலில், தலைவன் தலைவி மற்றும் தோழியருடன் பூக்களைப் பறித்தும், மணலில் வண்டல் பாவை செய்து விளையாடியும், இன்பம் பொங்கப் பலமுறை அவர்களை வந்து கூடியும், தன் பெருமைக்குச் சிறுமை தோன்ற மகளிராகிய அவர்களைப் பணிந்தும், பிரியும் மனமின்றித் தளர்ந்த நெஞ்சத்தோடு அவர்களை அகன்று சென்றுள்ளான்.

**கழிப்பூக் குற்றும், கானல் அல்கியும்**

**வண்டல் பாவை வரிமணல் அயர்ந்தும்**

**இன்புறப் புணர்ந்தும், இளிவரப் பணிந்தும்**

**-------------------------------------------------------------------------**

**------------------------------------ அயர்ந்த நெஞ்சமொடு**

**செல்லும் அன்னோ; செல் அம் புலம்பன்!** (அகம். 330: 1–6)

இன்னும் ஒரு பாடலில், தலைவன் தன் காதலிக்காக தலைவி மற்றும் தோழியருடன் கடலில் விளையாடியும், தலைவியின் நனைந்த கூந்தலைப் பிழிந்து உலரவைக்க உதவியும் தன் கையால் தொடுத்த தழையாடையைத் தலைவிக்குத் தானே அணிவித்தும் பிரியும் எண்ணமின்றி அவர்களோடு தங்கியுள்ளான்.

**பொம்மற் படு திரை நம்மோடு ஆடி**

**புறம் தாழ்பு இருளிய பிறங்குகுரல் ஐம்பால்**

**துவரினர் அருளிய துறையே; அதுவே**

**.............................. நெடுங் கால் நெய்தல்**

**அம்பகை நெறித்தழை அணி பெறத் தைஇ**

**தமியர் சென்ற கானல்! ..............................** (நற். 96: 4–9)

மேற்கண்ட விளக்கத்தால் பரதவ சமுதாயத்தில் ஆண்கள், தாங்கள் காதலிக்கும் பெண்ணிற்காக அவர்களை மகிழ்ச்சிப்படுத்தியும், சம்மதம் பெற அவர்களைப் பணிந்தும், தன் இயல்புக்கு ஒவ்வாத செயல்களைச் செய்தும் உள்ளனர். இத்தகைய அன்பு கொண்ட அவர்கள் தான் காதலிக்கும் மங்கைக்குப் பரிசும் கொண்டு வந்து கொடுத்துள்ளனர்.

ஐங்குறுநூற்றுப் பாடலில் தலைவன் தன் காதலிக்கு சங்குவளையல்களைக் காதல் பரிசாகக் கொடுத்துள்ளான்.

**துறை கெழு கொண்க! நீ தந்த**

**அறை புனல் வால் வளை .........** (ஐங். 193: 3–4)

**புறம் பேசுதல்**

புறம்பேசுதல் என்ற கொடிய பண்பானது பெரும்பான்மையான பெண்களிடம் அமைந்துள்ள குணங்களில் ஒன்று. பெரும்பாலும் ஒரு நிகழ்வை ஆண்கள் பார்த்து அதனைப் புரிந்து கொள்வதும், உள்வாங்குவதும் பெரும்போக்குடன் இருக்கும். அதே நிகழ்வைப் பெண்கள் பார்க்கும்போது நுட்பத்துடன் ஆழமானதாக இருக்கும். அந்நிகழ்வு பலகாட்சிகளாக, நிகழ்வுகளாக விரியும். இவ்வாறு விரித்து பார்க்கக் கூடிய கொடிய பண்பானது பரதவப் பெண்களிடம் இருந்துள்ளது. அவர்கள் பேசுவதர்கான பொருண்மையாகக் காதல் விளங்கியுள்ளது. பொதுவாகச் சமுதாயத்தில் ஓர் ஆண் பெண்ணிடம் பேசக்கூடிய இயல்பான உறவைக்கூடத் தொடர்புபடுத்திப் பேசுவது உலக இயல்பு. இத்தகைய உறவைப் பெரிதுபடுத்திப் பேசக்கூடிய பண்பும் பெண்களுக்கே உரியது. பரதவ மகளிரிடமிருந்த இப்பண்பை வெளிப்படுத்தும் சில பாடல்களைக் காணலாம்.

கடற்கரையில் தலைவி தன் தோழியருடன் விளையாடுகிறாள். அவ்வழிச் செல்லும் ஆடவன் தலைவியுடன் உரையாடுகிறான். இதுவே நடந்த நிகழ்வு. இதனைக் கண்ணுற்ற மீனவப் பெண்கள் ஒன்றும் பலவுமாக அடுக்கிக் கூறி ஊர் முழுவதும் அவர்களது உறவு புலப்படுமாறு பரப்புகின்றனர். நெய்தல் பாடல்கள் வழி இப்பெண்கள் மற்ற செய்தியை விட காதல் மற்றும் பரத்தமை பற்றியே பேசியுள்ளனர் என்பதை அறியமுடிகிறது. இவ்வாறு பேசுவதையே ஒரு இன்பப் பொழுதுபோக்காகக் கொண்டிருந்தனரோ என்று தோன்றுமளவு பல பாடல்கள் அவர்கள் புறம் பேசுவதை எடுத்தியம்புகின்றன.

சான்றாகக் குறுந்தொகைப் பாடலில், தலைவி தன் தோழியருடன் சிற்றில் இழைத்து விளையாடுகிறாள். அவ்வழிச் சென்ற தலைவன் சிற்றிலைப் புகழ்ந்து பேசி விட்டுச் செல்கிறான். அவனது செயலில் மயங்கிய தலைவி அது தொடங்கி அவனை நினைந்து வருந்தித் தோள் மெலிந்து வளை கழன்றுவிழ வாடினாள். மற்ற எந்நிகழ்வும் நடக்காத நிலையில், தலைவியின் இந்நிலையைக் கண்டு வெஞ்சொற் கூறும் வாயினையுடைய நுளையர் மகளிர் பலரும் அறியப் பழிச்சொல் கூறினர். இதனை,

**இளமணல் எக்கர்க் காண்வர**

**கணம்கொள் ஆயமொடு புணர்ந்து விளையாட,**

**------------------------------------------------------------------**

**------------------------------------------------------------- ஒருவன்**

**வரிமனை புகழ்ந்த கிளவியன், யாவதும்**

**மறுமொழி பெறாஅன் பெயர்ந்தனன்; அதற்கொண்டு**

**-------------------------------------------------------------------------------**

**--------------------------------------------------- கானல்அம் சிறுகுடி**

**வெவ்வாய்ப் பெண்டிர் கவ்வையின் கலங்கி** (அகம். 250: 4–12)

என்ற வரிகள் புலப்படுத்துகின்றன. புறம் பேசும் மகளிரைப் பற்றி அகநானூற்றுப் பாடல் வரிகள் கீழ்வருமாறு சுட்டுகின்றன.

**வெவ்வாய்ப் பெண்டிர் கௌவை தூற்றினும்** (அகம். 50:3)

**அலர் வாய்ப் பெண்டிர் அம்பல் தூற்ற** (அகம். 70: 6)

இவ்வாறு மற்றவர் வாழ்வை கவனிப்பதை ஆர்வம் கொண்டிருந்த புறம்பேசும் பரதவப் பெண்டிர், பகலில் மட்டுமல்லாது அனைவரும் உறங்கும் இரவிலும் பேசியுள்ளனர் என்பதை,

**துறையினும் துஞ்சாக் கண்ணர்**

**பெண்டிரும் உடைத்து, இவ் அம்பல் ஊரே** (நற். 223: 8–9)

என்னும் வரிகள் புலப்படுத்துகின்றன.

மேலும், புறம்பேசும் இப்பெண்களின் நிலை மற்றும் பேசுமிடம் பற்றியும் நற்றிணைப் பாடல் ஒன்று விரிவாக எடுத்தியம்புகிறது. எல்லாகாலங்களிலும் சமூகத்தில் ஏற்றத் தாழ்வு என்பது பொதுவாக இருக்கக்கூடிய ஒன்று. காதல் இவ்வேற்றத் தாழ்வுகளைக் கடந்து நிற்பது.

அவ்வகையில் பரதவப் பெருங்குடியில் பிறந்த தலைவி காதல் வயப்படுகிறாள். அவளின் காதலைப் பற்றி ஊரில் உள்ள பெண்டிர் சிலராகவும் பலராகவும் தெருக்களில் கூடி நின்று கடைக்கண்ணால் குறித்துக் காட்டியும் சுட்டு விரலை மூக்கில் வைத்துப் பழிச்சொற்கள் கூறியும் நின்றனர்.

**சிலரும் பலரும் கடைக்கண் நோக்கி**

**மூக்கின் உச்சிச் சுட்டு விரல் சேர்த்தி**

**மறுகில் பெண்டிர் அம்பல் தூற்ற** (நற். 149: 1–3)

என்ற இப்பாடல் வழி புறம்பேசும் பெண்டிர் தலைவி செல்வக் குடியினள் என்பதால், வாயாலும் கையாலும் குறிப்பிடவதற்கு அஞ்சிக் கண்ணால் குறித்துக் காட்டினர். பெருங்குடியில் பிறந்து நாணம் உடைய இளமகள், தலைவனுடன் எவ்வகையில் காதல் வயப்பட்டாளோ? என வியந்தமையால் மூக்கு நுனியில் விரல் சேர்ந்தமை கூறினர் எனலாம்.

மற்றொரு பாடலில், தலைவியின் காதல் ஒழுக்கம் பற்றிய பழிச்சொற்கள் புறம்பேசும் பெண்களால் பரவ, அச்சொற்கள் அன்னையின் செவிகளுக்கு எட்டுகின்றன. அப்பெண்களின் சொல் கேட்டுத் தாய் தன் மகளைக் கண்டித்துக் காவலும் ஏற்படுத்தியுள்ளாள்.

**................................ ..................... இவ்ஊர்**

**கொடிது அறி பெண்டிர் சொற்கொண்டு, அன்னை**

**கடி கொண்டனளே ...............................................** (அகம். 20: 11–16)

மேலும், புறம் பேசும் பெண்களின் பேச்சை நம்பித் தான் பெற்ற மகளைச் சுடுவது போலவும் அன்னை நோக்கியுள்ளாள்.

**............................................................ அன்னை**

**தான் அறிந்தன்றோ இவளே; பானாள்**

**சேரி அம் பெண்டிர் சிறுசொல் நம்பி,**

**சுடுவான் போல நோக்கும்** (நற். 175: 5–8)

மற்றொரு தாயானவள், தன் மகளைப் பற்றி, ஊரார் அவள் காதலிக்கும் தலைவனுக்கு மனைவியானாள் எனப் பேச, அதனைக் கேட்டு அதிர்ச்சியடைந்த உள்ளத்துடன் தன் மகளிடமே நீ அத்தகையவளா? என்று வினாவியும் உள்ளாள்.

**ஊரார் பெண்டு என மொழிய என்னை**

**அது கேட்டு அன்னாய் என்றனள், அன்னை** (ஐங். 113: 4–5)

மற்றொரு தாய் பழிபேசும் பெண்களின் பேச்சைக் கேட்டு, அவர்கள் கூறும் பழிமொழிகளை நம்பி சினம் மிகுந்து சிறிய கோலினை எடுத்து அது சுழலும்படியாக வீசி அடித்துத் தன் மகளைத் துன்புறுத்தியும் உள்ளாள்.

**மறுகில் பெண்டிர் அம்பல் தூற்ற**

**சிறுகோல் வலந்தனள் அன்னை, அலைப்ப**

**அலந்தனென் வாழி** ........................................ (நற். 149: 3–5)

மேற்கண்ட பாடல்கள் வழி புறம் பேசக்கூடிய பரதவ மகளிரின் பழிச் சொல்லை நம்பிய நுளையர் மகளிர் தம் மகளை இற்செறித்தும், நம்பமுடியாமல் தன் மகளிடமே கேட்டும், கண்டித்தும், துன்புறுத்தியும் இருக்கின்றனர் என்பது அறியப்படுகிறது.

**உடன்போக்கு**

தமிழர்தம் அக வாழ்க்கையில் தலைவனும் தலைவியும், தன் தாய் தந்தை, சுற்றத்தார் ஊர் அறியாமல் அனைவரையும் துறந்து தான் விரும்பிய தலைவனுடன் வேறு ஊருக்குச் சென்று, தாங்களாகவே மணம் புரிந்து கொண்டு இல்லறத்தைத் தொடங்குவது உடன்போக்கு ஆகும்[7].

உடன்போக்கை மக்கள் ஒரு தவறான செயலாகக் கருதவில்லை. அறத்தின் செயலாகக் கருதினர். எவ்வாறு அறத்தின் செயலாகும் என்பதை இரா. மணிமேகலை விளக்குகையில்,

"தலைவியும் தலைவனும் ஒருவரோடொருவர் களவில் ஈடுபட்டு இயற்கை வழி புணர்ச்சியில் உடலும், உள்ளமும் கலந்ததன் பின்னர்த் தொடர்ந்து அந்த காம நாட்டத்தின் தொடர்ச்சியாகப் பெற்றோர், சுற்றம், நட்பு ஆகிய உறவுகளை விடுத்துத் தம் விருப்பே பெரிதென்று உடன்போக்கு மேற்கொள்வதாக மேலோட்டமாகவும், கொச்சையாகவும் கற்போர் தவறான புரிதலை செய்துவிடலாகாது. உடன்போக்கு என்னும் நிலைப்பாடு காதலர்க்குத் தவிர்க்கவியலாத நிகழ்ச்சியாகவும், அது அறத்தின் பாற்பட்ட அவர்களது முடிவே என்பதனையும் நாம் புரிந்து கொள்ளவேண்டும்"[8] என்று குறிப்பிடுகிறார். அதற்கான உளவியல் காரணங்களையும் வரிசைப்படுத்திக் குறிப்பிடுகிறார் கீழ்வருமாறு:

1. காதலர் இருவரும் உடலாலும் உள்ளத்தாலும் களவில் ஒன்றிப் போய், இனிப் பிரிவை வேண்டாத, அப்படிப் பிரிந்தால் வாழ முடியாத மனநிலைக்கு வந்து விடுவது.

2. களவை அடுத்து தாம் தொடரவுள்ள கற்புநிலை வாழ்க்கைக்கு எவ்வித குறுக்கீடும் ஏற்படுவதை அவர்கள் விரும்புவதில்லை.

3. இருவருடைய குடும்பச் சூழல் உறவுகளின் உலகாயுதப் பார்வை ஆகியவற்றால் தனிப்பட்டவர்களுடைய விருப்பு வெறுப்பின் அடிப்படையில் தம் உறவு சமுதாயத்துக்குத் தெரியாதவாறு அழிக்கப்பட்டு விடலாம் என்ற அச்சம்.

4. இயற்கையோடு இயைந்த உள்ளார்ந்த தம் காதல் வேட்கையைத் தம் விருப்பத்துக்கேற்ப நிறைவேற்றிக் கொண்டாலும், கற்பு நிலையில் நின்று சமுதாய நெறியின் கண் இல்லறம் நடத்தும் கடமையுணர்ச்சி உள்ளவர்களே தாமிருவரும் என்பதைப் பிறருக்குச் செய்கை மூலம் உணர்த்தும் விழைவு.

5. சமுதாயம் ஏற்றாலும் ஏற்காவிட்டாலும், தாங்கள் வாழ்வது சமுதாயம் வகுத்துள்ள வளர்த்துள்ள அகவாழ்க்கை நாகரிகத்திற்கு ஒத்த வாழ்க்கையே என்பதைத் தாம் தேர்ந்து தெளிந்தே வாழ்கிறோம் என்பதை அதற்கு உணர்த்தும் ஒரு நடவடிக்கை[9].

இவ்வுடன்போக்கு எனும் நிகழ்ச்சி இத்தகைய காரணங்கள் அடிப்படையில் நோக்கும்போது, அது அறத்தின் செயலே என்று அக்காலத்தமிழ்ச் சமுதாயம் ஏற்றுக்கொண்டதாக இலக்கியங்கள் கூறுவது முற்றிலும் சரியாகவே தெரிகிறது.

அறத்தின் பாற்பட்ட இவ்வுடன்போக்கை நெய்தல் நிலத்தில் வாழ்ந்த இளம்பெண்களும் மேற்கொண்டு ஒழுகியுள்ளனர். தன்னைச் சார்ந்த உறவுகளுக்குத் தெரியாமல் செய்யும் இந்நிகழ்விற்கு மனத்துணிச்சல் வேண்டும். நெய்தல் பாடல்கள் வழி இத்துணிச்சலான முடிவைத் தோழி எடுத்துள்ளாள்.

சான்றாக ஐங்குறுநூற்றுப் பாடலில், தலைவியின் சுற்றத்தார் அவள் மேனி வேறுபாடு கண்டு இற்செறித்தனர். தலைவன் வழக்கம் போல் கண்டு சந்திக்கும் வாய்ப்பை இழந்தான். இதனால் இருவரும் வருந்தினர். அவர்கள் வருத்தத்தைப் போக்கத் தோழி, தலைவியைத் தலைவனொடு உடன்போக்கில் அனுப்ப முடிவு செய்தாள். அதற்கு உடன்பட்ட தலைவன் இரவில் வந்தபொழுது தலைவியைத் துயிலெழுப்பிய தோழி அவளிடம் உரைக்கிறாள்:

தோழியே! உன் அழியப் பெற்ற அழகு மீண்டும் அழகுபெறுமாறு, நம் தலைவன் வந்தனன்! நின் கொடிய கண்களைத் திறந்து எழுக என்றாள்.

**------------------------------------------------------------ ஆய்நுதல் கவின,**

**பொலந்தேர்க் கொண்கன் வந்தனன் இனியே;**

**விலங்கு அரி நெடுங் கண் ஞெகிழ்மதி;** (ஐங். 200:1–3)

மற்றொரு பாடலில், ஊரில் உள்ள பெண்கள் தலைவியின் உறவு பற்றி அலர் பேச, அதனை உண்மை என்று எண்ணிய அன்னை தலைவியைத் துன்புறுத்தினாள். தலைவியின் துன்பத்தைப் பொறுக்க இயலாத தோழி தலைவியை உடன்போக்கிற்கு வற்புறுத்தினாள்.

தலைவியே! உன் துன்பம் நீங்குமாறு நள்ளிரவில் நம் தலைவன் வருவான். அங்ஙனம் வரும் தலைவனோடு நீ செல்ல நான் கருதினேன். எனவே உடன்போக்கு மேற்கொள்வாயாக. அங்ஙனம் நீ சென்ற பின்பு பேரொலி மிகுந்த இவ்வூர் என்ன செய்துவிட முடியும்? இயலுமேல் அலரைக் கூறிக் கொண்டு இருக்கட்டும் என்றாள்.

**நடு நாள் வரூஉம் இயல் தேர்க் கொண்கனொடு**

**செலவு அயர்ந்திசினாள், யானே;**

**அலர் சுமந்து ஒழிக, இவ் அழுங்கல் ஊரே!** (நற். 149: 8–10)

மேலே சுட்டிய வரிகளால் களவு தொடர முடியாத நிலை ஏற்படும் போது உடன்போக்கு என்ற நிகழ்வின் மூலம் கற்பு வாழ்வைத் தொடர்ந்துள்ளனர் பரதவ மகளிர். களவில் அலர் ஏற்படின் அது துன்பப்படுவதற்கான ஒன்று. அதுவே உடன்போக்கு மேற்கொள்வதன் மூலம் கற்பு வாழ்விற்கு வித்திடுகிறது. அதனால் ஏற்படும் பழியை உயர்வாக ஏற்றுக் கொள்ளலாம் என்ற எண்ணத்தில் தோழி ஊரார் அலர் தூற்றினால் தூற்றிவிட்டுப் போகட்டும் என்றாள் எனலாம்.

**திருமணம்**

மனிதன் தோன்றிய காலத்திலிருந்து காதல், நட்பு போன்ற பண்புகள் போற்றப்படுகின்றன. களவு கற்பு என்ற சொற்கள் முறையே காதல், திருமணம் என்பதையே குறிக்கின்றன[10].

**பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்**
**ஐயர் யாத்தனர் கரணம் என்ப**

எனத் திருமணம் பற்றித் தொல்காப்பியம் சுட்டுகிறது.இத்திருமணம் பற்றிக் க. காந்தி குறிப்பிடுகையில்,

திருமணம் என்பது ஓர் ஆடவனும் ஒரு பெண்ணும் இணைந்து வாழ்வதற்காகச் சமுதாயத்தால் ஏற்படுத்தப்பட்ட வினைமுறையாகும்[11] என்கிறார்.

இத்திருமணமானது பரதவர் இல்லங்களில் பல நிலைகளில் நடந்துள்ளது. மடலேறி மணத்தல், பொருள் கொடுத்துத் திருமணம் செய்தல், பணிவிடை செய்து திருமணம் முடித்தல் மற்றும் திணைக் கலப்பு மணம் என்ற நிலைகளில் நடந்துள்ளது.

**மடலேறி மணம்முடித்தல்**

களவில் ஒழுகும் தலைவன் தான் விரும்பும் பெண்ணை அடைதல் அரிது என்ற நிலை வரும்பொழுது எப்படியேனும் அவளை அடைவது என்ற நோக்கோடு ஊரிலுள்ளோர் அறியும்படி மடல் ஏறி அப்பெண்ணை அடைவது மடலேறுதல் எனப்படும்.

மடலூர்தல் பற்றி வி.சி. சசிவல்லி விளக்குகையில்,

மடலூர்தல் என்பது தலைவன் பனை ஓலையினால் ஒரு குதிரை செய்வான். காதலியின் ஊருக்குச் சென்று முச்சந்தியிலே இப்பனைவோலைக் குதிரையை நிறுத்தி அதன்மேல் ஏறிக் கொள்வான். கையிலே காதலியின் உருவத்தை வரைந்து படம் ஒன்றைப் பிடித்துக் கொள்வான். அதைப் பார்த்து வருந்துவான். தான் எண்ணும் எண்ணம் ஈடேறப் பலநாட்களானாலும் உண்ணாமலும் உறங்காமலும் இருப்பான். இதைக் கண்ட ஊரார் இரக்கப்பட்டு அவன் விரும்பிய பெண்ணை அவனுக்கே மணம் முடித்து வைப்பர். இதையே மடல் ஏறல், மடல் ஊர்தல் என்று சொல்வர்[12] என்கிறார்.

மேலும், இம்மடலூர்தல் திறம் பற்றிக் குறிப்பிடும் க. காந்தி,

ஓர் ஆடவன் ஒரு பெண்ணைக் களவுடனோ அல்லது களவின்றியோ அடைய மேற்கொள்ளும் வழிமுறையே மடலேறுதல் எனப்படும். தன் காதலின் திண்மையினைத் தலைவன் தன்னை வருத்திக் கொள்வதன் வாயிலாகப் பிறர்க்கு அறிவித்து ஊராரது அனுதாபத்துக்கு ஆளாகி அவர்களின் வாயிலாகத் தனது காதலை முற்றுவிக்கக் கையாளும் உத்தியாகவே தென்படுகிறது[13] என்று கூறுகிறார்.

இவ்விதம் மடலேறித் தன் காதலியை மணம் முடித்த நிகழ்வு நெய்தற் பாடல்களிலும் இடம்பெற்றுள்ளது. கலித்தொகையில் தலைவன் ஒருவன் தன் காதலி பொருட்டு மடலேறி மணம் முடித்தத் திறத்தைக் அறியலாம்.

தான் விரும்பிய தன் காதலி தனக்குக் கிடைக்காததால் அத்தலைவியின் சான்றோரை வேண்டி மடலூர்ந்து வரும் தலைவன் காண்பவர்களிடம் கூறுகிறான்:

வாழிய சான்றீர்! போரில் வெற்றியைத் தரும் குதிரைமேல் ஏறி நின்று போர் செய்பவன் நான். அவ்வாறு வீரம் உள்ள நான் குதிரையேறி வரவில்லை. மடல் ஏறி வந்திருக்கின்றேன். காரணம் என்ன? என் காதலி, அவள் பெற முடியாதவளாய் இருக்கிறாள். நீரில் தோன்றுகின்ற நிறை மதியின் நிழலை எவ்வாறு எடுத்துக் கொண்டு வர முடியாதோ? அதுபோல நான் விரும்பும் அவளும் அதைப்போன்றிருக்கிறாள்.

உலகத்தைப் பாதுகாக்க முயலும் உள்ளத்தை உடையவன் நான். இப்போது இரந்து நிற்கிறேன். காரணம் அவளே. ஞாயிறு மண்டலத்தை நான்பெற விரும்பினால் அது முடியாது. அதைப்போலவே அவளை அடைவது அரிதாகிறது என்று கூறியதோடு, தான் ஏறிவரும் மடன்மா தவறில்லை என்பதையும் கூறினான்.

மேலும், வழுவிய சொல் நான் எதுவும் கூறவில்லை. கற்றோர் முன் நானும் பேசவல்லேன். ஆனால் ஒன்றும் கல்லாதவன் போல என்னைச் செய்துவிட்டாள். அவள் எத்தகையவள் என்றால் மழைக் காலத்தில் தோன்றும் மின்னல் போல இருக்கிறாள். அவளை எவ்விதம் பெறுவது என்று சான்றோரிடம் மடலேறி இரந்து நின்றான். (கலித். 141)

இவ்வாறாக இரந்து வேண்டிய தலைவனை ஊரார் கண்டனர்; அவளது சுற்றத்தார் அஞ்சினர்; இரக்கம் கொண்டனர்; பாண்டியனுக்கு அஞ்சிப் பகைவர் எவ்வாறு கப்பம் செலுத்தினரோ? அவ்வாறு தலைவனிடம் தலைவியைச் சேர்த்தனர். திருமணமும் செய்து வைத்தனர்.

**பொருள் கொடுத்துத் திருமணம்**

திருமணத்திற்குப் பொருள் கொடுப்பது என்பது இக்காலம் போல் அன்றி அக்காலத்தில் ஆடவரே பொருள் கொடுத்துப் பெண்ணை மணந்துள்ளனர். தாம் விரும்பிய பெண்ணை மணப்பதற்கு முன் பொருள் தேடிச் செல்லும் பொருட்டுப் பிரிவு நிகழும். இதன் பொருட்டே வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிதல் என்னும் துறையே உருவானது எனலாம். அவ்வகையில் பரதவப் பெண்களை மணப்பதற்கும் பொருள் நிலம் கொடுத்து மணந்துள்ளனர் ஆண்மக்கள்.

சான்றாக அகநானூற்றுப் பாடலில், மதுரை மருதனிளநாகனார் எனும் புலவர் பொருள் கொடுத்து மணந்த நிகழ்வை விளக்கமாக எடுத்துக்காட்டியுள்ளார்.

தலைவியின் தந்தை அவளது அணிகலனுக்கு இணையாகப் புதுவருவாயையுடைய நியமம் என்னும் ஊரினைக் கொடுப்பினும் அமையும் எனக் கொள்வார் அல்லர் எனக் கூறுகிறார்.

**அருந்திறற் கடவுள் செல்லூர்க் குணாஅது**

**பெருங்கடல் முழக்கிற் நாகி யாணர்**

**இருப்பிடம் படுத்த வடுவுடைய முகத்தர்**

**கடுங்கண் கோசர் நியமம் ஆயினும்**

**உறுமெனக் கொள்ளுநர் அல்லர்**

**நறுநுதல் அரிவை பாசிழை விலையே** (அகம். 90: 9–14)

இவ்வரிகளால் மணமகளுக்காக அவளது பெற்றோரிடம் அணிகலன்களாகவோ அல்லது பணம், நிலம் போன்ற சொத்தாகவோ வழங்கப்பட்டுத் திருமணம் நிகழ்ந்துள்ளது என்பதை அறியலாம்.

**பணிவிடை செய்து மணம்முடித்தல்**

தலைவன் பெண்ணைப் பெற்ற தந்தையின் மனதில் இடம்பிடித்து நற்பெயர் பெறுவதற்காக அவனிடம் பணிவிடை செய்து தலைவியை மணம் முடித்தலும் உண்டு. அவ்வகையில் நெய்தல் நிலத் தலைவனின் மகளைத் திருமணம் செய்து கொள்ள விரும்பும் தலைவன் மனதில் எண்ணுகிறான்! பெண்ணின் தந்தையிடம் இல்லாத செல்வம் இல்லை. பொன்னும் மணியுமாகிய அணிகலன்கள் நிறையக் கொடுத்தாலும் பெறுதற்கு அரியவள் அத்தலைவி என ஒரு முடிவுக்கு வருகிறான். எனவே, அவளது தந்தைக்குப் பணிவிடை செய்து அவனது மனதில் இடம்பிடித்துத் தலைவியை மணக்க முடிவு செய்கிறான்.

தலைவன் தலைவியின் பொருட்டுத் தான் வாழும் இடத்தைவிட்டுத் தலைவியின் தந்தையோடு தங்கி உப்பு விற்றலில் அவனோடு உதவிசெய்தும், கடலில் தோணியில் சென்றும், அவனோடு மீன் வேட்டம் ஆடி மீனைப் பிடித்தும், அவனுக்கு இரக்கம் வரும்படி வணங்கியும், அவனையே சார்ந்து வாழ்ந்தும் இருந்தான். தலைவியின் தந்தை அறத்தினை நினைத்துப் பார்த்து அவனது மகளை மணம்முடித்துத் தருவான் என்ற வேட்கையில் இருந்தான்.

**........................................ ஆய்தொடிக் குறுமகள்**

**நலஞ்சால் விழுப்பொருள் கலநிறை கொடுப்பினும்**

**பெறலருங் குரைய ளாயின் அறந்தெரிந்து**

**நாமுறை தேஎம் மரூஉம்பெயர்க் தவனொடு**

**இருநீர்ச் சேர்ப்பின் உப்புடன் உழந்தும்**

**பெருநீர்க் குட்டம் புணையொடு புக்கும்**

**படுத்தனம் பணிந்தனம் அடுத்தனம் இருப்பில்**

**தருகுவன் கொல்லோ தானே விரிதிரைக்**

**கன்டிரள் முத்தங் கொண்டு ஞாங்கர்த்**

**தேனிமிர் அகன்கரைப் பகுக்குங்**

**கானலாம் பெருந்துறைப் பரதவன் நமக்கே** (அகம். 280)

இத்திருமணமுறையால் மணமகனின் குணங்களை அறியும் வாய்ப்பும் பெற்றோர்க்குக் கிடைக்கிறது.

**வேற்றுநில ஆடவர்களை மணத்தல்**

நெய்தல் நிலப் பெண்கள் தங்கள் நிலத்தில் விளைந்த உப்பையும் மீனையும் வேற்று நிலங்களுக்கு எடுத்துச் சென்று பண்டமாற்றாக நெல்லைப் பெற்று வருவர். அவ்வாறு பிறநிலங்களுக்குச் செல்லும்போது அந்நில ஆடவர்களால் கவனிக்கப்பட்டனர். ஆடவர்களும் அப்பெண்களைத் திருமணம் செய்து கொள்ள விரும்பியுள்ளனர்.

எடுத்துக்காட்டாக அகநானூற்றுப் பாடலில், நெய்தல் நிலத்தில் விளைந்த உப்பு வணிகர்களால் வண்டிகளில் ஏற்றிக் கொண்டு மற்ற நிலங்களுக்கு எடுத்துச் சென்று விற்கப்படும். உப்பு வணிகர் தம்முடன் தம் குடும்பத்தையும் அழைத்துச் செல்வர். அப்போது உப்பு வணிகரின் இளம்பெண் பக்கத்து ஊருக்குள் உப்பினை எடுத்துச் சென்று விற்பாள். அவளை மருதத் தலைவன் ஒருவன் கண்டு காதல் கொண்டான்:

“உமணரின் இளமகள் சிலவாகிய வளையல்கள் ஒலிக்கும்படி கையை வீசிக்கொண்டே நடந்து, நெல்லுக்கு நிகர் வெண்கல் உப்பு என்று விலை கூறினாள். அவ்வோசையினைக் கேட்ட நாய் குரைக்கவே, அவளது அஞ்சுகின்ற கயல்போன்ற கண்கள் மருண்டன. இதனைக் கண்ட தலைவன் உள்ளம் பறிகொடுத்தான். எனக்கு இக்காதல் பெருமூச்சு விடும் பெரியதொரு நோயாகி விட்டது என்றும் அவளுக்காக ஏங்கினான்”. (அகம். 140: 5–15)

நெய்தல் நிலத்தை ஒட்டிய மருதநிலத்து ஆடவர்கள் பரதவப் பெண்களுடன் களவில் ஈடுபட்டு, அவர்களுடன் திருமணத்தின் மூலம் இணைந்திருக்க வேண்டும். நிலம் விட்டு நிலம் வாழும் மக்களிடையே நிகழ்ந்த திருமணத்தை இப்பாடல் மூலம் அறியலாம்.

**பரத்தமையொழுக்கம்**

வாழ்க்கையை அகம் புறம் என இரு பிரிவாகப் பிரித்த அறிஞர்கள் அதனையே களவு, கற்பு என்ற இரு பகுதிகளாகப் பிரித்துள்ளனர். களவுக்காலத்தில் அல்லது கற்புகால தொடக்கத்தில் தலைவன் தலைவியிடம் காட்டும் அன்பு, பின்பு எவ்வாறு மாறி விடுகிறது என்பதை இலக்கியங்கள் மூலம் அறியமுடிகிறது[14].

புலவர்கள் கற்பின் பெருமையை விண்ணுக்கு உயர்த்திப் பாடிய போதும் நடைமுறை வாழ்க்கையில் பரத்தமை என்ற அவலம் நிறைந்து இருப்பதைச் சங்க இலக்கியங்கள் பெரிதும் சுட்டுகின்றன[15].

**பாணன் கூத்தன் விறலி பரத்தை**
**யாணஞ் சான்ற அறிவர் கண்டோர்**[16]

என்ற தொல்காப்பிய நூற்பா வழிப் பரத்தையர் சமுதாயத்தில் பெற்றிருந்த இடத்தை அறிய முடிகிறது.

இலக்கியங்கள் வழியாகப் பரத்தையர் என்பவர்கள் பொதுமகளிர்; இவர்கள் தம்மிடம் இன்பம் துய்க்க வரும் ஆடவரிடமிருந்து செல்வத்தைப் பெற்று வாழ்ந்து வந்தனர் என்பதையும் அறியமுடிகிறது.

சங்க காலத்தில் பரத்தமையொழுக்கம் தவறான பழக்கமாகக் குற்றமாகக் கருதப்படவில்லை. பரத்தையரைக் காமக்கிழத்தியர், விலைமகளிர், சேரிப்பரத்தை, இல்பரத்தை எனப் பல பெயர்களில் சங்கப் பாடல்கள் எடுத்துரைக்கின்றன. தேனை எடுக்கப் பூவிற்குப் பூ தாவும் வண்டைப் போல ஆண்கள் தம் மனைவியைத் துறந்து பரத்தையரை நாடிச் சென்றனர். இடையீடு இல்லா இன்பம் துய்க்க ஆண்கள் விரும்பினர். புதிது புதிதாக இன்ப நுகர்வைப் பெற விழைந்தனர். அதனால் பரத்தையரை நாடிச் சென்றனர். பரத்தையரிடம் ஆண்கள் கொண்டிருந்த உறவைப் பற்றி நெய்தல் பாடல்கள் பல விளக்குகின்றன.

சான்றாக ஐங்குறுநூற்றுப் பாடலில், தலைவன் தன் மனைவியைத் துறந்து பரத்தையரை நாடிச்சென்றான். சிறிது காலத்திற்குப் பிறகு திரும்பி வந்த அவன், தன் மனைவியுடன் இணைவதற்குத் தோழியின் உதவியை நாடுகிறான். அந்நிலையில்,

பரதவனை பிரிந்து அவன் மனைவி உற்ற துன்பத்தை உடனிருந்து அறிந்த தோழி கோபத்துடன் கீழ்வருமாறு கூறுகிறாள்.

தலைவா! தலைவி உனக்கு அரியவளாக இருந்த களவுக் காலத்தில் அவள் தோள்களும் அவளும் இனியவையாக இருந்தன. அதே தோள்கள் அவள் எளியளான கற்புக் காலத்தில் வெறுக்கத்தக்கவாயின. எவ்வாறு உன் பேரன்பு மாறுபட்டுள்ளது என்று கடிந்து கூறுகிறாள்.

**இனிய செய்த; நின்று, பின்**

**முனிவு செய்த இவள்தட மென்தோளே** (ஐங். 143: 2–3)

இவ்வரிகளால் தலைவனின் அன்பைப் பற்றிக் குறிப்பிடும் தோழி, மனைவியின் மீது அக்கணவனின் அன்பு, உடலைப் பற்றியது என்றும், உயிர்கலந்து ஒன்றிய தூய அன்பன்று என்றும் குறிப்பிடுகிறாள்.

மற்றொரு பாடலில், தலைவன் விளையாட்டுப் பருவம் நீங்காத பரத்தையிடம் இன்பம் துய்க்க விரும்பி தன் மனைவியைத் துறந்தான். அவனின் செயலால் கோபமுற்ற தோழி வெகுண்டு தலைவனிடம் குறிப்பிடுகையில்,

தலைவா! உன்னால் விரும்பப்பட்ட பரத்தை கடற்கரையில் அலைகள் எறிந்து அழிக்க இயலாத இடத்தில் பாவை இயற்றவும் அறியாதவளாய், பாவையைக் கடல் அழிக்க, கடலின் பெருமை உணராதவள் நுண்மணலால் அதனைத் தூர்க்க முயலும் அளவுக்கு பேதமையுடையவளாக உள்ளாள். இத்தகைய இளைய பருவத்தாள்பால் நீ பெறும் காம நுகர்ச்சிதான் என்னே! உன் மனைவியை விடச் சிறந்தவளா! அவள் என்று இகழ்கிறாள்.

**கண்டிகும் அல்லமோ, கொண்க நின் கேளே?**

**வண்டற் பாவை வௌவலின்**

**நுண்பொடி அளைஇக் கடல் தூர்ப்போளே!** (ஐங். 124: 1–3)

தலைவன் தன் மனைவியை விட இளமை பொருந்திய பெண்ணிடம் நுகர்ச்சி பெறுவதற்காகத் தலைவியைப் பிரிந்து சென்றுள்ளான். இவ்வாறு காமநுகர்வு பெறும் பரத்தையர் இளையவள் மூத்தவள் என்ற பாகுபாடு இன்றியும் சென்றுள்ளனர். இக்கூற்றை மிகைப்படுத்தும் நற்றிணை பாடல் கீழ்வருமாறு:

பரத்தையரிடமிருந்து பிரிந்து தலைவன் மீண்டும் தன் தலைவியிடம் வருகிறான். அவனைக் கண்ட தலைவி சினந்து எழ அவளின் சினம் தீர்க்க இயலாது நிற்கிறான். அங்கு அவனுடைய முதுமையுற்ற பரத்தை தலைவியைக் கோபமுறாதவாறு அறிவுறுத்துகையில்,

"தலைவனே! தலைவி மீது கொண்ட நட்பில் பிழை ஏதும் நேர்ந்து விடாதவாறு அறிந்து நடந்து கொள். அவ்வாறு நீ அறியாவிடில் உன்னை விரும்பும் மகளிர் என்னைப் போலவே தளர்ந்துபோன தோள்களையும், அழுத கண்களையும் உடையவராய் மலர்ந்த உடனேயே கருகிப்போன பூக்களைப் போல ஆகிவிடுவர் என்கிறாள்.

**.................................................. துறைவ! நன்றும்**

**விழுமிதின் கொண்ட கேண்மை நொவ்விதின்**

**தவறும் நற்கு அறியாய் ஆயின், எம்போல்,**

**ஞெகிழ் தோள், கலுழ்ந்த கண்ணீர்**

**மலர் தீய்ந்தனையர், நின் நயந்தோரே** (நற். 315: 8–12)

முதுபரத்தை கூற்றின் வழி, தன்னைவிட முதுமையான பெண்களையும் ஆண்கள் புணர்ந்துள்ளனர் என்பதும், பல பெண்களிடம் நுகர்ச்சி பெற்றுள்ளனர் என்பதும் அறியப்படுகிறது. மேலும், மலர்ந்த உடன் கருகிப் போகும் மலர் போல என்று கூறுவதால், அப்போதுதான் அவர்களுக்குத் திருமணம் முடிந்து இருக்கவேண்டும்; திருமணமான சின்னாட்களிலேயே கணவன் அவன் மனைவியைத் துறந்து பரத்தையிடம் சென்றிருக்க வேண்டும் எனத் தெரிகிறது. பரத்தையும் தம்மை நாடிவந்த ஆடவனின் வாழ்வு தம்மைப்போல தரிசாகி விடக்கூடாது என்பதால், மேற்கூறிய அறிவுரைகளை அத்தலைவனுக்குக் கூறியுள்ளாள் எனலாம்.

விளக்கினது ஒளியும் பொதுமகளிரது அன்பும் வேறுவகைப் பட்டன அல்ல,

**விளக்கொளியும் வேசையர் நட்பும் இரண்டும்**

**துளக்கற நாடின்வே றல்ல;– விளக்கொளியும்**

**நெய்யற்ற கண்ணே அறுமே, அவரன்பும்**

**கையற்ற கண்ணே அறும்.**[17]

என்ற நாலடியார் பாடல் வரிகளின்படி இல்லாமல், அவனிடம் நலம் துய்க்கப் பெறதா காலத்திலும் அவனது வாழ்வும் அவனை நம்பிய பெண்ணின் வாழ்வும் சிறப்பாக இருக்கவேண்டும் என அக்கறை கொண்டிருந்தாள் பரத்தை என்பது புலப்படுகிறது.

பரத்தையருக்கும் ஆடவருக்குமான உறவுநிலை பற்றி மேற்கண்ட பாடல்வரிகள் உணர்த்தின. ஆடவனை நம்பிய மனைவிமார்களின் நிலை பற்றியும் நெய்தல் பாடல் வரிகள் உணர்த்துகின்றன. பரத்தை காரணமாகப் பிரிந்து வாழ்ந்த மனைவி பாணனிடம் தன் நிலைபற்றி விவரிக்கையில்,

பாணனே! என் அவல நிலையைக் காண்பாயாக! என் கணவன் என்னைப் பிரிந்த அப்பொழுதே, செறிவாக இருந்த வளையல்கள் கழன்று வீழ்ந்தன. இதனை அவன்பால் உரைத்து என்பால் மீண்டு வரச் செய்வது உன் கடமை என வேண்டுகிறாள்.

**காண்மதி பாண! நீ உரைத்தற்கு உரியை**

**துறை கெழு கொண்கன் பிரிந்தென**

**இறைகேழ் எல் வளை நீங்கிய நிலையே** (ஐங். 140: 1–3)

கணவன் தவறான ஒழுக்கத்தில் நடந்தாலும் அவனுடனேயே வாழவேண்டும் என்று விரும்பிய கற்புடைய பரதவ மகளிர், தவறான ஒழுக்கமுடைய தன் கணவனே முதலில் தன்னுடன் வந்து சேரவேண்டும் என்று காத்திராமல் விட்டுக்கொடுத்துத் தானே முன்வந்து கணவனுக்குத் தூது அனுப்பியிருக்கின்றனர். இதனால் பரதவக் குடும்பங்களில் மனைவியிடம் நல்ல புரிதல் மற்றும் விட்டுக்கொடுத்து நடக்கும் பண்பும் இருந்துள்ளது என்பதை அறியலாம்.

மேலும், தம்மைத் துறந்து பரத்தையர் இல்லம் நாடிச் சென்ற கணவன் மீது பரதவப் பெண்கள் பேரன்பு கொண்டு இருந்துள்ளனர்.

சான்றாக அம்மூவனார் பாடலில், பரத்தையர் இல்லத்திலிருந்து தன் கணவன் திரும்பி வந்தால் அவன் மீது சினம் கொண்டு ஊடுவேன் என்றும், இல்லத்துட் புகாது தடுப்பேன் என்றும் உறுதியுடன் இருந்தாள் அப்பரதவனின் மனைவி. அத்தகைய சினம் கொண்டவள், இல்லத்திற்கு வந்த தன் கணவனைக் கண்ட மாத்திரத்தில், தன் மனவுறுதி தளரப் பெற்று உலகியலை நினைந்து வரவேற்றாள்.

**................................................................ யான் இன்று,**

**அறனிலாளற் கண்ட பொழுதில்**

**சினவுவென் தகைக்குவென் சென்றனென்;**

**பின் நினைந்து இரங்கிப் பெயர் தந்தேனே** (ஐங். 118: 1–4)

இவ்வரிகளில் பின் நினைந்து என்றது, உலகியலை எண்ணியபின் என்ற பொருள்பட்டது. அஃதாவது ஆடவர் பரத்தையருடன் உறவு கொள்வது உலகியலில் உள்ளது ஆதலின் அதற்கு தான் வருந்தி ஊடி கணவனைப் பிரிதல் நன்றன்று என எண்ணி அவனுடன் இணக்கமானாள் எனலாம்.

மற்றொரு பாடலில், பரத்தையர் வீட்டில் நீண்ட நாள் தங்கியிருந்த கணவன் தம் இல்லம் வந்து நுழைந்தபோது, மனைவியானவள் அவனைக் கண்ட மகிழ்ச்சியில் கண்களை அகல விழித்துத் தன் அன்பை வெளிப்படுத்தியுள்ளாள்.

(ஐங். 188: 3–4)

இவ்வரிகளால் கணவன் பரத்தை காரணமாகப் பலநாள் பிரிந்து சென்று தம் இல்லம் திரும்பி வந்த நிலையிலும், அவனை ஏற்றுக் கொண்டவர்களாக நெய்தல் நில மனைவிமார் இருந்துள்ளனர். மற்றொரு நிலையில் அப்பெண்களின் கணவன்மார் பரத்தையரோடு உறவுடையாராயினும், தன் மனைவியையே தன் உண்மையான காதலியாகக் கருதியுள்ளனர். அதனால்தான் பரத்தையர் இல்லம் சென்ற அக்கணவன் மீண்டும் தன் மனைவியை நாடி வந்துள்ளான்.

### மகளிர் தொழில்கள்

அன்பு அமைதி ஆற்றல் ஆகிய பண்புகளும், இயற்கை அழகும் மென்மையும் உடையவர்கள் பெண்கள். மனை வாழ்க்கை நடத்துவதற்கு ஏற்ற அறிவை மகளிர் இயல்பாகவே பெற்று இருந்தனர்.

கணவனது வாழ்க்கைத் துணையாய் நின்று அன்பினால் ஒன்றி வாழும் மகளிர் வாழ்க்கைத் துணை எனப் பாராட்டப்பெற்றனர். இல்லத்தில் கணவனையும், குழந்தைகளையும் பேணிக்காத்தலும், விருந்தினரைப் போற்றலும் நற்குணச் செய்கைகளாவன. மனைக்கு விளக்கம் மடவார் என மகளிர் சிறப்பிக்கப் பெற்றனர். வினையே ஆடவர்க்கு உயிரென வினைமேற்கொள்ளல் ஆடவர் கடமையாகக் கூறப்பெற்றாலும் மகளிரும் தாம் வாழ்ந்த நில இயல்பிற்கு ஏற்ற வகையில் தொழில் செய்வதில் ஈடுபட்டிருந்தனர். தம் வாழ்க்கைக்கும் தம் குடும்பத்திற்கும் வேண்டிய பொருளீட்டுவதில் ஆர்வமும், முயற்சியும், உழைப்பும் உடையவராய்ப் பொறுப்புணர்ச்சியுடன் வாழ்ந்துள்ளனர்[18].

பெண்கள் இல்லப் பணிகள் என்று இல்லாமல் தாம் மேற்கொண்ட அனைத்து பணிகளிலும் பொறுப்புடனும் விருப்புடனும் ஈடுபட்டுள்ளனர்.

சமுதாயத்தின் ஆக்கப் பணிகளில் எல்லாம் பெண்ணே முன்னின்றிருக்கிறாள். பெண் என்பவள் உழைப்பிற்கு அஞ்சாதவள். உழைப்பு என்னும் சொல்லுக்கு வடிவம் தாங்கி நிற்பவளே பெண் எனினும் பொருந்தும். உலகின் எல்லா மூலைகளிலும் தொன்றுதொட்ட காலம் முதல் பெண் மிகச் சிறந்த உழைப்பாளியாகவே திகழ்ந்திருக்கிறாள்[19].

அவர்களின் உழைப்பு குடும்பத்திற்கு சிறிது உதவும் வகையிலும், ஆண்களுக்கு உதவும் வகையிலும் சிறுசிறு தொழில்களில் ஈடுபட்டிருந்தனர்.

சங்க காலப் பெண்கள் பல்வேறு தொழில்களில் ஈடுபட்டு வந்துள்ளனர். அவர்கள் தமது தொழில்களைப் பெரிதும் தாங்கள் வாழும் நிலத்தைச் சார்ந்த தங்களது இல்லத்து உறுப்பினர்களுடன் இணைந்து செய்து வந்துள்ளனர். இது தவிர தாமே தனியாக உழைத்துப் பொருளீட்டிய பெண்களும் உண்டு. சங்கப் பெண்கள் இருவகைகளில் தங்கள் உழைப்பைச் சிந்தியுள்ளனர். தாங்கள் வாழும் நிலங்களைச் சார்ந்த தொழில்களில் ஈடுபட்ட பெண்கள் தங்களது குடும்ப வருமானத்தைப் பெருக்க உறுதுணை புரிந்துள்ளனர். இது தவிர வீட்டுத் தேவைக்காக இல்லங்களில் தமது உழைப்பைச் சிந்தியுள்ளனர். ஆக அப்பெண்கள் வருவாய்பெற்ற வருவாயற்ற ஆகிய இருவகைகளிலும் உழைத்துள்ளனர் என்பது தெரிகிறது. இவற்றுள் குடும்ப வருமானத்திற்கு உதவிய உழைப்பை வருவாய் பெற்ற உழைப்பு எனலாம்[20].

இவ்வாறு பெண்கள் தங்கள் உழைப்பைப் பல வகைகளில் குடும்பத்திற்கும் கணவனுக்கும் உதவியாகச் செய்துள்ளனர். கடல் சார்ந்த நிலப்பகுதியான நெய்தல் நிலத்தில் ஆடவர் கடலில் கலம் செலுத்தி மீன் பிடித்தலைத் தம் தொழிலாகக் கொண்டவர்கள். ஆண்கள் கடலிற் சென்று ஏராளமான மீன்களைப் பிடித்து வந்து பாக்கத்தே குவிப்பர். பரதவர் பிடித்துவரும் மீன்களை இல்லத் தேவைகள் மற்றும் பிறருக்குப் பகுத்துக் கொடுத்தல் போக எஞ்சியவற்றைப் பரதவப் பெண்டிர் பிற நிலங்களுக்கு எடுத்துச் சென்று விற்றுவிட்டு அதற்கு ஈடாகத் தமக்குத் தேவையான அந்நிலப் பொருள்களைப் பெற்று வருவர்.

சான்றாக அகநானூற்றுப் பாடலில், பரதவரின் இளையமகள் தன் தமையன்மார்கள் பிடித்துக் கொண்டு வந்த மீனைத் திருவிழாக்கள் நடைபெறும் தெருக்களில் விற்று வந்துள்ளாள்.

**ஓங்குதிரைப் பரப்பின் வாங்குவிசைக் கொளீஇ**

**திமிலோன் தந்த கடுங்கண் வயமீன்**

**தழை அணி அல்குல் செல்வத் தங்கையர்**

**விழவுஅயர் மறுகின் விலை எனப் பகரும்** (அகம். 320: 1–4)

இவ்வரிகளால், இளைய மகளிர் மீனை விற்கும் தொழிலில் ஈடுபட்டுத் தன் தந்தைக்கு வருமானம் ஈட்டித் தந்து உதவியுள்ளனர் என்பதை அறியலாம்.

மேலும், பரதவ மகளிர் மீன் விற்றதோடு, தங்கள் நிலத்தில் விளைந்த உப்பினை விற்ற செய்தியும் நெய்தற் பாடல்கள் பலவற்றில் குறிப்பிடப்பட்டுள்ளது. நெய்தல் நிலப் பெண்களின் முக்கிய தொழிலாக உப்பு விற்றல் விளக்கியது.

பரதவனின் இளைய மகள் உப்பு விற்ற பணியைப் பற்றி விளக்கும் மேலும் ஓர் அகநானூற்றுப் பாடல் வரிகள் பின்வருமாறு விளக்குகிறது.

தன் கையில் அணிந்துள்ள வளையல்கள் ஒலிக்கத் தன் கைகளை வீசிக் கொண்டு வெண்ணிறக் கல் உப்பு நெல்லினுக்கு ஒத்த அளவினதே எனச் சேரியின் கண் பண்டமாற்றாக விலை கூறிக் கொண்டு சென்றாள் பரதவனின் மகள்.

**கதழ் கோல் உமணர் காதல் மடமகள்**

**சில்கோல் எல்வளை தெளிர்ப்ப வீசி**

**நெல்லின் நேரே வெண்கல் உப்பு எனச்**

**சேரி விலைமாறு கூறலின் .........................** (அகம். 140: 5–8)

இவ்வரிகளால் இளம் பெண்கள் உப்பினை விற்று நெல்லைப் பெற்று வருமளவு பக்குவம் மற்றும் பொறுப்புடன் இருந்துள்ளனர் என்பதை உணரலாம். இம்மகளிரின் தொழில்திறம் விளக்கும் இன்னும் ஒரு அகநானூற்றுப் பாடல் வரிகள் கீழ்காணுமாறு:

பரதவனின் இளமை பொருந்திய மகள் வளைந்த சுருண்ட கூந்தல் அலைபாய, அழகொழுகும் அல்குல் தடத்து அணிந்த தழையாடை அசைய, அசைந்து நடந்து ஊர் மக்கள்! நெல்லும் உப்பும் ஒரே விலையாகும். வாங்கிக் கொள்வீராக என்று சேரிதொறும் கூறி விற்றுள்ளாள்.

**வணர்சுரி முச்சி முழுதும் மன்புரள,**

**ஐதுஅகல் அல்குல் கவின்பெறப் புனைந்த**

**பல்குழைத் தொடலை ஒல்குவயின் ஒல்கி,**

**நெல்லும் உப்பும் நேரே; ஊரீர்!**

**கொள்ளீரோ எனச் சேரிதொறும் நுவலும்** (அகம். 390: 5–9)

இத்தகைய உப்பு விற்கும் பெண்கள் தாங்கள் எடுத்துச் செல்லும் உப்பினை, உப்பு விளைகின்ற கழனிக்குச் சென்று பெற்று வந்துள்ளனர்.

சான்றாகக் குறுந்தொகைப் பாடலில், பரதவரின் இளைய மகள் வீட்டில் இருக்க, தாய் தான் விற்கப் போகும் உப்பை வாங்க உப்பளத்திற்குச் சென்றுள்ளாள். அவ்வாறு வாங்கிய உப்பை விற்று நெல் வாங்கி வந்துள்ளாள்.

**...................................................... யாயும்**

**உப்பை மாறி வெண்ணெல் தரீஇய**

**உப்பு விளை கழனிச் சென்றனள்;** (குறுந். 269: 4–6)

மேற்சுட்டிய வரிகளால் பெண்கள் எடுத்துச் சென்ற எடையுள்ள உப்பினை தங்கள் தலையில் சுமந்து சென்றிருக்கவேண்டும். உப்பைக் கலத்தில் எடுத்துச் சென்றிருக்க வேண்டும் அல்லது மற்ற பண்டங்களில் எடுத்துச் சென்றிருக்க வேண்டும். மகளிர் தாங்கள் எடுத்துச் சென்ற உப்பினை விற்று, மாற்றாக வாங்கி வந்த வெண்ணெல்லைப் பயன்படுத்தி குடும்ப உறுப்பினர்கள் அனைவருக்கும் சமைத்து உணவளித்துள்ளனர்.

எடுத்துக்காட்டாக அகநானூற்றுப் பாடலில், மகளிர் உப்பை விற்று வாங்கி வந்த நெல்லாலே ஆக்கப்பட்ட முறுவல் போலும் வெண்மையான சோற்றை குடும்பத்து உறுப்பினர்கள் உண்டுள்ளனர்.

**உப்பு நொடை நெல்லின் மூரல் வெண்சோறு** (அகம். 60: 4)

பரதவப் பெண்களின் உழைப்பு இவ்வாறு இருக்க, உமணர் மகளிர் உழைப்பு வியக்கத்தக்கதாயுள்ளது. பெரும்பாணாற்றுப்படையில் நெடுந்தொலைவு செல்லும் உப்பு வணிகருடன் உமண மகளிர் புறத்தே தம் மகளினைக் கட்டிக் கொண்டு உப்பு வண்டியை ஓட்டிச் சென்று ஆண்களுக்கு உறுதுணையாக இருந்துள்ளனர்.

**மகவுடை மகடூஉப் பகடுபுறம் துரப்ப**

**------------------------------------------------------------**

**----------------------------------------------------------**

**முடலை யாக்கை, முழுவலி மாக்கள்**

**சிறுதுளைக் கொடுநுகம் நெறிபட நிரைத்த**

**பெருங்கயிற்று ஒழுகை மருங்கில் காப்ப,**

**-------------------------------------------------------------------**

**பல் எருத்து உமணர் பதிபோகு நெடுநெறி** (பெரும். 58–65)

இவ்வரிகளால் உமணருக்கு இன்றியமையாத தொழிலாகிய உப்பு வாணிகத்தில் பெண்கள் பக்கபலமாக இருந்துள்ளனர் என்பதை அறிய முடிகிறது.

**இடர்பாடுகள்**

சங்க கால மனித வாழ்வே இடர்பாடுகள் மிகுந்ததாக இருந்துள்ளது. தனது அடிப்படைத் தேவைகளை நிறைவேற்றிக் கொள்ள பலவித இன்னல்களுக்கு ஆளான மனிதன் இன்னல் பட்டுத் தேவைகளை நிறைவேற்றிக் கொண்டான். பழந்தமிழ்ப் பாடல்கள் வழி ஐந்நிலங்களில் வாழ்ந்த மக்கள் இயற்கையோடு இயைந்தும் போராடியும் தங்கள் தேவைகளைப் பூர்த்திசெய்துள்ளனர்என்பதை அறிய முடிகிறது. அவ்வகையில் கடலை நம்பி வாழ்க்கை நடத்திய மீனவர் வாழ்வு பலவித துன்பங்கள் நிறைந்ததாக இருந்தது. இயற்கை சார்ந்தும், தொழில் சார்ந்தும் தினம் தினம் போராடியுள்ளனர். மற்ற நிலங்களை விட நெய்தல் நிலத்தில் வாழ்ந்த பரதவ மக்கள் பல இடையூறுகளுக்கு ஆட்பட்டுள்ளனர். கடற்கரையை ஒட்டிக் குடிசையமைத்து வாழ்ந்த

பரதவக் குடும்ப வாழ்வு, கடல் பொங்கி எழுந்தால் அழியக் கூடிய நிலையற்ற வாழ்வை உடையது.

மேலும், அக்குடும்பங்களில் வாழ்ந்த ஆடவர் கொல்லும் தொழிலையுடைய சுறாமீன்கள் வாழ்ந்த கடலில் வேட்டை மேற்கொள்வர். வேட்டை மேற்சென்ற கணவனோ தந்தையோ? உயிருடன் திரும்புவானா? மாட்டானா? என்ற ஏக்கம் பொருந்திய வாழ்வுடையவர்களாக வாழ்ந்துள்ளனர் பரதவப் பெண்கள்.

இப்பெண்கள் தொழில் சார்ந்தும் பல்வேறு இடற்பாடுகளைச் சந்தித்திருக்கின்றனர். மகளிர் தாங்கள் விற்கச் செல்லும் பொருளை நீண்ட தூரம் சுமந்து செல்லவேண்டும். அவ்வாறு சுமந்து செல்லும் போது மிகவும் களைப்படைவர். விற்கப்போகும் இடங்களில் இளம்பெண்களுக்கு அந்நில ஆடவர்களின் கேலிப்பேச்சுக்களையும், உயிரினங்களால் ஏற்படும் அச்சத்தையும் சகித்துக் கொள்ள வேண்டிய மனத்திடம் வேண்டும். சான்றாக அகநானூற்றுப் பாடலில், உப்பு விற்கச் செல்லும் இளமகளின் நிலை பின்வருமாறு விவரிக்கப்படுகிறது.

உப்பை விற்றுக் கொண்டு செல்லும் இளைய மகளின் ஒலி வேற்றுமை அறியும் மனையில் உள்ள நாய்,அவளது வேற்றுக் குரலை அறிந்து குரைத்தது. அதனால் பயந்த மீனவர் மகள் கண்கள் இரண்டும் தம்முள் போரிட்டாற் போன்று அஞ்சி மருண்டாள்.

**நெல்லின் நேரே வெண்கல் உப்பு எனச்**

**சேரி விலைமாறு கூறலின், மனைய**

**விளிஅறி ஞமலி குரைப்ப, வெரீஇய**

**மதர்கயல் மலைப்பின் அன்ன கண் எமக்கு** (அகம். 140: 7–10)

இவ்வரிகள்மீனவ இளமகள் உப்பைக் கொண்டு சென்ற இடத்தில் நாயின் ஒலியால் பயந்து மருண்டு அஞ்சிய நிலையை எடுத்தியம்புகின்றன.

மற்றொரு நிலையில், பரதவ இளம் பெண்கள் பிற நிலத்து ஆடவர்களால் துன்புற்றுள்ளனர். உமணர் கூட்டத்தோடு நெடுந்தொலைவு ஊர்ஊராகப் பயணிக்கும் உமணப் பெண்கள், அவ்வுப்பை எடுத்துக் கொண்டு தெருத்தெருவாகச் சென்று விற்கும் நிலையினர்.

அவ்வாறாக உமணர் மகள் ஒருத்தி உப்பை எடுத்துச் சென்று தெருக்களில் உப்புக்கு ஈடாக நெல் கொடுத்து வாங்குவீர் உளரோ எனக் கூவி விற்கிறாள். அவளின் அருகில் வந்த ஆடவன் வியர்வையுடன் கூடிய அவளது உப்புப் படிந்த மேனியை உற்று நோக்கிவிட்டுக் கேட்கிறான். நீ சுமந்து வரும் உப்பின் விலை இருக்கட்டும். உன் உடம்பில் ஒட்டியிருக்கும் உப்பின் விலையைக் கூறு வாங்குகிறேன் என்று கேலி பேசுகிறான்.

**நெல்லும் உப்பும் நேரே, ஊரீர்!**

**கொள்ளீரோ எனச் சேரிதொறும் நுவலும்**

**அவ்வாங்கு உந்தி, அமைந்தோ ளாய்! நின்**

**மெய் வாழ் உப்பின் விலை எய்யாம் என** (அகம். 290: 3–11)

இக்காலங்களில் ஆண்கள் பெண்களைக் கேலி பேசுவது(ஈவ் டீசிங்) போல, பழந்தமிழ் நெய்தல் நிலப் பெண்கள் தொழில் சார்ந்து மற்ற நிலத்து ஆடவர்களின் நகைப்புக்கும் ஏசலுக்கும் ஆளாக வேண்டிய நிலை உமணப் பெண்களுக்கு இருந்துள்ளது.

இன்னுமொரு நிலையில், உமணப் பெண் உறுதியான வண்டியை ஓட்டிக் கொண்டு தம் குடும்பத்துடன் சென்றுள்ளாள்.

(பெரும். 58–59)

இப்பாடலில் தன் குழந்தையை உடலில் கட்டிக் கொண்டு வண்டியை ஓட்டும் உமண மகளின் நிலை காட்சியாக விளக்கப்பட்டுள்ளது. உமணர்கள் செல்லக்கூடிய வழிகள் மிகுந்த கரடு முரடானவை, அவ்வழிகளில் வண்டியில் பூட்டிய காளையைச் சீராக ஓட்டுவது கடினமான ஒன்று. மேலும், கடுமையான வெயிலில் மலைகளின் வழியாகச் செல்லுவதால் மென்மையான பெண்களின் உடலமைப்பு பலவிதத் துன்பங்களுக்கு ஆளாகிறது. அதுபோல செல்லும் ஊர்களில் தற்காலிக தங்குமிடங்கள் அமைத்துக்கொண்டு சூழலுக்கு ஏற்றவாறு வாழக்கூடிய நெருக்கடியான நிலை ஆண்களைவிடப் பெண்களுக்கு அதிகப்படியான இன்னல் நிறைந்தது. எடுத்துக்காட்டாக நற்றிணைப் பாடல்,

உமணர்களோடு நிலையில்லா வாழ்க்கை வாழ்ந்த உமணப்பெண்கள், செல்லும் ஊர்களுக்கு ஏற்றவாறு தங்குமிடங்களை மாற்றக்கூடிய சூழலும், பழகிப் பிரியும் தற்காலிக உறவுகளுடனும் வாழ்ந்துள்ளனர் என விளக்குகிறது.

**உவர் விளை உப்பின் குன்றுபோல் குப்பை**

**மலை உய்த்துப் பகரும், நிலையா வாழ்க்கை**

**கணம் கொள் உமணர் உயங்குவயின் ஒழித்த** (நற். 138: 1–3)

உடலால் பலவித இன்னல்களை அனுபவித்த பரதவப் பெண்டிர், மனத்தாலும் பல இடற்பாடுகளுக்கு ஆட்பட்டுள்ளனர். எவ்வாறெனில், மீன்பிடித் தொழிலை மேற்கொண்ட தந்தையைச் சுற்றத்தாரினை விரிந்த கடலுக்கு அனுப்பி விட்டு அவர்கள் உறும் துன்பத்தை நினைந்து வருந்தியுள்ளனர்.

எடுத்துக்காட்டாக நற்றிணைப் பாடலில், பரதவனின் மகள் தம் சுற்றத்தினர் வேட்டைக்குச் சென்ற நிலையைக் குறிப்பிடும் போது அவளின் அச்ச உணர்வு வெளிப்படுத்தப்படுகிறது.

அழகிய வலை கிழியும்படியாக அறுத்துக்கொண்டு தப்புவதும், கொல்லும் இயல்புடையதுமான சுறாமீனைக் கருதி எம் சுற்றத்தார் வேட்டைக்குச் சென்றனர் என்று சுறாமீனின் கொல்லும் இயல்பினைக் கூறி, அச்சுறா மீனினம் நிறைந்த கடலில் சுற்றத்தார் வேட்டை மேற்சென்றுள்ளனர். அவர்கள் நிலை என்னாகுமோ? என வருந்தி ஏக்கத்துடன் இருந்துள்ளாள்.

**கொடு முடி அவ்வலை பரியப் போகிய**

**கோட் சுறாக் குறித்த முன்பொடு**

**வேட்டம் வாயாது எமர் வாரலரே** (நற். 215: 10–12)

மற்றொரு பாடலில் தலைவி கூறுகையில், தெளிந்த கடலிலே வலிமையான கைகளை உடைய நெய்தல் நிலமக்கள் மீனைப்பிடிப்பதற்காக வலைவீசிப் பிடிப்பர். அவ்வலையினை அச்சம் தரும் வலிமையுடைய தன் செதில்களால் பிற உயிர்களைக் கொல்லவல்ல சுறாமீன் அறுபடுமாறு கிழித்துச் செல்லும் என்கிறாள்.

**வன் கைப் பரதவர் இட்ட செங்கோல்**

**கொடு முடி அவ்வலை பரியப் போக்கி**

**கடு முரண் எறி சுறா வழங்கும்** (நற். 303: 9–11)

மேற்கண்ட பாடல் வரிகளின் கூற்றுக்களால், கொல்லும் இயல்புடைய சுறாமீன் வசிக்கும் கடலிற் வேட்டை மேற்கொண்ட தன் சுற்றத்தாருக்கு என்ன நிலையும் ஏற்படலாம், இறக்கவும் நேரிடலாம் என்ற அப்பெண்களின் தவிப்பினை எடுத்தியம்பின.

இக்காலங்களிலும் மீனவக் குடும்பங்களில், கணவனை மீன் வேட்டைக்கு அனுப்பிவிட்டு வரும் வரை மனதுள் போராடும் பரதவப் பெண்களின் தவிப்பு நிலை தொடர்ந்து கொண்டுதான் உள்ளது.

இவ்வாறு சுற்றத்தார் கடலில் மீன் பிடிக்கச் சென்ற வேளையில், தவிப்புடன் இருக்கும் மீனவப் பெண்கள் தங்கள் ஆறுதலுக்காக வழிப்போக்கர்களை விருந்தோம்பும் பொருட்டு தம் இல்லங்களில் தங்க இடம் கொடுத்துள்ளனர். அவ்வாறு விருந்தோம்பியவர்களில் தலைவனும் ஒருவன் எனலாம்.

**கரை சேர்பு இருந்த கல்லென் பாக்கத்து**
**இன்று நீ இவணை ஆகி, எம்மொடு**
**தங்கின் எவனோதெய்ய? செங்கோல்**
**கொடுமுடி அவ்வலை பரியப் போகிய**
**கோட் சுறாக் குறித்த முன்பொடு**
**வேட்டம் வாயாது எமர் வாரலரே** (நற். 215: 7–12)

இப்பாடலில் தலைவி உறங்காது வருந்திருப்பது காதலின் பொருட்டு என்றாலும், தலைவனை விருந்தோம்பும் பொருட்டுத் தங்கிச் செல்ல வற்புறுத்துவது மற்றொரு கோணத்தில் பார்த்தால், கடலில் மீன்வேட்டைக்குச் சென்ற சுற்றத்தாரின் நிலை என்னாகுமோ? என்று வருந்தி இருக்கவேண்டும். துன்புறும் நேரத்தில் நம் மீது அன்புடையவர் அருகில் இருந்தால் மிகவும் ஆறுதலாக இருக்கும். எனவே, தலைவனை இரவில் தங்கிச் செல்ல வற்புறுத்தி இருக்கவேண்டும் எனத்தெரிகிறது.

**நம்பிக்கைகள்**

மனிதன் பிறந்தது முதல் இறக்கும் வரையிலும் நம்பிக்கை வயப்பட்டிருக்கிறான்[21].

எதையுமே காரண காரிய அடிப்படையில் எண்ணிப் பார்க்காமல் பரம்பரையாகச் சொல்லப்பட்டு வந்த கருத்துக்களை அவ்வாறே ஏற்றுக்கொள்வது நம்பிக்கையாகும். நம்பிக்கைகள் தோன்றுவதற்கான காரணங்களை விளக்கும் சா. வளவன்,

பெரும்பாலும் அச்ச உணர்வினாலேயே நம்பிக்கைகள் தோன்றுகின்றன. வாழ்வில் ஏற்படும் சில செயல்களுக்குக் காரணம் கற்பிக்க முடியாதபோது, நம்பிக்கைகள் அசைக்க முடியாத உரம் பெறுகின்றன. இயற்கைக்கு அப்பாற்பட்ட நிகழ்ச்சிகளை அறிய முடியாதபோதும் இவை உருவாகின்றன. மனமே எல்லாவற்றிற்கும் அடிப்படையாக அமைவது போலவே இங்கும் நம்பிக்கை தோன்றக் காரணமாகின்றது[22] என்பார்.

மேலும் அவர் கூறுகையில், நம்பிக்கைகளும் பழக்கவழக்கங்களும் வாழ்க்கைத் தேவைகளால் தோன்றியவை. நம்பிக்கைகள் மக்களால் உருவாக்கப்படுகின்றன. பின்னர் அவை சமுதாயத்தால் பாதுகாக்கப்படுகின்றன. தனிமனித உணர்வும், சமுதாய உணர்வுமே நம்பிக்கைகளை மேலும் மேலும் வளர்க்கின்றன[23] என உரைப்பார்.

இந்நம்பிக்கைகள் மக்களால் உருவாக்கப்பட்டு ஒரு தலைமுறையினரிடமிருந்து மற்றொரு தலைமுறையினர்க்குப் பரவுகின்றன. இயற்கையால் பல்வேறு துன்பங்களுக்கு ஆளான மனிதன் தன்னை அத்துன்பங்களிலிருந்து விடுவிக்கச் சில காரணங்களைக் கற்பிக்கத் தொடங்கினான் அவையே நம்பிக்கைகளாக உருப்பெற்றன.

அவ்வகையில் கடலை வாழ்க்கையின் ஆதாரமாகக் கொண்டு வாழ்ந்த பரதவ மக்கள் பலவித நம்பிக்கைகளைக் கொண்டிருந்தனர். அவை, கடவுள் பற்றியது, அணங்கு, ஊழ், பேய், பிறவி, இம்மை மறுமை, ஆறு கடலில் கலக்குமிடத்தில் நீராடல் மற்றும் கனவு போன்ற பலவற்றில் நம்பிக்கை கொண்டு ஒழுகியுள்ளனர். அவர்கள் எத்தகு நிலையில் நம்பிக்கை கொண்டிருந்தனர் என்பதை விரிவாகக் கணலாம்.

**கடவுள் பற்றிய நம்பிக்கை**

இயற்கையின் அச்சந்தரும் செயல்களே மனிதனைக் கடவுள் நெறிக்கு இட்டுச் சென்றதென்பது மானிடவியலாரின் கருத்தாகும். மனிதன் தன் ஆற்றல் ஒரு வரம்புக்குட்பட்டது என்பதை உணர ஆரம்பித்த நிலையில் கடவுட்கோட்பாடு உருவாகியது. தன் அறிவுக்கும் ஆற்றலுக்கும் முறையே புலப்படாத, உட்படாதவற்றின் மீது அச்சத்தின் காரணமாக மனிதன் நம்பிக்கை கொள்ளத் தொடங்கினான். அந்நம்பிக்கையின் அடிப்படையில் அவனிடம் கடவுள் நம்பிக்கை தோன்றியதெனலாம்[24] எனக் கடவுள் நம்பிக்கை பற்றி உணர்த்துவார் க. காந்தி.

நா. புனிதப்பொற்கொடி கடவுள் பற்றிய நம்பிக்கை பற்றி உணர்த்துகையில்,

தனக்கு மீறிய சக்தி ஒன்று உண்டு என்பது அனைவராலும் ஏற்றுக் கொள்ளப்படுவது. இந்த சக்தியையே கடவுள் என்று கூறுகின்றனர்[25] என்பார்.

இவ்விருவரின் கருத்துப்படி, குகைகளில் வாழ்ந்த ஆதிமனிதன் இயற்கையின் சீற்றங்களுக்கு ஆளானான். இயற்கைக்கு அஞ்சினான், அச்சத்தின் காரணமாக தனக்கு மீறிய இயற்கை சக்திகளான சூரியன் சந்திரன் மழை ஆறு கடல் ஆகியவற்றை வணங்க ஆரம்பித்தான். அவ்வாறு அவனில் தோன்றிய நம்பிக்கைகள் வழிவழியாக வளர்ந்து கடவுள் நம்பிக்கையாக நிலைத்து நின்றது.

நிலத்தில் அதிக பரப்பளவு சூழ்ந்த கடலை ஆதாரமாகக் கொண்ட நெய்தல் நில மக்கள் காணும் இடங்களில் எல்லாம் தெய்வம் உறைவதாக நம்பினர். இயற்கையின் அழகிய சக்தியாகவும் ஆச்சரியப்படக்கூடிய அங்கமாகவும், பரதவர்களின் வாழ்க்கையின் ஆதாரமாகவும் விளங்கிய கடலையும் கடவுளாக நம்பியுள்ளனர்.

எடுத்துக்காட்டாக, தலைவன் தலைவியிடம் தன்னை நம்பிக்கைக்குரியவனாகக் காட்டப் பெரும்பான்மையான இடங்களில் கடலையே சான்றாக வைத்துக் கூறியுள்ளான். இதனை,

**சூளும் பொய்யோ, கடல் அறி கரியே?** (அகம். 320: 14)

**பெருங் கடற் தெய்வம் நீர்நோக்கித் தெளித்து** (கலித். 131: 1–3)

**கடல்கெழு செல்வி கரைநின் றாங்கு** (அகம். 370: 12)

என்ற வரிகள் உணர்த்துகின்றன. பரதவ மக்கள் கடலில் தெய்வம் உறைவதாக நம்பியதோடு, கடற்கரையை ஒட்டிய கழியிலும் கடவுள்உறைவதாக நம்பினர்.

**கொடுஞ் சுழிப் புகா அர்த் தெய்வம் நோக்கி** (அகம். 110: 4–5)

இவ்வரிகள் மூலம் பொங்கி வருகின்ற கடலின் அலையைப் பார்ப்பது ஒருவித அழகாகத் தோன்றினாலும், அதன் பயங்கரம் பேரழிவை ஏற்படுத்தக் கூடியது. கடலே அவர்களின் வாழ்க்கை ஆதாரமுமாகும். எனவேதான், கடலையும் தெய்வமாகக் கருதி வணங்கியுள்ளனர்.

மேலும், இம்மக்கள் மரத்திலும் கடவுள் உறைவதாக நம்பியுள்ளனர். இன்றும் கிராமங்களில் முனி மற்றும் கருப்பு தெய்வம் உறைவதாகக் கருதி வணங்கும் நம்பிக்கை கடைபிடிக்கப்பட்டு வருகிறது. அதே போல நெய்தல் நில மக்கள் மரத்தில் தெய்வம் உறைவதாக நம்பியுள்ளனர்.சான்று பகரும் பாடல் வரிகள் வருமாறு:

**தொன்று உறை கடவுள் சேர்ந்த பராரை**

**மன்றப் பெண்ணை ..................................** (நற். 303: 3–4)

**கடவுள் மரத்த முள்மிடை குடம்பை** (அகம். 270: 12)

**அணங்கு**

பழந்தமிழ்ப் பாடல்களில் அணங்கு என்பது அச்சம் தரக்கூடிய ஒன்றாகக் கருதப்படுகிறது. பண்டைக் கால மக்கள் ஆள் அரவமற்ற அச்சந்தரக்கூடியதாய் உள்ள இடங்களில் எல்லாம் தெய்வம் உறைவதாகக் கருதும் நம்பிக்கை கொண்டிருந்தனர். அணங்கு என்பதை வருத்தி அழிக்கும் தெய்வமாகக் கருதினர். அணங்கு பற்றிக் கழகத் தமிழ் அகராதி பின்வருமாறு விளக்கம் தருகிறது.

வருத்தம், அச்சம், ஆசை, மோகினி, நோய், அழகு, பெண், பேய் மகள், தேவர்க்காடும் கூத்து, கொல்லிப்பாவை ஆகிய பொருள்கள் உண்டெ‌ன அறிவிக்கிறது[26].

அச்சம் தரக்கூடிய இவ்வணங்கு உறையும் இடங்கள் பற்றிக் குறிப்பிடும் க. காந்தி,

மலை, நீர்நிலைகள், காடு, காவன்மரம், முன்றில், ஊர், போர்க்களம் ஆகியவற்றைக் கூறலாம்[27] என்கிறார்.

பழந்தமிழ் இலக்கியம் குறிப்பிடும் ஐந்நிலங்களில் ஒன்றாகிய நெய்தல் நிலத்தில் வாழ்ந்த பரதவர்அணங்கைக் கடல் பரப்பில் உறைவதாகக் கருதினர்.

**பெருங் கடல் பரப்பின் அமர்ந்து உறை அணங்கோ?** (நற். 155: 6)

மேலும், இவ்வணங்கைப் பேயுடன் உவமித்தும் பேசியுள்ளனர் சங்க கால பரதவ மக்கள். பேய் பற்றிக் குறிப்பிடும் க.காந்தி பின்வருமாறு விளக்குவார்.

பேய் என்பது அச்சம் என்ற பொருளைத் தரும் நிலையில் தமிழிலக்கியத்தில் பயிற்சி பெற்றிருக்கக் காண்கிறோம். அச்சத்திற்கு அடிப்படையாகவும் அஞ்சத்தக்க உருவ அமைதியினை உடையதாகவும் அச்சத்திற்கு அடிப்படையான ஆள் வழக்கற்ற இடங்களையும் சூழ்நிலையையும் தனக்குரியதாகக் காட்டப்படுவது கொண்டு இதனை இவ்வாறு காரணப் பெயரிட்டு அழைத்திருக்கலாம். பழந்தமிழ் இலக்கியங்கள் அலகை, கடி, கழுது, கூளி, பாசம் எனப் பல பெயர்களால் குறித்துள்ளன[28] என்பார்.

அணங்கு மற்றும் பேய் பற்றிய அக்கால பரதவ மக்களின் பய உணர்விற்கு காரணம் இரவு நேரமும் அதற்குக் காரணமான சூழ்நிலையும் அச்ச உணர்வுமே அடிப்படையாகும். அச்ச உணர்வினால் பேய்கள் இரவில்தான் நடமாடியதாகவும் நம்பியுள்ளனர் பரதவ மக்கள் என்பதை,

........................................ **கழுது வழங்கும்** (அகம். 260: 13)

**பேயும் அணங்கும் உருவு கொண்டு** (மதுரை. 631)

**அணங்கு கால் கிளரும் மயங்கு இருள் நடுநாள்** (நற். 319: 6)

இவ்வரிகள் புலப்படுத்துகின்றன. மேலும், இப்பேய்கள் மற்றும் பூதம் பயங்கரமான தோற்றமுடையதாகவும் நம்பியுள்ளனர்.

**பேஎய்த் தலைய பிணர் அரைத் தாழை** (அகம். 130: 5)

இவ்வரிகளால் தாழை எவ்வாறு பயங்கரமான தோற்றமுடையதோ, அதுபோல அச்சம்தரும் உருவுடையது பேய் என நம்பிய மீனவர்களின் நம்பிக்கையை அறியலாம். மேலும், இப்பேய்கள் சூரியன் மறையும் மாலை நேரத்திலே உலவியதாக நம்பியுள்ளனர்.

**உருகெழு தெய்வமும் கரந்து உரையின்றே** (நற். 398: 1)

இதில் உருகெழு தெய்வம் என்றது பேய், பூதம், நிரையத்தார், சவம் திண் பெண்டிர் முதலானோரைக் குறிக்கும்.

**ஞாயிறு**

இயற்கையின் கூறுகளான நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம், மலை, ஞாயிறு, திங்கள் போன்ற இயற்கைச் சக்திகளை வழிபடும் முறையினை இயற்கை வழிபாடாகக் கருதுவர். பழந்தமிழர் இயற்கைக் கூறுகளை வழிபட்டமையினை மலை, கடல், ஞாயிறு, திங்கள் ஆகியவற்றை வழிபட்டமை தெரிவிக்கும்[29].

ஞாயிற்றினை வழிபடும் வழக்கம் உலகெங்கும் பரவியிருந்த தொன்மையான வழிபாட்டு நிலையாகும்[30].

கடலை நம்பி வாழ்ந்த பரதவர்களும் உலகிற்கெல்லாம் விடிவை ஏற்படுத்தக்கூடிய சூரியனை வழிபட்டுள்ளனர். இதனை,

**முந்நீர் மீமிசைப் பலர் தொழத் தோன்றி** (நற். 283: 6)

என்னும் நற்றிணை பாடல் வரி அறிவிக்கிறது.

**சிவன் திருமால்**

இப்பரதவ மக்கள் இயற்கைச் சக்திகளை வணங்கியதோடு தெய்வங்களையும் வணங்கியுள்ளனர். சிவன், திருமால் போன்ற தெய்வங்களையும் வணங்கியுள்ளனர்.

சான்றாக அகநானூற்றுப் பாடல் வரிகள், அச்சம் தரும் வலிமை கொண்ட இருபெரும் தெய்வங்களான சிவனும் திருமாலும் ஆகிய இருவரது செந்நிறமும் கருநிறமும் ஒருங்கிணைந்த தோற்றம் போலச் செக்கர் வானம் சிவந்து இருந்தது என விளக்கி நிற்கிறது.

**வெருவரு கடுந்திறல் இருபெருந் தெய்வத்து**

**உருஉடன் இயைந்த தோற்றம் போல** (அகம். 360: 6–7)

இவ்வரிகளால், பரதவமக்கள் தெய்வங்களை வண்ணம் மற்றும் வடிவத்துடன் வழிபட்டுள்ளனர் என்பதை அறியலாம்.

**ஊழ் பிறவி பற்றிய நம்பிக்கை**

ஒருவன் செய்யக்கூடிய நன்மை தீமைகளின் பலன்களை அதே பிறவியிலும் அடுத்து வரக்கூடிய பிறவிகளிலுமாக அனுபவிப்பதே ஊழ்வினை என விளக்கப்படுகிறது.

ஊழ்வினை பற்றி க.காந்தி குறிப்பிடுகையில்,

மனிதன் ஒரு பிறப்பில் செய்த வினைகளின் பயனைப் பின்வரும் பிறவிகளில் அனுபவிப்பதே தீரவேண்டுமென்பது ஊழ்வினையின் நியதியாகும். ஊழ் மனிதனால் வெல்லமுடியாத ஒன்றே என்பது பழந்தமிழரின் கொள்கை[31] எனலாம் என்பர்.

மேலும் அவர் விளக்குகையில்,

இவ்ஊழ்வினை பலபெயர்களில் அழைக்கப்படுகிறது. அவை, வினை, தலைவிதி, விதி என்று இன்று சுட்டப்படுவதையே பண்டைத் தமிழர் பால், முறை, ஊழ், விதி எனக் குறிப்பிட்டுள்ளனர். இவற்றுள் சங்க இலக்கியத்துள் பால் என்ற சொல்லையே ஊழ்வினையைக் குறிக்க மிகுதியாகப் பயன்கொண்டுள்ளனர்[32] என விளக்குவார்.

பழந்தமிழ் நெய்தல் பாடல்கள் வழி மீனவப் பெண்கள் ஊழ்மீது மிகுந்த நம்பிக்கை கொண்டிருந்தனர். எவ்வாறெனில், களவு நிலையிலும் கற்பு நிலையிலும் தலைவனும் தலைவியும் இணைவதற்குக் காரணம் ஊழே என்று உறுதியாக நம்பினர்.

சான்றாக ஐங்குறுநூற்றுப் பாடலில், தலைவியின் காதலை அறியாத அயலார் பெண் கேட்டு வந்தனர். இந்நிலையில் தோழி, தலைவி பற்றிய உண்மையை வெளிப்படுத்தினாள் அது வருமாறு:

வெவ்வேறிடங்களில் பிறந்த தலைவனையும் தலைவியையும் ஒன்றுபடுத்தியது தெய்வம் ஆகலின், அங்ஙனம் கூட்டிய தெய்வமே அவர்களைப் பிரித்து விடுதலும் கூடுமோ? ஊர் என்ன சொன்னாலும் ஊழ் தன் வழியை மாற்றிக் கொள்ளாது. எனவே, தலைவியை அவள் காதலனொடு கூட்டி வைப்பதே அறம் எனச் செவிலியிடம் உணர்த்தினாள்.

**என்னை என்றும் யாமே; இவ்ஊர்**

**பிறிது ஒன்றாகக் கூறும்;**

**ஆங்கும் ஆக்குமோ வாழிய பாலே!** (ஐங். 110: 3–5)

**பிறவி பற்றிய நம்பிக்கை**

மனிதரிடையே பிறவி பற்றிய நம்பிக்கை எல்லாக் காலங்களிலும் நிலவி வந்துள்ளது. ஒருவன் துன்பப்படுவதற்கும் இன்பமாக வாழ்வதற்கும் அவனுடைய

முற்பிறவியில் செய்த வினையே காரணமாகக் கூறப்படுகிறது என்று க.காந்தி குறிப்பிடுவார். மேலும் அவர் விளக்குகையில்,

"முற்பிறப்பில் ஒருவர் செய்த நல்வினை, தீவினைக்கேற்ப இப்பிறப்பில் அவருடைய இன்ப துன்பங்கள் நிச்சயப்படுகின்றன"[33] எனப் பிறவி பற்றி விரிவான விளக்கம் தருவார்.

வள்ளுவரும் பிறவி பற்றி விளக்கமாகக் கூறியுள்ளார்.

மனிதன் தன் வாழ்நாளில் செய்யும் செயல்களுக்கு ஏற்ப விளையும் பயன்களை இரண்டாகக் கூறுவர். அவை இம்மை மறுமை பயன் எனலாம். செய்த வினைக்கேற்ப அவை நற்பயன்களாகவும் தீப்பயன்களாகவும் அமையும். இம்மையில் ஒருவன் செய்யும் வினைக்கேற்ப மறுபிறவியையோ, தேவருலக வாழ்வையோ, நரகத்தையோ, விடுபேற்றையோ அடைவான் என்னும் கருத்தின் வழி பிறவி பற்றிய கோட்பாடு வலியுறுத்தப்படுகிறது. மனிதன் செய்த நல்வினை தீவினை காரணமாக உலகில் இன்ப துன்பங்களைத் துய்த்து உயிர் இறைவனடியை அடைவதற்காக மனிதப்பிறவியைப் பெற்று நல்வினைகளைச் செய்து வீடுபேறு எய்துகிறது என்ற கருத்தில் பிறவியைப் பெருங்கடலாக உருவகப்படுத்திய திருவள்ளுவர்,

**பிறவிப் பெருங்கடல் நீந்துவார் நீந்தார்**
**இறைவன்அடி சேராதார்**[34]

என்று குறள் வகுத்தார். இவர் கூறிய பிறவி பற்றிய கருத்து நெய்தல் நிலக் குடும்பங்களில் வாழ்ந்த இளம்பெண்கள் மத்தியில் மிகுதியாகப் பேசப்பட்டுள்ளது.

சான்றாகக் குறுந்தொகைப் பாடலில், தலைவி தான் தலைவனோடு இணைவதற்குக் காரணம் முற்பிறவியில் ஏற்பட்ட நட்பாகும் என்று கூறினாள்.

**பூக்கமழ் பொதும்பர்ச் சேக்கும் துறைவனொடு**
**யாத்தேம்; யாத்தன்று நட்பே;**
**அவிழ்த்தற்கு அரிது; அது முடிந்தமைந்தன்றே** (குறுந். 313: 3–5)

மற்றொரு பாடலில் தோழி தலைவியிடம் கூறுகையில், களவில் ஒழுகிய தலைவன் களவொழுக்கம் நீங்கும்படி, முற்பிறப்பில் செய்த நல்வினையின் பயனாக உன்னை மணந்து கொள்ள வருகிறான் என்கிறாள்.

**கானல் அல்கிய நம்களவு அகல**

**பல்புரிந்து இயறல் உற்ற நல்வினை**

**நூல் அமை பிறப்பின் நீல உத்தி** (அகம். 400: 3–5)

இன்னும் ஒரு பாடலில், பரத்தை காரணமாகப் பிரிந்து சென்ற தலைவன் திரும்பி வரும்போது நீ அவனை ஏற்றுக் கொள்ளாதே என்கிறாள் தோழி. அதற்குத் தலைவி கூறுகிறாள், தோழி! தலைவன் பொய்யனாக நடந்து கொண்டானாயினும் அவனை ஏற்றுக் கொள்ளக் காரணம் பிறவிகளில் உள்ள தொடர்பு என்கிறாள்.

**நல்குவன் போலக் கூறி,**

**நல்கான் ஆயினும், தொல் கேளன்னே** (ஐங். 167: 3–4)

இவ்வரிகளில் 'நல்கான் ஆயினும், தொல்கேளன்னே' என்பது அவன் பல பிறவிகளில் தமக்குக் கணவனாக இருந்தவன் என்ற பொருளில் எனலாம்.

மேற்கண்ட வரிகளால், களவு வாழ்விற்கும், தன் கணவனுடன் தம் உறவு தொடர்வதற்கும் முற்பிறவி மற்றும் நல்வினையே காரணம் என்று உறுதியாக நம்பினர் நுளையர் மகளிர்என்பதை அறியலாம்.

**ஆறு கடலில் கலக்குமிடத்தில் நீராடுதல்**

அக்காலத்தில் ஆறுகள் கடல்கள் ஆகியவற்றில் நீராடுதல் புண்ணியமாகக் கருதப்பட்டு வந்தது. ஆற்றுநீர் புண்ணிய நீராகக் கருதப்பட்டது. அதிலும் பாவம் செய்தவர்கள் ஆறு, கடல் ஆகியவற்றில் மூழ்கினால் அப்பாவம் நீங்கும், தீவினை அகலும் என்பதில் மிகுந்த நம்பிக்கை வைத்திருந்தனர்[35].

நீராடுதல் பற்றி க.காந்தி விளக்குகையில்,

நீராடலைத் தீர்த்தமாடுதல் எனவும் குறிப்பர். தீமை செய்தோர் தங்களது பாவச் செயலுக்குக் கழுவாயாகக் கடலிலோ அல்லது ஆற்று நீரிலோ குளித்து தம் பாவங்களைப் போக்கிக் கொண்டனர்[36] என்பர்.

இந்நீராடுதல் பற்றிய நம்பிக்கை சங்கப்பாடல்கள் வழி பண்டைத் தமிழ் நெய்தல் நிலக் குடும்பங்களிலும் நிலவியதனைப் பட்டினப்பாலையில் புலவர் கடியலூர் உருத்திரங்கண்ணனார் எடுத்துரைக்கிறார்.

அவர் தரும் விளக்கம், காவிரியானது தெளிந்த கடலின் அலைகளுடன் கலக்கும். இங்கு கடல் அலைகளின் ஓசை மிகுந்து காணப்படும். பரதவர்

தாங்கள் சுற்றத்துடன் தீவினைகள் நீங்குவதற்காகக் காவிரி கடலோடு கலக்கும் இடத்தில் நீராடுவர். கடல் நீரில் குளித்தமையால் உடலில் படிந்த உப்பு நீங்குவதற்காக நன்னீரில் நீராடுவர் என்பார்.

**தேறுநீர்ப் புணரியோடு யாறுதலை மணக்கும்**

**மலி ஓதத்து ஒலி கடல்**

**தீது நீங்க, கடல் ஆடியும்**

**மாசு போக புனல் படிந்தும்** (பட்டி. 97:100)

இப்பாடலுக்கு விரிவான விளக்கம் தரும் நச்சினார்க்கினியர் தம் பட்டினப்பாலை உரையில் கடலாடுதல் என்ற சொல்லிற்குத் தீவினை நீங்கக் கடலாடியும்[37] என்று சமயத் தொடர்பான பொருள் கூறுவார்.

**தும்முதல் புரையேறுதல்**

மூக்கு மற்றும் மூச்சுக்குழாயில் ஒவ்வாத பொருள் செல்லும் போது எதிர் விளைவாகத் தும்முதலும் புரையேறுதலும் ஏற்படுகிறது என்பது அறிவியல் காரணமாகும். இந்த இயல்பான செயலையும் வாழ்க்கை நிகழ்ச்சிகளோடு ஒப்பிட்டுப் பார்த்து காரணம் கூறும் பழக்கம் பண்டைய மக்களிடம் இருந்தது. தும்மலைப் பற்றிக் குறிப்பிடும் க. காந்தி கீழ்க்காணுமாறு விளக்கம் தருவார்:

தும்மல் தொடர்ந்து வந்தால் தும்முபவரைத் தொலைவிலுள்ள உறவினரோ நண்பர்களோ நினைப்பதாகவும் எண்ணுவதாகவும், அதனை நன்மை தீமைகளை உணர்த்தும் சகுனங்களாகக் கருதும் வழக்கம் இருந்துள்ளது[38] என்பர்.

தும்மினால் பிறர் நினைப்பதாகக் கருதும் நிலையினைத் திருக்குறளிலும் தெளிவாகக் காணலாம்.

**தும்முச் செறுப்ப அழுதாள் நுமர் உள்ளல்**

**எம்மை மறைத்திரோ என்று**[39]

இன்றும் தும்மல் புரையேறுதலைச் சகுனமாகக் கொள்ளும் போக்கு நிலைபெற்றுள்ளது.அவ்வகையில் சங்க காலப் பரதவ மக்களின் வாழ்க்கையிலும் இந்நம்பிக்கை கடைபிடிக்கப்பட்டுள்ளது.

சான்றாக நற்றிணைப் பாடலில், தலைவி தன்னைப் பிரிந்து பொருள் தேடச் சென்ற தலைவனிடமிருந்து எந்த ஒரு செய்தியும் வராத நிலையில் தோழியிடம் கூறுகிறாள்.

**எனை விருப்புடையர் ஆயினும் நினைவிலர்** (நற். 130:6)

தலைவன் தன்னை நினைத்தலால் தனக்கு ஏற்படும் தும்மல் புரையேறுதல் முதலாயின நிகழாமையால் தன்னை அவர் நினைத்துப் பார்க்கவில்லையோ? என ஐயுறுகிறாள். தலைவியின் இச்சொல்லால் பரதவப் பெண்கள் தும்மல் புரையேறுதலில் கொண்டிருந்த நம்பிக்கை புலப்படுகிறது.

**கனவு பற்றிய நம்பிக்கை**

சங்க காலத்தில் கனவுகள் மக்களுக்கு வாழ்வின் பின் நிகழப்போவதை முன்னர் உணர்த்துவனவாகவும், நம்பிக்கைகளாகவும் கருதப்பட்டதனை இலக்கியங்களின் வழி அறியலாம்[40].

தொல்காப்பியரும் கனவினைப் பற்றிய குறிப்புகளைத் தருகிறார். தலைவியின் காதல் காத்தற்கு அரிதாய்க் கனன்று எழுங்கால் கனவு கண்டு அரற்றுவாள்.

**காதல் கைம்மிகக் கனவின் அரற்றலும்[41]**

இக்கனவிற்கான காரணம் பற்றி விளக்கும் மு.சண்முகம்பிள்ளை,

ஆடவரும் பெண்டிரும் நனவில் ஊடாடும் எண்ணங்களைக் கனவில் கண்டு உரையாடும் வழக்கமும் உண்டு. வண்டு முதலிய பிராணிகளும் கனவு காண்பதாக உரைப்பது கவி மரபு[42] என்பார்.

இக்கனவு பற்றிய நம்பிக்கை பரதவ குடும்பங்களிளும் இருந்துள்ளது. அக்குடும்ப இளம்பெண்களின் மத்தியில் கனவு பற்றிய நம்பிக்கை மிகுதியாக இருந்துள்ளது. சான்றாக நற்றிணைப் பாடலில் தலைவன் பொருள் தேடப் பிரிகிறான். தலைவி அவனுடைய நினைவாகவே இருக்கிறாள். உறங்கும்போது அவளது நினைவில் நின்ற தலைவனது தோற்றம் கனவாக தோன்றுகிறது.

வௌவால் தான் துயிலும் போது தனக்குக் கிடைக்கப் பெறாத நெல்லிக் கனியின் புளிப்புச் சுவை கிடைத்ததாகக் கனவு காணும்; அதுபோலத் தலைவி பரதவர் மகிழ்ச்சி நிறைந்த கடற்கரைச் சோலையை நினைந்து உறங்கிய பொழுதில் தலைவனுடன் கூடி இன்புற்றதாகக் கனவு கண்டாள். அத்தகைய இன்பம் எல்லாம் விழித்தபோது நீங்கியது.

**.............................................. வாவல்**

**ஓங்கல்அம் சினைத் தூங்கு துயில் பொழுதின்**

..........................................................................................

**நெல்லி அம்புளிச் சுவைக் கனவியா அங்கு**

..........................................................................................

**சிறு குடிப் பரதவர் மகிழ்ச்சியும்**

**பெருந் தண் கானலும், நினை தஅப்பகலே** (நற். 87: 1–9)

மற்றொரு பாடலில், தலைவனைப் பிரிந்த தலைவியின் நிலை பற்றித் தோழி தலைவனிடம் கூறுகையில்,

தலைவா! உன்னைப் பிரிந்து துன்புற்ற தலைவி, அசதியால் சிறிது தூங்கின இடத்து நீ அவள் தோள்மேல் தழுவிக் கிடந்ததாக நின்னை நினைத்து மெய்யென்று கருதித் தழுவுமிடத்து, நின்னைக் காணாதவளாகக் கண்டது கனவே என்று அறிந்து பின்பு செயலற்றுக் கலங்கி நின்றாள் எனப் பகர்ந்தாள்.

**நீள் நகர் நிறை ஆற்றாள், நினையுநள் வதிந்தக்கால்**

**தோள் மேலாய் என நின்னை மதிக்கும்மன்; மதித்தாங்கே**

**நனவு எனப் புல்லுங்கால், காணாளாய், கண்டது**

**கனவு என உணர்ந்து, பின் கையற்று கலங்குமே** (கலித். 126: 14–17)

இன்னும் ஒரு பாடலில், வரைவிடை வைத்துப் பிரிந்த தலைவனைக் கனவில் கண்டு பின்வருமாறு ஏங்கினாள் மற்றொரு தலைவி.

நள்ளிருள் நேரத்தில் கனவில் தலைவனைக் கண்டு மகிழ்ந்த தலைவி, அவனைத் தழுவி மகிழ வளைத்துப் பிடித்துக் கொண்டு அவனைக் காண கண்விழித்த போது, நினைவில் மறைந்து போனான்.

**................................ நள்ளிருள்**

**.............................. கங்குல் கனவினான்**

**தோன்றினனாக, தொடுத்தேன் மன், யான், தன்னைப்**

**பையெனக் காண்கு விழிப்ப யான் பற்றிய**

**கையுளே மாய்ந்தான் ..........................................** (கலித். 142: 32–36)

இவ்வாறாகக் கனவு பற்றிய நம்பிக்கை மீனவ இளம்பெண்களிடையே நிலவியதை நெய்தல் பாடல்கள் வழி அறியலாம்.

**பழக்கவழக்கம்**

பழக்கம் என்ற சொல் பழகுதல் அல்லது பயிற்சியாதல் என்ற பொருளில் தமிழிலக்கியத்தில் பண்டுதொட்டே ஆட்சிபெற்று வந்துள்ளது. அது செயல்முறையினை அடியொற்றிய தொடக்க நிலையை உணர்த்துவதாகும். பழகிப்போன செயல் சமூக இசைவாணை பெற்று வழங்கி வருவதனையே வழக்கம் என்கிறோம். வழக்கம் என்ற சமுதாயம் ஏற்றுக்கொண்ட பழக்கங்களைக் குறிப்பதற்காகப் பயன்பட்ட வளர்ச்சி நிலையில் தோன்றிய சொல்லாகக் கருதத்தக்கது. பழக்கம் வழக்கம் என்பது சமூகச் செயற்பாட்டு நிலைகளை விளக்க வல்லதாகவே இன்று பயன்பட்டு வருகின்றது. தனிமனித வழக்கங்களே காலப்போக்கில் சமுதாய வழக்கங்களாக உருப்பெற்றுத் தலைமுறை தலைமுறையாக இடையறாது நிலைத்து வாழ்வு பெறுகின்றன[43] என்று க.காந்தி பழக்க வழக்கம் பற்றி விளக்குகிறார்.

மேலும் அவர் குறிப்பிடுகையில்,

பழக்கம் என்பது ஒரு கற்கும் செயலாகும். பழக்கத்தின் தொடர்ந்த நிலையே வழக்கமாகும்[44] என்கிறார்.

இவர் கருத்தைப் போல பாஸ்கல் கிஸ்பர்ட் என்ற மேனாட்டு அறிஞர் விளக்குகையில்,

பழக்கவழக்கங்களைத் தனிமனிதனும் சமுதாயம் என்ற அமைப்பும் இணைந்து உருவாக்குகின்றன. மக்களின் தேவைகளின் அடிப்படையிலேயே பழக்கங்கள் தோன்றுகின்றன. அவை சமுதாயத்தால் ஏற்றுக்கொள்ளப்படுகின்ற நிலையில் வழக்கங்களாக உருப்பெறுகின்றன. இக்கூற்றிற்குச் சான்றாகத் தனிமனிதனிடம் இயல்பாக வந்தமைந்த நடத்தையைப் பழக்கம் எனவும் இனக்குழுவிலுள்ள பலருடைய மனவெழுச்சி, உணர்ச்சி ஆகியவற்றுடன் இயைந்து நிற்பது வழக்கம்[45] என்றும் சமூகவியலாளர்கள் கூறுவர் என்கிறார்.

மனிதனிடம் தொன்றுதொட்டு இருந்து வந்த பழக்கம் பின்தலைமுறையினரால் அப்படியே பின்பற்றப்படுவது வழக்கமாகும் எனக் கொள்ளலாம்.

மனித வாழ்க்கையில் எவ்வளவோ நாகரிக வளர்ச்சிகளும் மாற்றங்களும் ஏற்பட்டால் கூடச் சில நிகழ்வுகள் தொன்றுதொட்டு மாறாமல் பின்பற்றப்பட்டு வருவதே பழக்கவழக்கங்களாகும்[46].

அவ்வகையில் மீன்பிடித் தொழிலை நம்பி வாழ்ந்த பரதவ சமுதாயத்திலும் சில பழக்கவழக்கங்கள் பின்பற்றப்பட்டுக் கடைபிடிக்கப்பட்டன. அவை, மாலையில் விளக்கேற்றுதல், வழிபாடு, விழாக்கள் போன்றனவாகும்.

**மாலையில் விளக்கேற்றுதல்**

சூரியன் மறைந்து இருள் ஆட்சி கொள்ளப் போகும் மாலைப் பொழுதினை விளக்கேற்றி வரவேற்கும் வழக்கம் எல்லாக் காலங்களிலும் இருந்து வருகிறது. சங்கப் பாடல் கருத்துக்களின் வழி இல்லத்தில் தெய்வம் உறைவதாகக் கருதி அதனை மாலை வேளையில் நெல்லும் மலரும் தூவி விளக்கேற்றி வழிபட்டுள்ளனர் பண்டைக்கால மக்கள். இப்பழக்கத்தைப் பரதவக் குடும்பங்களில் வாழ்ந்த பெண்களும் மேற்கொண்டிருந்தனர் என்பதை நெய்தல் பாடல்கள் புலப்படுத்துகின்றன.

எடுத்துக்காட்டாக, மாலைப்பொழுதினை வளையணிந்த மகளிர் தத்தம் மாளிகையின்கண் இருந்து எதிர் கொண்டு அழைப்பர். இவ்வேளையில் பரதவப் பெண்கள் மீன் கொழுப்பைச் சேர்த்து உருக்கிய நெய்யினை வார்த்து விளக்கேற்றுவர். விளக்கின் சுடர் ஒளி பொருந்தி நிற்கும்.

**இலங்கு வளை மகளிர் வியல் நகர் அயர,**

**மீன் நிணம் தொகுத்த ஊன் நெய் ஒண் சுடர்** (நற். 215: 4–5)

**................................................... அயர்ந்து**

**செந்தீச் செவ்வழல் தொடங்க வந்ததை**

**வால் இழை மகளிர்** ................................ (கலித். 119: 14–16)

**........................................... மாலை விளக்கின்**

**வெண்கோடு இயம்ப** .................................... (நற். 58: 6–7)

இவ்வரிகளால் நுளையர் மகளிர் மாலைவேளையில் விளக்கேற்றி இல்லுறை தெய்வத்தை வழிபட்ட திறத்தை உணரலாம்.

**ஆடிப்பாடுதல்**

மாலைக்கு முன்பாகிய பொழுதில் பரதவ மகளிர் பலர் ஒன்று கூடித் தாம் தாம் விரவின மாலைகளைச் சூடி, ஆடவர் மேல் தாம் வைத்த நலத்தைப் பாடி இன்புறும் வழக்கமும் இருந்துள்ளது.

**அழிதக மாந்தளிர் கொண்ட போழ்தினான், இவ்வூரார்**

**தாஅம் தளிர் சூடித் தம் நலம் பாடுப** (கலித். 143: 26–27)

**வழிபாடு**

மனிதன் இவ்வுலக வாழ்வுக்கு வேண்டிய இன்பங்களை அடைய முயல்வதுடன் மேலுலக இன்பம் கருதியும் சில செயல்கள் புரிகிறான். தன்னைப் படைத்த இறைவனே அவ்வின்பத்தை அளிக்க வல்லவன் எனும் கருத்தில் வழிபடுகின்றான்[47] என வழிபாடு பற்றிய பொதுவான கருத்தாகக் குறிப்பர் கு. பகவதி.

இவ்வழிபாட்டினை நெய்தல் நிலத்தில் வாழ்ந்த பரதவ மக்களும் மேற்கொண்டிருந்தனர். தங்கள் குடும்ப நலனில் அக்கறை கொண்ட குடும்பத் தலைவியரே வழிபாட்டில் ஈடுபட்டுள்ளனர்.

சான்றாக அகநானூற்றுப் பாடலில், மீனவப் பெண்கள் குழுவாகச் சென்று தெய்வத்தை வழிபட்டுள்ளனர். தலைவியின் தாயானவர் நீர் உண்ணும் துறையில் இருக்கும் தெய்வத்தைத் தம் தோழியருடன் சென்று வழிபட்டுள்ளாள் எனக் கூறுகிறது.

**---------------------------------------------------- அந்தில்,**

**அணங்குடைப் பனித்துறை கைதொழுது ஏத்தி,**

**யாயும் ஆயமோடு அயரும் ---------------------------** (அகம். 240: 7–9)

பெண்கள் மட்டுமல்லாது ஆண்களும் வழிபாட்டில் ஈடுபட்டுள்ளனர். மீன்பிடிக்கச் செல்லாத முழுநிலவு நாளில் பரவதர் தம் சுற்றத்துடன் கடற்கரையில் ஒன்று கூடுவர். சினைகளையுடைய சுறாமீனின் கொம்பை நட்டு, அதில் நெய்தல் நிலக் கடவுளாகிய வருணனை நிறுத்தி வழிபடுவர். அவ்வழிபாட்டில் வெண்கூதாளியின் பூக்களால் ஆகிய மாலைகளை அணிவர். தாழையின் மலரைச் சூடியும், பனங்கள்ளை அருந்தியும், தங்கள் மனைவிமாருடன் மகிழ்ந்து கூத்தாடியும் ஆடியும் வழிபாடு செய்துள்ளனர். இதனை,

**சினைச் சுறவின் கோடு நட்டு,**

**மனைச் சேர்த்திய வல் அணங்கினான்,**

**மடல் தாழை மலர் மலைந்தும்;**

**புன்தலை இரும் பரதவர்**

**பைந் தழை மா மகளிரொடு;**

**பாய் இரும் பனிக் கடல் வேட்டம் செல்லாது,**

**உவவு மடிந்து உண்டு ஆடியும்;**

**புலவு மணல் பூங்கானல்** (பட்டின. 86–94)

என்ற வரிகள் புலப்படுத்துகின்றன. இவ்வரிகளில் கொல்லும் இயல்புடைய சுறாமீனை நட்டு வழிபாடு செய்வது கடல் வேட்டம் செல்லும் போது சுறாமீனால் ஆபத்து நேரக்கூடாது என்ற தற்காப்பு நோக்கில் என்று கருதலாம்.

**காக்கைக்குப் பலியிடல்**

இன்றைய நடைமுறை வாழ்க்கையில் கூட அன்னதானம், நோன்பு, இறைவனை வேண்டிச் செய்யப்படும் விருந்து போன்றவற்றில் உணவினை முதலில் காக்கைக்கு இட்ட பின்னரே மற்றவர்க்குப் பகிர்ந்தளிப்பர். இவ்வழக்கம் நெய்தல் நிலச் சமூகத்திலும் இருந்துள்ளது.

சான்றாக நற்றிணைப் பாடலில், விருந்தினரை வரவேற்றுப் போற்றுவதற்காக மகளிர் உணவு சமைத்தனர். அவ்வுணவில் கவளம் எடுத்து காக்கைக்குப் பலியாக இட்டனர்.

**திருவுடை வியல் நகர் விருந்து அயர்மார்**

**பொற்றொடி மகளிர் புறங்கடை உகுத்த**

**........................ நிமிரல் மாந்தி, எல்பட**

**..........................................................**

**பச்சிறாக் கவர்ந்த பசுங் கட் காக்கை** (நற். 258: 4–8)

**விழாக்கள்**

மக்களின் வாழ்வில் சோர்வினைப் போக்கி இன்பமும் மலர்ச்சியும் புத்துணர்ச்சியும் ஊட்டுவன விழாக்களே. மனித இனத்தை ஒன்றுபடுத்தி மகிழ்ச்சியில் திளைக்க வைப்பதே விழாக்களின் செயற்பாடாகும்[48].

விழாக்கள் மக்கள் அனைவரையும் ஒன்று சேர்த்து மகிழ்ச்சியில் திளைக்கச் செய்கிறது. உறவுகளை அறியச் செய்கிறது. இவ்விழாக்கள் கொண்டாடுவதற்கான காரணத்தை க. காந்தி விளக்குகையில்,

உள மகிழ்ச்சியினையும் செயலாற்றுவதற்குரிய நம்பிக்கையினையும் மனிதனுக்கு விழாக்கள் அளிக்கின்றன. இவை நம்பிக்கையின் அடிப்படையிலேயே கொண்டாடப்பட்டு வருகின்றன. மக்களே விரும்பி ஏற்றுக் கொண்டாடும் நிகழ்ச்சியாதலின் அது விழா எனப் போற்றப்பெறுகின்றது[49] என்கிறார்.

இவ்விழாக்கள் கடற்கரையை ஒட்டி வாழ்ந்த நெய்தல் நில மக்கள் மத்தியில் எவ்வாறு கொண்டாடப்பட்டது எனப் பார்க்கும் போது, ஆகாயத்தில் பால் போல நிலவு ஒளி பரப்பி விளங்க, அந்நிலவொளியில் மக்கள் பெருகும் ஆரவாரத்துடன் மிகுதியாய்க் கூடி ஓசையுடைய தெருவினிடத்தில் விழாக் கொண்டாடியுள்ளனர்.

**நிலவே, நீல் நிற விசும்பில் பல் கதிர்பரப்பி**

**பால் மலி கடலின், பரந்து பட்டன்றே;**

**ஊரே ஒளி வரும் சும்மையொட மலிபுதொகுபு ஈண்டி**

**கலி கெழு மறுகின் விழவு அயரும்மே,** (நற். 348: 1–4)

இவ்வாறு பரதவ மக்கள் மகிழ்ச்சி ஆரவாரம் பொங்க தெருவினில் விழாக் கொண்டாடினார்கள். மேலும், இவ்விழாக்களில் கலந்து கொண்ட மகளிர் பொதுவாக அணியும் தழையாடையை விடச் சிறப்பாகத் தயார் செய்து அணிந்துள்ளனர்.

சான்றாக அகநானூற்றுப் பாடல், நெய்தற் பூக்களை விழாவிற்குத் தம்மை அலங்காரம் செய்து கொள்கின்ற பெண்கள், தங்கள் தழையாடைக்கு அழகு செய்யும் பொருட்டுப் பறித்துச் சேர்த்துள்ளனர் எனப் பகர்கிறது.

**பாசடைக் கலித்த கணைக்கால் நெய்தல்**

**விழவு அணி மகளிர் தழை அணி கூட்டும்** (அகம். 70: 11–12)

**தொகுப்புரை**

இவ்வியலில் ஆய்வு முடிவுகளாகப் பின்வருவனவற்றை முன்னிருத்தலாம்.

1. பெண்வீட்டில் பொருள் கொடுத்துத் திருமணம் நடத்தல், மடலேறி மணம்கொள்ளல். பணிவிடை செய்து மணம் கொள்ளல், திணைக் கலப்பு மணம் நிகழ்தல் என்னும் நிலைகளில் மணவினை நடந்துள்ளது.

2. தலைவன் மேற்கொண்ட பரத்தமை வாழ்வைத் தலைவி அறிந்த நிலையிலும், இல்லறம் சிதையாமலிருக்க தலைவன் தவறினைப் பொறுத்துக் கொண்டொழுகிய மாண்பினை அறிய முடிகிறது.

3. நெய்தல் நில ஆடவர்க்கிணையாக மகளிர் உப்பு வணிகத்தை மேற்கொண்டதை அறிய முடிகிறது. தலையில் சுமந்து சென்று விற்றல், வண்டி ஓட்டிச் சென்று உப்பு விற்று வருதல் எனப் பலகுறிப்புகள் இடம்பெறுகின்றன.

4. கடவுள், அணங்கு, ஊழ், பேய், மறுபிறவி, இம்மை மறுமை, ஆறு கடலில் கலக்குமிடத்தில் நீராடல், கனவு எனப் பல நிலைகளில் பரதவ மகளிர் நம்பிக்கை கொண்டு விளங்கினர்.

## அடிக்குறிப்புகள்

1. ச. ரேணுகா, சங்க இலக்கியம் காட்டும் மனித உறவுகள், ப. 22.
2. வெ. சாமிநாத சர்மா, பிளேட்டோவின் அரசியல் (அ) நீதியைப் பற்றி ஆராய்ச்சி, ப. 11.
3. முனைவர் இரா. சுகுமார், சங்க இலக்கியம் பதிவும் பார்வையும், பக். 45–46.
4. பி. நா. கதிரைவேற்பிள்ளை, தமிழ்மொழியகராதி, ப. 582.
5. N.Subramaniam, Sangam polity, p. 247.
6. திரு.வி.கலியாண சுந்தரனார், உள்ளொளி, ப. 94.
7. பேரா இரா. மணிமேகலை, சங்கத் தமிழ்க் காதல், ப. 22.
8. மேலது, ப. 32.
9. மேலது, ப. 33.
10. பதி இர. ஜெகதீசன், குறுந்தொகை ஆய்வுக்கோவை, மூன்றாம் தொகுதி, ப. 983.
11. க. காந்தி, தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், ப. 33.
12. வி.சி. சசிவல்லி, தமிழர் திருமணம், ப. 59.
13. க. காந்தி, மு. நூ,ப. 16.
14. பதி த.ஜானகி, செம்மொழித் தமிழில் மகளிர் மாட்சி, ப. 27.
15. கு. இராசரத்தினம், சங்க இலக்கியத்தில் பொதுமக்கள், ப.31.
16. தொல்,பொருள்,நூற்பா.491 :1–2.
17. நாலடியார்,பொது மகளிர் – 371.
18. வி.சி. சசிவல்லி, மு. நூ, ப. 288.
19. பதி மு. இரா. சந்திரசேகரன், சங்க இலக்கியம் இலக்கிய வளமும் வாழ்வியல் அறமும், ப. 99.

20. மேலது, ப. 100.

21. நா.புனிதப்பெற்கொடி, சங்க காலச் சமுதாயத்தில் நம்பிக்கைகளும் சடங்குகளும்
,ப. 52.

22. சா.வளவன்,நட்டுப்புறவியல் கட்டுரைகள், ப. 128.

23. மேலது, ப. 128.

24. க.காந்தி, மு. நூ, ப. 261.

25. நா. புனிதப்பொற்கொடி, மு. நூ, ப. 54.

26. கழகத் தமிழ் அகராதி, ப. 19.

27. க. காந்தி, மு. நூ, ப. 273.

28. மேலது,ப. 311.

29. மேலது,ப. 261.

30. மேலது, ப. 262.

31. மேலது,ப. 165.

32. மேலது, ப. 163.

33. மேலது,ப. 164.

34. குறள். 10.

35. பொ.அழகு கிருஷ்ணன்,சிலப்பதிகாரம் காட்டும் பண்பாடும் சமுதாய வரலாறும், ப. 230.

36. க. காந்தி, மு. நூ, ப. 226.

37. நச்சினார்க்கினியர்,பட்டினப்பாலை உரை, ப. 99.

38. க. காந்தி, மு. நூ, ப. 131.

39. குறள். 1318.

40. நா. புனிதப்பொற்கொடி, மு. நூ, ப. 75.

41. தொல். பொருள். நச். 115.

42. மு.சண்முகம்பிள்ளை, சங்கத் தமிழர் வாழ்வியல், ப. 162.

43. மேலது,ப. 162.

44. க. காந்தி, மு. நூ, ப. 13.

45. பாஸ்கல் கிஸ்பர்ட், சமூகவியலின் அடிப்படைக் கோட்பாடுகள், ப. 232.

46. இரா. சுகுமார், மு. நூ, ப. 16.

47. கு. பகவதி, தமிழர் ஆடைகள், ப. 158.

48. க. காந்தி, மு. நூ, ப. 51.

49. மேலது, ப. 52.

# இயல் நான்கு
# பரதவ மகளிர் விளையாட்டுகள் ஆடை அணிகலன் ஒப்பனை

வாழ்க்கையே ஒரு போராட்டமாக இருந்த முற்கால மனிதனுக்கு அதுவே பல படிப்பினைகளைக் கற்றுத் தந்தது. அந்த அனுபவம் அவனுக்கு இயற்கையைப் புரிந்து கொள்ளவும், சமாளிக்கவும் சக்தியைத் தந்தது என்பர். தற்காப்புகாகத் தாண்டினான்; ஓடினான்; நீந்தினான்; மரமேறினான்; கண் விழித்தான்; கையில் கிடைத்தவற்றை வைத்துக் கொண்டு போராடினான். நாடோடி வாழ்க்கையை விட்டுவிட்டு நிலைத்த வாழ்க்கைக்கு வந்தடைந்தபோது தனித்த வாழ்க்கை, குழு வாழ்க்கையைப் புரிந்து கொண்டு செயல்பட்டான். அப்பொழுது அவன் பெற்ற பயிற்சி அவனது வீரத்தைப் புலப்படுத்த வகை செய்தது. வீரத்தோடு மனமகிழ்ச்சியும் இணைய விளையாட்டுக்கள் தோன்றலாயின. வீரத்தை வளர்க்க, பயத்தை விரட்ட, நம்பிக்கையை ஊட்ட, நண்பர்களைப் பெருக்க, பொழுதுபோக்கை வரவேற்க, முரண்பாட்டை உணர்த்த, வாழ்க்கையினையும், தொழிலினையும் எதிரொலிக்கப் போலச் செய்ய எனப் பல நிலைகளில் விளையாட்டுகள் தோன்றலாயின[1].

விளையாட்டுக்களின் தோற்றம் பற்றிப் பொதுவாகப் பார்க்கும்போது, ஒரே மாதிரியான வேலைகளில் ஈடுபட்ட அக்கால மனிதனுக்கு மனச் சலிப்பு ஏற்ப்பட்டது அவன் அவ்வேலைகளிலேயே ஈடுபட மனம் அல்லல் பட்டுத் தவித்து எரிச்சலடைந்திருக்கவேண்டும். எந்த வேலையையும் ஒழுங்காகச் செய்ய இயலாது தள்ளாடியிருக்கவேண்டும். இவ்வாறு மனச்சலிப்பு ஏற்படும் போது, அதற்குக் காரணமான வேலையை விடுத்து வேறு வேலைகளில் ஈடுபட மனச்சலிப்பு நீங்குகிறது; மனமகிழ்ச்சி ஏற்படுகிறது; இம்மனச் சலிப்புப் பற்றி எஸ்.பி. ஆதிநாராயணன் குறிப்பிடுகையில்,

மனம்தான் மனிதனை இயக்குகிறது. மனமானது ஒரேவேளையில் ஈடுபட்டிருக்க விரும்புவதில்லை. ஒரே மாதிரியான காட்சியையே திரும்பத்திரும்பக் கண்டு கொண்டிருப்பதும் மனதுக்குப் பிடிக்கவில்லை. ஒரே மாதிரியான காட்சியைப் பார்க்கும்போது கண்களும் களைப்படைகின்றன என்கிறார்[2].

இவ்வாறு ஒரே மாதிரியான பணிகளில் ஈடுபட்ட பழங்கால மனிதனின் மனச்சலிப்பை நீக்கிப் புத்துணர்ச்சி தந்து உடலையும் வலுப்படுத்த விளையாட்டுக்கள் தோன்றியது எனலாம்.

இவ்விளையாட்டு பற்றிச் சொற்களஞ்சியம் இவ்வாறு விளக்கமளிக்கிறது.

விளையாட்டெனில் ஆட்டம்(Play) போட்டி விளையாட்டு(Game) வன்மை விளையாட்டு(Sports) இன்பப் பொழுதுபோக்கு(Recreation) என்ற தொடர்ப் பொருளைத் தருகிறது.

விளையாட்டில் ஆட்டு என்பது விளையாட்டு என்பதன் அடிச்சொல்லாகும். இதனுடன் அடைச்சொல் சேர்ந்து விளையாட்டு ஆயிற்று. ஆடு என்ற வினைச் சொல்லினின்று பெறப்பட்டது ஆட்டு என்னும் சொல். ஆடு என்னும் சொல்லிற்கு அசைதல், காத்தாடுதல், விளையாடுதல், நீராடுதல், பொடுதல்[3] என்னும் பொருள்களை விளையாட்டுப் பற்றித் தமிழ்ப் பேரகராதி கூறுகிறது.

விளையாட்டு எனும் சொல்லாட்சி தொல்காப்பியத்திலேயே காணப்படுகிறது. தொல்காப்பியர் கூறுகையில்,

**“செல்லம் புலனே புணர்வு விளையாட் டென்று**

**அல்லல் நீத்த உவகை நான்கே[4]**

என்கிறார். இதில் உவகை எனும் மெய்ப்பாட்டின் தோற்றக் காரணங்களுள் ஒன்றாக விளையாட்டைக் கூறுகிறார்.

இவ்விளையாட்டுக்களின் அவசியம் பற்றி கே. சுப்பிரமணியம் பிள்ளை குறிப்பிடுகையில்,

உடலைக் கட்டுடன் காப்பதற்கும், அறிவைத் தெளிவுபெறச் செம்மை செய்வதற்கும், மனவமைதி பெறுவதற்கும், மகிழ்ச்சியடைவதற்கும் விளையாட்டுக்கள் பெரிதும் துணைபுரிகின்றன[5] என்கிறார்.

மு. இராகவையங்கார் விளையாட்டுக்களின் இன்றியமையாமை பற்றி உணர்த்துகையில்,

தொழில் மிகுதி, மனக்கவலை முதலியவற்றால் சோர்வுற்ற மக்கள் உள்ளங்களைத் தூண்டி உற்சாகப்படுத்துவதற்கு விளையாட்டுகள் என்பவை பெருந்துணை[6] புரிபவை என்பர்.

இவ்விளையாட்டுகளைப் பற்றிச் சங்கப் பாடல்கள் பல விளங்குகின்றன. சங்கப் பாக்கள் வழி ஐவகை நிலங்களில் வாழ்ந்த மக்கள் தாங்கள் வாழ்ந்த நிலம் சார்ந்த பல விளையாட்டுக்களை ஆடியுள்ளனர். கடல் சார்ந்த நிலப் பகுதியாகிய நெய்தல் நிலத்தில் வாழ்ந்த பரதவ மக்கள் பலவித விளையாட்டுக்களில் ஈடுபட்டுள்ளனர். அதிலும் ஆண்களைவிட மகளிர் அதிகமான விளையாட்டுக்களில் ஆடித் திளைத்துள்ளனர்.

சங்க கால விளையாட்டுக்களை ஆய்ந்த அறிஞர் கோ. சுப்பிரமணியம் பிள்ளை குறிப்பிடுகையில்,

ஆடவர் விளையாட்டுக்களைவிட மகளிரின் விளையாட்டுக்களே மிகுதியாகச் சங்க இலக்கியத்தில் காணப்படுகின்றன[7] எனச் சுட்டுவார்.

இவ்வறிஞர் கூறுவது போல, நெய்தல் பாடல்கள் வழி நோக்கும் போது மகளிரே பல வகை விளையாட்டுக்களில் ஈடுபட்டுள்ளனர். அப்பெண்கள் பல்வேறு விளையாட்டுக்களை ஆடுவதற்கு ஆடுகளமாக இருந்தது கடற்கரை. இக்கடற்கரையின் சிறப்பைப் பற்றிக் கூறும் பேராசிரியர் தி. முத்துக் கண்ணப்பன்,

இயற்கையின் எழிலைக் கண்டு நீங்காத இன்பப் பெருக்கிலே நிலைத்துவிட வேண்டுமாயின் அது கடற்கரையிலேதான் சாலும். கடற்கரை பிரிந்தவர் கூடும் பெருமைசால் இடமாகவும், வருந்துவோர் களிக்கும் மனமகிழ்மன்றமாகவும், புதியவரை நண்பராக்கும் புதுமைசேர் கூடமாகவும், பகலெல்லாம் உழைத்துச் சோர்ந்து மெலிந்த மக்கட்கு கடற்கரையே சொர்க்கம்! எண்பது கோடி நினைந்து எண்ணி மனம் புண்பட்டார்க்கும் கடற்கரையே இன்ப அமைதிப் புகலிடம்! எங்கோ வளர்ந்து யாரோ வென்றிருந்த ஆடவரையும் மகளிரையும் இணைத்து வாழ்க்கைத் துணைவராக்கும் இல்லறக் கல்வி நிலையம் கடற்கரையேயாகும்![8] என்கிறார்.

இத்தகு சிறப்பைப் பெற்ற கடற்கரையே பரதவப் பெண்கள் ஆடிய பலவித விளையாட்டுக்களின் பிறப்பிடமாக இருந்துள்ளது.

பரதவக் குடும்பங்களில் ஆண்கள் தொழில் சார்ந்த பணிகளில் முழுமையாக ஈடுபடுவர். மீன் பிடித்தல், உப்பு விளைவித்தல், பிடித்து வந்த மீன்களைப் பகுத்துக் கொடுத்தல் என உடல் உழைப்பு அதிகம் இருக்கும். எனவே, அவர்கள் அதிகமான விளையாட்டுக்களில் ஈடுபாடு காட்டியதாகச் சான்றுகள் இல்லை. பெண்களே மிகுதியான விளையாட்டுக்களில் ஈடுபட்டுள்ளனர். காரணம், மற்ற நிலங்களில் வாழ்க்கை முறையானது புதிது புதிதாகப் பயிரிடல், களையெடுத்தல், வேட்டையாடுதல், ஆடுமாடு மேய்த்தல், அறுவடை செய்தல் என ஒரே பணிகள் என்றாலும் பருவநிலை மாற்றத்திற்கு ஏற்ப பணிகள் மாறி மாறி வருவதால் வாழ்வில் சலிப்பு ஏற்படாது. ஆனால் நெய்தல் நிலப் பெண்களின் வாழ்வானது ஒரு குறுகிய வட்டத்திற்குள் அடங்கி விடுகிறது.

ஒரே காட்சி, நோக்கிய தூரம் வரை எல்லையற்ற கடல் ஒரு புறம். மறுபுறம் வெண்மணல் புலால் நாற்றம் என்று எப்பொழுதும் காட்சியாய்த் தெரிவது இதுவே. அதேபோல ஒரேமாதிரியான பணிகள் உணவு சமைத்தல், மீன் உப்பு விற்றல் போக, பெரும்பான்மைப் பணியாக மீன் உணக்கலில் ஈடுபட்டுள்ளனர்.

இவ்வாறு ஒரே பணியில் ஈடுபட்ட பரதவப் பெண்கள் மனச்சலிப்பு மற்றும் மனஇறுக்கத்திலிருந்து அவர்களை விடுவித்து மனமகிழ்வு மற்றும் புத்துணர்வு பெற உதவியவை விளையாட்டுக்களே ஆகும். பழந்தமிழ்நெய்தல் பாடல்கள் வழி இப்பரதவப் பெண்கள் விளையாடிய விளையாட்டுக்களின் வரிசை கீழ் வருமாறு:

அவை, ஓரை விளையாட்டு, சிற்றில் இழைத்தல், வண்டல் பாவை, அலவனாட்டம், கடற்கரையில் பொழுதைக் கழித்தல், திரை உதைத்தல், மணலெக்கர், நீராடல் மற்றும் ஊஞ்சல் ஆட்டம் எனப் பலவகை விளையாட்டுக்களை ஆடி மகிழ்ந்துள்ளனர்.

**ஓரை விளையாட்டு**

ஓரை விளையாட்டு என்பது பஞ்சாய் எனப்படும் ஒரு வகைக் கோரையால் பாவை செய்து விளையாடும் ஆட்டமாகும். ஓரை மற்றும் பஞ்சாய் என்பதன் பொருள் பின்வருமாறு விளக்கம் பெறுகிறது.

ஓரை – பஞ்சாய்ப் பாவைகொண்டு மகளிராடும் விளையாட்டு[9] எனப் பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் விளக்கம் கூறுகிறார்.

பஞ்சாய் என்பது ஒருவகைக் கோரைப்புல்[10] என்று பி. எல். சாமி தெரிவிக்கிறார்.

ஓரை என்பதை மகளிரின் விளையாட்டப் பாவை[11] எனச் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்க் கலைச் சொல்லகராதி விளக்கமளிக்கிறது.

ஓரைவிளையாட்டுப் பாவையை மகளிர் பஞ்சாய்க் கோரைப் புல்லிலிருந்து உருவாக்கினர். இக்கோரைப் புல்லைக் கிழித்துக் கசக்கினால் மெல்லிய பஞ்சு போன்ற நார் கிடைக்கும். இதனை,

**பஞ்சாய்க் கோரை பல்லின் சவட்டி,**

**புணர்நார்ப் பெய்த புனைவு இன் கண்ணி** (பெரும். 217:218)

என்னும் பெரும்பாணாற்றுப்படை வரிகளால் அறியலாம். இக்கோரையின் பஞ்சு போன்ற அமைப்பின் காரணமாகப் பஞ்சாய் அல்லது பைஞ்சாய் எனப் பெயர் வந்தது எனலாம்.

**ஓரைப்பாவை செய்பொருள்கள்**

ஓரைப்பாவை விளையாடிய மகளிர் ஓரைப்பாவை செய்த முறைபற்றி மூன்று நிலைகளில் விளக்குவார் செ.அ. முத்துக்கிருஷ்ணன்,

ஓரைப்பாவை செய்வதற்கு பஞ்சாய்க் கோரை, மகரந்தப் பொடி, பல்வகை மலர்கள் ஆகியவை தேவைப்பட்டன எனலாம். இவற்றைப் பயன்படுத்தி மூன்று முறைகளில் அவர்கள் செய்திருக்கலாம்.

1. கோரையை நார்நாராகக் கிழித்துப் பஞ்சுபோல் ஆக்கி அதைக்கொண்ட பாவை செய்தனர்.

2. மகரந்தக் தூளைக் குவித்துக் கைகளால் அதை இறுக்கிப் பிடித்துக் கெட்டியாக்கிப் பின் பாவையைச் செய்தனர். அப்பாவை குலைந்து விடாமலிருக்கப் பஞ்சாய்க் கோரை நாரால் சுற்றிக் கட்டினர்.

3. மகரந்தத் தூள் மிகுதியாகக் கிடைத்த போது மகரந்தத்தையும் மலரிதழ்களையும் கலந்து ஓரைப்பாவை செய்து அப்பாவை கட்டுவிடாமலிருக்கப் பஞ்சாய்க் கோரையால் சுற்றிக் கட்டினர். மகளிர் அழகான பாவையைத் தம் கைகளாலேயே செய்யக்கூடிய திறமை பெற்றிருந்தனர்[12] என்பர்.

**ஆடிய முறை**

ஓரை விளையாட்டினை ஆடிய பெண்கள் மேற்கொண்டிருந்த முறையினை மேலும் விளக்கும் செ.அ. முத்துக்கிருஷ்ணன்,

மகளிர் வட்டமாக நின்று இரு பக்கங்களிலும் அடுத்து நிற்பவருடன் கைகளைக் கோத்துக் கொண்டு ஆடுவர். ஓரையாட்டத்தில் முக்கியப் பொருளான ஓரைப்பாவை வட்டத்தின் நடுவிடத்தில் வைக்கப்பட்டிருக்க வேண்டும். இவ்வட்டத்திற்கு ஓரையாட்டம் என்று பெயர். அவ்வட்டத்தில் ஓரைப்பாவை இடம்பெறாது அப்பெயர் பெற்றிருக்க முடியாது. வட்டமாகநின்று கைகோத்து ஆடுவோர் அனைவரின் பார்வைக்கும் பாட்டுக்கும் இலக்காகும்படி அப்பாவையை நடுவில்தான் வைத்து ஆடியிருக்கவேண்டும். வட்டத்துக்கு வெளியே வைத்து ஆடியிருப்பாரோவென்றால் அப்போது பாவை பலர் கண்ணுக்குத் தப்பி அவர்களின் பின்னே எங்கேயோ இருக்கும். எனவே நடுவிடத்தில் வைத்தே ஆடியிருப்பர்[13] என்று முடிவு செய்யலாம் என்பார்.

ஓரையாட்டம் என்பதற்குக் கைகளைக் கோர்த்துக் கொண்டு வட்டமாக நின்று பாடிக்கொண்டே ஆடும் ஒரு பழங்காலத்து ஆட்டம்[14] என்று சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்க் கலைச் சொல்லகராதி விளக்கமளிக்கிறது.

இவ்வோரை ஆட்டத்தை மீனவப் பெண்கள் கடற்கரையில் ஆடிய நிலைபற்றி விளக்கி நிற்கும் நெய்தற் பாடல்கள் பல. அவை,

**ஓரை மகளிர்** (குறுந். 401: 3)

**ஓரை மகளிர் ஓராங்கு ஆட்ட** (குறுந். 316: 5)

**ஒள்இழை மகளிரொடு ஓரையும் ஆடாய்** (நற். 155:1)

**ஓரை ஆடினும் உயங்கும் நின் ஒளி** (அகம். 60:11) என்ற அடிகள் உணர்த்துகின்றன.

**ஓரைப் பாவையிடம் அன்பு**

ஓரை ஆடிய மகளிர் தாங்கள் செய்த பாவை மீது பேரன்பு கொண்டிருந்தனர். அதைக் குழந்தையாக வளர்ப்பதும் திருமணம் செய்து பார்ப்பதும், உயிராகப் போற்றுவதும் பரதவ மகளிர்க்கு இயல்பாக இருந்துள்ளது.

சான்றாக ஐங்குறுநூற்றுப் பாடலில், களவுக் காலத்தில் தலைவி கடற்கரையில் விளையாடியபோது தலைவனுக்குப் பாவையை ஈன்றேன் என்கிறாள்.

**ஓதமொடு பெயரும் துறைவற்குப்**

**பைஞ்சாய்ப் பாவை ஈன்றனென் யானே!** (ஐங். 155: 4–5)

இவ்வரிகள் மூலம் பாவையைக் குழந்தையாகப் பாவித்துப் போற்றிய மகளிரின் தாய்மை உணர்வை அறியலாம்.

**நீரில் ஓரையாட்டம்**

மகளிர் ஓரையாட்டத்தை மணற் பரப்பில் ஆடியதோடு அல்லாமல் நீரிலும் ஆடியுள்ளனர். எடுத்துக்காட்டாக நற்றிணைப் பாடலில், ஓரைப்பாவையுடன் நீரில் விளையாடிய மகளிர் நீரில் பாவையுடன் தாமும் முழுவதும் நனைந்துவிட்ட படியால் கலைந்த கூந்தலைப் பிழிந்து வடித்துத் துவட்சியுற்ற அழகிய வயிற்றில் அறைந்து கொண்டும் தம் தோழியர் கூட்டத்தோடு ஒருசேரக் கூடித் தம்மூர் திரும்பியுள்ளனர்.

**நீர் அலைக் கலைஇய கூழை வடியாச்**

**சாஅய் அவ் வயிறு அலைப்ப, உடன் இயைந்து**

**ஓரை மகளிரும், ஊர் எய்தினரே** (நற். 398: 3–5)

நீரில் ஓரையாடிய மகளிர் தாங்கள் அன்புவைத்த அப்பாவையை இழந்துவிட்டதால் விளையாட்டாகத் தங்கள் வயிற்றில் அறைந்து கொண்டு மாலை நேரத்தில் ஊர் திரும்பினர் என்றும் கூறலாம்.

மற்றொரு பாடலில், நீரில் ஓரை விளையாடியதால் பரதவப் பெண்களின் உடல் முழுவதும் நனைந்ததோடு கூந்தலும் நனைந்தது. இதனை,

**நெடுந்தொடை வேய்ந்த நீர்வார் கூந்தல்**

**ஓரை மகளிர் அஞ்சி ....... ............ ............** (குறுந். 401: 2–3)

என்ற வரிகள் விளக்குகின்றன. நீரில் பரதவ மகளிர் ஓரையாடிய சிறப்பை விரிவாகக் குறிப்பிடும் செ.அ. முத்துக்கிருஷ்ணன்:

நிலத்தில் ஆடிய மகளிர் ஓரைப்பாவையை எடுத்துக்கொண்டு கடலில் அல்லது நீர் நிலைகளில் இறங்கினர். நீரில் பாவையை மிதக்கவிட்டிருக்கலாம். குளிக்கும் ஆழத்தில் நின்று கொண்டு மிதக்கும் பாவையை ஒருவருக்கொருவர்

தள்ளி விளையாடியிருக்கலாம். நீரில் மிதக்கும் போது அலைகளால் தள்ளி அலைக்கழிக்கப்படும் பாவையைத் தங்கள் பக்கம் தள்ள மகளிர் அதைப் பற்றி வர முயற்சி செய்ய அவ்விளையாட்டு மகிழ்ச்சி மிக்கதாக அமைந்தது. தன் கையில் பாவை கிடைக்கவில்லை என்றால் சலிப்படையாது திரும்பத் திரும்ப முயற்சி செய்து பாவையைக் கைப்பற்றுவதிலேயே எல்லோரும் குறியாக விளையாடினர். இவ்வாறு விளையாடுவதற்குப் பாவை தண்ணீரில் மிதக்கக் கூடியதாக இருக்கவேண்டும். இதற்காகத்தான் பாவை செய்ய எத்தனையோ மூலப்பொருள் இருக்க நீரில் மிதக்கக் கூடிய பஞ்சுபோன்ற மென்மையான கோரை அல்லது மலர்த்தாது[15] இவைகளைப் பயன்படுத்தினர் என்று நீரில் ஓரை ஆடியமுறை பற்றிய பல செய்திகளை விளக்கமாகத் தருகிறார்.

**சிற்றில் இழைத்தல்**

மகளிர் மணலால் சிறிய வீடுகளைக் கட்டி விளையாடுவது சிற்றில் விளையாட்டு[16] ஆகும்.

கடற்கரையில் ஈரமணலைக் கொண்டு வீடுகட்டி விளையாடுவது இக்காலங்களிலும் உள்ள ஒரு விளையாட்டாகும். இவ்விளையாட்டைப் பரதவ இளம் பெண்கள் பலர் சேர்ந்து விளையாடிள்ளனர். சான்றாக நற்றிணைப் பாடலில், மகளிர் பலர் சேர்ந்து சிற்றில் இழைத்து விளையாடினர். அவ்வாறு கட்டிய சிற்றிலைப் பல வகையில் அழகும் செய்துள்ளனர்.

**வரி புனை சிற்றில் பரி சிறந்து ஓடி** (நற். 123:8)

மகளிர் இயல்பாகவே எந்தவொரு நிகழ்வையும் அழகோடு பார்க்கக் கூடிய பண்புடையவர்கள். அவ்வகையில் மேற்கண்ட வரிகளில் பெண்கள் தாங்கள் அமைத்த சிற்றிலைப் பலநிலைகளில் அழகு செய்துள்ளனர். வரி புனை சிற்றில் என்பதால் கோலமிட்டும் மலர்கள் மற்றும் கடற்கரையில் மலிந்து கிடக்கும் சோழிகளால் அழகு செய்திருப்பர் எனக் கொள்ளலாம்.

மேலும், இச்சிற்றலைப் புனைந்து விளையாடிய மகளிர் தம் தோழியருடன் காலை வேளையில் புனைந்துள்ளனர்.

**கானல் ஆயமொடு காலைக் குற்ற**

**கள் கமழ் அலர தண் நறுங் காவி** (நற். 123:ரு 5–6)

என்னும் நற்றிணை வரிகள் உறுதிப்படுத்துகின்றன. சிற்றிலைக் காலைவேளையில் புனைந்த மகளிர், அதில் சோறு சமைத்தும் மகிழ்ந்துள்ளனர்.

**சிற்றில் இழைத்தும் சிறு சோறு குவைஇயும்** (அகம். 110:6)

இத்தகைய மகளிர் சிற்றில் புனைந்து விளையாடிய இடத்திற்கு அவர்தம் காதலர் வருவதும் உண்டு. தலைவி சிற்றிலிழைத்து விளையாடும் போது அங்கு தலைவன் வர இருவரும் நட்புக் கொண்டனர்.

**கடல் ஆடு மகளிர் கானல் இழைத்த**

**சிறுமனைப் புணர்ந்த நட்பே ...............** (குறுந். 326. 2–3)

இவ்வாறாகத் தொடர்ந்த நட்பே தலைவன் தலைவியின் களவு வாழ்விற்கும் வித்திட்டது எனலாம். சான்றாக அகநானூற்றுப் பாடலில், கடற்கரையில் தலைவி சிற்றில் புனைந்து சோறாக்கி விளையாடுகிறாள். அவ்வழி வந்த தலைவன் விளையாட்டைக் காரணமாக்கி நட்புகொள்கிறான்.

(அகம். 110: 10–14)., (அகம். 230: 8–10)

இவ்வாறு மகளிர் விளையாடிய சிற்றில் விளையாட்டு மகளிரின் பொழுதுபோக்காக இருந்ததோடு தன் காதலனைத் தேர்வு செய்யும் களவுக் களமாகவும் இருந்துள்ளது.

**வண்டலம் பாவை**

நீரோரங்களில் படிந்து கிடக்கும் மணலை அலைத்து விளையாடும் விளையாட்டு இது. மணலெடுத்துப் பாவை செய்து விளையாடுவது[17] இவ்விளையாட்டின் சிறப்பாகும்.

இவ்விளையாட்டில் செய்யப்படும் பாவை மண்ணாலும் வண்டலாலும் செய்யப்படுவது[18] என்று பி.எல். சாமி குறிப்பிடுகிறார்.

வண்டலம் பாவை செய்ய பயன்படும் வண்டல் மண்ணைப் பற்றிக் குறிப்பிடும் திராவிடச் சொல்லகராதி,

வண்டல் என்பது ஆறு, ஏரியின் கரையோரத்தில் அடித்து ஒதுக்கப்பட்ட படிவு, சகதி அல்லது சேறு. இது மிகவும் நுண்மையானதாகவும், கைகளில் பிசைந்து, வளைத்து, நெளித்து வேண்டிய உருவம் செய்வதற்கு மிக ஏற்றதாக இருக்கிறது[19] என்று இம்மண்ணைப் பற்றிக் கூறுகிறது.

இத்தகைய வண்டலம் பாவை விளையாட்டினை நெய்தல் நில குடும்பங்களில் வாழ்ந்த நுளையர் இளமகளிரும் ஆடியுள்ளனர்.

**விளையாடிய இடம்**

நெய்தல் பாடல்கள் வழி பரதவ இளமகளிர் வண்டல் பாவையை மண் மற்றும் களிமண்ணால் உருவாக்கிக் கடற்கரைச் சோலையிடத்தும், புன்னை மரத்து நிழலிலும், அலை வந்து மோதுகின்ற கடற்கரைப் பகுதியிலும் வைத்து விளையாடியுள்ளனர்.

உதாரணமாகப் பரதவ இளமகளிர் கடற்கரையில் ஞாழல் மரத்தின் நிழலில் வண்டற்பாவை வைத்து விளையாடியுள்ளனர். அவ்வாறு மகளிர் ஆடிய பாவையின் மீது ஞாழலின் மணம்மிக்கப் பூந்தாது உதிர்ந்து பாவையின் கொங்கையில் (மார்பில்) படிந்தது என்று நற்றிணை வரிகள் இவ்விளையாட்டை விளக்கி நிற்கின்றன.

**சிறுவீ ஞாழல் தேன் தோய் ஒள் இணர்**
**நேர் இழை மகளிர் வார் மணல் இழைத்த**
**வண்டற் பாவை வனமுலை முற்றத்து**
**ஒண் பொறிச் சுணங்கின் ஐது படத் தாஅம்** (நற். 191: 1–4)

இவ்வரிகளிலிருந்து பாவையை ஈரக் களிமண்ணால் செய்தனர் என்பதும், பூந்தாது மார்பில் படியும் அளவிற்குப் பாவை பெரிதாகச் செய்யப்பட்டது என்பதும் தெரிகிறது.

மேலும், வண்டல் பாவை செய்வதற்குக் களிமண்ணைப் பயன்படுத்தியதோடு, மணலையும் பயன்படுத்தியுள்ளனர். சான்றாக, தலைவி ஒருத்தி கடற்கரையில் வண்டற்பாவை செய்து விளையாடினாள். அவள் செய்த பாவையைக் கடல் கவர்ந்து சென்றது. அதனால் வெகுண்ட தலைவி, நுண்ணிய மணற்பொடியை வாரிக் கடலில் வீசித் தூர்க்க முயன்றாள். இதனை,

**வண்டற்ப பாவை வௌவலின்,**
**நுண் பொடி அளை இக் கடல் தூர்ப்போளே!** (ஐங். 124: 2–3)

என்ற வரிகள் புலப்படுத்துகின்றன. மேலும், மகளிர் ஆற்றோரங்களிலும், கடல் அலை மோதுகின்ற நீர் ஓரத்திலும் வைத்து விளையாடிய வண்டற் பாவையை ஆறும், கடலும் கொண்டு சென்ற நிலையில், அப்போதெல்லாம் மகளிர்

பெருவருத்தம் கொண்டு அழுதனர். இதனால் பாவை மீது அவர்கள் கொண்ட பேரன்பு புலப்படும். இத்தகைய பேரன்பு கொண்ட பாவையை அழகோடும் பார்க்க மகளிர் விரும்பியுள்ளனர். குறுந்தொகைப் பாடலில், தலைவி ஒருத்தி தான் புனைந்த வண்டல் பாவைக்கு அடும்பின் மலர்களை அணிவித்து மகிழ்ந்து விளையாடியுள்ளாள்.

**-------- ---------- -------- -------- அடும்பின்**

**தார்மணி அன்ன ஒண்பூக் கொழுதி**

**ஒண்தொடி மகளிர் வண்டல் அயரும்** (குறுந். 243: 1–3)

இத்தகைய அழகுபடுத்தப்பட்ட பாவையை மகளிர் தான் பெற்ற மகவாகவே நினைந்து மகிழ்ந்து போற்றியுள்ளனர். சான்றாக குறுந்தொகைப் பாடலில், தலைவி வண்டல் பாவை செய்து, அதனை நெய்தல் மலர்களைப் பரப்பி அதன் மீது கிடத்திவிட்டுத் தலைவனைக் காணச் சென்றுள்ளாள். இவ்வாறு தலைவனைக் காணச் சென்ற தலைவியை விடுத்து நீங்கும் தோழி, தலைவனிடம், மாலைப்பொழுதில் வயிறு நிறைந்த நாரைகள், என் மகளாகிய வண்டல்பாவையின் நெற்றியை மிதித்துச் செல்லும். எனவே, விரைவில் தலைவியை அனுப்பு என்றாள்.

**நெய்தல் பரப்பில் பாவை கிடப்பி,**

**நின்குறி வந்தனென், இயல் தேர்க் கொண்க**

**-------- --------- ---------- --------- ---------**

**ஆரல் அருந்த வயிற்ற**

**நாரை மிதிக்கும் என் மகள் நுதலே** (குறுந். 114: 1–5)

மேற்சுட்டிய வரிகளால் மீனவ இளமகளிர் தாம் செய்த வண்டல் பாவையைத் தம் மகளாகப் பாவித்துப் போற்றும் பேரன்பு கொண்டிருந்தனர் என்பதை அறியலாம்.

மேலும், இவ்விளையாட்டைப் பரதவ மகளிர் விளையாடிய இடங்களுக்குத் தலைவனும் வந்துள்ளான். அகநானூற்றுப் பாடலில், தலைவி பாவை செய்வதற்குத் தலைவன் உதவியதுடன், அதனை அலங்கரிக்க மலர் கொய்து கொடுத்தும் அவளுக்கு வேண்டிய உதவிகளையும் செய்துள்ளான்.

**கழிப்பூக் குற்றும், கானல் அல்கியும்**

**வண்டற் பாவை வரிமணல் அயர்ந்தும்** (அகம். 330: 1–2)

இதிலிருந்து தலைவன் தலைவியின் காதல் வாழ்விற்கு வண்டல் பாவை விளையாட்டும் வாயிலாக இருந்துள்ளது என அறியமுடிகிறது.

**விளையாடிய முறை**

மகளிர் பலர் சேர்ந்து வண்டற் பாவை வைத்து விளையாடிப் பொழுது போக்கினர். கடற்கரையிலும், இல்லத்திலும் மணல்மேட்டிலும் வண்டல் மண் கிடைப்பதில்லை. வண்டல்மண் கிடைக்கக் கூடிய ஆற்றங்கரை ஏரி போன்ற இடங்களிற் சற்று அளவில் சிறிய பாவையைச் செய்து விளையாடுமிடத்துக்கு எடுத்து வந்து விளையாடினர். அல்லது வண்டல் மண்ணை விளையாடுமிடத்துக்கு கொண்டு வந்து பெரிய பாவைகளைச் செய்திருக்கவேண்டும். நீர்த்துறை, ஆற்றங்கரை போன்ற இடங்களில் வண்டல் பாவையைச் செய்து அங்கேயே விளையாடினர்[20] என்ற செ.அ. முத்துக்கிருஷ்ணன் அவர்களின் விளக்கத்தால் ஆடிய முறையை அறியலம்.

**அலவனாட்டம்**

மயிலாட்டம், குரங்காட்டம் என்பது மனிதர்களால் மயில்போல, குரங்குபோல ஆடப்படும் ஆட்டமாகும். அலவன் ஆட்டம் என்பது அலவன் போல ஆடுவது இல்லை. அலவனைப் பிடித்து மகளிர் ஆடும் விளையாட்டு அலவனாட்டம் எனப்படும். நெய்தல் நிலக் கடற்கரையில் மலிந்து வசித்த அலவனைப் பிடித்து இவ்விளையாட்டைப் பரதவ இளம்பெண்கள் விளையாடியுள்ளனர்.

**அலவன் ஆடிய மகளிரின் நிலை**

நண்டு நீர்நிலையின் கரையில் வளையமைத்து வாழக்கூடிய ஒரு சிறு உயிரி. எனவே, அவை வசிக்கக் கூடிய கரையில் அலவன் பிடித்தாடப்பட்டது. மணலடர்ந்த கடற்கரையிலும், புன்னை மரத்து நிழலிலும் பரதவப்பெண்கள் அலவனை ஆட்டி மகிழ்ந்துள்ளனர். எடுத்துக்காட்டாக அகநானூற்றுப் பாடலில், கடற்கரை மணற்பரப்பில் தலைவி அலவன் ஆடிய சிறப்பினைப் பின் வரும் வரிகள் புலப்படுத்துகின்றன.

**பல்மலர் வேய்ந்த நலம்பெறு கோதையள்**

**திணிமணல் அடைகரை அலவன் ஆட்டி** (அகம். 280: 2–3)

மேலும், ஓரை ஆடிய மகளிரும் நண்டைப் பிடித்து விளையாடியுள்ளனர். அவ்வாறு விளையாடிய மகளிர் நண்டினைத் துரத்த அவர்களுக்கு அஞ்சிய

அந்நண்டு கடலில் சென்று ஒளிந்து கொண்டது என்பதைக் குறுந்தொகை வரிகள் விளக்குகின்றன.

**ஓரை மகளிர் அஞ்சி ஈர் ஞெண்டு** (குறுந். 401 : 3)

இவ்விளையாட்டை மகளிர் கடற்கரையில் ஆடியதோடு, புன்னை மரநிழலிலும் ஆடியுள்ளனர்.

**இன்இணர்ப் புன்னை அம் புகர் நிழல்**

**பொன்வரி அலவன் ஆட்டிய ஞான்றே** (குறுந். 303 : 6–7)

இவ்வாறு அலவன் ஆடிய மகளிர், அலவன் வளையிலிருந்து வெளியே வராத நேரங்களில் அது மறைவாகத் தங்கியிருக்கும் வளையில் கையைவிட்டு எடுத்து வந்து ஆர்வமுடன் ஆட்டி விளையாடியுள்ளனர்.

**-------- ---------- --------- கல்லென**

**வலவன் ஆய்ந்த வண் பரி**

**நிலவு மணல் கொட்டும் ............** (அகம். 20: 14–16)

அலவன் ஆடிய நுளையர் மகளிர் சிறிது நேரத்தில் மிகவும் களைப்படைந்தனர். அவர்களால் ஆடப்பட்ட நண்டும் மிகவும் வருந்திச் சோர்வடைந்தது. அதன் துன்பத்தை உயர்ந்துவந்த அலைகள் நீக்கின.

**ஓரை மகளிர் ஓராங்கு ஆட்ட,**

**ஆய்ந்த அலவன் துன்புறு துனைபரி**

**ஓங்குவரல் விரிதிரை களையும்** (குறுந். 316: 5–7)

என்னும் குறுந்தொகை வரிகள் உணர்த்துகின்றன.

மேற்கண்ட வரிகளால், அலவனாட்டத்தை மகளிர் கடற்கரையிடத்தும், புன்னைமர நிழலிலும் ஆடினர் என்பதும், நண்டுடன் விளையாடும் போது அம்மகளிரும் ஓடி ஓடி ஆடியதால் களைப்படைந்தனர். நண்டும் துன்புற்றது எனலாம்.

**மகளிர் அலவன் ஆடியமுறை**

அலவனுடன் விளையாட்டினை மேற்கொண்டிருந்த மகளிர் அந்நண்டைப் பிடித்து எந்நிலையில் கையாண்டனர் என்பதை செ.அ. முத்துக் கிருஷ்ணன் சுட்டுகையில்,

மகளிர் கவனமாகவும் எச்சரிக்கையுடன் நண்டைப் பிடித்து முதலில் அதன் கடிகால்களால் தமக்குத் தீங்கு ஏற்படா வண்ணம் நூல் அல்லது நாறு கொண்டு கட்டியிருக்க வேண்டும். நண்டை ஆட்டும் பொருட்டு வேறுசில கால்களையும் கட்டியிருக்கலாம். ஒரு பக்கத்தில் உள்ள நான்கு கால்களையும் ஒரு சேரக் கட்டிவிட்டால் நண்டு செக்கு மாட்டைப்போல வட்டமாகச் சுற்றிச் சுற்றி வரும். எட்டுக் கால்களிலும் சிலவற்றை விட்டுச் சிலவற்றைக் கட்டுவதற்குத் தக அந்த அலவன் ஆடும்[21] என்பர்.

மகளிர் அலவன் ஆடிய முறைபற்றி ஐங்குறுநூற்றுப் பாடலில், தலைவி அலனாட்டும் போது வளையல்கள் ஒலிக்கக் கூந்தல் கன்னத்தின் இருபுறங்களிலும் வந்து வீழ்ந்து கண்களை மறைக்கின்ற நிலையில் விளையாடினாள் என்று கூறப்படுகிறது.

**இலங்கு வளை தெளிர்ப்ப அலவன் ஆட்டி**

**முகம் புதை கதுப்பினல், இறைஞ்சி நின்றோளே** (ஐங். 197. 1–2)

இவ்வரிகளால், அலவனாட்டும் மகளிரின் வளையல்கள் ஒலிப்பதும், கூந்தல் கன்னத்தை மறைப்பதையும் ஆய்ந்து நோக்கும்போது, மகளிர் அலவனைப் பிடித்துச் சில கால்களை நாரால் கட்டித் தரையில் விட்டு, கட்டப்பட்ட கால்களுடன் அது அஞ்சி முன்னே நடப்பதைக் கண்டு ஆடு ஆடு என்று, அதன் முன் கைகளை ஆட்டி ஆட்டிக் குதித்து மகிழ்ந்திருக்க வேண்டும். அஞ்சித் தத்தித் தத்தி ஓடும் நண்டினை மேலும் அச்சுறுத்தி ஆட்ட, தம் கைகளை ஆட்டி வளையல்களை ஒலிக்கச் செய்திருக்க வேண்டும். இதனால் வளையல்கள் ஒலிக்க முகத்தைத் தலைமுடி புதைத்தது எனலாம்.

மற்றொரு நற்றினை பாடலில், அலவன் ஆடிய மகளிர் வேறு கருத்தின்றி அதனுடன் தாங்களும் மகிழ்ந்து ஆடிக்கொண்டு சென்றனர். அதனால் அவர்கள் அணிந்திருந்த தழையாடை சிதைந்தது; மாலைகள் வாடின; வளையல்கள் கழன்றன; அணிந்திருந்த சிலம்பு உடைபட்டது.

**பைந்தழை சிதைய, கோதை வாட**

**நன்னர் மாலை, நெருகை, நின்னொடு**

**சில விளங்கு எல் வளை ஞெகிழ**

**அலவன் ஆட்டுவோள் சிலம்பு ஞெமிர்ந்து எனவே** (நற். 363: 7–10)

மேற்சுட்டிய வரிகளால், அலவனாட்டும் மங்கையின் சிலம்பு உடைபட வேண்டும் என்றால், அவள் பாதங்களை விரைவாக ஆட்டி ஆடியிருக்கவேண்டும். அலவன் கட்டப்பட்ட கால்களுடன் விரைந்து செல்ல விரையும் போது, நொண்டியைப் போல விழுந்து விழுந்து ஆடியிருக்கவேண்டும். அதைக்கண்டு மகிழ்ச்சியடைந்த மகளிர் ஆடுஆடு என்று கூறித் தங்களை மறந்த நிலையில் குதித்து இருக்கவேண்டும். அப்போது அத்தலைவியின் சிலம்பு உடைந்திருக்கலாம்.

இவ்வாறு அலவனைப் பிடிப்பதாலும், அலவன் ஆடும்போது மகளிரும் கைகளை ஆட்டியும் குதித்தும் அலவனுடன் சேர்ந்து ஆடியதாலும் அவர்கள் களைப்பெய்தினர். எனவே அலவனாட்டம் என்பது உடலுக்கு மிகுந்த உழைப்பைத் தருவது என்பது அறியப்படுகிறது.

**அலவன் ஆடிய நேரம்**

நண்டு குளிர் நீரில் வாழுமாகையால், கதிரவன் வெப்பமுடன் காயும் பகல் நேரத்தில் அது கரைக்கு வருவதில்லை. வெயில் ஏறாத காலை நேரத்திலும் வெயில் தாழ்ந்த மாலை நேரத்திலும் நண்டுகள் கரைக்கு வருவதுண்டு. ஆகையால் அலவனாட்டம் காலை நேரத்திலும், மாலை நேரத்திலும் நடைபெற்றிருக்கவேண்டும்[22].

**ஊஞ்சல் விளையாட்டு**

**ஊஞ்சலின் தோற்றம்**

நாகரிகமில்லாத வேட்டை வாழ்க்கையை மேற்கொண்டிருந்த காலத்தில் மனிதன் இரவில் தூங்கும் போது காட்டு விலங்குகள் தாக்கும் என்ற அச்சத்தால் உயர்ந்த மரக்கிளைகளில் உறங்கினான். உறங்கும்போது சிலநேரங்களில் மரக்கிளையிலிருந்து நழுவிக் கீழே விழுந்துவிடக்கூடிய நிலைமைகள் ஏற்பட்டன. நழுவிக் கீழே விழாது உறங்கவேண்டும் என்பதற்காகக் கிளைகளிலிருந்து நீண்டு தொங்கும் விழுதுகள் மற்றும் கிளைகளைப் பற்றிக் கிடக்கும் கொடிகள் ஆகியவற்றைப் பிணைத்துக் கட்டி அதில் உறங்கினான். காற்று விசையாக அடிக்கும் போது கிளைகள் ஆடின. படுத்த நிலையில் முன்னும் பின்னும் மனிதனும் ஆடினான். அவ்வாட்டத்திலேயே ஓர் இதமான சுகம் ஏற்பட்டதை உணர்ந்தான். பிறகு வசதியாகக் கட்டிக்கொண்டு பகல் நேரத்திலும் ஆடினான். இவ்வாறாக ஊஞ்சல் விளையாட்டுத் தோற்றம் பெற்றது[23].

**ஊஞ்சலின் அமைப்பு**

வேங்கை, அசோகு, ஞாழல், ஆல் போன்ற உறுதியான மரக்கிளைகளில் நீண்ட கயிறுகளைக் கட்டித் தொங்கவிட்டு கயிறுகளின் நுனியில் அமர்ந்தாடுவதற்கான அமைப்பைக் கட்டினர்[24].

இவ்வாறு மரங்களில் கயிறுகளைக் கட்டி ஊஞ்சலாடும் விளையாட்டினை ஐவகை நிலங்களில் வாழ்ந்த மக்களும் ஆடினர். இந்நிலங்களில் கடல் சார்ந்து வாழ்ந்த பரதவப் பெண்களும் மிகுதியாக ஊஞ்சல் விளையாட்டினை மேற்கொண்டுள்ளனர்.

சான்றாக அகநானூற்றுப் பாடலில், பரதவ இளம் பெண்கள் ஞாழல் மரத்தின் விழுதால் கயிற்றைக் கட்டி ஊஞ்சலாடியுள்ளனர்.

**ஞாழல் ஓங்கு சினைத் தொடுத்த கொடுங்கழித்**

**தாழை வீழ் கயிற்று ஊசல் தூங்கி** (அகம். 20: 5–6)

கலித்தொகைப் பாடலில் ஊஞ்சலின் அமைப்பைப் பற்றி விளக்கும் நல்லந்துவனார், உறுதியான மரத்தில் கட்டப்பட்ட கயிற்றால் கீழே சினத்தை உடைய சுறாமீனின் மருப்பாற் செய்த பலகையைக் கோத்து அமைத்த ஊசற் பலகையை பரதவ மகளிர் நெய்தல் கொடியின் நெடிய நாரினால் கயிறு தொடுத்து அழகுறக் கட்டி, தாழையின் விழுதால் திரித்த ஊஞ்சற் கயிறு அமைத்து ஊஞ்சலை அமைத்துள்ளனர். இவ்ஊஞ்சலைத் தோழியே அமைத்துள்ளாள். தோழியால் அமைக்கப்பட்ட ஊஞ்சலில் ஆடினாள் தலைவி என விளக்குகிறது.

**இனமீன் இகல் மாறவென்ற சினமீன்**

**எறிசுறா வான் மருப்புக் கோத்து நெறி செய்த**

**நெய்தல் நெடு நார்ப் பிணித்து யாத்து .........**

**---------- ----------- ------------ ---------------**

**தாழாது உறைக்கும் தடமலர்த் தண்தாழை**

**வீழ்ஊசல் தூங்கப் பெறின்** (கலித். 131: 6–14)

**ஆடியமுறை**

பெரும்பாலும் பரதவ இளமகளிர்தான் ஊஞ்சலாடியுள்ளனர். மகளிர் தனியாக ஆடும்போது தாங்களே ஊஞ்சலில் அமர்ந்து கொண்டு தொங்கும் கால்களால் தரையை மிதித்து உந்தி ஊஞ்சலை ஆடச் செய்வர். இவ்வாறு

ஆட்டும்போது ஊஞ்சல் முழு அளவில் ஆடாது சிறிது தூரமே ஆடும். ஒருவர் ஊஞ்சலில் அமர மற்றவர் ஆட்டிவிட்டால் நீண்ட தூரம் ஆடி ஆடுபவருக்கு மகிழ்ச்சியைக் கொடுக்கும். நெய்தல் நிலத்தில் வாழ்ந்த இளம்பெண்களும் ஒருவர் ஊஞ்சலில் அமர மற்றொருவர் ஆட்டி மகிழ்ச்சியூட்டியுள்ளனர். இவ்வாறு ஊஞ்சலாடும் போதுபாட்டும் பாடியுள்ளனர். சான்று பகரும் கலித்தொகைப் பாடலில் தலைவி அமர தோழி ஊஞ்சலை ஆட்டினாள். ஆட்டிய தோழியே பாடலும் பாடியுள்ளாள். இதனை,

**......... ........... ................ .......... நின் ஊசல்**

**கடைஇ யான் இடுப்ப, நீடு ஊங்காய், தடமென்தோள்**

**நீத்தான் திறங்கள் பகர்ந்து** (கலித். 131: 12–14)

**.......... ............. ............. யாம் பாடும்**

**அசவரல் ஊசல் சீர் அழித்து ஒன் பாடித்தை** (கலித். 131: 33–34)

என்னும் கலித்தொகை வரிகள் புலப்படுத்துகின்றன. மேலும், தலைவியும் தோழியும் ஊஞ்சல் ஆடிய நிகழ்வின் போது, தலைவன் அவ்விடத்திற்கு வந்துள்ளான். வந்தவன் தோழி ஆட்டிய ஊஞ்சலைத் தான் ஆட்டுவித்து மகிழ்வித்துள்ளான்.

**தான் ஊக்கினான், அவ்ஊசலை வந்தே** (கலித். 131:46)

**கடற்கரையில் பொழுதைக் கழித்தல்**

கடற்கரை வலிமையுடைய கடலால் அலைக்கப்பட்ட மணல் விரவிய அடைகரையாகும். பொங்கியெழும் திரை மோதியதால் திரண்ட வெண்மணல் அடைகரை[25] என்று கடற்கரையின் திரண்ட மணல் பரப்பைப் பற்றிக் கூறுகிறார் பேராசிரியர் தி. முத்துகண்ணப்பன்.

மென்மையான நுண்மணல் கடற்கரையானது பரதவ மக்களின் விளையாடும் இடமாகவும், பொழுதுபோக்கும் இடமாகவும் இருந்துள்ளது. கடற்கரையில் அமர்ந்து கடல் நீரிலிருந்து வரும் குளிர்ந்த காற்றை உடலில் வாங்கி அதன் சுகத்தை அனுபவிக்கக் கூடிய நிகழ்வானது காலம் காலமாக இருந்து வருகிற ஒன்று. அவ்வகையில் பரதவப் பெண்கள் கடற்கரையில் இன்பமாகப் பொழுதைப் போக்கியும் விளையாடியும் உள்ளனர்.

சான்றாக நற்றிணைப் பாடலில், தலைவி தன் தோழியருடன் கடற்கரையில் விளையாடியுள்ளாள்.

**இளையர் ஆடு தளை அவிழ் கானல்** (ஐங். 198:2)

**கழி சூழ் கானல் ஆடியது** (நற். 27:4)

**ஒழி திரை வரித்த வெண் மணல் அடைகரைக்**

**கழி சூழ் கானல் ஆடியது அன்றி** (நற். 27: 3–4)

இவ்விளையாட்டை மகளிர் தம் தோழியரோடு ஆடியதுடன் தன் மனம் கவர்ந்த தலைவனுடனும் விளையாடியுள்ளனர்.

**நுண் மணல் அடைகரை நம்மோடு ஆடிய**

**தண்ணந் துறைவன் மறைஇ** (ஐங். 115: 2–3)

கடற்கரை இளம்பெண்கள் தங்கள் தோழியர் மற்றும் தலைவனுடன் விளையாடும் இடமாக இருந்ததுடன், பரதவக் குடும்பங்களில் கணவன்மார்களுக்கு மீன்வேட்டை மிகுதியாக வாய்த்தால் அதன் மகிழ்ச்சியை தம் மனைவி மற்றும் சுற்றத்தாருடன் இருந்து இன்பமாகப் பொழுதைக் கழிக்கும் இடமாகவும் இக்கடற்கரை விளங்கியுள்ளது.

**துணை புணர் உவகையர் பரத மாக்கள்**

**இளையரும் முதியரும் கிளையுடன் துவன்றி** (அகம். 30: 3–4)

**மணல் மேட்டில் விளையாடல்**

கடற்கரையில் ஆங்காங்கே மணல் மேடுகள் விரவிக் கிடக்கும். அம்மணல் மேடுகளில் பரதவப் பெண்கள் அமர்ந்து இளங்காற்றை அனுபவித்துள்ளனர். விளையாடியும் உள்ளனர். அகநானூற்றுப் பாடல்களில் தலைவி, தன் தோழியர் கூட்டத்துடன் மணல்மேட்டில் ஏறி விளையாட்டில் ஈடுபட்டுள்ளாள். இதனை,

**கோதை ஆயமொடு குவவுமணல் ஏறி**

**வீததை கானல் வண்டல் அயர** (அகம். 180: 2–3)

**மணம்கமழ் இளமணல் எக்கர்க் காண்வர**

**கனம்கொள் ஆயமொடு புணர்ந்து விளையாட** (அகம். 250: 4–5)

இப்பாடல் வரிகள் உணர்த்துகின்றன. மேலும், இம்மணல் மேடுகளில் விளையாடிய தலைவி, தான் களவில் ஒழுகிய தலைவனுடனும் ஆடியுள்ளாள்.

**நுண் மணல் அடைகரை நம்மோடு ஆடிய**

**தண்ணந் துறைவன் மறைஇ** (ஐங். 115: 2–3)

மணல் மேடுகளில் விளையாடிய மகளிர் அத்தோடு நில்லாமல், மணலில் படர்ந்துள்ள கொடிகளில் உள்ள மலர்களைப் பறித்தும், அப்பூக்களில் படியும் வண்டினங்களைப் போக்கியும் விளையாடிப் பொழுதைப் போக்கியுள்ளனர்.

**குன்று ஓங்கு வெண்மணற் கொடி அடும்பு கொய்தும்** (நற். 254: 2)

**நுண் தாது உறைக்கும் வண்டினம் ஓப்பி**

**ஒழி திரை வரித்த வெண் மணல் அடைகரை** (நற். 27: 2–3)

இவ்விளையாட்டினை மேற்கொண்டிருந்த மகளிர் சில நேரங்களில் கடற்கரையில் அமர்ந்து கொண்டு கரையில் அமர்ந்திருக்கும் நாரைகளையும், கரை திரும்பும் படகுகளையும் எண்ணியுள்ளனர்.

எடுத்துக்காட்டாக நற்றிணைப் பாடலில், குருகுகளை எண்ணிய பரதவ மகளிரின் செயல் பின்வருமாறு குறிப்பிடப்படுகிறது. கடற்கரையில் மணல் குவிந்து இடிந்த பகுதியில் குருகுகள் தொகையாக அமர்ந்திருக்கும். அவற்றை எண்ணுவது மகளிர்க்குப் பொழுதுபோக்காக இருந்துள்ளது.

**நிலவுக் குவித்தன்ன மோட்டு மணல் இடிகரை**

**கோடு துணர்ந்தன்ன குருகு ஒழுக்கு எண்ணி** (நற். 159: 3–4)

மேலும், கடற்கரைச் சோலையில் குவிந்துள்ள உப்பு மேட்டில் ஏறிய பரதவ மகளிர் எம் தந்தையின் படகு இது; நும் தந்தையின் படகு அது என்று கடல் நீர்ப்பரப்பில் மீன் வேட்டைக்குச் சென்ற சுற்றத்தாரின் படகுகளை எண்ணுவதும் ஒருவிதப் பொழுதுபோக்காக இருந்துள்ளது.

**மடநோக்கு ஆயமொடு உடன் ஊர்பு ஏறி**

**எந்தை திமில் இது, நுந்தை திமில் என**

**வளை நீர்வேட்டம் போகிய கிளைஞர்**

**திண் திமில் எண்ணும்** ............. (நற். 331: 5–8)

இத்தகைய எண்ணும் தொழிலில் ஈடுபட்டிருந்த பெண்களுடன் மைந்தரும் உப்புமேட்டில் ஏறி நின்று, இருண்ட மாலைப்பொழுதில் கரைக்குத் திரும்பி வந்த படகுகளை எண்ணியுள்ளனர்.

**வருதிமில் எண்ணும் துறைவனொடு** (அகம். 190: 3)

**அலையோடு விளையாடல் நீராடல்**

கடற்கரை காலங்காலமாக ஒரு பொழுதுபோக்கிடமாக இருந்து வந்துள்ளது. நெயதல் பாடல்கள் வழி பரதவப் பெண்களின் பொழுதுபோக்கிடமாகவும் இக்கடற்கரை விளங்கியுள்ளது. இம்மகளிர் கடலின் நடுப்பகுதியில் அலை எழும்பி, சுருண்டு சுருண்டு வந்து, கரையில் மோதும் எண்ணற்ற அலைகளின் அழகைப் பார்த்துக் கொண்டே பொழுதுபோக்கியுள்ளனர். கரையில் வந்து மோதும் அலையில் கால் நனைக்க நின்றனர். இவ்வாறு வருகின்ற அலைகளை எதிர்த்து உதைப்பதும் நீராடுவதும் ஓர் இன்பமான பொழுதுபோக்காக இருந்துள்ளது. இப்பொழுதுபோக்கில் ஆண்களை விட மகளிரே விரும்பி ஈடுபட்டுள்ளனர்.

எடுத்துக்காட்டாக நற்றிணைப்பாடலில், தலைவி கடலிலே தோழியருடன் நீராடி மகிழ்ந்துள்ளாள்.

**துணி நீர்ப் பௌவம் துணையோடு** ஆடி (நற். 245: 4)

மேலும், மற்ற விளையாட்டுக்கள் வெறுப்பை உண்டாக்கிய நிலையில் தலைவி வெண்மையான திரையையுடைய கடலில் தோழியருடன் அச்சமின்றி பாய்ந்து விளையாடியும் மகிழ்ந்துள்ளாள்.

**வெண் தலைப் புணரி ஆயமொடு ஆடி** (அகம். 20:8)

**ஓங்கற் புணரி பாய்ந்து ஆடு மகளிர்** (நற். 395: 6)

**உரவுத்திரை உழக்கியும்** (பட். 101)

பெண்கள் விளையாடிய இவ்விளையாட்டுக்களில் எல்லாம் தலைவனும் பங்கேற்றுள்ளான். நற்றிணைப் பாடலில், களவுக் காலத்தில் தலைவி திரையுடன் எற்றி விளையாடும் போது தலைவனும் சேர்ந்து விளையாடியுள்ளான்.

**......... .......... வரு திரை உதைத்தும்** (நற். 254: 1)

மணல் நிறைந்த கடற்கரையில் பலவிதமான விளையாட்டுக்களில் ஈடுபட்ட நுளையர் மகளிரின் உடலில் மிகுதியான மணல் படிந்து இருக்கும். அம்மணலைப் போக்குவதற்கும், களைப்பை நீக்குவதற்கும் கடலில் இறங்கி நீராடியுள்ளனர். இதனையும் பின்வரும் நற்றிணைப் பாடல் வரிகளால் அறியலாம். இப்பாடலில் தலைவி தன் தோழியருடன் கடலில் நீராடியுள்ளாள்.

**துணி நீர்ப் பௌவம் துணையோடு ஆடி** (நற். 254: 4)

**கடல் ஆடு வியல் இடைப்போ் அணிப் பொலிந்த** (நற். 307: 3)

**குரவைக் கூத்து**

முல்லை, குறிஞ்சி, நெய்தல், பாலை நிலங்களின் மக்கள் அவரவர் இயல்புக்கும், வாழ்க்கை முறைக்கும் ஏற்ப இக்குரவைக் கூத்தை ஆடினர். குரவையாடுவதற்கு முன் மதுவுண்ணும் வழக்கம் சிலரிடம் இருந்தது. வேங்கை மர நிழலிலும், ஊர்ப்பொது மன்றத்திலும், கடற்கரை மணலிடத்தும் குரவைக் கூத்து நிகழ்த்தப்பட்டது[26].

கடலை ஒட்டி வாழ்ந்த பரதவ மகளிரும் கடற்கரையில் பல்வேறு விளையாட்டுக்களை ஆடித் திளைத்து இறுதியாகக் குரவைக் கூத்தை ஆடியுள்ளனர். இதனை,

**குப்பை வெண்மணல் குரவை நிறூஉம்** (ஐங். 181:3)

**கொண்டல் இடுமணல் குரவை முனையின்** (அகம். 20: 7)

இவ்வரிகள் சுட்டுகின்றன. இவ்விளையாட்டிலும் தலைவனும் பங்குகொண்டு கைகோர்த்து மாலையாகக் கூடிநின்ற பரதவப் பெண்களுடன் தழுவி அயரும் குரவைக் கூத்தை ஆடியுள்ளான்.

**தொடலை ஆயமொடு தழூஉ அணி அயர்ந்தும்** (குறுந். 294: 2)

என்னும் குறுந்தொகைப் பாடலடி இதை உறுதிப்படுத்துகிறது.

**ஆடைகள்**

மனிதனின் அடிப்படைத் தேவைகளில் இரண்டாவதாகக் கூறப்படுவது ஆடை. ஆடையில்லாத மனிதன் அரை மனிதன் என்பது பழமொழி. மனிதனுக்குச் சிறப்புச் சேர்க்கக் கூடிய இவ்வாடையை மனிதன் எந்த காலக்கட்டத்திலிருந்து முதலில் அணியத் தொடங்கினான் என்பதை அறுதியிட்டுக் கூற முடியாத நிலை உள்ளது. ஆடையின் தோற்றம் பற்றிக் குறிப்பிடும் கு. பகவதி கீழ்வருமாறு குறிப்பிடுகிறார்.

மக்கள் வாழ்வு முறையினைத் தெளிவுபடக் காட்டுவதில் ஒரு கூறான ஆடையின் தோற்றம் பற்றிய வரலாறு இன்றைய நிலையிலும் தெளிவாகாத ஒன்று. அறிஞர் பலர் பல எண்ணங்களைக் கூறிச் செல்கின்றனர். இவற்றுள் தட்ப வெப்ப நிலையைக் காரணமாகக் காட்டுதல் பரவலான கருத்தாகத் தென்படுகிறது[27] என்பார்.

தட்ப வெப்ப நிலையை விடவும் பொருட்களை அணிந்து கொள்வதில் உள்ள ஆர்வமே உடையின் தோற்றத்திற்கு அடிப்படை[28] என்பர் மாரீட்டா கெட்டுனென்.

இவரது கருத்தை வலுப்படுத்தும் அறிஞர் இரேட்சல்,

ஆடை தோன்றிய ஆரம்ப காலத்தில் அது குளிர் அல்லது நாணத்திற்காகப் பயன்பட்டதைவிட, ஒருவகை அணியாகவோ, காமம் அல்லது கவர்ச்சிப் பொருளாகவோ இருந்தது[29] என்கிறார்.

இவ்வறிஞர்களின் கருத்துக்களால் தட்பவெப்பநிலை மற்றும் அணிந்து கொள்வதில் உள்ள விருப்பத்தின் அடிப்படையினால் ஆடை தோன்றியது எனலாம். இவ்வாறு மக்கள் அணிந்த ஆடையை எதிலிருந்து பெற்றனர் என்பதைக் குறிப்பிடும் கு. பகவதி ,

இயற்கையோடு இயைந்து வாழ்ந்த மனிதன் முதலில் பயன்படுத்தியது இயற்கையினின்றும் கிடைத்த பொருட்களேயாம். இயற்கையாகக் கிடைத்த காய் கனிகளே புலாலுக்கு முன்னர் அவன் உண்ணும் பொருளாக இருந்திருக்க வேண்டும். இதைப்போன்று இயற்கை வழங்கிய இலை தழைகள், மரவுரியைப் பயன்படுத்திய பின்னரே, உணவுக்காகப் பெற்ற விலங்குகளின் தோலினை அவன் உடையாகவும் பயன்படுத்தியிருக்கவேண்டும்[30] என்கிறார்.

கே.கே. பிள்ளை ஆடை பற்றிக் கூறுகையில்,

பண்டைத் தமிழகத்தில் குறிஞ்சி, முல்லை, நெய்தல் நிலங்களில் வாழ்ந்த மக்கள் பூவையும் தழையையும் சேர்த்து ஆடையாக அணிவது வழக்கம்[31] என்பர்.

மேற்கூறிய அறிஞர்களின் கருத்துக்களால், பழந்தமிழ் மக்கள் இயற்கையில் கிடைத்த தழைகள் மற்றும் மலர்களால் ஆடை செய்து அணிந்துள்ளனர் எனலாம். இத்தழையாடையை மகளிரே அணிந்துள்ளனர். மகளிர் அணிந்ததற்கான காரணத்தைக் கூறும் கு. பகவதி கீழ்வருமாறு சுட்டிக்காட்டுவார்.

மகளிர் மென்மையானவர்கள் என்பதனால் மென்மையான பூக்களும் தழைகளும் விரவித்தொடுத்து அணிந்தனர். இதனால் இவை பூவையரின் உடைகளாக விளங்கக் காண்கிறோம் [32]என்கிறார்.

பொ.வே. சோமசுந்தரனார் குறுந்தொகை உரையில் குறிப்பிடுகையில்,

பண்டைக் காலத்தே மகளிர் இங்ஙனம் தழையாலே ஆடை இயற்றி உடுத்தும் வழக்கம் உடையவர்[33] என்று இக்கருத்தை உறுதிப்படுத்துகிறார்.

மேலும் அவர் விளக்குகையில், இவ்வாறு மகளிரால் அணியப்பட்ட தழையாடை எல்லா பருவமகளிராலும் பயன் கொள்ளப்படவில்லை[34] என்கிறார்.

அவர் கூறுவது போல, எப்பருவ மகளிர் அணிந்தனர் என்று ச. முருகானந்தம் கீழ்வருமாறு விளக்குவார்.

தழையணி அணிந்த மகளிரின் செயற்பாடுகளை நோக்க அவர்கள் இளமங்கையர் என்பது தெரிய வருகிறது. களவொழுக்கத்தில் ஈடுபட்டிருந்த கன்னியர், தினைப்புனம் காத்தோர், மீன் உணக்கல் காத்தோர், மீன் விற்றோர், இருப்பைப் பூ விற்றோர், கள் ஊட்டியோர், தோழியரோடு விளையாட்டயர்ந்தோர், காதலனோடு கணவனோடு புனலாடிக் களித்தோர். இற்செறிப்புக்கும் கண்காணிப்புக்கும் உரியராகி வருந்தியோர் எனக் காணலாகும் அனைவரும் இளமங்கையராகவே இருக்கின்றனர் என இளமகளிரே அணிந்தனர்[35] என்பர்.

அவ்வகையில் நெய்தல் நிலத்தில் வாழ்ந்த மகளிரின் ஆடை பற்றி அறிய முயலும்போது, கடற்கரையை ஒட்டியுள்ள இடங்களில் கிடைத்த தழைகள் மற்றும் மலர்களைப் பயன்படுத்தி ஆடை தயார் செய்து அணிந்துள்ளனர். இவ்வாடையை இளமகளிரே அணிந்துள்ளனர். சான்றாக நெய்தற் பாடல்கள் சிலவற்றைக் காண்போம்.

மீனவர் குடியில் பிறந்த அண்ணனின் அன்புத்தங்கை தழையாடை அணிந்துள்ளாள்.

**தழை அணி அல்குல் செல்வத் தங்கையர்** (அகம். 320: 3)

வரைவிடை காத்திருக்கும் தலைவி அணிந்துள்ளாள்.

**............ ................ ................ ஏர் தழை தைஇ** (கலித். 125: 12)

மேலும், இவ்வாடையைக் களவுக் காலத்தில் தலைவன் தலைவிக்கு அணிவித்துள்ளான். இதனை,

**கொடுங் கழி நிவந்த நெடுங்கால் நெய்தல்**
**அம்பகை நெறித் தழை அணி பெறத் தைஇ**
**தமியர் சென்ற கானல் ........... ................** (நற். 96: 7–9)

என்ற வரிகள் புலப்படுத்துகின்றன. இத்தகைய தழையாடையை அணிந்த மகளிர் தங்கள் நிலத்தில் கிடைத்த தழைகளையே பயன்படுத்தினர். தழையாடைக்குப்

பயன்பட்ட தழைகள் பற்றிக் குறிப்பிடும் ச. முருகானந்தம் கீழ்வருவனவற்றைக் குறிப்பர்.

வயலை, ஆம்பல், குவலை, நெய்தல், ஞாழல், கழுநீர், நொச்சி, அசோகு, வேங்கை, குருந்தம், இன்னபெயர் எனச் சுட்டப்படாத தழைகள் ஆகும். இவற்றில் அசோகு மட்டுமே செந்நிறமுடையது. மற்றவையனைத்தும் பசுமையானவை[36] என்கிறார்.

அவர் குறிப்பிடும் இத்தழைகளில் கிடைத்த பசிய இலைகளைக் கொண்டு இளம்பெண்கள் தங்களுக்குத் தேவையான தழையாடையை உருவாக்கியுள்ளனர். அவ்வகையில் நெய்தல் நில பரதவ பெண்களும் தங்கள் நிலத்தில் கிடைத்த இலைகளைக் கொண்டே தழையாடையைத் தயார் செய்துள்ளனர். இதனை,

**பைந்தழை** (நற். 363:7)

**பைந்தழை மா மகளிரொடு** (பட். 91)

என்ற வரிகள் புலப்படுத்துகின்றன. இவற்றில் பைந்தழை என்பது பசிய இலைகளைக் கொண்ட தளிர்களைக் குறிக்கும். இத்தளிர்களை இளம் பரதவமகளிர் காலையிலேயே சென்று பறித்துள்ளனர்.

**கானல் ஆயமொடு காலைக் குற்ற**

**கள் கமழ் அலர தண் நறுங் காவி**

**அம்பகை நெறித் தழை அணி பெறத் தைஇ (**நற். 123:5–7)

இவ்வாறு பறித்துவந்த தழைகளை அழகுபெறத் தொடுத்து அணிந்துள்ளனர். தழைகள் காலையில் பறிக்கப்பட்டதன் காரணம் விரைவில் வாடிவிடும் என்பதாலும், வாடிய தழைகள் தொடுப்பதற்குத் துவண்டு விடுவதால் நன்றாக இருக்காது என்பதாலுமாகும். இத்தகைய தழையாடையை அணிந்த இளமகளிர் தம் தழையாடைக்குத் தழைகளைப் பயன்படுத்தியதோடு மலர்களையும் பயன்படுத்தியுள்ளனர். மலர்களை எவ்வாறு பயன்படுத்தினர் என்பதனைக் குறிப்பிடும் ச. முருகானந்தம்,

தழைகளுக்கிடையில் ஆங்காங்கே நிரல்பட பூக்கள் வைத்துத் தொடுக்கப்பட்ட அழகிய நறுமணம் வீசும் தழையாடையைச் சங்க இலக்கியம் காட்டுகிறது[37] என்கிறார்.

மேலும், அவர் தழையாடைக்குப் பயன்படுத்திய மலர்களின் வகைகள் பற்றி பின்வருமாறு விளக்குகிறார்.

ஆம்பல், நெய்தல், குவளை, காந்தள், கஞ்சசங்குல்லை, மரா, வெண்கடம்பம்பூ, கொன்றை, ஞாழல், கழுநீர், வேங்கை, முல்லை, தோன்றி, பிடவம், காஞ்சி, துத்தி, புன்னை, தாழை, இன்னபூ எனப் பெயர் சுட்டாது கூறப்படும் பூக்கள் போன்றவை பயன்படுத்தினர்[38] என்கிறார்.

இவரது கருத்துப்படி மீனவ மகளிரும் தழையுடன் மலர்களைப் பயன்படுத்தித் தழையாடையைத் தயார் செய்து அணிந்துள்ளனர்.

சான்றாக அகநானூற்றுப் பாடலில் அழகிய மலர்களாலான பசிய தழையாடையை அழகு பொருந்த தலைவி தன் தோழியருடன் அணிந்து கொண்டாள்.

**.............. ............ ............ ஆயமொடு ஆடி,**

**மணிப் பூம் பைந் தழை தைஇ ............** (அகம். 20: 9–10).

இவ்வாறு பரதவ மகளிர் தாங்கள் தயாரித்த தழையாடைக்கு மற்ற தழைகளுடன் ஞாழல் தழைகளையே அதிகமாகப் பயன்படுத்தியுள்ளனர். சான்றாக ஐங்குறுநூற்றுப் பாடலில், கடற்கரைச் சோலையில் நிற்கும் ஞாழல் மரத்தின் அழகிய தழையால் செய்யப்பட்ட தழையுடையினை அணிந்திருந்தாள் தலைவி. இதனை,

**கானல் ஞாழற் கவின் பெறும் தழையள்** (ஐங். 191: 3)

என்னும் பாடல்வரி புலப்படுத்துகிறது. இன்னும் இரு பாடல்களில், தழையாடை அணிபவர் கொய்வதற்கு ஏற்ற வகையில் இலை தழைத்துத் தாழ்ந்து இளைய ஞாழல் மரம் நிற்கும்; இம்மரத்திலிருந்து தழைகளைப் பறித்து தங்கள் தழையாடையைத் தயாரித்துள்ளனர் மகளிர் எனச் சுட்டுகிறது.

**............ ........... ....... தழையோர்**

**கொய்குழை அரும்பிய குமரி ஞாழல்** (நற். 54: 8–9)

**.......... .......... ......... ஞாழல் மலர் இல்மகளிர்**

**ஒன் தழை அயரும் .......... ..........** (ஐங். 147: 1–2)

தழையாடைக்கு ஞாழல் தழைகளைஅதிகமாகப் பயன்படுத்திய பரதவப் பெண்கள் தங்கள் நிலத்தின் பெயரால் பெயர் பெற்ற, தங்கள் நிலத்தில் மலிந்து

கிடந்த நெய்தல் தழைகள் மற்றும் மலர்களைத் தாங்கள் அணிந்த தழையாடைக்குப் பயன்படுத்தியுள்ளனர். சான்றாக, கருநிற நெய்தலின் பெரிய மலரோடு தழையாடை அணிந்த தலைவி, தழையாடை அசைகின்ற அல்குலினைப் பெற்றவள் என அகநானூற்று வரிகள் எடுத்தியம்புகின்றன.

**சிறுகரு நெய்தற் கன்போல் மாமலர்ப்**

**பெருந்தண் மாத்தழை இருந்த அல்குல்** (அகம். 230: 1–2)

மேலும், தழையாடைக்கு நெய்தல் பூக்களைப் பயன்படுத்தும் மகளிர், விழாவிற்குத் தம்மை அலங்காரம் செய்து கொள்ளும் பொருட்டும் இம்மலர்களைப் பறித்துச் சேர்த்துள்ளனர்.

(அகம். 70: 10–12)

விழாவிற்கு அணியும் தழையாடையில் நெய்தல் பூக்களைப் பயன்படுத்தியதன் காரணம், அதன் அழகியல் கருதியும், தங்கள் நிலத்தில் மலிந்து கிடந்ததன் காரணமாகவும் இருக்கும்.

**தழையாடை உடலில் அணியப் பெற்ற இடம்**

தழைகளாலும் மலர்களாலும் தொடுத்து அணியப்பட்ட தழையாடை சங்கப் பாடல்கள் வழி உடலில் எவ்விடத்தில் அணியப்பட்டது? அல்குலினைச் சுற்றியே அணியப்பட்டது என்பதற்கான விளக்கத்தையே ஆய்வாளர்கள் சுட்டுகின்றனர். தழையாடை பற்றி விரிவாக ஆய்வு செய்த ச. முருகானந்தம் தழையாடை அணியப்பட்ட பகுதி பற்றி விளக்குகையில்,

இத்தழையாடை அல்குலினை முற்றிலுமாகச் சுற்றிலும் மறைத்து நின்றது. அல்குல் எனும் சொல் பெண்ணின் இடுப்பு முதல் திரண்டு நெருங்கிய துடைகள் வரையிலான பகுதியைக் குறிப்பதாகும். முன்புறம், பின்புறம், பக்கம் எனும் மூன்று பகுதிகளையுமே இச்சொல் குறித்து நிற்கிறது[39].

என அல்குலினைச் சுற்றியே அணியப்பட்டதாகக் கூறுகிறார். அவ்வகையில் பரதவப் பெண்களும் தாங்கள் தயாரித்த தழையுடையினை அல்குலினைச் சுற்றியே அணிந்துள்ளனர். சான்று பகரும் நெய்தற் பாடல்கள் சிலவற்றைக் காணலாம்.

**தழை அணி அல்குல் ............** (அகம். 320: 3)

**தழை தாழ் அல்குல் ..........** (குறுந். 345: 4)

**ஐது அகல் அல்குல் கவின்பெறப் புனைந்த**

**பல்குழைத் தொடலை ............** (அகம். 390. 6–7)

**தழை அணி அல்குல் மகளிருள்ளும்** (குறுந். 125: 3)

இவ்வரிகளால் தழையாடை பரதவ மகளிரின் அல்குல் பகுதியில்தான் அணியப்பட்டது என்பதை உறுதிப்படுத்துகிறது.

**கச்சு**

கச்சு என்பது இலக்கியச் சான்றுகளின் படி மார்பில் அணியப்பட்ட ஆடையாகக் கருதப்படுகிறது. கச்சு பற்றிக் குறிப்பிடும் முனைவர் கு. பகவதி கீழ்காணுமாறு விளக்குகிறார்:

'சங்க காலத்திலிருந்தே தமிழக மகளிர் மார்பு ஆடை கச்சு, வார், வம்பு என்று அழைக்கப்பட்டது. இவற்றிள் அதிக செல்வாக்குப் பெறுவது கச்சு ஆகும். வரிந்து கட்டிய ஆடை கச்சை என்று அழைக்கப்பட மார்பிலும் வயிற்றிலும் இறுகக் கட்டப்பட்டதன் காரணமாகக் கச்சு என வழங்கப்பட்டிருக்கலாம்' [40]என்கிறார்.

மகளிர் மார்பில் அணியும் ஆடையாகக் கச்சு இருந்தது என்பதைக் குறிப்பிடும் மு. சண்முகம் பிள்ளை,

பெண்கள் மார்பில் கச்சு கட்டும் பழக்கம் உடையவராய் இருந்தனர்[41] என்பார்.

இவ்வாறு மார்பில் அணியும் ஆடையை நெய்தல் நிலத்தில் வாழ்ந்த பரதவப் பெண்களும் அணிந்துள்ளனர். பரதவப் பெண் ஒருத்தி கச்சு அணிந்ததன் சிறப்பு நெய்தற் பாடலில் ஓர் இடத்தில் மட்டுமே பயின்று வந்துள்ளது. அவ்விடத்தில் கச்சைக் குறிக்கக் கூடிய சொல்லாக வம்பு என்பது பயின்று வந்துள்ளது. இதனை,

**----------- ------------ --------------- வம்புவிடக்**

**கண்டருத்து எழுதரு முலையும் .......** (அகம், 150: 2–3)

என்ற வரிகள் புலப்படுத்துகின்றன. மேலும், கச்சையும் இளம் மகளிரே அணிந்துள்ளர் என்பதையும் இவ்வரிகள் உணர்த்துகின்றன.

**அணிகலன்**

இறைவனின் படைப்பில் அழகான தோற்றம் உடையவன் மனிதன். இத்தோற்றத்தை அணிகலன்கள் அணிந்தும் ஒப்பனை செய்தும் மெருகூட்டிக்

கொள்கிறான். அணிகலன்கள் அணியும் பழக்கம் எவ்வாறு மக்களிடையே தோன்றியது என்பதைப் பற்றி மா. இராசமாணிக்கனார் தமது பத்துப்பாட்டு ஆராய்ச்சியில் கீழ்வருமாறு விரிவாக விளக்குகிறார்.

பண்டைக்கால மக்கள், தொடக்க காலத்தில் ஆடையோ அணியோ இல்லாதவராயிருந்த நிலை ஒன்றிருந்தது. பின்பு, அம்மக்கள் கண்ணுக்கினிய காட்சியை நல்கிய பலநிறத்தளிர் (குழை)களைக் காதில் செருகினார்கள். பலவகை விதைகளையும் கொட்டைகளையும் காதுகளில் கட்டித் தொங்கவிட்டார்கள்; பதப்படுத்தப்பட்ட புற்களையும் நார்களையும் முறுக்கிக் கையிலும் கழுத்திலும் தோளிலும் இடையிலும் முன்கையிலும் சுற்றிக் கொண்டார்கள்; பலவகை மலர்களையும் இலைத் தளிர்களையும் மாலையாகத் தொடுத்து மார்பிலும் இடையிலும் அணிந்து கொண்டார்கள் பலவகை மணிகளையும் பயன்படுத்தினார்கள்.

காலம் செல்லச் செல்லக் காதுகளில் செருகப்பட்ட குழை (தளிர்) காதுகளில் துளை செய்யப்பட்டு அணியப்பட்டது. அது காதோலை எனப் பெயர் பெற்றது. அரையல் அழகுக்காக அணிந்த நார் (கயிறு) அரைநாண் (அரைஞாண்) எனப் பெயர்பெற்றது. தோளில் சுற்றித் தொடுத்துக் கொள்ளப்பட்டது தொடி எனப்பட்டது. காதின் பல இடங்களில் ஒட்ட வைத்துக் கொள்ளப்பட்ட பூக்கள் கத்தரிப்பூ, இலவங்கப்பூ, முருகுப் பூ எனப் பலவாறு பெயர் பெற்றன.

தோடு – பூவிதழ். இது பனையோலையையும் குறிக்கும். இப்பெயர் காலப்போக்கில் தோடு எனப்பட்டது. முருகுப்பூ – மணம் நாறும்பூ. இதுபோன்ற அணி இக்காலத்தில் முருவுப்பூ எனப்படுகிறது. கொம்புப்பூ என்பது கொப்பூ என மருவிற்று. பண்டைய மக்கள் மரக்கொம்பில் உள்ள பூக்களை அணிந்து வந்தார்கள் என்பதை இது விளக்குகின்றது. திருகுப்பூ என்பது முறுக்குதலையுடைய பூவைக் குறிக்கும்.

பண்டைய மக்கள் அடுத்தபடியாக தாங்கள் அணிந்து வந்த நகைகளை மரத்தில் செதுக்கினார்கள்; பின்பு ஈயம் அல்லது செம்பை உருக்கி மர அச்சில் வார்த்தார்கள்; புற்களையும் நார்களையும் முறுக்கிக் கை, கழுத்து, இடை முதலிய இடங்களில் அணிந்தாற் போலவே, பொன், வெள்ளிக் கம்பிகளை முறுக்கிப் பல அணிகளைச் செய்தார்கள்; உலோகத் தகடுகள் கொண்டு பழங்களைப் போலவும், விதைகளைப் போலவும், இலைகளைப் போலவும் நகைகளைச் செய்தார்கள்;

ஆயின் அவற்றுக்கு முதற் பெயர்களையே இட்டு வழங்கினார்கள். அவை அரைஞாண், தொடி, குழை, மாலை, கத்திரிப்பூ, இலவங்கப்பூ, வளை எனப் பலவாறு பெயர் பெற்றன[42] என்பர்.

அறிஞரின் விளக்கத்தால் சங்க கால மக்கள் அணிந்த அணிகலன்களின் அறிமுகத்தை அறியமுடிகிறது. அவர்கள் அணிந்த அணிகள் எத்தகைய பெயர்களில் அழைக்கப்பட்டன என்பதைப் பின்வருமாறு அறியலாம்.

இழை என்பது இழைப்பு வேலைப்பாடு கொண்ட நகை, இழை எனப் பெயர் பெற்றது. பொன்னைக் கம்பிகளாக இழைத்துச் செய்யப்பட்ட நகை இழை எனப்பட்டது போலும்! கல்லிழைத்த நகை என்பது இக்கால வழக்கிலும் உள்ளதேயாகும். எனவே, பொன் வடங்களும் கல் இழைத்துச் செய்யப்பட்ட நகைகளும் இழை எனப் பெயர் பெற்றிருக்கலாம். காலப்போக்கில் இழை என்பது எல்லா நகைகளையும் குறிக்கலாயிற்று போலும்![43] என்று இழை என அழைக்கப்பட்டதன் காரணத்தைக் குறிப்பர் பொன் அழகு. கிருஷ்ணன்.

இழைத்துச் செய்யப்பட்ட அணிகலன்களைப் பழந்தமிழ் மகளிர் விரும்பி அணிந்தனர். கையில், கழுத்தில், மேனியில் என்று விதவிதமான அணிகளை அணிந்தனர். அவ்வகையில் கடற்கரையை ஒட்டி வாழ்ந்த பரதவ மகளிர் அணிந்த அணிகலன்கள் பற்றிய செய்திகளை ஆராயலாம்.

அணிகலன்களைப் பூண்பன, புனைவன என்ற இரு பகுப்புக்களில் அடக்கலாம். சங்க நெய்தற் பாடல்கள் வழி பூண்பன எவை, எவை புனைவன என்பவற்றை அறிய இயலவில்லை. என்றாலும் பரதவ மகளிர் காதில், காலில், கையில், தோளில் அணியப்பட்ட அணிகள் பற்றிய செய்திகள் இடம்பெற்றுள்ளன. பரதவப் பெண்கள் அணிந்த அணிகலன்கள் ஒள்ளிழை, நேரிழை, ஆயிழை, வால்இழை, திருந்திழை, நுணங்கு இழை, வயங்கு இழை, ஒள் இழை, சுடர் இழை போன்ற அடைச் சொற்களால் அறியப்படுகின்றன.

இவற்றில் ஒளிபொருந்திய இழை ஒள்ளிழை எனவும், தொழில் நேர்ந்த இழைகளை நேரிழை எனவும், இழைகளுள் ஆராய்ந்து எடுக்கப்பட்டது ஆயிழை எனவும், தூய அணிகலன்கள் வால் இழை எனவும், நுண்ணிய தொழிலை உடைய ஆபரணங்களை நுணங்கிழை, ஒளிவீசும் கற்கள் பதிக்கப்பட்ட அணிகலன்களை வயங்கு இழை, ஒள் இழை, சுடர் இழை எனவும் வழங்கப்பட்டது . இதனை,

.......... ............... .......... **ஒள்ளிழை** (கலித். 138:20; கலித். 122:16; ஐங். 122:2)

.......... **நேரிழை** ......... ............. (கலித். 139:31; நற். 382:6)

**ஆயிழை** ........... ......... ........... (கலித். 137:11;கலி. 148:21)

**வால் இழை** ........ ......... .......... (குறுந். 386:3; கலித். 119:14)

**திருந்து இழை** ........ ........ ......... (குறுந். 294: 6; கலித். 131: 2; கலித்.143: 23)

**நுணங்கு இழை** ........ ........ ........ (ஐங். 174:2)

**வயங்கு இழை** .......... ........ .......... (நற். 299:4)

**ஒள் இழை** .......... ........ .......... (நற். 155:1)

**சுடர் இழை** ....... ........ ......... (கலித். 138:12)

ஆகிய எடுத்துக்காட்டுகள் அணிகலன்களைக் குறிக்கவருவனவேயாகும்.

**காதில் அணியப்பட்ட அணிகள்**

காது ஒப்பனையில் முதலிடம் பெறுவது காதணியாகும். காதணி தோடு, குழை, ஓலை[44] போன்ற சொற்களால் பயன்படுத்தப்பட்டன. இச்சொற்களில் இன்று வழக்கில் தோடு என்ற சொல் பயன்படுத்தப்படுகிறது. அச்சொல்லைவிட கம்மல் என்ற சொல்லே பெருவழக்குப் பெற்று உள்ளது. குழை என்பது தொங்கலாக இடப்படும் காதணி எனப்பொருள்படும். இக்காதணி சங்க நெய்தல் பாடல்கள் வழி அந்நில மகளிர் அணிந்தவற்றைக் கனங்குழை, கொடுங்குழை என வழங்கப்பட்டு உள்ளது.

எடுத்துக்காட்டாக கலித்தொகைப் பாடல்களில்,கனங்குழை என்பது பொன்னால் செய்த காதணி எனவும், கொடுங்குழை என்பது வளைந்த குழை எனவும் இடம்பெற்றுள்ளது.

**கனங்குழை** (கலித். 142:14)

**கொடுங்குழை** (கலித். 132:18)

**காலணி**

சிலம்பு காலில் அணியப்படும் அணியாகச் சங்ககாலத்தில் விளங்கியுள்ளது. பண்டைக் கால இளமகளிர் சிலம்பினை விரும்பி அணியும் பழக்கத்தினைக் கொண்டிருந்தனர். இன்றும் காலில் தண்டை, கொலுசு அணிதல் தமிழரிடம் பரவலாகக் காணப்படுகிறது. சிறு குழந்தைகளுக்குத் தண்டைகளையும், கொலுசுகளையும் அணியச் செய்வர். மகளிர் கொலுசுகளை விரும்பி

அணிகின்றனர். அதேபோல் அக்காலத்தில் பரதவப்பெண்கள் காலில் சிலம்பு அணிந்துள்ளனர். இச்சிலம்பை இளம்பெண்கள் அணிந்துள்ளனர். இதனை,

**.......... .......... ........... சீறடிச்**

**சிலம்பு ஆர்ப்பா** ................ (கலித். 147: 3–4)

என்னும் கலித்தொகை வரிகள் புலப்படுத்துகின்றன. இன்று கொலுசுகளில் காணப்படும் ஒலியெழுப்பும் சதங்கைகள் போல அக்காலத்தில் அணியப்பட்ட சிலம்பில் உள்ளீடாக பரல்கள் ஒலியெழுப்பும் வண்ணம் அமைந்திருந்தன. சான்றாகக் கலித்தொகைப் பாடலில், ஒலி எழுப்பும் மணியுடைய சிலம்பணிந்திருந்தாள் தலைவி என்பதனை,

**இன்மணிச் சிலம்பின்** .............. (கலித். 125:16)

என்னும் பாடல்வரிகள் உணர்த்துகின்றது. மேலும், களவுக் காலத்தில் தலைவி தலைவனுடன் தன் காலில் அணிந்திருந்த சிலம்பு உடையுமாறு விளையாடியுள்ளாள்.

**அலவன் ஆட்டுவோள் சிலம்பு நெமிர்ந்து என**வே (நற். 363:10)

**கையணி**

கைகளில் அணியக்கூடிய அணிகளில் குறிப்பிடத்தக்கது வளையலாகும். கைகளில் வளையல் அணிந்துகொள்ளும் வழக்கம் பழங்காலத்தில் ஆடவர் மகளிர் இருவரிடமும் காணப்பட்டது. இன்று ஆடவரிடம் இந்த வழக்கம் இல்லை. இன்றைய காலக்கட்டங்களில் உள்ளது போல் வளையல்களை முன்னோர்கள் அணிந்துள்ளனர். அவ்வகையில் பரதவப் பெண்களும் பலவகையான வளையல்களை அணிந்து தங்களை அழகுபடுத்திக்கொண்டனர். அவை இறைவளை, நிரைதொடி, ஒண்தொடி, ஆய்தொடி, இலங்கு வளை, நிரைவளை, தொடிவளை, இலங்கு எல்வளை, செறிவளை, கடற்கோடு வளை, எல்வளை என்ற அடைச்சொற்களால் வழங்கப்பட்டுள்ளது.

நெய்தல் பாடல்கள் வழி பரதவப் பெண்கள் முன்கையில் அணிந்த வளையல்கள் இறைவளை எனவும்,

**இறை வரை நில்லா வளையும்** (நற். 263:2)

**இறைவளை** (அகம். 250:13)

**இறைவளை நெகிழ்ந்த** (கலித். 127:19)

நிரலாக வரிசைப்பட அணிந்த வளையல்கள் நிரைதொடி எனவும்,

**நிரை தொடி** (கலித். 134: 27)

ஒள்ளிய வளையல்களை ஒண்தொடி எனவும்,

**ஒண்தொடி** (ஐங். 194:2)

**ஒண்தொடி மகளிர்** (குறுந். 243: 3)

**ஒண்தொடி அரிவை** (ஐங். 171: 4)

**ஒண்தொடி அரிவ** (ஐங். 172:1)

ஆராய்ந்து சிறப்பாகச் செய்த வளையல்கள் ஆய்தொடி எனவும் அழைக்கப்பட்டுள்ளது.

**ஆய்தொடி கொட்ப** .............. (கலித். 145: 47)

**ஆய்தொடி** (ஐங். 196: 2)

**ஆய்தொடிக் குறுமகள்** (அகம். 280:4)

மேலும், விளங்குகின்ற அழகினை உடைய ஒளி பொருந்திய வளையல்கள் இலங்கு வளை எனவும்,

**இலங்கு வளை மகளிர்** (நற். 215:4)

**இலங்கு வளை** (ஐங். 136:2)

**இலங்கு வளை நெகிழ்ந்த** (குறுந். 125:1)

வரிசையாக அணிந்த வளையல்களை நிரைவளை எனவும்,

**நிரைவளை ஆயமொடு** (அகம். 190:1)

தொடி, வளை எனவும் அழைக்கப்பட்டுள்ளது.

........... ................. **தொடியோள்** (குறுந். 296:6)

**தொடியோர் மடிந்தெனத்** (நற். 49:2)

**வளை ஆர் முன்கை** (நற். 323:5)

**வளையோய்!** ........... (குறுந். 351:1)

மேலும், செறிவும் ஒளியும் உடைய வளையை இலங்கு எல்வளை எனவும்,

**இலங்கு வீங்கு எல்வளை** (ஐங். 200:1)

**இலங்கு வளை தெளிர்ப்ப** (ஐங். 197:1)

செறிவாக வளையல் அணியப்பெற்றால் செறிவளை எனவும் வழங்கப்பட்டுள்ளது.

**செறிவளை நெகிழ்த்தோன்** (ஐங். 199:4)

**செறிவளை நெகிழ்த்தான் கண்** (கலித். 123:13)

பரதவப் பெண்கள் தங்கள் நிலமாகிய பரந்த கடலில் மலிந்து கிடந்த சங்குகளை அறுத்து வளையளாக்கிக் கையில் அணிந்துள்ளனர். இவ்வளையலைக் கடற்கோடு வளை என வழங்கினர் இதனை,

**கடற்கோடு செறிந்த மயிர்வார் முன்கை** (ஐங். 191:1)

**அரம் போல் அவ்வளைக் குறுமகள்** (ஐங். 185:3)

**கடற்கோடு அறுத்த, அரம்போழ் அவ்வளை** (ஐங். 194:1)

**கோடு ஈர் எல்வளை** (ஐங். 196:1)

இவ்வரிகள் சுட்டுகின்றன. மேலும், ஒளிமிக்க கற்கள் பதிக்கப்பட்ட வளையல்கள் மிகுதியான அழகும் பளபளப்பும் மிக்கவை. இத்தகைய ஒளிமிக்க கற்களால் செய்யப்பட்ட வளையள்களை நெய்தல் பெண்கள் எல்வளை என வழங்கியுள்ளனர்.

**சில விளங்கு எல் வளை ஞெகில** (நற். 363:9)

**சில்கோல் எல்வளை** (அகம். 140:5)

**தோள் அணி**

பழங்காலத்தில் தோளில் அணியப்படும் அணிகலனும் வளை என்றே அழைக்கப்பட்டுள்ளது. இவ்வணி தொடி, இழை என்றும் வழங்கப்பட்டுள்ளது. பரதவ மகளிர் அணிந்த தோள் அணியும் இவ்வாறே அழைக்கப்பட்டுள்ளது. இதனை,

**வேய் நலம் இழந்த தோள் விளங்கு இழை பொறை ஆற்றாள்** (கலித். 127:16)

**தொடி நெகிழ்ந்த தோளாளாத்** (கலித். 135:7)

**செறிவளை தோள் ஊர** (கலித். 127:3)

என்ற வரிகள் விளக்குகின்றன மேலும், பரதவ மகளிர் தோளில் முறுக்குடைய வளையல்களையும் அணிந்துள்ளனர்.

**........... .... என் புரி வளைத்தோளே!** (ஐங். 133:3)

**ஒப்பனை**

ஒப்பனை செய்து கொள்வது என்பது மனித இனத்துடன் பிறந்த உயரிய கலை. உலக வரலாற்றை எடுத்துப்பார்த்தால் ஒவ்வொரு இன மக்களிடையேயும் இக்கலை வளர்ந்திருந்தது [45]புலனாகும்.

ஒப்பனை என்பது பலர் ஒன்றாகக் குழுமியிருக்கும் இடத்தில் சிலரைத் தனித்துத் தெரிய வைப்பதாகும். இவ்வொப்பனை என்பது வழிவழியாக நம் முன்னோர்களிடமிருந்து வந்த ஒரு கலையாகும். பழந்தமிழ் மக்களின் வாழ்வில் ஒப்பனை முக்கிய இடம் பெற்றிருந்தது. அவர்கள் பலநிலைகளில் தங்களை ஒப்பனைசெய்து இன்புற்றிருக்கின்றனர்.

ஒப்பனை பற்றிக் குறிப்பிடும் பிக்ஸ் மேக்ஸி மேத் விளக்குகையில்,

பிறர் பார்க்கும்போது அழகாகத் தோற்றமளிப்பதற்காகவே மக்கள் பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்பிருந்தே தம்மை ஒப்பனை செய்து கொண்டனர்[46] என்கிறார்.

இவ்ஒப்பனையைக் குறிக்க இலக்கியத்தில் பல பெயர்கள் விரவிக் காணப்படுகின்றன. அப்பெயர்கள் பற்றிக் கூறும் கு. பகவதி,

ஒப்பனையைக் குறிக்கத் தமிழில் அணிதொட்டு வனைதல் வரையிலான பல சொற்கள் உண்டு. இவற்றுள் அணி, புனை என்பன தொன்றுதொட்டு வழங்கி வரும் சொற்கள்[47] என்பர்.

அவ்வகையில் ஐந்நிலத்தில் ஒன்றாகிய நெய்தல் நிலத்தில் வாழ்ந்த மகளிரும் கழுத்தில், மார்பில், தோளில், கூந்தலில் ஒப்பனை செய்து தங்களை அழகுபடுத்தியுள்ளனர்.

**மாலை அணிதல்**

தம் நிறத்தால் அழகால் கவர்ச்சியால் மணத்தால் மனம் கவருவன மலர்கள். தமிழர் இம்மலர்களை உடம்பின்பல பகுதிகளிலும் ஒப்பனை செய்யப் பயன்படுத்தினர். இவற்றைத் தனித்தும் பிற வடிவங்களாகப் புனைந்தும் உருவாக்கியும்[48] பயன்படுத்தினர்.

இத்தகைய சிறப்புற்று விளங்கிய மலர்களைச் சங்க காலத்தில் வாழ்ந்த மகளிர் மற்றும் ஆடவர் தொடுத்து மாலைகளாக அணிந்துள்ளனர். கடற்கரையையொட்டி வாழ்ந்த பரதவப் பெண்களும் தங்கள் நிலத்தில் மலிந்து

கிடந்த பூக்களை மாலைகளாகத் தொடுத்து அணிந்துள்ளனர். அவர்களால் அணியப்பட்ட மாலைகள் கோதை என்று வழங்கப்பட்டுள்ளன.

பழந்தமிழ் மக்கள் தாங்கள் அணிந்த மாலைக்கு எத்தகு பூக்களைப் பயன்படுத்தினர் எனக் குறிப்பிடும் கு. பகவதி கீழ்வருவனவற்றைக் குறிப்பார். கோட்டுப்பூ, கொடிப்பூ, நீர்ப்பூ, நிலப்பூக்களை அவர்கள் பயன்படுத்தினர். வாடிய மலர்களையும் பயன்கொண்டனர். கூந்தலுக்கும் நெற்றிக்கும், மார்புக்கும், தோள்களுக்கும் அவர்கள் மலர்களைப் பயன்கொண்டனர்[49] என்பார்.

இப்பூக்களை எல்லாம் மகளிரும் ஆடவரும் பயன்படுத்தி மாலைகளாகத் தொடுத்து அணிந்து தங்களை அழகுபடுத்தியுள்ளனர். மாலைகளின் பெயர் பற்றி விளக்கும் மு. சண்முகம் பிள்ளை,

மாலைகள் பலவகை முறைகளால் ஆக்கப்பட்டன. நெற்றி மாலைகள், கோத்த மாலைகள், தொகுத்த மாலைகள், தூக்கிக் கட்டின மாலைகள் எனப் பல்வேறு வகையில் கட்டினர். இவற்றின் அமைப்புக்கு ஏற்ற வகையில் கோதை, தார், மாலை, சூட்டு, கண்ணி என வெவ்வேறு பெயர்களிட்டும் வழங்கினர்[50] என்பர்.

இத்தகைய பலவகையான மாலைகளில் பரதவப் பெண்கள் கோதை என்ற பெயரில் கழுத்தில் சூடியுள்ளனர். அவர்கள் இம்மாலைகளை அணிந்த சிறப்பைப் பற்றி நெய்தற் பாடல்கள் பல சுட்டுகின்றன. அவற்றை,

**கோதை ஆயமும் அன்னையும் அறிவுற** (கலித். 122:1)

**கோதை ஆயமொடு வண்டல் தைஇ** (அகம். 60:10)

**பல் மலர் வேய்ந்த நலம்பெறு கோதையள்** (அகம். 280:1)

**துணைத்த கோதை ........ ...........** (குறுந். 326:1)

**கோதை ஆயமொடு ............** (அகம். 180:2)

**வளைவாய்க் கோதையர் ...............** (அகம். 370:1)

என்ற அடிகள் தெளிவுபடுத்துகின்றன.

இவ்வாறு மாலை அணிந்த மகளிர் சிலநேரங்களில் தாம் அணிந்த மாலை வாடும்படியாகத் தலைவனுடன் விளையாடியுள்ளனர்.

**............ ............ ........... மலி நீர்ச் சேர்ப்ப**

**.......... ........... .......... கோதை வாட** (நற். 363:6–7)

**பரதவ மகளிர் மாலைக்குப் பயன்படுத்திய மலர்கள்**

பரதவப் பெண்கள் தாங்கள் அணிந்த மாலைக்குப் பயன்படுத்திய பூக்களாக எல்லாவகைப் பூக்களையும் பயன்படுத்தியுள்ளனர் என்றாலும் தங்கள் நிலத்தின் பெயரால் பெயர்பெற்ற நெய்தல் பூக்களையே மிகுதியாகப் பயன்படுத்தியுள்ளனர். சான்று கூறும் நெய்தல் பாடல்கள் கீழ்வருமாறு:

**வள் இதழ் நெய்தற் தொடலை ............** (நற். 155:2)

நெய்தல் மலருடன் கொன்றை மலரையும் பயன்படுத்தித் தொடுத்து மாலையாக அணிந்துள்ளனர்.

**................. ............. ............. ஞாழல்**

**வண்டுபடத் ததைந்த கண்ணி, நெய்தல்**

**தண் அரும் பைந்தார் துயல்வர** (அகம். 370: 9–11)

மகளிர் தாம் அணிந்த மாலையைத் தாமே தொடுத்து அணிந்ததுடன், அம்மகளிரின் மனம் கவர்ந்த அவர் தம் காதலரும் தொடுத்து அணிவித்துள்ளனர் சான்றாக நற்றிணைப் பாடலில், நெய்தல் மலருடன் செறிந்த இலையைத் தொடுத்து தலைவன் விழாவின் போது தலைவிக்கு அணிவித்துள்ளான்.

**பாசடைக் கலித்த கணைக்கால் நெய்தல்**

**பூவுடன் நெறிதரு தொடலை தைஇ** (நற். 138: 6–7)

மகளிர் தம்மாலைக்கு நெய்தல் மலர்களை பயன்படுத்தியதோடு அடும்பையும் சேர்த்து தொடுத்து அணிந்துள்ளனர். இதனை,

**மாக் கொடி அடும்பின் மா இதழ் அலரி**

**கூந்தல் மகளிர் கோதைக் கூட்டும்** (நற். 145: 2–3)

**ஆய் பூ அடும்பின் அலர் கொண்டு உதுக்காண், எம்**

**கோதை புனைந்த வழி .................. (கலித். 144: 29–30)**

என்ற வரிகள் புலப்படுத்துகின்றன. நெய்தல் அடும்பு மலர்களைப் பயன்படுத்தி மாலை அணிந்ததோடு தும்பை மாலையும் அணிந்துள்ளனர். அவ்வழகைப் புலப்படுத்தும் வரிகள் நெய்தற் பாடலில் ஒரே ஒரு இடத்தில் அறியப்படுகிறது.

**தும்பை மாலை இளமுலை** (ஐங். 127: 2)

இத்தும்பை மாலையை மகளிர் அணிவதாகச் சொல்வது இச்செய்யுள் மட்டுமே என்பது காணத்தக்கதாகும். பொதுவாகத் தும்பை மாலையை மகளிர் அணிவதாகக் கூறுவது இல்லை.

**தொய்யில்**

உடம்பின் மேற்பாகத்தில் சந்தனம், குங்குமம் முதலியவற்றைக் குழம்பில் பூசி, அதன் மேலே இலை, பூ, முதலிய ஓவியங்களை வரைவர். இவ்வோவியம் தொய்யில் [51]எனப்படும்.

இத்தொய்யில் பற்றி விளக்கும் மு. சண்முகம் பிள்ளை, மகளிர் தம் முலை மீதும் தோள் மீதும் வண்ணக் குழம்பினால் முறையே தொய்யிலும் கரும்பும் எழுதிக் கொள்வது உண்டு. இவற்றைத் தம் காதலிமார்க்குக் காதலர்கள் எழுதினர்[52] என்பர்.

இவ்வாறு மார்பில் எழுதப்படும் தொய்யிலை பரதவப் பெண்களுக்கு அவர்தம் காதலரும் எழுதி அழகுபார்த்துள்ளனர். சான்றாகக் கலித்தொகைப் பாடலில்,

தலைவியைப் புணர்ந்த அன்று தலைவன் அவளது மார்பில் கரும்பு எழுதினான். அதன் அழகு கெடும்படியாகப் பிரிந்து சென்றான். அதனால் தலைவியின் மெல்லிய தோள்கள் மெலிந்தன என்று கூறப்பெறுகிறது.

**................ ............ தான் ஈர்த்த கரும்பு அணி வாட** (கலித். 131: 29)

மற்றொரு பாடலில், தலைவன் தலைவிக்குத் தோளிலும், மார்பிலும் கரும்பும், தொய்யிலும் எழுதியுள்ளான். இதனை,

**............. ................ நெடுமென் தோள்**

**பெய்கரும்பு ஈர்க்கவும் வல்லன்; இளமுலைமேல்**

**தொய்யில் எழுதவும் வல்லன்; ..................** (கலித். 143: 31–33)

என்ற வரிகள் உணர்த்துகின்றன. இத்தொய்யிலை ஆடவர் மகளிர்க்கு எழுதியதோடு, மகளிரே தம் மார்பில் தொய்யில் எழுதியுள்ளனர். சான்றாகக் கலித்தொகைப் பாடல்களில் தலைவி தொய்யில் எழுதிய சிறப்பை கீழ்வரும் வரிகள் உணர்த்துகின்றன.

**........... ............ ........... என்**

**தொய்யில் சிதைத்தானைத் தேர்கு** (கலித். 142: 43–44)

**மகிழ் செய் தே மொழித் தொய்யில் சூழ் இளமுலை** (கலித். 125:8)

**மையிடுதல்**

முகத்தில் அழகு மிக்கவை கண்கள். அக்கண்களுக்கு மேலும் அழகு தருவது மை. மை தீட்டும் பழக்கம் பற்றிக் குறிப்பிடும் வில்லியம் டியூரண்ட் விளக்குகையில்,

எகிப்தியர்களிடமிருந்துதான் தற்காலப் பெண்கள் விழிகளுக்கு மை தீட்டும் கலையை அறிந்தனர்[53] என்கிறார்.

மை தீட்டும் ஒப்பனை பற்றி கே.கே. பிள்ளை கீழ்வருமாறு விளக்குவார்.

பெண்கள் கண்ணுக்கு மைதீட்டிக் கொள்ளுவர். மைதீட்டும் குச்சிக்குக் கோல் என்று பெயர். எப்போதும் மைதீட்டப் பெற்றிருந்தனவாதலின் பெண்கள் கண்ணை உண்கண் என்றே கூறுவதுண்டு[54] என்கிறார்.

மேலும், இவ்ஒப்பனை பற்றிக் குறிப்பிடும் கு. பகவதி,

கண்கள் ஒப்பனையில் மையிடுதல் தொன்றுதொட்டுத் தொடர்ந்து வரும் பழக்கமாக அமைகிறது. உண்கண் என்ற சொல்லாட்சி இதன் செல்வாக்கை விளக்கும்[55] என்பர்.

அவ்வகையில் பரதவமகளிரும் தங்கள் கண்களுக்கு மைதீட்டி மகிழ்ந்து அழகுபார்த்துள்ளனர். அம்மகளிரின் மைதீட்டப் பெற்ற கண்களின் எழில் பற்றிக் குறிப்பிடும் நெய்தற் புலவர்களின் வரிகள் கீழ்வருமாறு:

**உண்கண் வண்டினம் மொய்ப்ப ..........** (ஐங். 126:2)

**புகழ் சால் எழில் உண்கண்** (கலித். 131: 4)

**மலர் ஏர் உண்கண் ...............** (அகம். 320: 6)

மேலும், தலைவன் தலைவியரின் களவு வாழ்விற்கு மையிட்ட மாட்சிமையுடைய கண்கள் முக்கிய இடம்பெற்றுள்ளன.

முகத்தில் கண்களே உள்ளக்கிளர்ச்சி வேறுபாடுகளைத் தெளிவுபட அறிந்து கொள்ளப் பயன்படுகின்றன.[56]

நெய்தல் வரிகளில் தலைவியின் பார்வை பற்றிக் குறிப்பிடும் தலைவன், செவ்வரி படர்ந்து கண்டார் உயிருண்ணும் மையுண்ட கண்களால் விருப்புடன் பார்த்தாள் தலைவி என்கிறான்.

**அரிவேய் உண்கண் அமர்த்தனள் நோக்கி** (அகம். 390: 13)

மற்றொரு பாடலில் தலைவியை இடித்துக் கூறிய பாங்கனிடம் தலைவன் அவள் கண் அழகைப் பற்றி கீழ்வருமாறு உணர்த்துவான்.

தலைவியின் அழகிய ஒளிபொருந்திய முகத்தின்கண் உள்ள மையுண்ட கண்களின் செருக்குடைய பார்வையினை, நீ அவள் முன்னின்று காண்பாயாயின் எம்மை இவ்வாறு இடித்துக் கூறமாட்டாய் என்கிறான்.

**போது புறங் கொடுத்த உண்கண்** (அகம். 130:13)

இவ்வாறு தலைவனுடன் களவு வாழ்விற்கு வித்திட்ட தலைவியின் மையிட்ட கண்கள், களவில் இடையீடு ஏற்பட்ட நிலையில் துன்புற்ற நிலையினையும் நெய்தல் வரிகள் எடுத்துரைக்கின்றன.

**பூ எழில் உண்கண் புலம்பு கொண்டு இனையும்** (கலித். 130:16)

**போது எழில் உண்கண் புகழ் நலன் இழப்ப** (கலித். 122:2)

**பல் இதழ் உண்கண்** ................ (குறுந். 5:5)

இத்தகைய காரணங்களுக்காக வருந்திய தலைவியின் கண்கள் தலைவன் பிரிவால் பசப்பும் உற்றன.

**பல் இதழ் உண்கண் பசத்தல் மற்று எவனோ?** (ஐங். 170:4)

மேற்கண்ட நிலைகளில் துன்புற்ற தலைவியின் மையுண்ட கண்கள் தலைவனின் பிரிவால் அழுதன. இதனை,

**பல் இதழ் உண்கணும் பரந்தவால், பனியே** (நற். 155:10)

**கரப்பவும் கரப்பவும் கைம்மிக்கு**

**உரைத்த தோழி! ................ உண்கண் நீரே** (நற். 263:9–10)

**................ ............... ................ அவன் உண்கண்**

**அவிழ் பனி உறைப்பவும்** ......................... (கலித். 125: 9–10)

**பேர் அமர் உண்கண் நிறை மல்க** .......... (கலித். 146: 7)

**உண்கண் சிவப்ப அழுது நின்றோளே!** (ஐங். 125:3)

**பல் இதழ் உண்கண் பனி செய்தோனே** (ஐங். 190:4)

**நெய்தல் உண்கண்** .......... ......... (அகம். 10:5)

மேற்கண்ட பாடல்களின் வரிகள் புலப்படுத்துகின்றன. மேற்சுட்டிய விளக்கங்களால் பரதவ மகளிரின் ஒப்பனையில மையிடுதல் எத்தகு இடம்பெற்றிருந்தது என்பதை அறியலாம்.

**கூந்தல் ஒப்பனை**

பெண்களின் கூந்தல் புலவனின் கவிவரிகளில் முக்கிய பாடுபொருளாக அமைகிறது. நீண்டு, குழன்று, இருண்டு, செறிந்து, சுருண்டு விளங்கிய அழகும் சிறப்பும் பெற்ற கூந்தலைப் பழந்தமிழ்ப் பெண்கள் பலநிலைகளில் பேணியுள்ளனர். கடலை வாழ்வின் ஆதாரமாகக் கொண்டு வாழ்ந்த பரதவப் பெண்களும் தங்கள் கூந்தலைச் சிறப்பான முறையில் பின்னலிட்டும் மலரணிந்தும் மணமூட்டியும் ஒப்பனை செய்து பேணியுள்ளனர். பரதவப் பெண்கள் தங்கள் கூந்தலைப் பின்னலிட்டுப் பேணிய சிறப்பை எடுத்தியம்பும் நெய்தல் பாடல்வரிகள் கீழ்வருமாறு உணர்த்துகின்றன.

**பின் இருங்கூந்தல்** ............... (ஐங். 173:4)

**பின்னுவிடு கதுப்பின் மின் இழை மகளிர்** (குறுந். 246: 6)

**பின் ஈர் ஓதி** (நற். 227:4)

பின்னலிடப்பட்ட கூந்தல் ஐந்து பகுதிகளாக வகுக்கப்பட்டது என்பது,

........... ............. ........... **சில்மொழி ஐம்பால்**

**பின்னொடு கெழீஇய** ............. ............ (கலித். 125: 16–17)

**வணர்ந்து ஒலி ஐம்பாலாள் செய்த** .......... (கலித். 140: 23)

என்னும் பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

**பூச்சூடல்**

கூந்தலில் பூச்சூடும் பழக்கம் தொன்றுதொட்டுப் பெண்களிடம் இருந்து வந்த ஒன்று. பெண்களுக்கும் மலர்களுக்கும் உள்ள தொடர்பைக் குறிஞ்சிப்பாட்டில் கபிலர் மலர்களை ஒன்றுபடுத்திக் கூறுவதே சான்றாகும். அவ்வகையில் பரதவப் பெண்களும் தங்கள் கூந்தலில் அடும்பு, புன்னை, கழிமுள்ளி இன்னபிற மலர்களையும் அணிந்து ஒப்பனை செய்துள்ளனர். அடும்பு மலர்களைப் பரதவ மகளிர் கூந்தலில் அணிந்த சிறப்பினை சுட்டும் வரிகள் கீழ்க்காணுமாறு:

**மாக்கொடி அடும்பின் மா இதழ் அலரி**

**கூந்தல் மகளிர் கோதைக் கூட்டும்** ......... (நற். 145: 2–3)

**அடும்பின் ஆய்மலர் விரைஇ, நெய்தல்**

**நெடுந்தொடை வேய்ந்த நீர்வார் கூந்தல்** (குறுந். 401: 1–2)

மேலும், இப்பெண்கள் புன்னை மற்றும் கழிமுள்ளி மலர்களையும் அணிந்துள்ளனர். இதனை,

**பொன்னின் அன்ன தாது படு பல்மலர்**

**சூடுநர் தொடுத்த மிச்சில் ...............** (நற். 278: 3–4)

**அணி மலர் முண்டகத்து ஆய் பூங்கோதை**

**மணிமருள் ஐம்பால் வண்படத் தைஇ** (நற். 245: 2–3)

இவற்றோடு இன்ன பிற மலர்களையும் சூடியுள்ளனர்.

**ஓங்கற் புணரி பாய்ந்து ஆடுமகளிர்**

**அணிந்திடு பல் பூ மரீஇ ................** (நற். 6–7)

என்ற வரிகள் உணர்த்துகின்றன.

**கூந்தலில் மணமூட்டுதல்**

அழகும் வனப்பும் உடைய கூந்தலுக்கு மகளிர் எண்ணெய் மற்றும் நறுநெய் பூசி நறுமண மூட்டியுள்ளனர். இக்காலங்களில் பயன்படுத்தப்படும் எண்ணெய் வகைகள், நறுமணமூட்டிகள் போலச் சங்க கால மகளிரும் அக்காலத்தில் கிடைத்த இயற்க்கை பொருள்களை உபயோகித்துள்ளனர். சான்றாக நற்றிணைப் பாடல், பரதவ மகளிர் பிற மணப் பொருட்களை பயன்படுத்தி மணமூட்டிய சிறப்பை எடுத்துரைக்கிறது.

**............ ............... தன் நறுங் கதுப்பும்** (நற். 219: 1)

மணமூட்டியதோடு நெய் பூசியும் கூந்தலுக்கு மணம் சேர்த்துள்ளனர்.

**ஒடுங்கு ஈர் ஓதி ............ ..............** (அகம். 160:1)

**திலகமிடுதல்**

ஒரு பெண்ணானவள் எத்தனை வகை அணிகள் அணிந்தாலும் அவள் நெற்றியில் பொட்டு இடுவதன் மூலம் ஒப்பனை முற்றுப் பெறுகிறது. பொட்டே ஒப்பனையை முழுமைப் படுத்துகிறது. இப்பொட்டு பற்றிக் குறிப்பிடும் கு. பகவதி,

திலகம் – நெற்றிப் பொட்டு[57] என்பர்.

இப்பொட்டு இடும் பழக்கம் பரதவப் பெண்களிடமும் இருந்துள்ளது. அம்மகளிர் பொட்டு இட்டதைப் பற்றி நெய்தற் கலியில் ஒரே ஒரு இடத்தில் மட்டும் சுட்டப்படுகிறது. அதில் தலைவி வரைவிடை வைத்துப் பிரிந்த தலைவனின் பிரிவால் தன் நுதலிடத்தே அணிந்த திலகத்தை நீத்தாள் எனப் பகருகிறது.

**நல்லுதல் நீத்த தில கத்தள் .............** (கலித். 143:3)

**தொகுப்புரை**

இவ்விலின் வழியே பெறப்பட்ட ஆய்வு முடிவுகளைப் பின்வருமாறு வரிசைப்படுத்தலாம்.

1. பொருளாதாரத்தில் எளிய நிலையில் இருந்தாலும் பரதவப் பெண்கள் தங்களின் அழகுக் கலை உணர்வையும் விளையாட்டுணர்வையும் திறம்பட வளர்த்துள்ளனர்.

2. நெய்தல் நில விளையாட்டுக்களில் ஆடவர் விளையாட்டுக்களை விடவும் பெண்டிர் விளையாட்டுக்களே மிகுதியாக இருக்கின்றன.

3. பரதவப் பெண்களுக்கான சுதந்திரம் மிகுதியாகவே இருந்ததை அவர்கள் மேற்கொண்ட விளையாட்டுக்களின்றும் அறிய முடிகிறது.

4. தழையணியை இளமகளிர் அணிந்துள்ளனர் என்னும் ஆய்வுக் கருத்து வலுவாக உள்ளது.

5. கடல் சார்ந்த இடத்தை வாழிடமாகக் கொண்டிருந்ததற்கேற்ப கடற்படு பொருள்கள் அணிகளன்களாக உருப்பெற்றிருக்கின்றன. சங்குவளை அக்காலத்திலேயே நேர்தியாக உருவாக்கப்பெற்றுள்ளது.

6. பரதவ மகளிர் தும்பைப்பூ மாலையை அணிந்த செய்தி ஓரிடத்தில் மட்டும் வருகிறது.

## அடிக்குறிப்புகள்

1. சு. சிவகாம சுந்தரி, சங்க இலக்கிய விளையாட்டுக் களஞ்சியம், பக். 6–7.
2. S.P.Adinarayan,The human mind,P-48.
3. தமிழ்ப் பேரகராதி தொகுதி 1, ப. 216.
4. தொல், பொருளதிகாரம், இளம்பூரணர், உரை, ப. 255.
5. கே.சுப்பிரமணியம் பிள்ளை , பண்டை விளையாட்டுக்கள், ப. 12.
6. மு. இராகவையங்கார், விலங்கு போர் விளையாட்டு ப. 296.
7. கோ. சுப்பிரமணிய பிள்ளை, தமிழர் வாழ்வு, ப. 24.
8. தி. முத்து கண்ணப்பன், சங்க இலக்கியத்தில் நெய்தல் நிலம், பக். 6–7.
9. பின்னத்தூர் நாராயணசாமி உரை, ஓரை – மகளிராடும் விளையாட்டு, ந. 682.
10. பி.எல். சாமி, சங்க நூல்களில் பஞ்சாய், ப. 523.
11. தமிழ் லெக்சிகன் தொகுதி 1, ப. 629.
12. செ.அ. முத்துக்கிருஷ்ணன், தமிழர் விழாக்களும் பொழுதுபோக்குகளும், பக். 58–59.
13. மேலது,ப. 60.
14. தமிழ் லெக்சிகன் தொகுதி–1. ப. 628.
15. செ.அ. முத்துக் கிருஷ்ணன், மு. நூ. பக். 61–62.
16. மேலது,ப. 71.
17. மேலது, ப. 66.
18. பி.எல். சாமி, தமிழிலக்கியத்தில் தாய்த் தெய்வ வழிபாடு, ப. 76.
19. Dorrow.T& Emeneaum.b, Dravidian Etymological Dictionary, P. 4282.
20. செ.அ. முத்துக் கிருஷ்ணன், மு. நூ.ப. 68.

21. மேலது,பக். 83–84.

22. மேலது,ப. 84.

23. மேலது, ப. 107.

24. மேலது,ப. 108.

25. தி.முத்துகண்ணப்பன், மு. நூ,ப. 25.

26. செ.அ. முத்துக் கிருஷ்ணன், மு. நூ,ப. 134.

27. கு. பகவதி, தமிழர் ஆடைகள், ப. 2.

28. Marietta Kettunen ,Fundamentals of dress,P-10.

29. F. Ratzel, History of mankind volume-II , P- 95.

30. கு. பகவதி, மு. நூ,ப. 6.

31. கே.கே. பிள்ளை, தமிழக வரலாறும் மக்களும் பண்பாடும், ப. 141.

32. கு. பகவதி, மு. நூ,ப. 364.

33. பொ.வே. சோமசுந்தரனார், குறுந்தொகை, ப. 230.

34. பொ.வே. சோமசுந்தரனார், பத்துப்பாட்டு, ப. 80.

35. ச. முருகானந்தம், தழையணி, ப. 67.

36. மேலது,பக். 54–55.

37. மேலது, ப. 57.

38. மேலது, பக். 57–58.

39. மேலது, ப. 70.

40. கு. பகவதி, மு. நூ,ப. 52.

41. மு. சண்முகம் பிள்ளை, சங்கத் தமிழர் வாழ்வியல், ப. 130.

42. மா. இராசமாணிக்கனார்,பத்துப்பாட்டு ஆராய்ச்சி, பக். 520–521.

43. பொ. அழகு கிருஷ்ணன், சிலப்பதிகாரம் காட்டும் பண்பாடும் சமுதாய வரலாறும், ப. 132.

44. கு. பகவதி, தமிழர் பண்பாட்டு ஒப்பனையியல் சொற்கோவை, ப. 138.

45. William durant, The story of the civilization (part I), P. 84.

46. D. Biggs Maxi Meth,Be beautiful, P. 130.

47. கு. பகவதி, தமிழர் பண்பாட்டு ஒப்பனையியல் சொற்கோவை, ப. 1.

48. கு. பகவதி, மணப்பொருட்கள் சிலப்பதிகாரத்தில், ப. 19.

49. கு. பகவதி. தமிழர் பண்பாட்டு ஒப்பனையியல் சொற்கோவை, ப. 58.

50. மு. சண்முகம் பிள்ளை, மு. நூ, ப. 138.

51. பொ. அழகு கிருஷ்ணன், மு. நூ,பக்.123–124.

52. மு. சண்முகம் பிள்ளை, சங்கத் தமிழர் வாழ்வியல், ப. 131.

53. William durant, The story of the civilization (part I), P. 169.

54. கே.கே. பிள்ளை, தமிழக வரலாறும் மக்களும் பண்பாடும், ப. 148.

55. கு. பகவதி, தமிழர் பண்பாட்டு ஒப்பனையியல் சொற்கோவை, ப. 128.

56. மு.பொன்னுசாமி, சங்க இலக்கியத்தில் மெய்ப்பாட்டு இயக்கம், ப.14.

57. கு. பகவதி, தமிழர் பண்பாட்டு ஒப்பனையியல் சொற்கோவை, ப. 125.

# இயல் ஐந்து
# நெய்தல் புலவர்களின் பார்வையில் இரங்கல்

காதலைப் பாடாத உலகக் கவிஞர்கள் யாரும் இலர் எனக் கூறலாம். அனைவருமே காதலைப் பற்றிப் பாடி இருக்கின்றனர். பிற மொழிகளில் காதல் பற்றிய ஆராய்ச்சி நூல்கள் பலப் பல இருக்கின்றன என்றாலும், முறையான காதல் எவ்வாறு தோன்றி வளர்ந்து வாழ்க்கையில் இணையவேண்டும் என்ற வரைமுறையைச் சொல்லும் இலக்கண நூல்கள் தமிழில்தான் இருக்கின்றன.

இவ்விலக்கணப்படி காதல் ஒழுக்கத்தை அகப்பொருள் கோட்பாடுகளில் அடக்கலாம். இதன் அடிப்படையில் பண்டைக் காலத் தமிழர்கள் மக்கள் வாழ்வை அகம் புறம் என இரு கூறுபடுத்தியிருந்தனர். இவற்றுள் அகப்பொருள் என்பதன் நோக்கம் இன்பத்தை அடைவது ஆகும். அந்த இன்பமும் பிறருக்குத் துன்பம் விளைவிக்காத அறத்தோடு கூடிய இன்பமாகும். எனவேதான் சங்கத் தமிழர் வாழ்வில் அறத்தோடு துய்க்கும் இன்பமே குறிக்கோளாக இருந்தது. இந்த இன்பத்தை அன்பின் வழியாகத்தான் பெறமுடியும் என நம்பினர். இதனைத் தொல்காப்பியர்,

**இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு**
**அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கின்**
**காமக் கூட்டம்** [1] என்பார்.

அன்பு ஆசை இரண்டிற்கும் வேறுபாடு உள்ளது. வாழ்க்கையின் வரம்புக்கு உட்பட்டுச் செயல்படும் போது, அது அன்பாகிய காதலாகிறது. அதேகாதல் வரம்பை மீறி ஆவேசமாக, வெறியாக மாறும்போது காமமாகிறது. அன்பு தன்னையே பிறருக்கு வழங்குவது. ஆசை தனக்கே அனைத்தையும் உரிமையாக்கிக் கொள்வது. இக்காதலெனும் பண்பை அடிப்படையாகக் கொண்டுதான் தமிழில் அகப்பொருள் பாடல்கள் அமைந்திருக்கின்றன.

அகப்பாடல்கள் கூறும் சங்கத் தமிழர் காதல் வாழ்வை இரா. சுகுமார் தமது நூலில்,

"மனித வாழ்வில் உயரியதாகப் போற்றவேண்டிய அனைத்தையும் தரவல்லது காதல் ஒழுக்கமாகும். எனவேதான் சங்கத் தமிழர் காதல் வாழ்வை மிக உயர்வாகப் போற்றியிருப்பதை[2] அறியமுடிகிறது" என்பர்.

மேலும், "தமிழிலக்கியக் காதல் ஒழுக்கம் இருபக்க நாணயம் போன்றது[3]" ஆகும்.

இத்தகைய சிறப்புப்பெற்ற காதலை மையமாக வைத்து வரும் அகப்பொருட் பாடல்களுக்கு முதல், கரு, உரிப் பொருட்கள் வளம் ஊட்டுகின்றன.சங்க இலக்கியத்தில் அகப்பொருள் பாடல்கள் நாடகக் காட்சி போல இடம்பெறுகின்றன. இதனை அழகாக விளக்குவார் பேராசிரியர் தி.முத்து கண்ணப்பன்.

"ஒரு நாடகக் காட்சியில் முதலில் இடம், காலம் என்று குறித்திருப்பார்கள். பிறகு இன்னார் இன்னார் தோற்றமளிக்கிறார்கள் என்று குறிப்பார்கள். சுற்றிச் சூழ உள்ள நிலைக்களத்தையும் குறிப்பது வழக்கம். காதல் நாடகமும் அத்தகையதுதான். நாடகத்தில் கதை முழுவதும் பாத்திரங்களின் கூற்றுக்களாகவே அமையும். அகப்பொருட் காதல் கதையும் அத்தகையதே. அகப்பொருட் பாடல்கள் யாவும் காதல் நாடகத்தில் வரும் ஏதேனும் ஒரு பாத்திரத்தின் கூற்றாகவே இருக்கும்.

நாடகத்தில் முதலில் குறிக்கப்பெறும் இடம், காலம் என்ற இரண்டையும் அகப்பொருட் காதல் நாடகத்தில் முதற்பொருள் என்பார்கள். அங்கே வரும் பாத்திரங்கள் சுற்றுச் சூழ்நிலையில் உள்ள பொருள்கள் யாவும் கருப்பொருள் என்ற பெயர் பெறும். அப்போது நிகழும் நிகழ்ச்சியாகிய செயல்கள் பலவகை. ஆயினும் காதல் நாடகத்தின் முக்கியமான கட்டங்கள் ஐந்து. இவற்றைப் புணர்தல், பிரிதல், இருத்தல், ஊடல், இரங்குதல் என்ற பெயர்களால் அகப்பொருள் இலக்கணம் உணர்த்தும். இந்த ஐந்து பிரிவுகளுக்குள் காதல் நாடகக் காட்சிகள் எல்லாம் அடங்கி விடும். இந்த ஐந்தையும் உரிப்பொருள்"[4] என்பார்.

அகப்பொருள் பாடல்களில் இவ்உரிப்பொருள் முக்கிய இடம்பெறுகிறது. முதற்பொருள் கருப்பொருள் பற்றி முதல் இயலில் கூறியுள்ளதால், உரிப்பொருள் பற்றி இவ்வியலில் விரிவாகக் காணலாம். உரிப்பொருள் பற்றித் தொல்காப்பியர்,

**புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல்**

**ஊடல் இவற்றின் நிமித்தம் என்றிவை**

**தேருங் காலைத் திணைக்குரிப் பொருளே**[5]

என்கிறார். குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்பவை திணைக்கும், நிலத்துக்கும் உரிய பொருள்கள். புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல் என்பவை திணைக்கு உரிய ஒழுக்கங்களாகும்.

அந்தந்த நிலங்களில் அந்த அந்தப் பெயரையுடைய திணைக்குரிய உரிப்பொருள் செயல் நிகழ்வது சிறப்பு. அவ்வகையில் குறிஞ்சியில் புணர்ச்சியும், பாலைக்குப் பிரிவும், முல்லைக்கு இருத்தலும், மருதத்துக்கு ஊடலும், நெய்தலுக்கு இரங்கலும் சிறப்பாக அமையும்.

குறிஞ்சிக்கு அழகிய சூழ்நிலையும் குளிர்ந்த அமைப்பும் புணர்ச்சிக்கு ஏற்ற நிலைக்களமாக இருக்குமாதலின் குறிஞ்சி நிலம் அந்நிகழ்ச்சிக்குச் சிறப்பாக உள்ளதென்றனர். முல்லை நிலத்தில் பசுமையும் குளிரும் இருத்தலுக்கு ஏதுவாக இருக்குமென்றனர். பிரிவென்னும் துயர நிகழ்ச்சிக்குப் பசுமை இல்லாமல் வெறிச்சோடிக் கிடந்த பாலைநிலம் அவலச் சுவையை எடுத்துக்காட்டும்; அதனால் பாலைக்குப் பிரிவைச் சிறப்பாக அமைத்தனர். இப்படியே மற்ற நிலங்களுக்கும் பொருத்தி அமைத்தனர்.

ஐவகை நிலங்களில் உரிப்பொருள் அடிப்படையில்தான் செயல்கள் நடைபெற வேண்டும் என்ற கட்டாயம் இல்லை. இந்தச் செயல்கள் வேறு நிலங்களில் நடப்பதில்லை என்று சொல்லவும் முடியாது. இதனை விளக்கும் பேராசிரியர் தி.முத்து கண்ணப்பன்,

“குறிஞ்சியில் தான் புணர்ச்சி நிகழவேண்டும் என்ற வரையறை இல்லை. வேறிடங்களில் நிகழ்ந்தால் அதற்குச் சுவை இல்லை என்று கொள்ளக்கூடாது. பிற நிலங்களிலும் புணர்ச்சி நிகழும். இப்படியே வேறு நிலங்களிலும் நிகழ்தல் கூடும்”[6] என்பர்.

இவற்றில் நெய்தல் நிலத்துக்கு இரங்கல் எனும் உரிப்பொருள் சிறந்தது. எனினும், இங்கும் புணர்ச்சி, ஊடல் என எல்லா நிலைகளும் நிகழும். நிகழ்ந்தாலும், நெய்தல் நிலத்தில் கடற்கரை மாலை நேரத்தில் தனிமைப்பட்டுக் கிடக்கும். இத்தனிமையைத் தலைவனைப் பிரிந்து துயறுற்ற தலைவியின் பிரிவோடு தொடர்புபடுத்தி உரிப்பொருளாகிய இரங்கலை நெய்தலுக்கு

வைத்தனர். எவ்வகையில் பொருத்தமுற வைத்தனர் என்பதை ச. சாம்பசிவன் சுட்டுகையில்,

“கடற்கரையில் இரக்கம் மிகுந்து தோன்றும் நேரம் சுடர் படு இறுதிக்காலமாகும். இரைதேடியபின் பல்வேறுவகைப்பட்ட பறவையினங்கள் தத்தம் கூடுநோக்கி விரைந்து வருதலும், புன்னை, தாழை முதலிய பூக்களின் மணம் பரவுதலும் நிகழ்தலின் அப்போது தலைவிக்குத் தலைவனைப் பற்றிய எண்ணம் மிகுதிப்பட்டு இரங்கற் பொருள் தோன்றுவதற்குக் காரணமாகின்ற பொழுது சுடர்படும் பகல் இறுதிப்பொழுது அல்லது ஞாயிறு வீழ்பொழுது ஆகும்”[7] என்பர்.

ஞாயிறு வீழ்பொழுதை எற்பாடு என்கின்றனர் புலவர்கள்.

“எற்பாடு = 2–6 மணி

எற்பாடு = எல்பாடு

எல் – கதிரவன்

பாடு – படுதல்

கதிரவன் மறைந்து படும் மாலை நேரம் ஏற்பாடாகும்”[8].

இம்மாலை நேரமே நெய்தல் நில உரிப்பொருளாகிய இரங்கலுக்குப் பொருத்தமுற அமைந்துள்ளது. இவ்விரங்கலுக்கான காரணத்தை விரிவாக விளக்கும் பேராசிரியர் தி.முத்து கண்ணப்பன் பின் வருமாறு குறிப்பிடுகிறார்:

“கானலஞ் சோலை; ஞாயிறு மலையிற்படும் மாலை. (இதனையே எற்பாடு என்பர் இலக்கண நூலோர்) எதிரே ஓ வென ஓலமிடும் நீலக்கடல். அக்கடலும் கழியும், கானலும் தனிமையைப் பிரதிபலித்துக் கொண்டிருக்கும்; புள்ளினமெல்லாம் தம் புகழுக்குத் திரும்பும்; துன்பம் தவழும் சூழ்நிலையே சுற்றிலும் காணும்.

ஆங்கே சோகமே உருவெடுத்த தலைவி, தோழியின் துணையுடன் வந்து தன் காதலனின் வருகைக்காக காத்துக் கிடப்பாள். அவன் வாராமையை எண்ணி எண்ணிக் கண்ணீர் ஆறாய்ப் பெருக அழுது புலம்புவாள். உற்றுழியுதவும் அவள் உயிர்தோழி பலவாறு ஆறுதல் கூறித் தேற்றுவாள். நேரம் கடந்தும் தலைவன் வராதிருக்கும் காரணங்களை நினைந்து நினைந்து தலைவி மேலும் கவல்வாள்; கலங்குவாள். அவன் வரும் வழியின் ஏதத்தினை எண்ணி

ஏங்குவாள். சிற்சில இடையீடுகளால் குறிப்பிட்ட படி சந்திக்க இயலாமல் போகும் சங்கட நிலை குறித்துக் குமுறிக் குமைவாள். தலைவனும் அல்ல குறியாலும் இடையீட்டாலும் ஏமாற்றமடைந்து அல்லலுற்று இரங்குவான். இப்பிரிவுத் துயரத்துக்கு முத்தாய்ப்பு வைத்தது போன்று, அந்தச் சூழலின் இயற்கை நிகழ்ச்சிகளும் ஒத்துத் தோன்றுவது வியப்பினையே மிகுவிக்கும்"[9] என்பர்.

மேலும், "இவ்வுரிப் பொருளானது முதற்பொருள், கருப்பொருளை விடச் சாலச் சிறந்தது"[10] என்றும் கூறுவர்.

முதல், கரு, உரி என்ற மூன்றும் சேர்ந்து அகப்பொருள் பாடல்களுக்கு வளம் ஊட்டுகின்றன. அகப்பொருள் பாடல்களில் தலைவன் தலைவி தோழி ஆகிய மூன்று பாத்திரங்களே பெரும்பாலும் காட்சிகளில் வருகின்றனர். இடைஇடையே செவிலியும் நற்றாயும் வருகிறார்கள். இப்பாத்திரங்கள் மூலமாக புலவர்கள் தலைவியின் மனத்தை, நோக்கத்தை, ஏக்கத்தை உரையாடல்களிலும் வருணனைகளிலும் வெளிப்படுத்தியுள்ளனர். மேலும், இப்பாடல்களில் தலைவனுடைய காதலும் பெருந்தன்மையும், தோழியின் ஆவலும் மெய்யன்பும், குறிப்பாக உணர்த்தும் ஆற்றலும் போன்ற பல உணர்வுகளைத் தங்கள் கவிதைகள் மூலம் எடுத்தியம்பியுள்ளனர்.

மேலும் இப்பாடல்களில், "மனித மனத்தின் வியத்தகு துள்ளலையும், ஏக்கத்தையும், நுட்பத்தையும், திட்பத்தையும் சங்கநூற் புலவர்கள் காட்டியிருக்கிறார்கள்"[11].

கவிஞர்கள் தங்கள் கவிதைகளில் சிறுபான்மை கற்பனை கலந்திருப்பினும், பெரும்பான்மை தம் காலத்து நிகழ்வுகளைப் பதிவு செய்துள்ளனர்.

"கவிதையுள்ளம் கொண்ட படைப்பாளன் கவிதை வாயிலாகத் தன் உணர்வுக்கு உருவம் கொடுக்கிறான். வடிவத்தை தேர்ந்தெடுத்த கவிஞன் புதிது புதிதாகப் பாடுபொருளைத் தேர்ந்தெடுக்கிறான். பாடுபொருள் கிடைத்து விடுகிறது.

பிறகு சிறந்த சொல்லாட்சியைத் தேர்ந்தெடுக்கிறான். கற்பனை, உவமை இவற்றில் புதுமையானதைத் தேடிப்பிடிக்கிறான். பிறர் காணாத புதிய கோணத்தில் பார்த்துக் கவிதையைப் படைக்கிறான்"[12].

அவ்வகையில் சங்க அகப் பாடல்களில் கவிஞனின் கற்பனைத் திறன் போற்றுதற்குரியதாயுள்ளது. நெய்தல் பாடல்களில் தலைவியின் நுண்ணிய மன உணர்வுகளை வெளிப்படுத்தக்கூடிய புலவனின் திறம் வியக்கத்தக்கது. கவிஞனின் நுண்மையான திறத்தால் அகப்பொருட் செய்யுட்கள் வெளிப்படையாக உணர்த்தும் பொருளைவிடக் குறிப்பினாலும் உள்ளுறை உவமத்தாலும் இறைச்சிப் பொருளாலும் உணர்த்தும் பாங்கே சிறப்புடையது; அப்படிப் புலவனின் கற்பனையாலும் நுண்ணோக்குப் பார்வையாலும் உருவானவள்தான் தலைவி. அவன் புனைந்த கவிதை எனும் ஓவியத்தில் முதன்மையானவளாகத் தலைவி படைக்கப்பட்டுள்ளாள்.

“அகத்திணை வட்டத்திற்கு அமைந்த மையப்புள்ளி தலைவி எனலாம். குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை ஆகிய ஐந்திணைகளில் உரிப்பொருளாகிய புணர்தல், இருத்தல், ஊடல், இரங்கல், பிரிதல் ஆகிய ஐவகை உணர்வுகளும் தலைவியை மையமாகக் கொண்டவையே.

அகத்திணையில் வரும் பிற படைப்புக்கள் தலைவியின் கருத்தைப் பிரதிபலிப்பவை அல்லது தலைவியின் படைப்பில் ஒளி ஊட்டுபவை. அகமாந்தர்களுக்கு அமைந்த பின்புலங்கள் தலைவியின் மன உணர்வுகளை விளக்கமுனைபவை”[13].

சங்க இலக்கியத் தலைவியின் படைப்பின் திறம் பற்றிக் குறிப்பிடும் வி. கல்யாணி கீழ் வருமாறு குறிப்பார்.

“தலைவியின் மாறாத, தீராத, ஆராத காதலைச் சுவைத்துப் படிக்கும்பொழுது இலக்கியம் படைத்த புலவனைக் காட்டிலும், தலைவியைப் பற்றி ஆராயும்பொழுது தலைவி தன்னகரில்லாத தனிப்பிறவி என்றும், உயர்ந்த உன்னதப் படைப்புதான் சங்க இலக்கியத் தலைவி என்றும் அறியமுடிகிறது”[14].

அத்தலைவி களவில், கற்பில் ஈடுபடும்போது தலைவன் பிரிவென்பது ஆற்ற இயலாத துயர் தருவதாக இருந்தது. களவு வாழ்வில் தலைவனுடன் புணர்ச்சியில் ஈடுபட்ட தலைவியின் அழகு நலம் பலமடங்கு சிறப்புடையதாகவிருந்தது. அதே தலைவி தலைவனைப் பிரிந்த நிலையில் அவளது தேக நலம் அழிந்து, மேனியில் பசலை படர்ந்து, வளையல்கள் நெகிழ, வீட்டிலுல்லோர் இரங்க, கண்டோர் அலர் தூற்ற அழகு இழந்து காணப்பட்டாள்.

நெய்தல் உரிப்பொருள் இரங்கல், அதாவது ஆற்றியிருத்தல் காத்திருத்தல் எனலாம். தலைவனைப் பிரிந்து காத்திருக்கும் தலைவியின் உணர்வுகளை எடுத்தியம்புவதாகும். காத்திருப்பு என்பது வருத்தம் தரக்கூடிய நிகழ்வாகும். தான் விரும்பக் கூடிய தலைவன் வருவேன் எனச் சொல்லிச் சென்றவன் குறித்த பொழுதில் வராமல், அவனுக்காகக் காத்திருக்க நேரும்பொழுது, தலைவியின் மனத்தின் எண்ணங்கள், உணர்வுகள் தவிப்புகள் பல நிலைகளில் கிளர்ச்சியூட்டி அவளுக்கு ஆழ்ந்த துன்பத்தைத் தரக்கூடியது. நெய்தல் நிலத்தலைவி, தலைவனைப் பிரிந்து ஆற்றியிருக்கிறாள். இப்பிரிவு தலைவிக்கு மிகுந்த துன்பத்தைத் தரக்கூடியதாக இருந்தது. சங்கப் புலவர்கள் இத்தலைவியின் நுண்ணிய மன உணர்வுகளை இயற்கைப் பொருள்களோடும் அஃறிணை உயிர்களோடும் பிறருக்கு வெளிப்படுத்திக் கூற இயலாத காம உணர்வை, அவளது மனப்போராட்டத்தை, துன்பத்தை, மேனி வேறுபாட்டை உள்ளத்தவிப்பை சொல்லோவியத்தில் எவ்வாறு பின்னிப் பிணைத்து எழிலுறப் பொருத்திக் காட்டியிருக்கின்றனர் என்பதை இனிவரும் தலைப்புகளில் காணலாம்.

**மாலைப் பொழுது கண்டு வருந்துதல்**

மாலைப் பொழுது அனைத்து உயிர்களுக்கும் இன்பத்தைத் தரக்கூடிய காலம். மாலை என்பது மயக்கத்தைத் தரக்கூடிய பொழுது. மணமிக்க மலர்கள் பல மலரக்கூடிய நேரம் அந்திப்பொழுது. அந்த அந்திப் பொழுதில் இரை தேடிச் சென்ற பறவைகள் தங்கள் கூடுகளுக்கு வந்து சேர்ந்து தன் இணைப் பறவை மற்றும் குஞ்சுகளுடன் களித்திருக்கும் இன்பமயமான நேரம். காதலன் காதலி, கணவன் மனைவி ஆகியோர்க்கு மாலைக் காலமும் அதனை அடுத்து வரக்கூடிய இரவு நேரமும் இரட்டிப்பு இன்பத்தை அளிக்கக் கூடியது என்பதை பழைய திரைப்படப் பாடல் வரிகள் இவ்வாறு கூறுகின்றன.

**மயக்கும் மாலைப் பொழுதே நீ போ போ**

**இனிக்கும் இன்ப நிலவே நீ வா வா**

**இன்னலைத் தீர்க்க வா**

வள்ளுவரும் தமது குறளில் காதலர்க்கு மாலைப்பொழுது கொலைக்களத்தில் கொலை செய்வோர் போல வருகிறது எனக் குறிப்பிடுகிறார்.

**காதல் இல்வழி மாலை கொலைக்களத்**

**தேதிலர் போல வரும்** [15]

என இணைந்தவர்க்குக் காதல் என்ற இன்ப உணர்வு ஊற்றெடுக்க அதனை அள்ளிப் பருகக்கூடிய காலம் இம்மாலைக் காலம் ஆகும். இணைந்தவர் இவ்வாறு இன்பம் துய்க்க; பிரிந்தவர்க்கு பிரிவுத் துயர் மேலிட, பல மடங்கு வருத்தத்தைத் தரக்கூடியதும் இம்மாலைக் காலமாகும். நெய்தல் நிலச் சூழலில் இம்மாலைக் காலம் சுடர்கதிர் ஒளி மங்கிச் சூரியன் மேற்கு மலையை அடையும் நேரம்; ஆரவாரத்துடன் இருந்த கடற்கரை தனிமைப்பட்டுக் கிடக்கும். இந்த ஆள் அரவமற்ற சூழலில் தலைவனைப் பிரிந்த தலைவியின் மனத்தில் பிரிவுத்துயர் பல எண்ணங்களைத் தோற்றுவிக்கும். தலைவன் பொருள் ஈட்டுவதன் காரணமாகவும், அல்லகுறிபட்டும், தலைவி இற்செறிக்கப்பட்ட நிலையிலும், வரைவிடை வைத்தும் தலைவியைப் பிரிவான். இப்பிரிவு நெய்தல் நிலத்தலைவிக்கு பன்மடங்கு வருத்தத்தைக் கொடுப்பதாக இருந்தது.

இம்மாலைக்காலத்து நிகழ்வுகளைத் தலைவியின் துயரொடு ஒப்பிட்டு சங்கச் செய்யுட்களாகத் தந்துள்ளனர் புலவர்கள். இப்பாடல்களில் கவிஞர்கள் சிறிது கற்பனையைக் கலந்து நிகழ்ச்சிகளுக்கு மெருகூட்டியுள்ளனர்.

“கவிஞனின் கற்பனை கலக்காத கவிதையைக் காணவியலாது”[16].

என்று வேர்ட்சுவொர்த் கூறுவதை கரே தமது நூலில் எடுத்துக்காட்டியுள்ளதைப் போல புலவனின் கவிதையில் சிறிது கற்பனை கலந்து இருந்தாலும் தன்னைச் சுற்றி நிகழக்கூடிய நிகழ்வுகளைக் கண்டதைக் கண்டவாறே சொல்லோவியத்தில் சுவைபடக் கூறியுள்ளனர்.

அவ்வகையில் அகநானூற்றுப் பாடலில், மோசிக் கரையனார் என்ற சங்கப்புலவர் நெய்தல் நிலக் கடற்கரையில் நிகழக்கூடிய மாலைநேர நிகழ்வுகளை வரிசையாகக் கூறி தலைவியின் பிரிவோடு ஒப்பிட்டுக் கூறியுள்ளார்.

மலைகள் செக்கர் வானத்தில் ஒளிபெற்றுத் திகழ்ந்தன. வண்டின் கூட்டம் மலருக்கு மலர் தாவித் தேனை உண்டு மகிழ்ந்தது; நாரைக் கூட்டம் ஒலி செய்தது. கடற்கரையில் விளையாடித் திரிந்த நண்டுகள் வளையிற் சென்று புகுந்தது; கடல் அலைகள் ஒலி அடங்கின; மீன்பிடிப்படகுகள் மீன் பிடித்தலாகிய தம் தொழிலை மறந்தன; என்றும் பிரியாது தன் துணையோடு வாழும் அன்றில் பறவை, பனை

மரத்தின் உள் மடலில் சேர்ந்தது; உப்பங்கழியின் கண் பூத்துக் கிடக்கும் மலர்களின் இதழ்கள் குவிந்தன; மணம் வீசும் மலர்கள் மலர்ந்தன; பகற் பொழுதைப் பையப் பையப் போக்கி, ஞாயிறு தன் ஒளியை மழுங்கி வெம்மை குறைய மேற்றிசையில் சென்று மூழ்கியது என்று மாலைநேர நிகழ்வுகளையெல்லாம் வரிசையாகக்கூறி, இந்நிகழ்வுகளுக்கெல்லாம் முத்தாய்ப்பாய் தலைவியின் இரங்கலைக் கூறி இப்பொழுதில் தலைவனைப் பிரிந்து யான் எங்ஙனம் ஆற்றுவேன் என அழுது புலம்புவதாக அவளது உணர்வுகளை எல்லாம் ஒரே வரியில் அடக்கி விடுவார்.

**மண்டிலம் மழுக மலைநிறம் கிளர,**
**வண்டினம் மலர்பாய்ந்து ஊத, மீமிசைக்**
**கண்டற் கானல் குருகினம் ஒலிப்ப**
**திரைபாடு அவிய, திமில்தொழில் மறப்ப**
**கரை ஆடு அலவன் அளைவயின் செறிய**
**செக்கர் தோன்ற, துணை புணர் அன்றில்**
**எக்கர்ப் பெண்ணை அகமடல் சேர**
**கழிமலர் கமழ்முகம் கரப்ப, பொழில் மனைப்**
**புன்னை நறுவீ பொன்நிறம் கொளாஅ**
**எல்லை பைப் பயக் கழிப்பி, எல்உற,**
**யாங்கு ஆ குவல்கொல் யானே?** (அகம். 260: 1–11)

இத்தகைய மாலைப்பொழுதினைக் கண்டு தலைவி வருந்தக்கூடிய நிலையை உணர்த்தும் நெய்தல் பாடல்கள் பல. இப்பாடல்களில் தலைவனைப் பிரிந்த தலைவியின் துயரை உணர்த்த மாலை என்ற சொல்லாட்சியைப் புலவர்கள் பல பொருளில் பயன்படுத்தியுள்ளனர். அதில் பிரிவின் வலியை ஆழமாக உணர்த்தப் புன்கண் மாலை என்ற சொல்லால் கூறி, தலைவிக்குத் தலைவனின் பிரிவானது ஆறாத துன்பத்தைக் தருவதாகக் குறிப்பிட்டுள்ளனர்.

மாலைப் பொழுதில் கதிரவன் ஒளி மங்கி மேற்கு மலையை அடைந்தான். இத்தகைய மாலைப்பொழுது துன்பங்கள் யாவும் ஒருங்கே என்னைச் சேர்ந்து யான் நடுங்கும்படி தனிமைத் துயரைக் கொணர்ந்தது எனத் தலைவி

வருந்துவதாகத் தலைவியின் துன்ப மிகுதியைக் கூறி, புன்கண் மாலை எனச் சுட்டுவார் புலவர் குன்றியனார்.

**வள் இதழ் நெய்தல் கூம்ப, புள் உடன்**

**கமழ் பூம் பொதும்பர்க் கட்சி சேர**

**செல் சுடர் மழுங்கச் சிவந்து வாங்கு மண்டிலம்**

**கல் சேர்பு நண்ணிப் படர் அடைபு நடுங்க**

**புலம்பொடு வந்த புன்கண் மாலை** (நற். 117: 3–7)

மற்றொரு பாடலில், புலவர் வெள்ளி வீதியார் தலைவி தலைவன் கூற, அவனுடைய பிரிவிற்கு உடன்படுகிறாள்; பிரிந்த நிலையில் பிரிவுத் துயர் மேலிட தோழியிடம் கூறுகிறாள். இப்பாடலில் தலைவியின் இன்ப துன்பத்தைப் பகிர்ந்து கொள்ளப் புலவனால் படைக்கப்பட்ட இணையில்லாப் பாத்திரப்படைப்பு தோழி. தலைவி தாய் தந்தை தலைவனிடம் பேசுவதைவிட தோழியிடமே அதிகமாகப் பேசுவதாகப் பல பாடல்களில் கவிஞனின் பாத்திரப்படைப்பு அமைகிறது. அவ்வாறே பின்வரும் பாடலில் தலைவி தன் பிரிவின் துயரைத் தோழியிடம் கூறுகையில், தோழி இன்பத்தோடு இருக்கும்போது பின்னர் வரப்போகும் துன்பத்தைப் பற்றிய எண்ணம் எனக்கு இல்லை. மாலைக்காலம் துன்பத்தையும் தனிமையையும் தரும் என்பதை அறிந்திருப்பின் தலைவன் என்னைப் பிரிய உடன்பட்டிருக்க மாட்டேன் என வருந்துகிறாள்.

**மாலையோ அறிவேன் மன்னே; மாலை**

**நிலம் பரந்தன்ன புன்கண்ணொடு**

**புலம்பு உடைத்து ஆகுதல் அறியேன் யானே** (குறுந். 386: 4–6)

அடுத்த ஒரு பாடலில், பகற்குறி வந்து மீளும் தலைவனிடம் தோழி, தலைவியின் துயரைக் காணப்பெறாது, தலைவி மாலைப்பொழுதினை ஆற்றாள் என கீழ் வருமாறு கூறுகிறாள்.

தலைவனே! கதிவரன் மறைந்தான். அங்ஙனம் மறையவும் துன்பத்தைச் செய்வதாய்த் தங்கும் துன்பத்தையுடைய மாலை வந்தது. தலைவி ஆற்றாள் என்கிறாள்.

**குணகடல் இவர்ந்து, குரூஉக் கதிர் பரப்பி,**

**பகல்கெழு செல்வன் குடமலை மறைய**

**புலம்பு வந்து இறுத்த புன்கண் மாலை** (நற். 215: 1–3)

இன்னும் ஒரு பாடலில், மதுரை ஓலைக் கடையத்தார் நல்வெள்ளையார் வருத்தும் மாலையைப் பற்றிக் கூறுகையில்,

தலைவன் வரைந்து கொள்ளாது பொருள்வயிற் பிரிந்தான். இதனால் கவலையுற்ற தலைவி தோழியிடம், நேற்று வந்த மாலைப்பொழுது இன்றும் வருமாயின் எனக்குண்டாகும் காம வெள்ளத்திலிருந்து எவ்வாறு நீந்துவேன் என்று துன்புற்றுக் கூறுவதாகக் குறிப்பிட்டுள்ளார்.

**சுடர் சினம் தணிந்து குன்றம் சேர**

**நிறைபறைக் குருகினம் விசும்பு உகந்து ஒழுக,**

**எல்லை பையக் கழிப்பி, முல்லை**

**அரும்பு வாய் அவிழும் பெரும் புன் மாலை**

**இன்றும் வருவது ஆயின், நன்றும்**

**அறியேன் வாரி தோழி! அறியேன்** (நற். 369: 1–6)

மேற்கண்ட பாடல்களில் தலைவியின் பிரிவெண்ணும் நிலையை உணர்த்தப் புன்கண் மாலை எனக் குறிப்பிட்ட புலவர் பெருமக்கள் பின்வரும் பாடல்களில் மருள் மாலை என்ற சொல்லாட்சியைப் பயன்படுத்தியுள்ளனர். தலைவனையே எந்நேரமும் நினைத்திருந்த தலைவிக்கு மாலைப்பொழுது மருள் மாலையாகப் பயப்படக்கூடிய, மிரட்ட, மிரளக் கூடிய மாலையாக வந்தது என்ற பொருளில் கையாளும் புலவர்களின் உணர்வுகளை வெளிப்படுத்தும் திறன் போற்றுதற்குரியது.

இப்பாடல்களில் தலைவி தன் பிரிவுத் துயரைப் பிறரிடம் கூற இயலாத நிலையில் தனக்குத் தானே கூறிக் கொள்வாள். அல்லது தன் உயிர்த் தோழியிடம் கூறுவதாகச் சங்கப் புலவர்கள் கவிதையைப் படைத்துள்ளனர். சான்றாகக் கலித்தொகைப் பாடலில், தலைவியின் கையறு நிலை பற்றித் தோழி தலைவனிடம் கூறுவது கீழ்வருமாறு:

தலைவனே! கதிரவன் காய்கின்ற கதிர்களைப் பரப்பிப் பின்னர் தன் கதிர்களை மீட்டுக் கொண்டு மறைந்தான். மயங்கிய இருள் தோன்றியது. வருத்தம் மிகுதற்குக் காரணமான மயக்கத்தை உடைய இம்மாலைக் காலம் தலைவியை மிரட்ட வந்தது என்று கூறினாள்.

**எல்உறு தெறு கதிர் மடங்கி, தன் கதிர் மாய;**

**................................. மயங்கு இருள் தலைவர;**

**எல்லைக்கு வரம்பு ஆய, இடும்பைகூர், மருள் மாலை ..** (கலித். 129: 3–7)

மற்றொரு பாடலில், தலைவன் பிரிந்து சென்ற நிலையில், மாலைப்பொழுது கண்டு ஆற்றாத தலைவி, இயற்கைப் பொருள்கள் அனைத்தும் தனது துன்பம் கண்டு எவ்வம் கொண்டன என்று வருந்துவதாக நெய்தல் திணை பாடுவதில் வல்லவரான நல்லந்துவனார் தலைவியின் துன்ப மிகுதியைப் படைத்துள்ளார்.

இப்பாடலில் கதிரவன் தான் பரப்பிய ஒளிக்கதிர்களைத் தன்னிடத்தே வாங்கிக் கொண்டு மேற்கு மலையை அடைந்து மறைந்தனன். கழியிடத்தே பூக்களினின்றும் வண்டுகள் நீங்கினமையின் துறை பொலிவிழந்து காணப்பட்டது. துறையிடத்தே மலர்கள் எல்லாம் துயில் கொள்வன போல் வாய் கூம்பி நின்றன. இவ்வுலகமெலாம் ஒருசேர நடுநடுங்கி அஞ்சும்படியாக ஊழிக்காலத்தே இப்பெரிய நிலவுலகம் நிலை அழிவது போல, உள்ளம் அழிந்து மிக்கு வருந்துவதற்குக் காரணமாய மயக்கத்தைத் தரும் மாலைக் காலம் வந்தது என்கிறார் புலவர்.

**கல் சேர்பு ஞாயிறு கதிர் வாங்கி மறைதலின்,**

**இருங்கடல் ஒலித்து ஆங்கே இரவுக் காண்பது போல,**

**பெருங்கடல் ஓத நீர் வீங்குபு கரைசேர,**

**போஒய வண்டினால் புல்லென்ற துறையவாய்,**

**பாயல் கொள்பவை போல, கயமலர் வாய் கூம்ப,**

**ஒருநிலையே நடுக்குற்று, இவ் உலகெலாம் அச்சுற,**

**இருநிலம் பெயர்ப்பு அன்ன, எவ்வம்கூர் மருள் மாலை** (கலித். 134: 4–10)

அடுத்தும் ஒரு பாடலில், வரைவிடை வைத்துத் தலைவியைத் தலைவன் பிரிகிறான். மற்ற பிரிவுகளைவிட வரைவிடை வைத்துப் பிரியும்போது தலைவியின் மனம் மிகவும் கலக்கமடைகிறது. பிரிவின் துயரால் நாணம் கடந்து, உள்ளம் கலங்கி, பொழுதோடு புலம்புகிறாள். அறிவு அழிந்து மொழிகிறாள். எவ்வாறெனில்,

கடும்பகல் ஞாயிறே! நீ எல்லாக் கதிர்களையும் பரப்பி, இப்பகற் பொழுதோடே போகாது நிற்றலை விரும்புகின்றேன்; நீ சென்றால் புல்லென்ற மயக்கத்தைத்

தரும் மாலைக் காலம் வந்து என்னைக் கொல்லாமல் போதல் அரிது; அதனோடு யான், என் உயிர் போகாமல் நிற்கும் தன்மை என்னிடம் இல்லை என்று கூறுவதாகப் புலவர்நல்லந்துவனார் தலைவியின் வருத்த மிகுதியைப் புலப்படுத்துகிறார்.

**................................ கடும்பகல்? ஞாயிறே!**

**எல்லாக் கதிரும் பரப்பி, பகலொடு**

**செல்லாத நின்றீயல் வேண்டுவல்; நீ செல்லின்**

**புல்லென் மருள்மாலைப் போழ்து இன்று வந்து என்னைக்**

**கொல்லாது போதல் அரிதால், அதனொடு யான்**

**செல்லாது நிற்றல் இலேன்** (கலித். 145: 26–31)

மேற்கண்ட வரிகளில் மருள் மாலை என்று தலைவியின் வருத்த மிகுதியைப் புலப்படுத்திய கவிஞர்கள். இனிவரும் பாடல்களில் பையுள் மாலை என்ற சொல்லால் உணர்த்தி தலைவியின் பிரிவு பையுள், நோய் தரக்கூடிய பிணி தரக்கூடிய துன்புறு பொழுதாக இருப்பதாகக் குறிப்பிடுகின்றனர்.

குறுந்தொகைப் பாடலில், பிரிவிடைப் பருவ வரவின் கண் பிரிந்த தலைவனை நினைத்துத் தலைவி ஏங்குகிறாள்.

தலைவி கதிரவன் வெம்மை குறைந்து மேற்கு மலையை அடைய, தன்னைத் துன்புறுத்துவது ஒன்றையே நோக்கமாகக் கொண்டு துன்பத்தைச் சுமந்து வந்ததுமாலைப் பொழுது என வருந்துவதாகக் கவிதையைப் படைத்துள்ளார் தேரதரன் என்ற சங்கப் புலவர்.

**சுடர் சினம் தணிந்து குன்றம் சேரப்**

**படர் சுமந்து எழுதரு பையுள் மாலை** (குறுந். 195: 1–2)

மற்றொரு பாடலில், வரைவிடை ஆற்றாத தலைவி தனது துயர மிகுதியைத் தோழி என்ற பாத்திரத்திடம் வெளிப்படுத்துவதாகப் படைத்துள்ளார் ஆசிரியர் கச்சிப் பேட்டு நன்னாகையார்.

மாலைப் பொழுது இரவினை உடன்கொண்டு வருவதாகலின், மாலை தோன்றிய உடனே பிரிவுத் துயரம் தோன்றிற்று ஆதலின், அதனைப் பையுளைத் தரும் (நோயினைத் தரக்கூடிய) மாலை என்ற சொல்லாற் குறித்தார் புலவர்.

**பழுமரம் படரும் பையுள் மாலை** (குறுந். 172:2)

மேலும், சில பாடல்களில், தலைவியின் மாலை வருத்தத்தை வெளிப்படுத்தப் புலவர்கள் வேறு சில சொல்லாட்சி மூலம் இயம்பியுள்ளனர்.

நற்றிணைப் பாடலில், தலைவனின் பிரிவால் வாடிய தலைவி, புன்னையும் தாழையும் நிறைந்த கடற்கரைச் சோலையிடத்தே காதல் துன்பம் மேலும் மேலும் பெருகி வருத்துமாறு கதிரவன் காயும் மாலைப்பொழுது வந்தது என மாலைப்பொழுதின் துன்பத்தைக் கூறுகிறாள் எனச் சங்கப் புலவர் கீரங்கீரனார் தம் பாடலில் விளக்கியுள்ளார்.

**பொன் நேர் நுண் தாது புன்னை தூஉம்**

**வீழ் தாழ் தாழைப் பூக் கமழ், கானல்**

**படர் வந்து நலியும் சுடர் செல் மாலை** (நற். 78: 3–5)

மற்றொரு பாடலில், வரைவு நீட்டித்த வழி மாலைப்பொழுது கண்டு வருந்தினாள் மற்றொரு தலைவி,

பறவைகளும், விலங்குகளும் தம் கூடுகளை அடைவதைக் கண்ட தலைவி, தான் மட்டும் தலைவனுடன் இல்லாமல் தனிமையில் வாடுவதை நினைத்து, நள் என்னும் ஓசையுடன் அன்பில்லாத மாலைக்காலம் வந்தது எனத் தலைவி ஏங்குவதாகப் புலவர் நன்னாகையார் குறிப்பிடுகிறார்.

**புள்ளும் மாவும் புலம்பொடு வதிய**

**நள்ளென வந்த நார்இல் மாலை** (குறுந். 118: 1–2)

இன்னும் ஒரு பாடலில், தலைவன் வரைவிடை வைத்துப் பிரிவு நீட்டித்த இடத்துத் தலைவி, பிரிவை ஆற்றாதாளாகி, நாணம் கடந்து, உள்ளம் கலங்கி பொழுதோடு புலம்புகிறாள். தலைவியின் வருத்த மிகுதியை மாலைக் காலத்துடன் ஒப்பிட்டு, அவள் வருத்த மிகுதியை விளக்குகிறார் நல்லந்துவனார்.

இப்பாடலில், மாலை வேளை நெடிய கழியின் கண் பூத்துள்ள மலர்கள் குவிந்துள்ளன; வருந்தும் என் நெஞ்சைப் போல கோவலர் குழலோசை தோன்றுகின்றது; குலைவு பெற்ற என் சொற்கள் போல் யாழ் இசையும் சீர்கெட்டுள்ளது; கெட்டுப் போன என் அழகு போல் பகற்காலத்தின் ஒளி மழுங்கிற்று; கலக்கத்தோடு வந்த காலனைப் போல என் மேலே மலைக்காலமும்

வந்தது; இனி இம்மாலைக்காலத்தே எங்ஙனம் நான் ஆற்றுவேன் என வருந்துகிறாள் தலைவி.

**நினையும் என் உள்ளம் போல், நெடுங்கழி மலர் கூம்ப;**

**இனையும் என் நெஞ்சம் போல்; இனம் காப்பார் குழல் தோன்ற;**

**சாய என் கிளவி போல், செவ்வழி யாழ் இசை நிற்ப;**

**போய என் ஒளியே போல், ஒரு நிலையே பகல்மாய;**

**காலன் போல் வந்த கலக்கத்தோடு என் தலை**

**மாலையும் வந்தன்று ..........................................** (கலித். 143: 36–41)

மேற்கண்ட வரிகளில்,மாலைக்காலம் வருவது காலன் வருவதற்கு ஒப்பாகும் என்ற பொருளில் கூறுகிறார்.தலைவனின் பிரிவை இதைவிட ஆழமான சொல்லால் உணர்த்த இயலாது எனலாம். இதே புலவரின் எண்ணத்தை மற்றொரு பாடலிலும் காணலாம்.

இப்பாடலில் தலைவன் வரைவிடை வைத்துப் பிரிகிறான்.மற்ற பிரிவுகளைவிட, வரைவிடை வைத்துப் பிரியும் பிரிவு தலைவியின் மனதில் பெரும் துயரத்தை ஏற்படுத்துகிறது. நல்லந்துவனாரின் நெய்தற் கலிப் பாடல்கள் பெரும்பான்மையானவை தலைவன் வரைவிடை வைத்துப் பிரியும் பிரிவு பற்றியது. இப்பிரிவில் தலைவி சொல்ல இயலாத துயரத்தில் ஆழ்கிறாள்; தன்னை மறக்கிறாள்; பித்தேறிப் பிதற்றுகிறாள்; அழுகிறாள்; அரற்றுகிறாள். இத்தகைய நிலையில் உள்ள தலைவியின் மேலிட்ட பிரிவை உணர்த்தும் கலித்தொகைப் பாடல் ஒன்று இப்புலவரின் பார்வையில் பின்வருமாறு.

**மருள்கூர் பிணை போல் மயங்க, நெந்நோய் செய்யும்**

**மாலையும் வந்து, மயங்கி, எரி நுதி**

**யாமம் தலை வந்தன்று ஆயின், அதற்கு என் நோய்**

**பாடுவேன் பல்லாருள் சென்று**

**யான் உற்ற எவ்வம் உரைப்பின் ................................** (கலித். 146: 32–36)

மருட்சி மிக்க மாண்பினைப் போல, யான் மயங்கும்படி காமநோயை உண்டாக்கும் மாலைக்காலம் வந்தது. அதனோடு மயங்கி, தீக்கொழுந்து போற் சுடுகின்ற இராக்காலமும் வந்தது; மாலைக்காலத்தே நான்பட்ட வருத்தத்தை என்

போல் வருந்தும் மகளிர் பலரிடத்தும் சென்று கூறுவேன் என்று அழுது அரற்றினாள் பிரிவுத் துயரில் உழன்ற தலைவி.

அடுத்து ஒரு பாடலில் கிடங்கில் காவிதிக் கீரங்கண்ணனார் பார்வையில், இரவுப் பொழுதின் வருகை எவ்வாறு உள்ளது எனில், பூவுதிர்ந்த கொடி போல, தலைவியின் மேனியழகும், மனமும் வெறுமையாய் அழகற்று இருப்பதாகக் குறிப்பிடுகிறார்.

மணம் செய்து கொள்ள உடன்பட்ட தலைவன் பின்னும் காலம் தாழ்த்தியதால் வருந்துகிறாள் தலைவி; கதிரவன் மேல்திசையில் இறங்கிட ஒளி மழுங்கின. பூவுதிர்ந்த கொடி போல இரவுப்பொழுதும் தனித்துப் பொலிவின்றி அமைந்தது. பறவைகளின் செயல்களால் எத்தனையோ இரவில் தீராத காமநோய் துன்புறுத்துவதால் இத்தனை நாளும் வருத்தமுற்றிருந்தேன். பின்னும் தனித்திருக்கிறேன் என ஏங்குகிறாள்.

**ஞாயிறு ஞான்று கதிர் மழுங்கின்றே;**
**எல்லியும் பூ வீ கொடியின் புலம்பு அடைந்தன்றே;**

**---------------------------------------------------------------**

**ஆனா நோய் அட வருந்தி, இன்னும்**
**தமியேன் கேட்குவென் கொல்லோ** (நற். 218: 1–11)

**பிரிவுத் துயரில் இயற்கைச் சக்திகளோடு பேசுதல்**

தலைவனைப் பிரிகிறாள் தலைவி. தலைவனின் பிரிவு என்பது தலைவியை வருத்துகிறது. தோழியைத் தவிர யாரிடமும் சொல்ல முடியாமல் தவிக்கிறாள் தலைவி. தலைவனுடன் நட்பு ஏற்பட்ட கடற்கரையில் தலைவன் சந்திக்க வருவானா? என ஏங்கி நிற்கிறாள். அவள் பார்க்கும் இடமெல்லாம் தலைவனின் நினைவை இரட்டிப்பாக்குகின்றன. அவளது ஏக்கப் பார்வை, உள்ளத்தவிப்பு கவிஞனின் கற்பனையில் பல காட்சிகளாகத் தெரிகிறது. கடல், கடற்கரை மணல்குன்று, காற்று, மரம், திங்கள் மற்றும் ஞாயிறு என அவள் பார்க்கும் இயற்கைப் பொருள்கள் எல்லாம் அவள் பிரிவிற்கு இரங்கி வருந்துவதாகவும்; தலைவனுடன் தலைவி இணைவதற்கு அவை உதவுமாறு வேண்டுவதாகவும்,

கட்டளை இடுவதாகவும், இவளது வேண்டுகோளுக்கு இணங்காத அவற்றை அவள் சபிப்பதாகவும் புலவனின் கற்பனை விரிகிறது.

சங்கப் புலவர் நல்லந்துவனார் கற்பனையில், நெய்தற் கலிப்பாடல்களில் தலைவன் பிரிந்து சென்ற நிலையில், மாலைப் பொழுது கண்டு ஆற்றாத தலைவி, கடலும், மணலும், மரமும் தலைவியின் துன்பத்தைக் கண்டு துன்புற்றதாகப் புனைந்துள்ளார். இப்புலவனின் புனைவிலான தலைவியின் உள்ளத்தவிப்பு கீழ்வருமாறு சித்தரிக்கப்பட்டுள்ளது.

தலைவனை நினைத்துப் பல நினைவுகளைக் கொண்டதனால் கவலையுடைய தனக்கு கலக்கத்தைத் தர, கடல் அதனைப் பார்த்து, என் அவலத்தைத் தன் மெய்யிலே கொண்டது போல நின்றது; அதற்குக் காரணம் என்னே? என்கிறாள். தலைவியின் பிரிவுத் துயரில் கடல் அலையும் பங்கு கொண்டு வருந்துவதாகக் குறிப்பிட்டு, மேலும் மண்குன்றிடம், தலைவனைப் பிரிந்து நடுங்குகின்ற நோயிலே உழந்து என் நலத்தை இழந்தேன்; மண்குன்று அதனைக் கண்டு, எனக்குத் துன்பத்தைத் தரும் நோய்க்குத் தான் கரைந்து வருந்துவது போன்றிருந்தது. அதன் காரணம் என்னே? எனக் கூறி வருந்துகிறாள். கடல் அலை கரையை அடைந்து நீரானது மீண்டும் கடலுக்குள் செல்லும் போது மண் அரிப்பு ஏற்படுவது இயல்பு. இத்தொடர் நிகழ்வைத் தலைவியின் பிரிவோடு இயைபுபடுத்தி உவமிக்கிறார் நல்லந்துவனார். இத்தோடு நில்லாமல் தலைவியானவள் மரத்தையும் நோக்கிப் பேசுகிறாள்.

தலைவனைப் பிரிந்து ஆங்கு மயக்கம் கொண்ட நெஞ்சோடு மயக்கத்தில் இருந்த என்னை, மரங்கள் நோக்கி, தாம் துன்பத்தால் வருந்தின போல, இலைகள் குவிய நின்றன; கூம்பியதற்குக் காரணம் என்னே? என்கிறாள்.

அந்திப் பொழுதில் சில மரங்களின் இலைகள் கூம்புதல் உலக இயல்பு. மரத்தில் கூம்பிய இலைகள் தலைவியின் வருத்தத்தில் பங்கிட்டுக் கூம்பின என புலவன் தன் கற்பனையை ஏற்றிக் கூறுகிறான்.

**தவல் இல் நோய் செய்தவர்க் காணாமை நினைத்தலின்**

**------------------------------------------------------------------------------------------------**

**கவலை கொள் நெஞ்சினேன் கலுழ்தர, கடல் நோக்கி**

**அவலம் மெய்க் கண்டது போலும், அஃது எவன் கொலோ?**

**நடுங்கு நோய் செய்தவர் நல்காமை நினைத்தலின்**

**..................................................................................................**

**நடுங்கு நோய் உழந்த என் நலன் அழிய, மணல் நோக்கி,**

**இடும்பை நோய்க்கு இகுவன போலும் அஃது எவன் கொலோ?**

**வையினர் நலன் உண்டார் வாராமை நினைத்தலின்**

**கையறு நெஞ்சினேன் கலக்கத்துள் ஆழ்ந்து, ஆங்கே**

**மையல்கொள் நெஞ்சொடு மயக்கத்தால், மரன் நோக்கி**

**எவ்வத்தால் இயன்ற போல், இலை கூம்பல் எவன் கொலோ?**

(கலித். 134: 11–23)

மற்றொரு பாடல் நெய்தல் திணை பாடவல்ல அம்மூவனார். வருணனையில், தலைவனைப் பிரிந்த தலைவி தன்னுள் கையற்றுத் தன்னுடைய ஆற்றாமையைக் கடலின் மேல் ஏற்றிக் கூறுவது போல் பாடல் செய்துள்ளார்.

தலைவி கடலிடம் பேசுகையில், கடலே! நீ யாரால் துன்புற்றனை? ஊரெல்லாம் துயிலும் கங்குலிலும், நீ துயிலாமையால் நீயும், என்னைப்போல காதலரைப் பிரிந்து, துயரால் அரற்றுகின்றனையோ எனக் கடலை நோக்கி வினவுகிறாள்.

**யார் அணங்குற்றனை கடலே! ........................**

**..........................................................................**

**நள்ளென் கங்குலும் கேட்கும்,நின் குரலே!** (குறுந். 163: 1–5)

**காற்றுடன் பேசுதல்**

காற்று மிகுவிக்கும் சுகம் ஓர் இதமான அனுபவம். இன்பமான உணர்வு. அதிலும் தனக்கு இனக்கமானவர் அருகில் இருக்கும் போது தன் உடலைத் தொட்டுத் தடவுகின்ற காற்றின் சுகம் ஈடு இணையில்லாதது. அதே காற்று நாம் துன்பத்தில் ஆழ்ந்து இருக்கும் போது, மேனியில் படும் மென்மையான காற்றும் துன்பத்தை மிகுவிக்கும் ஆற்றல் கொண்டது.

புலவன் தேரதரன் கற்பனையில் பிரிவிடைப் பருவ வரவின் கண் ஆற்றாத தலைவி தனது ஆற்றாமையை மெலிந்த காற்றுடன் ஒப்பிட்டுக் கூறுகிறாள்: தலைவனுடன் உறையும் நாளில், உடலைத் தடவி இன்பத்தை மிகுவித்த காற்று, அவன் பிரிவின்கண் புலிபோல பாய்ந்து துன்பத்தைத் தருவதாயிற்று என்று

வருந்துகிறாள். புலவனின் பார்வையில் இணைந்திருக்கையில் இன்பம் தந்த காற்று; பிரிந்து இருக்கும்போது, புலி பாய்ந்து இரையைப் பிடிக்கும் போது அதன் ஆவேசம் எத்தனை கொடுமையானதோ? அத்தகைய கொடுமையைச் செய்கிறது இக்காற்று என்று அப்பெண்ணின் துயரை எடுத்துரைக்கிறார்.

**இன்னாது இரங்கும் என்னார் அன்னோ**

**தைவரல் அசைவளி மெய்பாய்ந்து ஊர்தரச்**

**--------------------------------------------------**

**மெய் பிரிதாகுதல் அறியாதோரே!** (குறுந். 195: 4–7)

மற்றொரு நெய்தற் கலிப்பாடலில், வரைவிடை வைத்துப் பிரிந்த தலைவனை நினைந்து தலைவி வளியிடம் இரஞ்சும் தவிப்பை நல்லந்துவனாரின் சொல்லோவியத்தில் படைத்துள்ள திறம் ஒப்பில்லாச் சிறப்புடையது.

தலைவி வளியிடமும் விசும்பிடமும் ஞாலத்திடத்தும் பேசுகையில், பரக்கும் பல கதிர்களை உடைய ஞாயிற்றின் ஒளியுள்ள இடமெல்லாம் சென்று வருகின்றவன் நீ, என்னிடத்தே, கெடாத காமநோயை உண்டாக்கி, என்னைக் கைவிட்டுப் போன அன்பில்லாதவன் என் மனம் தெளியும்படியாக எதிர்படுவாய்; வேட்கை மிகுதியான எம்முடைய இயற்கை நலத்தை நுகர்ந்து, பின்பு ஒரு காரணமும் இன்றி, எம்மை வெறுத்து எம்முடைய இயற்கை நலத்தை எடுத்துக் கொண்டு, இம்மண்ணுலகத்தே ஒளிந்தவனைக் கொண்டு வந்து காட்டுவாய்; காட்டாயாகில், என் கண்ணீரைத் தெளித்து அதன் கண் எழுகின்ற அழலாலே மண்ணகம் எல்லாம் ஒரு சேரச் சுடுவேன் என்று தலைவி காற்றிடம் தனது சொல்ல இயலாத் துயரை முறையிடுவதாகக் கூறிப் பின் சபிப்பதாகப் படைத்துள்ளார் புலவர்.

**-------------------------------- விசும்பினும் ஞாலத் தகத்தும்**

**வளியே! எதிர்போம் – பல கதிர் ஞாயிற்று**

**ஒளி உள்வழி எல்லாம் சென்று; முனிபு எம்மை**

**உண்மை நலன் உண்டு ஒளித்தானைக் காட்டிமோ;**

**காட்டாயேல், மண்ணகம் எல்லாம் ஒருங்கு சுடுவேன், என்**

**கண்ணீர் அழலால் தெளித்து** (கலித். 144: 39–44)

**ஞாயிறுடன் பேசுதல்**

தலைவி தனது பிரிவுத் துயரைத் தோழியைத் தவிர மற்றவர்களிடம் உணர்த்த இயலாத நிலையில், யாரிடம் பேசுகிறோம் என்பதை உணராதவளாய் தன்னைச் சுற்றியுள்ள பொருள்கள் இயற்கைச் சக்திகள் ஒவ்வொன்றிடமும் பேசுகிறாள். கடலுடன் காற்றுடன் பேசிய தலைவி ஞாயிறுடனும் பேசுகிறாள். சான்று பகரும் கலித்தொகை வரிகளை கீழ்வருமாறு காண்போம்.

தலைவன் வரைவிடை வைத்துப் பிரிவு நீட்டித்த இடத்து, பிரிவை ஆற்றாதா தலைவி மனம் கலங்கிய நிலையில் ஞாயிறிடம் பேசுகையில், ஒளிக்கதிர்களைப் பிறருக்குப் பகுத்துக் கொடாத ஞாயிரே! நீ மேலை மலையை அடைகின்றாய் ஆயின், என்னைப் பிரிவுத் துயரில் ஆழ்த்திய அவரைத் தேடிப்பிடித்துக் கொண்டு வருக என்கிறாள்.

அதற்கு ஞாயிறு மறுமொழி தாராது மலையை அடைகின்றது கண்டு, கோபத்தின் உச்சத்திற்கே சென்ற தலைவி, மறுவில்லாத சுடரே! அத்தகிரியை நீ சேர்கின்றாயாயின், நீ கடலிடத்தே மீண்டு வந்து தோன்றிப் பகற் பொழுதை உண்டாக்கும் அளவும் நான் தேடுவேன். தேடுவதற்கு எனக்குக் கைவிளக்கால் சில கதிர்களைப் பகுத்துத்தாராய் என்று கூறிப் பிதற்றினாள் தலைவி.

**கதிர்ப் பகா ஞாயிறே! கல் சேர்தி ஆயின்**

**---------------------------------------------------------**

**மை இல் சுடரே! மலை சேர்தி நீ ஆயின்**

**பௌவ நீர்த் தோன்றிப் பகல் செய்யும் மாத்திரை,**

**கைவிளக்காகக் கதிர் சில தாராய்!** (கலித். 142: 37–43)

இப்பாடலில், ஞாயிறு தன் கதிர்களைப் பகுத்துக் கொடுத்து அதன் வெளிச்சத்தில் இரவில் கூட நான் தேடுவேன் என்று தலைவி கூறுதவன் மூலம், தலைவனின் பிரிவுத் துயர் பகலும் இரவும் தலைவியைத் தவிப்படையச் செய்கிறது என்பதும், எப்படியாகிலும் தலைவனைச் சந்தித்தால் போதும் எனத் தலைவியின் மென்மையான மனம், ஆசை கொள்கிறது என்பதுமான தலைவியின் மன உணர்வை வெளிப்படுத்துகிறார் புலவர் நல்லந்துவனார்.

மற்றொரு பாடலிலும் நல்லந்துவனார் பார்வையில், வரைவிடைப் பிரிந்த தலைவனின் நினைவில் வாடிய தலைவி ஞாயிறிடம் பேசுகிறாள் :

சுடரே, நான் அடைகின்ற துன்பம் எத்தகையது என ஒரு தன்மையின்றி எண்ணாமல்; யான் இவ்விடத்தே இராக்காலத்தே வருந்தும்படி நீ போனாய்; என் மீது உனக்கு அருள் இல்லை; இத்தன்மையால் நீ வாழ்வாயாக என்று கூறினாள்.

**இருளொடு யான் ஈங்கு உழப்ப, என் இன்றிப் பட்டாய்;**

**அருள் இலை; வாழி – சுடர்!** (கலித். 143: 42–43)

**திங்களிடம் பேசுதல்**

தலைவனின் பிரிவினால் ஆற்ற இயலாத் துயரில் உழன்ற தலைவி கடலிடம், காற்றிடம், ஞாயிறிடம் பேசியவள்,கவிஞர்களின் கற்பனையில் கீழ் வரும் பாடல்களில் தண்ணிய நிலவிடம் பேசுவதாகப் படைக்கப்பட்டுள்ளாள்.

எடுத்துக்காட்டாக நற்றிணைப்பாடலில், தலைமகன் வரைந்து கொள்ளாமல் பொருள் ஈட்டுவதற்காகப் பிரிந்து சென்றான். தலைவனின் பிரிவை நினைத்து ஏங்கிய தலைவி நிலவுடன் பேசுகிறாள்:

திங்களே! நீ சான்றாண்மையும் செம்மைக் குணங்களும் உடையையாகலானும் உனக்குத் தெரியாது உறையும் உலகம் ஒன்றுமில்லை. எனக்குத் தெரியாது மறைந்து ஒழுகும் என்னுடைய காதலர் இருக்கும் இடத்தை எனக்கு நீ காட்டுவாயாக! இவ்வாறு கேட்டும் நீ ஒன்றும் கூறாயாகலின், திங்களே! நீ அறிந்த அளவில் சாட்சி கூறாது பொய்யை மேற்கொண்டனை! இச்செயல் புரிந்தமையான், நல்ல அழகிழந்த என்தோள் போல நீயும் வாட்டுமுற்று நாள்தோறும் சிறுகிச் சிறுகிக் குறைந்து மறைவாய்! நிலவுடன் தலைவியின் துயரை ஒப்புமை கூறுகிறார் ஒப்பில்லாக் கவிஞர் வெள்ளைக்குடி நாகனார்.

**.......................................... நிறையுறு மதியம்!**

**சால்பும் செம்மையும் உடையை ஆதலின்**

**நிற் கரந்து உறையும் உலகம் இன்மையின்**

**எற் கரந்து உறைவோர் உள்வழி காட்டாய்!**

**நற்கவின் இழந்த என் தோள் போல் சாஅய்**

**சிறுகுபு சிறுபுபு செரீஇ,**

**அறிகரி பொய்த்தலின்,ஆகுமோ அதுவே?** (நற். 196: 3–9)

இப்பாடலில்,அறிகரி பொய்த்தல் பெரும் குற்றமாதலின் தலைவி அதற்குரிய தண்டமும் குறித்தாள். என் தோள் கவின் இழந்தாற் போல நீயும் இளைத்துக்

கவின் இழப்பாய் என்று தண்டனையும் கூறுகிறாள். மேலும் திங்கள் தேய்வதும் வளர்வதும் இயற்கையின் இயல்பு. நிலவு தேய்வதைத் தலைவியின் சாபத்தால் எனத் தலைவியின் துன்ப மிகுதியை ஒப்புமைப்படுத்திக் கூறியுள்ளார் பாடல் புனைந்துள்ள கவிஞன்.

மற்றொரு பாடலில், நல்லந்துவனாரின் கவிதை எனும் காட்சியில் வரைவிடை வைத்துப் பிரிந்த தலைவனை நினைந்து தலைவி, திங்களை நோக்கிப் பேசுகிறாள்:

நிலவை வெளிப்படுத்துகின்ற வான் திங்களே! அருள் செய்து கைவிட்ட என் காதலனை, அவன் ஏற்படுத்திய மனக்கலக்கத்தைத் தருகின்ற காம நோய்க்கு, உன்னைத் தவிர அயலில் உள்ளார் அதற்கொரு மருந்தைத் தெளிவாகக் கூறார். திங்களே, நீ அவன் பாற்சென்று என் குறை முடிப்பாயாக எனத் திங்களிடம் தன் பிரிவுத் துயரை வெளிப்படுத்தி தூது போக வேண்டுகிறாள் நெய்தற் கலிப் பாடலில் தலைவி.

**நிலவு உமிழ் வான் திங்காள்! ............................**

**......................... அருளான் துறந்த அக்**

**காதலன் செய்த கலக்குறு நோய்க்கு ஏதிலார்**

**எல்லாரும் தேற்றார் மருந்து** (கலித். 145: 47–50)

அடுத்தும் ஒரு பாடலிலும், வரைவிடை வைத்துப் பிரிந்த தலைவனின் பிரிவால் வருந்திய தலைவியின் துயரைக் கவிதை படிப்போர் உருகுமளவு வார்த்தைகளில் வடித்துக் காட்டிய நல்லந்துவனாரின் நெய்தல் கலிப் பாடல் பின்வருமாறு:

தலைவி மதியைக் கண்டு, அம்மதியுள் இருந்த குறுமுயலோடு உரையாடித் தலைவனைத் தேடித் தருமாறு வேண்டுகிறாள். திங்களுள் விளங்கிய குறிய முயலே! கரிய கடல் சூழ்ந்த உலகம் எல்லாம் பார்த்துள்ளாய்; அறிவு வேறுபட்ட என்னுடைய பிரிவின் நெஞ்சத்தை, நான் தேடிக்கண்டு கொள்ளக் கருதின வருத்தத்தை, நீ தீர்ப்பாய்; உன்னால் தீர்க்க முடியவில்லையாயின், இவ்வுலகத்தில் என் கேள்வன் இருக்கின்ற இடத்தைக் காட்டுவாய்; அவ்வாறு நீ காட்டாயாயின் உனக்குப் பகையாகிய சினமுடைய நாயை நின்னிடத்தே ஏவி விடுவேன்; அப்படி இல்லையாயின் வேட்டுவர் உள்ள இடத்தே சென்று ஒரு முயல் உண்டென்று

கூறுவேன்; அதுவும் இல்லாமல் போனால் உனக்கு அரணாக இருக்கின்ற திங்களுடன் உன்னையும் அலை விழுங்குகின்ற பாம்பைச் செலுத்துவேன் என்று நிலவில் உள்ள குறுமுயலிடம் தன் நெஞ்சுறு குறையைச் சொல்லி வேண்டுகிறாள். பின்பு அவளே தலைவனின் நினைவால் பித்தேறி மிரட்டுகிறாள்.

குறுமுயல் வெண்மேகத்தே மறைந்ததனைக் கண்டு நீ மதியோடே வெண்மேகத்தே ஓடிச் சென்று புகுந்துவிட்டாய்; சிறிதே என்னிடம் கண்ணோட்டம் கொண்டு, அவனைத் தேடிப் போகின்றாய் போலே இருந்தது என்று அதன் மறைவிற்கும் அவளே காரணம் கூறுவது போல விளக்கம் கொடுக்கிறார் நல்லந்துவனார். இப்பாடலில் புலவர் ஒரு நாடகக் காட்சி போல அமைத்தது சுவை மிகுந்ததாகியுள்ளதோடு, தலைவியின் மனம் கலங்கிச் சொல்ல இயலாத துயர் நிலையும் அறியமுடிகிறது.

**பொங்கு இரு முந்நீர் அகம் எல்லாம் நோக்கினை**
**திங்களுள் தோன்றி இருந்த குறு முயால்!**
**எம் கேள் இதன் அகத்து உள்வழிக் காட்டீமோ?**
**காட்டீயாய் ஆயின், கதநாபி கொளுவுவேன்;**
**வேட்டுவர் உள்வழிச் செப்புவேன்; ஆட்டி**
**மதியொடு பாம்பு மடுப்பேன் – மதி திரிந்த**
**என் அல்லல் தீராய் எனின்,**
**என்று,ஆங்கே, உள் நின்ற எவ்வம் உரைப்ப, மதியொடு**
**வெண் மழை ஓடிப் புகுதி; சிறிது என்னைக்**
**கண்ணோடினாய் போறி, நீ** (கலித். 144: 17–26)

**பிரிவுத் துயரில் பறவைகளுடன் பேசுதல்**

தலைவனைப் பிரிந்த தலைவி துயருற்ற வேளையில், நெய்தல் நிலத்தில் வசித்த பறவைகள் இவள் போல அதனுடைய துணையைப் பிரிந்து நரலும், அவ்வாறு நரலும் சத்தம் தன்னுடைய பிரிவை நினைவுபடுத்தித் துயரத்தை மேன்மேலும் பெருக வைக்கிறது என வருந்துகிறாள். மேலும், அருகில் இருக்கும் பறவைத் திரளைப் பார்த்துத் தான்படும் துன்பத்தில் உதவுமாறு அவற்றோடு உரையாடுவாள். கவிஞன் தலைவியின் உரையாடலில் ஈடுபடுத்திய பறவைகள் நெய்தல் நிலத்திற்கு மட்டுமே உரியவை என்பது சிறப்பு. நெய்தல் திணை பாடிய

கவிஞன் பிறதிணைகள் பாடினாலும் நெய்தல் திணை பற்றிப் பாடும்போது இத்திணைக்குரிய முதல், கரு, உரிப் பொருள்களை நினைவிலிருத்தியே பாடியுள்ளனர். மறந்தேனும் மாற்றிப் பாடினர் இலர்.

**அன்றில் பறவையுடன் பேசுதல்**

நெய்தல் நிலத்தில் வாழக்கூடிய பறவைகளில் ஒன்றாகிய அன்றில், ஒன்றைவிட்டு ஒன்று பிரியாது, பிரிந்தால் தன் இணைப் பறவையை இரவு முழுவதும் அகவி அழைக்கும். இதனுடைய குரலைக் கேட்டுவருந்திய தலைவி தன் துணையை நினைத்துத் துன்புற்றாள். சான்றாக நற்றிணைப் பாடலில் மணம் செய்து கொள்ளாமல் காலம் தாழ்த்திய தலைவனை நினைத்து வருந்தித் துயரற்ற தலைவி, தன் வீட்டின் அருகே இருக்கும் பனை மடலில் கூடு அமைத்து வசித்த அன்றில் அதன் துணையைப் பிரிந்து அகவி அழைக்கும் குரலைக் கேட்டு, மனம் வருந்தித் துன்புற்றதாகத் தனது ஆற்றாமையைத் தோழியிடம் கூறுகிறாள்.

**தமியேன் கேட்குவென் கொல்லோ**

**பரியரைப் பெண்ணை அன்றிற் குரலே?** (நற். 218: 10–11)

மற்றொரு பாடலில், வேட்கை தாங்க இயலாத தலைவி தன் தோழியிடம் பகர்கிறாள். தோழி! பனை மரத்தில் வசிக்கக் கூடிய அன்றில் தன் பெண்பறவையோடு கூடுகின்ற குரலைக் கேட்டு, நானும் தலைவனோடு கூடி இன்புற இயலவில்லையே என வருந்துகிறேன் என்கிறாள். இப்பாடலில் சங்கப் புலவர் மதுரை ஆருலவியநாட்டு ஆலம்பேரி சாத்தனார் பறவைகளின் இயல்பான இன்ப உணர்வைத் தலைவியின் பிரிவோடு உவமித்துத் தலைவியின் காத்திருப்பைப் புலப்படுத்துகிறார்.

**மன்றப் பெண்ணை வாங்கு மடற் குடம்பைத்**

**துணை புணர் அன்றில் உயவுக் குரல் கேட்டொறும்**

**.............................. துயர் அடச் சாஅய்**

**நம் வயின் வருந்தும், நன்னுதல் என்பது**

**உண்டுகொல்? வாழி, தோழி! ..............................** (நற். 303: 4–8)

அடுத்தும் ஒரு பாடலில், தலைவன் மீது காமவேட்கை மீதூர அளவில்லாத துன்பமுற்ற தலைவி அன்றிலின் நரலும் ஒலியைக் கேட்கும் பொழுது எல்லாம்

காதலர் அருகில் இல்லையே என ஏங்குவதாக வெள்ளி வீதியார் தமது பாடலில் தலைவியின் துயரை வெளிப்படுத்தியுள்ளார்.

**மை இரும் பனைமிசைப் பைதல உயவும்**

**அன்றிலும் என்புற நரலும்; அன்றி**

**………………………………………………………………**

**………………………………………………………………**

**காமம் பெரிதே; களைஞரோ இலரே!** (நற். 335: 7–11)

**நாரையுடன் பேசுதல்**

நெய்தல் நிலத்தில் வசிக்கக் கூடிய மற்றொரு பறவை நாரை. அன்றிலிடம் பேசிய தலைவி நாரையிடம் பேசுவது போல செய்யுளைப் படைத்துள்ளனர் சங்கப் புலவர்கள். அவ்வகையில் சங்கப் புலவர் சேந்தங் கண்ணனார் தனது பாடலில், இருவகைக் குறியிடத்தும் வந்தொழுகிய தலைவன் இடையில் வராமல் தடைபட்டதால் பிரிவை ஆற்றாது தலைவி வருந்தினாள். அவளது வருத்தத்தை நாரைத் திரளிடம் கூறுவதாகச் செய்யுளைச் செய்துள்ளார்.

நாரையே! எனது மொழிகளை உனது சுற்றத்தாருடன் இருந்து கேட்பாய். மாலைப் பொழுது எனக்குப் பெரும்துன்பத்தைத் தருகிறது. அதனை நீ அறிந்தால் என்னிடம் நீ அன்பு கொள்வாய். மனம் வேறுபாடு கொள்ளாமல் என் குறையை என் தலைவன் உணருமாறு உரைத்தல் வேண்டும் எனத் தலைவி நாரையிடம் வேண்டுவதாகப் பாடல் செய்துள்ளார் புலவர்.

**இரும் புலா அருந்தும் நின் கிளையொடு சிறிது இருந்து**

**கருங் கால் வெண் குருகு! – எனவ கேண்மதி;**

**பெரும் புலம்பின்றே, சிறு புன் மாலை;**

**அது நீ அறியின், அன்புமார் உடையை;**

**நொதுமல் நெஞ்சம் கொள்ளாது, என் குறை**

**இந்நாங்கு உணர உறைமதி ………………………** (நற். 54: 3–8)

மற்றொரு பாடலில், தலைவனைப் பிரிந்து வருந்தியிருந்த தலைவியைத் தேற்றுவிக்கக்கூடிய தோழி வருந்த வேண்டாம் என்கிறாள். அதற்குத் தலைவி வன்புறை எதிரழிந்து உரைக்கிறாள்.

தோழியே! பனையின் வளர்ந்த மடலிற் கட்டிய கூட்டிலுள்ள நாரை தன் துணையைப் பிரிந்து கூவி ஒலியெழுப்பும் போதெல்லாம் என் உள்ளம் உடைந்து உருகுகின்றது என்கிறாள். மேலும் யாமத்தில் என்னைப் போலவே இந்நாரையும் ஆயிற்று என எண்ணி ஏங்குகிறாள் தலைவி.

**ஓங்கு மணல் உடுத்த நெடு மால் பெண்ணை**

**வீங்கு மடல் குடம்பைப் பைதல் வெண் குருகு**

**நள்ளென் யாமத்து உயவுதோறு உருகி**

**அள்ளல் அன்ன என் உள்ளமொரு உள் உடைந்து**

**உளெனெ – வாழி,தோழி! ..............................** (நற். 199: 1–4)

இப்பாடலில், தலைவியின் உள்ளத் தவிப்பை நாரை தன் துணையைக் கூவி அழைக்கும் குரலோடு ஒப்புமை கூறுகிறார் புலவர் பேரி சாத்தனார்.

இன்னும் ஒரு பாடலில், மதுரை ஆருலவிய நாட்டு ஆலம்பேரி சாத்தனார், பனைமடலில் தங்கியுள்ள நாரை தன் பெடையை அழைக்கும் குரல், களவுக் காலத்து மணம்புரியப் பொருளீட்டச் சென்ற தலைவனைப் பிரிந்து வருந்திய தலைவியின் உயிர் பிரியுமாறு வருத்துவதாகப் பாடல் இயற்றியுள்ளார்.

பனைமடலில் தங்கியுள்ள நாரை, தன் பெடை தன் குடம்பையில் வந்து கூடுமாறு கூவும். அதுகேட்டு என் உயிர் பிரியுமாறு வருந்தும். பெடையுடன் கூடுமளவும் நாரை தன் கூவுந் தொழிலை நிறுத்தாத நிலையிலே நான் எங்ஙனம் ஆற்றுவேன். என் உயிர் எங்ஙனம் நிலைக்கும் எனக் கையற்றுத் தலைவி வருந்துவதாகப் புலவர் பாடல் செய்துள்ளார்.

**யாங்ஙனம் விடுமோமற்றே! மால்கொள**

**வியல் இரும் பரப்பின் இரை எழுந்து அருந்துபு**

**....................................................................**

**ஆடு அரைப் பெண்ணைத் தோடு மடல் ஏறி,**

**கொடு வாய்ப் பேடைக் குடம்பைச் சேரிய**

**உயிர் செலக் கடைஇப் புணர் துணைப்**

**பயிர்தல் ஆனா, பைதல் ஆம் குருகே?** (நற். 338: 6–12)

**தன் மனம் கவர்ந்த வண்டிடம் பேசியது**

தலைவி ஆருயிர்த் தலைவனது பிரிவாற்றாது வருந்தினாள். தனது துன்ப மிகுதியாலே கூறாதனவற்றைக் கூறினாள். கேளாதனவற்றைக் கேட்பவளானாள். தன்நிலை மறந்து அன்றிலுடன் நாரையுடன் தன் பிரிவை ஒப்புமை கூறிப் பேசிய தலைவி, தலைவனுடன் தான் சேரத் தூது போக வேண்டும் என வண்டிடம் வேண்டுவதாகக் கவிஞனின் கற்பனை விரிகிறது. எவ்வாறெனில்,

நெய்தல் மலரிலுள்ள தேனை விரும்பி உண்ட வண்டினங்களே! தலைவனின் பிரிவால் நான் அடைந்த துன்ப மிகுதியினைக் கடற்கரைச் சோலையும் சென்று இடித்துக் கூறாது; உப்பங்கழியும் கூறாது; மணங்கமழும் மலரினையுடைய புன்னையும் போய்ச் சொல்லாது; இவ்விடத்து உன்னையன்றி வேறொரு தூதினை யான் பெற்றிலேன்; இருள் செறிந்த நடு இரவில் வந்து, பலநாளும் உன்னுடைய மிக்க துன்பத்தை நீக்கியவள், உன் பிரிவால் தான் அடைந்த துன்பக் கடலைக் கடக்க வல்லவளோ? என்று தலைவன்பாற் சென்று நீயே கூறுதல் வேண்டும் எனத் தூது போக வேண்டுகிறாள் தலைவி.

**கானலும் கழறாது; கழியும் கூறாது;**

**தேன் இமிர் நறுமலர்ப் புன்னையும் மொழியாது;**

**ஒருநின் அல்லது பிறிதுயாதும் இலனே;**

**..................................................................**

**பறைஇ தளரும் துறைவனை, நீயே**

**சொல்லல் வேண்டுமால் ..............................**

**........................ நள்ளென் யாமத்து**

**நின் உறு விழுமம் களைந்தோள்**

**தன்உறு விழுமம் நீந்துமோ!** (அகம். 170: 1–14)

இப்பாடலில் தலைவியின் துன்ப மிகுதி கரைகாண இயலாக் கடலுக்கு ஒப்புமை கூறிக் கவி செய்துள்ளார் கவிஞர்.

**பிரிவுத் துயரில் தலைவி ஊரோடு பகைத்தல்**

தலைவனைப் பிரிந்து துயருற்ற தலைவிக்கு அவள் வாழுகின்ற ஊரும் பகையுடைதாய்த் தோன்றியது. கவிஞனின் கற்பனையில் தலைவியின் பிரிவில்

பங்கு கொண்ட இயற்கைச் சக்திகள் மற்றும் பறவைகள் போல ஊரும் பங்கு கொண்டு அவளைத் துன்புறுத்தியது. புலவன் தன்னுடைய எண்ணங்களை வெளிப்படுத்தக்கூடிய உத்திகளில் இதுவும் ஒன்று. அவ்வகையில் தலைவி தலைவனைப் பிரிந்து வருத்தத்தில் ஆழ்ந்திருக்க ஊரிலுல்லோர் தன் துயரை அறியாது மகிழ்வுடன் உள்ளனரே என்று வருந்தி ஊருடன் பகை கொள்கிறாள்.

தலைவியின் பகையுணர்வை நெய்தற் திணை பாடவல்ல உலோச்சனார் தமது சொல்லோவியத்தில் பின்வருமாறு புனைவார்.

தலைவன் வரைவிடை வைத்துப் பிரிந்த நிலையில், தலைவி பிரிவுத் துயரில் வருந்தினாள். நீ வருந்துவது புறத்தார்க்குப் புலனாயின் அலராகும் என்கிறாள் தோழி. அதற்குத் தலைவி, ஆரவாரத்தையுடைய இவ்வூர், தலைவனைப் பிரிந்த காலத்தில் பொலிவிழந்து என் உள்ளத் துயர் போல இவ்வூரும் வருத்தம் தருவதாய் உள்ளது. எங்ஙனம் ஆற்றுவேன் என ஊரே வருத்தம் தருவதாக உள்ளது எனத் தலைவி கூறுவதாகப் பாடியுள்ளார்.

**.............................................. தேர்கெழு**

**மெல்லம் புலம்பன் பிரியின் புல்லெனப்**

**புலம்பு ஆகின்றே – தோழி! ...................**

**..................................................................**

**.............................. எம் அழுங்கல் ஊரே** (நற். 38: 4–10)

மற்றொரு நற்றிணைப் பாடலில், வரைவு நீட்டிப்ப அலராகும் எனக் கவன்ற தோழிக்குத் தலைவி கூறும் பிரிவின் துயர் கதம்பிள்ளையார் வரிகளில் கீழ்வருமாறு காணலாம். தலைவிக்கு அழகிய குடியிருப்புகள் நிறைந்த ஊரானது தலைவனுடன் உறையும் நாளில் இனிமையைத் தந்தது. தலைவனைப் பிரிந்த நிலையில் அவ்வினிமையைத் தரவில்லை. தலைவன் தன்னுடன் இல்லாமையால் சிற்றூர் வருத்தத்தையே தோற்றுவித்தது என்கிறாள் தலைவி.

**தன் குடி வாழ்நர் அம்குடிச் சீறூர்**

**இனிது மன்றம்ம தானே ................**

**...........................................................**

**............................................. புரவித்**

**தேரோர் நம்மொடு நகாஅ ஊங்கே** (நற். 135: 4–5)

இன்னும் ஒரு பாடலில், தலைவன் பகற்குறி வந்து மீள்கிறான். அவன் செலவு நோக்கித் தலைவி தன்னுள்ளே பேசுகிறாள். இப்பாடலில் பெண்பாற் புலவராகிய ஔவையார் பெண்ணின் மனஉணர்வை நுட்பமாக எடுத்துக்காட்டியுள்ளார். தலைவனைச் சந்திக்கும் போதே வரப்போகும் பிரிவை எண்ணிப் பிரிவுத்துயரில் இவ்வூர் எவ்வாறு இருக்குமோ? என ஊகித்து வருந்துகிறாள் தலைவி.

உடம்பின்கண் தோன்றிய காமஉணர்வைத் தணிக்கும் வகையறியாது பொழுதும் மறைந்தது. தலைவனின் தேரும் மறைந்தது. ஆதலால் இந்த ஊரும் தலைவனுடன் நாம் இனிய மகிழ்ச்சி பெருக விளையாடிய சோலையும், இனி நமக்கு எவ்வண்ணமாக அமையுமோ? எனத் தலைவி வருந்துவதாகப் படைத்துள்ளார் புலவர்.

**மெய்ம் மலி காமத்து யாம் தொழுது ஒழிய,**

**தேரும் செல் புறம் மறையும்; ஊரொடு**

**யாங்கு ஆவது கொல் தானே ..................**

**................................... கொண்கனொடு**

**இன் நகை மேவி, நாம் ஆடிய பொழிலே?** (நற். 187: 5–10)

அடுத்தும் ஒரு பாடலில், தலைவியின் பிரிவினால் ஏற்பட்ட மன வருத்தத்தை சிறப்பான முறையில் வெளிப்படுத்தியுள்ளார் சங்கப்புலவர் கொல்லன் அழிசி.வரைவிடை ஆற்றாத தலைவி தோழியிடம் பின்வருமாறு பகர்கிறாள்.

கடல் துறையையுடைய இச்சிற்றூர், நாம் தங்கியிருத்தற்கு உரிய ஊர் அன்று. தலைவனின் பிரிவுக் கொடுமையால் உடல் வருந்தி; துயில் கொள்ளாமல் நான் இருக்க; பக்கத்தில் உறைபவரிடம் யாது நேர்ந்தது என்று கூடி வினவாத தூக்கத்தை மட்டும் கண்களில் கொண்ட அறிவற்ற மாக்களொடு நெடிய இரவுப் பொழுதினையும் உடையது இவ்வூர் என ஊரினையும் ஊரிலுள்ளோரையும் பழிக்கிறாள்.

இப்பாடலில், தான் வருந்தும் இவ்விரவு நேரத்தில் ஊர் மக்களும் உறங்காமல் தன் துன்பத்தில் பங்குகொள்ள வேண்டும் எனத் தலைவியின் மனம் ஏங்குகிறது. தான் தனித்துத் துயர்பட, தன்னைப் பொருட்படுத்தாது உறங்கும்

இவ்வூர் மக்களை மாக்கள் எனத் தலைவி கடிகிறாள். மேலும், தான் துன்பத்தில் உழலும் இவ்விரவு நேரம் நெடியதாய்க் கழிகிறது என நொந்து கொள்கிறாள் எனத் தலைவியின் துயரை ஆழமான சொல்திறத்தால் வெளிப்படுத்தியுள்ளார் பழந்தமிழ் புலவர்கள்.

**உறைபதி அன்று, இத்துறைகெழு சிறுகுடி**
**கானல்அம் சேர்ப்பன் கொடுமை எற்றி**
**ஆனாத் துயரமொடு வருந்தி, பானாள்**
**துஞ்சாது உறைநரொடு உசாவாத்**
**துயில் கண் மாக்களொடு நெட்டிரா உடைத்தே** (குறுந். 145: 1–5)

**உலகோடு பகைத்தல்**

தலைவனின் பிரிவின் ஆற்றாமையால் ஊரோடு பகைமை கொண்ட தலைவி கீழ் காணும் பாடலில் உலகோடு ஊடுகிறாள். வேட்கை பெருக ஆற்றாளாய தலைவி தன்னுள் பேசுகிறாள். நிலவொளியில் ஊரினர் பெருகும் ஆரவாரத்துடன் மிகுதியாகக் கூடி தெருவினிடத்தில் விழாக் கொண்டாடுகின்றனர். நானோ! தலைவனைப் பிரிந்து உறங்காது இருக்கின்றேன். இவ்வாறு உலகத்தார் இயல்புக்குப் பொருந்தாது மாறுபடுவதால் இவ்வுலகம் என்னொடு போர்புரியுமோ? இவ்வுலகத்துடன் அவலமுற்ற என் நெஞ்சுதான் போர் செய்யுமோ என மனதில் ஆயிரம் கேள்விகளைத் தொடுக்கிறாள்.

**ஊரே, ஒலி வரும் சும்மையொடு மலிபு தொகுபு ஈண்டி**
**கலிகெழு மறுகின் விழவு அயருமே;**

------------------------------------------------------------------------

**யானே, புனை இழை ஞெகிழ்த்த புலம்புகொள் அவலமொடு**
**கனை இருங் கங்குலும் கண்படை இலனே.**
**அதனால் என்னொடு பொரும்கொல், இவ் உலகம்?**
**உலகமொடு பொரும்கொல், என் அவலம் உறு நெஞ்சே?**

(நற். 348: 3–10)

இப்பாடலில் தலைவியின் பிரிவாற்றாத மெல்லிய மன உணர்வை எடுத்தியம்புகிறார் பெண்பாற் புலவர் வெள்ளிவீதியார்.

**தலைவனின் பிரிவினால் இரவில் துயிலாத நிலை**

இரவு என்பது உலக உயிர்கள் அனைத்துக்கும் ஓர் அச்ச உணர்வைத் தரக்கூடியது. பகலில் பார்த்த பொருள்களே இரவில் இருந்தாலும், இருட்டில் பார்க்கும்போது நாம் என்ன நினைத்துப் பார்க்கிறோமே அவ்வடிவில் தெரியும். இவ்விரவு நேரம் உயிர்கள் அனைத்தும் தனது பணிகளை முடித்துக் கொண்டு இளைப்பாறும் நேரம். இத்தகைய சூழலில் அமைதியே நிலவும். இந்த அமைதி நெய்தல் நிலத் தலைவியின் பிரிவுத் துயரைப் பன்மடங்கு அதிகப்படுத்தும். தலைவனின் நினைவால் வாடும் தலைவியின் மனம் இரவில் துயில் கொள்ள மறுக்கிறது. இரவு வேளையில் அருகில் இருப்பவர்கள் அனைவரும் உறங்குவதால் தலைவி தனிமைப்படுத்தப்படுகிறாள். அத்தனிமை தலைவியின் மனதில் தலைவனைப் பற்றிப் பல எண்ணங்களை நினைவுகளைத் தோற்றுவிக்கிறது. அவளது உறக்கத்தைக் களைத்து, பிரிவுத் துன்பத்தைப் பலமடங்கு பெருக வைக்கிறது.

சங்க நெய்தற் பாடல்கள் வழி தலைவனைப் பிரிந்து துயறுற்ற தலைவிக்கு இரவு நெடியதாய் கழிந்தது. பழந்தமிழ்ப் புலவர்களின் பார்வையில் தலைவியின் கண்துயில இரவுகள் பற்றிய பாடல்கள் பின்வருமாறு.

தலைவனைப் பிரிந்த நெய்தல் தலைவிக்கு இரவு நெடியதாய் துன்புறுத்துவதாய் அமைகிறது. தலைவனைப் பிரிந்த தலைவி பிரிவை ஆற்றாதவளாகித் தோழியிடம் கூறுகிறாள்:

தோழி! தலைவனைப் பிரிந்ததால் நடு இரவுப் பொழுது கொஞ்சமும் அகலாதாகி நெடியதாய் நிற்கிறது. என் நெஞ்சு பொருந்திய காமம் என்னை உறங்கவிடாது தவிப்பை ஏற்படுத்துகிறது என்கிறாள் நற்றிணை நெய்தல் பாடல்தலைவி.

**யாமமும் நெடிய கழியும்; காமமும்**

**கண்படலீ யாது பெருகும்; ............**

**............................................................**

**இரவு இறந்து, எல்லை தோன்றலது;..........** (நற். 378: 1–6)

மற்றொரு பாடலில், நல்லந்துவனாரின் சொல்லோவியத்தில் பொறுத்தற்கரிய வருத்தத்தைக் கொடுக்கும் காம நோயைச் செய்தவனிடத்தே, இரவும் பகலும்

உறக்கத்தைக் கைவிட்டனை எனத் தன் நெஞ்சிடம் தலைவி கடிவதாகப் பாடல் செய்துள்ளார்.

**எல்லையும் இரவும் துயில்துறந்து, பல்ஊழ்**

**அரும்படர் அவல நோய் செய்தான் கண்பெறல் நசைஇ,**

(கலித். 123: 16–17)

அடுத்து ஒரு பாடலில், புலவர் பதுமனார் கவித் திறத்தில் தலைவியின் துயரம் பின்வருமாறு வெளிப்படுகிறது. வரைவிடை வைத்துப் பிரிந்தவழி ஆற்றாத தலைமகள் தோழியிடம் இயம்புகிறாள்,

தோழி! யாவரும் துயிலும் நள்ளிரவில் நான் மட்டும் உறக்கம் வராமல் வருந்துகிறேன். உலகமே உறங்கும் வேளையில் உறங்காமல் தவிக்கிறேன் என்று உள்ளத் தவிப்பை உரைக்கிறாள்.

**நள்ளென்றன்றே, யாமம்; சொல் அவிந்து**

**இனிது அடங்கினரே; ..............................**

**..........................................................................**

**நனந்தலை உலகமும் துஞ்சும்;**

**ஓர்யான் மன்ற துஞ்சாதேனே** (குறுந். 6: 1–4)

இவ்வாறு தலைவனைப் பிரிந்து வருந்தும் தலைவியின் உறங்கா இரவுகளை எடுத்தியம்பும் பழந்தமிழ்ப் பாடல்கள் பல. இன்னும் சில பாடல்களைப் புலவர்களின் எண்ணங்களில் பின்வருமாறு காணலாம். அவ்வகையில், வேட்கை தாங்கவியலாத தலைவி தன் தோழியிடம் உரைப்பதைப் புலவர் மதுரை ஆருலவியநாட்டு ஆலம்பேரி சாத்தனார் கீழ்வருமாறு புனைவார்.

வருத்தம் தரக்கூடிய அன்றிலின் குரலைக் கேட்கும் பொழுது எல்லாம், தான் காமநோயில் வருந்தி உறங்காமல் உடல் மெலிந்து தலைவனை நினைந்து வருந்திக் கொண்டிருப்பேனோ? என்ற எண்ணம் தலைவனுக்கு உண்டாகுமோ? ஆராய்ந்து சொல் தோழி எனத் தலைவி வினாவுவதாகச் செய்யுள் செய்துள்ளார்.

**துணை புணர் அன்றில் உயவுக்குரல் கேட்டொறும்**

**துஞ்சாக் கண்ணள், துயர் அடச் சாஅய்**

**நம்வயின் வருந்தும் நன்னுதல் என்பது**

**உண்டுகொல்? வாழி, தோழி! ....................** (நற். 303: 1–8)

சங்கப் புலவர் வெள்ளிவீதியாரின் கவித்திறத்தில் தலைவனைப் பிரிந்து தவிக்கும் வேட்கை தாங்கவியலாத தலைவி, ஆற்றாமை மீதூர உணர்த்துகையில்,

தலைவனைப் பிரிந்த நான், அணிந்த இழைகளை நெகிழச் செய்த தனிமையால் வருத்தத்துடன் செறிந்த இருளையுடைய இரவிலும் உறங்காது வருந்துகிறேன் எனத் துன்புறுவதாகப் படைத்துள்ளார்.

**யானே, புனை இழை ஞெகிழ்த்த புலம்பு கொள் அவலமொடு**

**கனை இருங்க கங்குலும் கண்படை இலெனே** (நற். 348: 3–8)

பழந்தமிழ்ப் புலவர் நல்லந்துவனாரின் காதல் எனும் ஓவியக் காட்சியில், களவொழுக்கத்தில் தலைவன் இடையில் பிரிந்து தொன்முறை மனைவியரோடு புணர்ச்சி எய்தி இருந்தான். அதனை அறிந்த தலைவி ஆற்றாமையால் தோழியிடம் கீழ்க்காணுமாறு உரைக்கிறாள்.

தோழி! பரத்தையை நாடிச் சென்ற தலைவனின் மீது கொண்ட காமம் இரவின் நடுச்சாமத்தே நம்மைத் தூங்க விடாது, என்று மனமலிந்து கூறுவதாகப் பாடல் செய்துள்ளார்.

**யாம நடுநாள் துயில் கொண்டு ஒளித்த**

**காமநோயின் கழீஇய நெஞ்சம்** (கலித். 122: 21–24)

புலவர் உலோச்சனார் பார்வையில், காப்பு மிகுதியை ஆற்றாத தலைமகள் தான் துயில் மறந்ததை விளக்குகையில், தோழி! நடு இரவின் இருளில் பறவைகளின் ஒலி கேட்கும் போதெல்லாம் தலைவனின் தேரில் கட்டிய மணியின் ஓசை எனக் கருதி ஊரார் உறங்குகின்ற இரவுப் பொழுதிலும் துயில்வதை நான் மறந்தேன் எனக் கூறுகிறாள்.

**நள்ளென் கங்குல் புள் ஒலி கேட்டொறும்**

**தேர் மணித் தெள் இசைகொல்? என,**

**ஊர் மடி கங்குலும் துயில் மறந்ததுவே** (நற். 287: 9–11)

வரைவிடை வைத்துப் பிரியும் தலைவனின் பிரிவு, மற்ற பிரிவுகளை விட தலைவிக்கு அடர் துயர் தருவதாகும். நெய்தற் கலிப் பாடலில் புலவர் நல்லந்துவனாரின் பாடல் காட்சியில் தலைவி வரைவிடை வைத்துப் பிரிந்த தலைவனின் பிரிவினால் பிரிவை ஆற்றாதாளாகி, உள்ளம் கலங்கி; தான் என்ன

கூறுகிறோம் என்பதை அறியாமல் ஊரில் உள்ளவர்களிடம் தன் மதி கெட்டுக் கூறுகிறாள்:

ஊரிலுள்ளீர்! என்னை ஏதும் கேளாதீர்கள்; எந்நாளும் என் கண்கள் தூக்கம் அற்றுப் போகச் செய்துவிட்டான் எனக்குக் காமநோய் தந்த தலைவன் என்கிறாள்.

**வின வன்மின் ஊரவிர்! என்னை,எஞ்ஞான்றும்**

**..................................................................................**

**.................................... என் உண் கண்**

**படாஅமை செய்தான் தொடர்பு** (கலித். 147: 53–56)

**தலைவனின் பிரிவினால் பசலை படர்தல்**

தலைவன் தலைவியைப் பிரியும்போது, நான்கு நிலைகளில் பிரிந்து செல்கிறான். அவை, பொருள் வயிற் பிரிதல், களவில் பிரிதல், வரைவிடை வைத்துப் பிரிதல், பரத்தை காரணமாகப் பிரிதல் ஆகும். இப்பிரிவுகளினால் வருந்துகிறாள் தலைவி. தலைவனின் பிரிவு காரணமாகத் தன்னை ஒப்பனை செய்து கொள்வதில் அவளது மனம் ஈடுபாடு கொள்ள மறுக்கிறது. தலைவனைப் பிரிந்த தலைவியின் தோற்றம் முற்றிலும் வேறுபட்டுக் காணப்படுகிறது. புறத்தூய்மை இன்மையால் அவளது நெற்றியிலும் மேனியிலும் மார்பிலும் பசலை படர்கிறது. முதலில் தலைவியின் நெற்றியில் படர்ந்த பசலைபற்றிய பாடல்களைப் பின்வருமாறு காணலாம்.

களவு வெளிப்பட்ட பின்பும் வரையாது, பொருள்வயிற் பிரிந்த தலைவனால் தலைவி வருந்த, அவளது பிரிவுத் துன்பத்தைப் பற்றித் தோழி தலைவியிடம் கேட்கிறாள்:

தோழி! மிகுந்த வருத்தமுடைய காமநோயை என்னிடம் கூறாது மறைத்தாய். உன்னுடைய பேரழகு பெற்ற முகம், மனம் கலங்குவதால், பீர்க்கம்பூவை அடுக்கி வைத்தாற் போன்று பிறை போன்ற நுதலிடத்தே பசலை படர்ந்து பரவி உள்ளது. மனத்தால் மறைத்தாய், நுதல் புலப்படுத்தி விட்டது என்று விளம்புவதாகப் புலவர் நல்லந்துவனார் தமது பாடலில் எடுத்துரைக்கிறார்.

**தேம் கமழ் திருநுதல் ஊர்தரும் பசப்பே** (குறுந். 205: 5–7)

**கூறும் தன் எவ்வ நோய் என்னையும் மறைத்தாள் மன்.**

**காரிகை பெற்ற தன்கவின் வாடக் கலுழ்பு, ஆங்கே,**

**பீர் அலர் அணி கொண்ட பிறைநுதல் அல்லாக்கால்** (கலித். 124: 6–8)

மற்றொரு பாடலில் வரைவிடை ஆற்றாத தலைவி தோழியிடம் பின்வருமாறு கூறினாள்.

தோழி! தலைவனோடு கூடி மகிழ்வதற்கு முன் விளங்கித் தோன்றிய கண்ணும் தோளும், நுதலும் பிரிந்த பின் பசலையால் உணப்பட்டு பொலிவிழந்துவிட்டது எனச் சுட்டினாள்.

**பூ வொடு புரையும் கண்ணும், வேய் என**

**விறல் வனப்பு எய்திய தோளும், பிறை என**

**மதி மயக்குறூஉம் நுதலும், நன்றும்**

**நல்லமன் வாழி– தோழி! ..................** (குறுந். 226: 1–4)

இப்பாடலில் தலைவி, தலைவனுடன் உறையும் காலத்தில் தலைவன் தன்னைக் காணும்போது மகிழ்ச்சியுறவேண்டும் என்று ஒப்பனை செய்து கொண்டு சென்றுள்ளாள். தலைவனின் பிரிவினால் துயருற்ற தலைவி முகப் பராமரிப்பு இன்றி இருந்ததால் முகம் பொலிவிழந்து பசலை படர்ந்துள்ளது எனப் பெண்களின் மன உணர்வு உடலில் வெளிப்படும் எனத் தனது செய்யுளில் விளக்கியுள்ளார் மதுரை எழுத்தாளன் சேந்தன் பூதன்.

அடுத்து ஒரு பாடலில், தலைவியின் நலனில் அக்கறை கொண்ட தோழி தலைவனிடம் தலைவிக்காக வேண்டுகிறாள்:

தலைவா! நீ அவளை விரைவில் மணந்து கொள்வாய். அவ்வாறு மணந்து கொண்டால் அவளது பிறையை ஒக்கும் அழகிய ஒளிபடைத்த நெற்றியில் படர்ந்த பசலை என்றுமே வராது. அதனை விரைவில் மறையும்படி செய்வாய் என வேண்டுவதாக, நெய்தல் தலைவியின் முகத்தில் தோன்றிய பசலை பற்றி விளக்குவார் புலவர் நல்லந்துவனார்.

**பிறை ஏர் சுடர்நுதற் பசலை**

**மறையச் செல்லும், நீ மணந்தனை விடினே** (கலித். 125: 22–24)

இன்னும் ஒரு பாடலில், தலைவியின் நுதலில் படர்ந்து இருந்த பசலை பற்றி விளக்கும் சங்கப் புலவர் கீழ்வருமாறு விளக்குவார். இப்பாடலில்,

பரத்தையினால் பிரிந்து சென்ற தலைவனுக்காக ஊடல் தீர்கக வந்த பாணனிடம் தோழி கடிந்து கூறுகையில், தலைவனுக்காகப் பரிந்து பேச வந்துள்ள பாணனே! நீ கூறும் பொய்ம் மொழிகள் எம் தலைவியின் நெற்றியில் படர்ந்துள்ள பசலையை நீக்குவன அல்ல எனக் கோபமுற்றுப் பகர்கிறாள்.

**.............................. மாண்நலம் இழந்த**

**இறை ஏர் எல் வளைக் குறுமகள்**

**பிறை ஏர் திருநுதல் பாஅய பசப்பே** (நற். 167: 9–11)

மேலே கண்ட விளக்கங்களால், தலைவியின் நெற்றியில் படர்ந்துள்ள பசலை பற்றி அறியமுடிந்தது. கீழ் வரும் பாடல்கள் உடல் முழுவதும் படர்ந்து இருந்த பசலை எவ்வாறு தலைவனின் பிரிவுத் துயரை வெளிப்படுத்தி நின்றது என்பதைக் காணலாம்.

களவில் தலைவி இற்செறிக்கப்பட்டாள். தலைவியின் துன்ப மிகுதியினை வெளிப்படுத்தப் புலவன் பயன்படுத்திய பாத்திரமாகிய தோழி, தலைவனிடம் பேசுவதை நெய்தல் புலவன் அம்மூவன் பார்வையில் கீழ்வருமாறு செய்யுளாக்கியுள்ளார்.

துறைவனே! உன் பிரிவினால் மெலிந்த கையில் உள்ள வளை கழன்றாலும், சிறிய வளை அணிந்து, உடல் மெலிவினைப் புறத்தார்க்குப் புலனாகாமல் நிறுத்தக் கூடும். ஆனால், மேனி முழுவதும் படர்ந்த பசப்பு மறைப்பதற்கு அரியதாயிற்று. அதனால் அதனைத் தாய் அறிந்து இற்செறித்தாள் எனக் கூறி விரைவில் திருமணம் செய்து கொள் என்ற பொருளில் அறிவுறுத்தினாள்.

**தொல்நிலை நெகிழ்ந்த வளையள், ஈங்குப்**

**பசந்தனள் மன் என்தோழி ..........................** (குறுந். 303: 4–5)

மற்றொரு பாடலில், தலைவியின் நலனில் அக்கறை கொண்ட தோழியின் கூற்றாக நல்லந்துவனார் பின்வருமாறு விளக்குவார். களவில் தலைவன் திருமணத்தைப் பற்றி நினைக்காமல் காலம் தாழ்த்தினான். அவனது மனக்குறிப்பை உணர்ந்த தோழி,

சேர்ப்ப! தலைவி உன் நினைவால் மேனி எல்லாம் பரவியுள்ள பசலை நிறத்தால், பகலிலே எடுத்த விளக்குப் போன்று ஒளி மழுங்கி உள்ளாள்; மாவின்

தளிர் போன்ற மேனியின் அழகை, உன்னால் இழந்தாள் அதனால் விரைவில் திருமணம் செய்துகொள் எனக் கடிந்து வலியுறுத்தினாள்.

**பாயின பசலையால், பகல் கொண்ட சுடர்போன்றாள்**

**மாவின தளிர்போலும் மாண்நலம் இழந்ததை?** (கலித். 132: 9–11)

இப்பாடலில், புலவர் கூறி இருக்கும் சான்று, பகலிலே எடுத்த விளக்கின் ஒளியால் பயன் ஒன்றும் இல்லை. அதுபோல, தலைவியின் விளக்குப் போன்ற முகம் அழகினை முழுவதும் இழந்து பசலை படர்ந்து அவ்வழகினைச் சிதைத்து விட்டது. அவளது முகம் முன்புபோலக் கவினுற, திருமணம் செய்து கொள்ள வேண்டுமென்ற பொருளில் தலைவனிடம் தோழி வலியுறுத்துவதாகச் சிறந்த சொல்திறத்தால் விவரித்துள்ளார் கவிஞர். புலவர் நல்லந்துவனாரின் கற்பனையில் தலைவியின் மேனியில் படிந்துள்ள பசலையின் காரணம் பற்றி இன்னும் இருபாடல்களில் கீழ்வருமாறு அறியலாம்.

தலைவன் வரைவிடை வைத்துப் பிரியும்போது தலைவியின் மேனியில் பசலை படர்கிறது. தன் மேனியில் படர்ந்த பசலை பற்றித் தலைவி ஒருத்தி கண்டோரிடம் கூறுகையில், தலைவனால் நான் உற்ற வருத்தத்தை உரைக்கின்ற வலிமை என் மனதில் இல்லை. அவ்வலிமை உள்ளத்தில் இருக்குமாயின், வருத்தம் உடையவளாகப் பசலை படர்ந்து அழகு ஒழிந்து நிற்கமாட்டேன் என வாடி உரைப்பதாகக் கவி செய்துள்ளார் தமிழ்ப் புலவர்.

**எய்த உரைக்கும் உரன் அகத்து உண்டாயின்**

**பைதல ஆகிப் பசக்குவ மன்னோ ......................** (கலித். 142: 18–22)

மற்றொரு பாடலிலும், பிரிவின் துயரில் தலைவி கண்டோரிடம் மனமலிந்து விளக்குகிறாள்.

இவள் ஒருத்தி தலைவனின் பிரிவால் என்ன வருத்தமுற்றாள் என்று கூறுகின்றவர்களே, யான் தலைவனின் பிரிவால் பொன்னிறமான பசலை கொண்டேன். யான் உற்றதனைக் கேட்பீராக என வேண்டுகிறாள்.

**மேனி மறைத்த பசலையள், ஆனாது**

**...............................................................................**

**அஞ்சா, அழாஅ, அரற்றா இஃது ஒத்தி**

**என் செய்தாள் கொல்? என்பீர்! கேட்டீமின்—பொ செய்தேன்**

(கலித் 143: 6–9)

அடுத்து ஒரு பாடலில் தாயங் கண்ணனார் படைப்பில், வரைவிடை ஆற்றாத தலைவி தன் மேனியில் படர்ந்துள்ள பசலை பற்றித் தோழியிடம் கூறுகையில்,

தோழி! தலைவனின் பிரிவினால் என்னுடைய கண்களும் தோள்களும், மணம் மிகுந்த கூந்தலும் அழகு கெட்டுப் போயின. அதோடு அல்லாமல் என் மேனி வேறுபட்டுப் பசலை பாய்ந்தது. இதனால் என் உயிர் போனாலும் போய்விடும் போல உள்ளதாகப் புலவர் பாடல் செய்துள்ளார்.

**கண்ணும் தோளும் தன் நறுங் கதுப்பும்**

**பழ நலம் இழந்து பசலை பாய**

**இன் உயிர் பெரும்பிறிது ஆயினும் .............** (நற். 219: 1–3)

மேற்கண்ட வரிகளால் தலைவி பிரிவின் துயரை வெளிப்படுத்தித் தன்மேனியில் படர்ந்திருந்த பசலை பற்றிக் குறிப்பிட்டாள். பின்வரும் பாடல்களில் தலைவியின் உடலில் தோன்றியிருந்த பசலை பற்றித் தோழியானவள் சுட்டிக்காட்டுகிறாள்.

சான்றாகக் குறுந்தொகைப் பாடலில், வரைவிடை ஆற்றாளாகிய தலைவியை ஆற்றுவிக்கத் தலைவனைப் பழித்துக் கூறி அமைதிப்படுத்த முயல்கிறாள் தோழி. எவ்வாறெனில்,

தோழி தோளின் பழைய இயற்கை அழகு கெட்டு, செயற்கை அழகும் தேய்ந்து; துன்பத்தையுடைய உள்ளத்தோடு,உடம்பு பசலையாகி வேறுபட்டு உயிர் நீங்குவதற்குத் தானோ? எனத் தலைவனைப் பழிக்கிறாள்.

**தொல்கவின் தொலைந்து, தோள்நலம் சாஅய்**

.................................................................................

**பசலை ஆகி விளிவது கொல்லோ!** (குறுந். 381: 1–3)

மற்றொரு பாடலிலும், தலைவியின் எண்ணத்தை வெளிப்படுத்துகிறாள் தோழி புலவன் உலோச்சனார் எண்ணத்தில். தலைவன் சிறைப்புறமாக இருக்க, தோழி பகர்கிறாள்.

தலைவனுடன் கொண்ட தொடர்பினைப் பற்றி ஊரில் அலர் எழ, அன்னை இல்லத்தின் கண்ணே இற்செறித்தாள். அதனால் தலைவியின் மேனியில் பசலை

உண்டாகி அவள் அழிந்தொழிதற்குத் தானே? என்று கூறி விரைவில் திருமணம் செய்யக் குறிப்பினால் வலியுறுத்திக் கூறுவதாகப் பாடல் செய்துள்ளார்.

**அழுங்கல் ஊரோ அறன் இன்று; அதனால்**

**அறன் இல் அன்னை அருங்கடிப் படுப்ப**

**பசலை ஆகி விளிவது கொல்லோ** (நற். 63: 5–7)

அடுத்து ஒரு பாடலிலும், சிறைப்புறமாக நிற்கும் தலைவன் கேட்குமாறு தோழி கூறுகிறாள், தலைவி! சேரிப் பெண்களின் இழிந்த சொற்களைக் கேட்டு அன்னை பசலை படர்ந்த மேனியைச் சுடுவது போல நோக்குகிறாள் என்று குறிப்பிடுகிறாள்.

**சேரியம் பெண்டிர் சிறு சொல் நம்பி**

**சுடுவான் போல நோக்கும்**

**அடுபால் அன்ன என் பசலை மெய்யே**(நற். 175: 7–9)

**தலைவனின் பிரிவுத் துயரால் தலைவி அழுதல்**

பெண்களின் மனது மென்மையானது. உணர்ச்சிப் பெருக்கு நிரம்பியது. தான் அன்பு வைத்த தலைவனைத் தன்னால் காண இயலாத நிலை ஏற்படும் போது உணர்ச்சி மேலிட உறங்காமல் தவிப்பர். இத்தகைய நெய்தல் தலைவிக்குத் தலைவனின் பிரிவு உறக்கமின்மையால் மனதில் மனச்சுமையை ஏற்படுத்தியது. அம்மன அழுத்தம் தலைவியின் கண்களில் கண்ணீராக வெளிப்பட்டது. தலைவியின் கண்களில் கண்ணீர் பெருகுவதற்குக் காரணமான தலைவனின் பிரிவினைப் புலவர்கள் பல நிலைகளில் கண்டு காட்சியாக்கியுள்ளனர். அவற்றைக் கீழ்வருமாறு காணலாம்.

வரையாது தலைவன் நெடுங்காலம் வந்தொழுக, ஆற்றாளாய தலைமகள் வன்புறை எதிர் அழிந்து தோழியிடம் கூறுகிறாள். நெய்தல் புலவர் அம்மூவனார் பார்வையில்,

தோழி! நம்மை நாடி ஒழுகும் தலைவன் கூறும் பொய்ம்மொழிகளை நம்பிக்கொள்வது பழி என்றால், துயிலாது அழுகின்ற கண்களோடு வருந்திச் சாதலும் இனியதாகும் எனக் கூறுவதாகப் பாடல் செய்துள்ளார்.

**நாடல் சான்றோர் நம்புதல் பழி எனின்**

**பாடு இல கலுழும் கண்ணொடு சாஅய்ச்**

**சாதலும் இனிதே – காதல் அம் தோழி!** (நற். 327: 1–3)

மற்றொரு பாடலில், நல்லந்துவனாரின் கவி வரிகளில் களவொழுக்கம் ஒழுகிய தலைவன் இடையில் பிரிந்து தொல்முறை மனைவியரோடு புணர்ச்சி எய்தி இருந்தான். அதனை அறிந்து ஆற்றாளாய தலைவி தோழியிடம் உரைக்கிறாள்.

தோழி! ஆயத்தாரும் அன்னையும் அறிந்துவிட்டனர்; தலைவன் ஒரு காரணமும் இன்றிப் பிரிந்து சென்றுவிட்டான்; அவனுடன் காரணம் ஏதுமின்றி ஊடல் கொண்டு வெறுத்தாய்; அக்குறைகளை நூறாக அடுக்கி அமர்ந்துவிட்டாய்; இப்பொழுது வருந்தி அழுகின்றாய் எனத் தலைவனின் பிரிவின் கொடுமையை உரைப்பதாக பாடல் செய்துள்ளார்.

**கோதை ஆயமும் அன்னையும் அறிவுற**

**-------------------------------------------------------------------**

**காதல் செய்து அருளாது துறந்தார் மாட்டு, ஏது இன்றி**

**சிறிது துனித்தனை; துன்னா செய்து அமர்ந்தனை;**

**பலவும் நூறும் அடுக்கினை; இனைபு ஏங்கி அழுதனை;** (கலித். 122: 1–5)

மேலே சுட்டிய பாடல் போல, கீழ்வரும் பாடலிலும் பரத்தை காரணமாகப் பிரிகிறான் தலைவன். அவனது பிரிவுத் துயரைத் தலைவி தோழியிடம் விளக்குகிறாள்:

தலைவன் செல்லுதும், செல்லுதும் என்று பலகாலும் தன்னுடைய பிரிவை உணர்த்தினான். நான் அவன் கூறிய சொற்களை வஞ்சச் செலவு (பரத்தையினால் பிரிந்ததை வஞ்சச் செலவு எனப்பட்டது) எனக் கருதினேன். இப்போது அவன் பிரிவினால் இரு முலைகளுக்கிடையேயுள்ள இடம் கண்ணீரால் நிறைவதாயிற்று என்று வருந்திக் கூறுவதாகத் தலைவியின் பிரிவின் துயரை விளக்கியுள்ளார் நன்னாகையார்.

**சேறும் சேறும் என்றலின் பண்டைத்தம்**

**மாயச் செலவாத் செத்து ----------------------------**

**-------------------------------------------------------------------**

**பெருங்குளம் ஆயிற்று என் இடைமுலை நிலைந்தே** (குறுந். 325: 1–6)

முதல், கரு, உரிப் பொருள்களை முழுமையாக விளக்கி, நாடகப் பாங்கில் எடுத்துக்காட்டுகளுடன் நம் மனக்கண் முன்னர்க் கொண்டு வந்து நிறுத்திய இலக்கியம் கலித்தொகை. இந்நெய்தற் கலியின் ஆசிரியர் நல்லந்துவனார். கலித்தொகை என்னும் சீரிய இலக்கியத்தைத் தமிழ் உலகிற்கு அளித்த சான்றோராவர்.

இப்புலவர் நெய்தல் திணையை முப்பத்து மூன்று கலிப்பாடல்களில் வடித்துத் தந்திருக்கிறார். அப்பாடல்களில், அவர் உயர்ந்த உவமைகள் மூலம் ஒப்பற்ற நீதிகளை உணர்த்திச் சொல்கிறார். நெய்தற் பாடல் உரிப்பொருளாகிய இரங்கலை எண்ணற்ற உவமைகள் வழியே விளக்கி இனிதே இயம்பியுள்ளார்.அவரது எண்ணங்களில் பின்வரும் கலித்தொகைவரிகளைக் காணலாம்.

தலைவன் வரைவிடை வைத்துப் பிரிகிறான். சொல்லிச் சென்ற காலத்தில் வாராமல் பிரிவு நீட்டித்த வழி, அவனது பிரிவுத் துயரை தாளமுடியாத தலைவி பித்துப் பிடித்தவள் போல் பேசுகிறாள். தலைவனின் பிரிவு அவளிடம் பெண்ணுக்கே உரிய நாணம் கடந்து, உள்ளம் கலங்கி, கூறத் தகாதன கூறி அறிவு அழிந்து மொழிகிறாள் எனக் காதல் தரக்கூடிய துயரை, மனதின் வலியை விளக்கக் கூடிய ஆசிரியரின் பாடல்கள் பல. ஆண்கள் மட்டும் காதல் துயருக்கு ஆட்படுபவர்கள் அல்லர். பூவினும் மென்மையான பெண்களும் உட்படுபவர்கள் என்பதைத் தன் நெய்தற் கலிப் பாடல்களில் ஓரங்க நாடகமாகப் படைத்துள்ளார் தண்டமிழ்ச் சாற்றோர் நல்லந்துவனார். அவரது பாடல்களில் தலைவியின் அழுகை புனைவுகளாகத் தரப்பட்டுள்ளது.அவற்றில் ஒரு பாடலில் தலைவனைப் பிரிந்த தலைவி பிரிவின் துயரில் அழுதாள், அரற்றினாள் என்பதை,

**அஞ்சா அழாஅ, அரற்றா, இஃது ஒத்தி**

**என் செய்தாள் கொல்? ..............................** (கலித். 143: 8–9)

என்னும் வரிகள் உணர்த்துகின்றன.

மற்றொரு பாடலில், தலைவனைப் பிரிந்த தலைவி, அவன் வரும் வழியிலே எதிர்பார்த்து நின்று, தன் பெரிய மையுண்ட கண்களில் நீர் நிறைய; அந்நீர் கூரிய பற்களில் பட்டுத் தன் குவிய முலைமேல் வடிய நின்றனள்.

**பேர் அமர் உண்கண் நிறை மல்க, அந்நீர் தன்**

**கூர் எயிறு ஆடி, குவி முலைமேல் வார்தர** (கலித். 146: 7–8)

**மற்றொரு தலைவி கண் கலங்கி அழுதாள்.**

**கண் இனைபு, கலுழ்பு ஏங்கினள்;** (கலித். 147: 61)

அடுத்து ஒரு பாடலில், தலைவனின் பிரிவை ஆற்றாத தலைவி வானத்தை நோக்கி,

வானமே! நீ பொய்யாதே வறந்து என்ன காரியம் செய்தனை? உன் இன்பத்தோடு கூடி, என் கண்ணீராகிய சிறந்த கடலிலே முகந்து, பரந்து, முழங்கி விளங்குவாய் என வானத்திடம் வேண்டுகோள் விடுப்பதாகச் செய்யுள் செய்துள்ளார் புலவர் நல்லந்துவனார்.

**வறந்து என்னை செய்தியோ, வானம்? – சிறந்த என்**

**கண்ணீர் கடலால், கனைதுளி வீசாயோ**

**கொண்மூக் குழீஇ முகந்து?** (கலித். 145: 20–22)

மேலே அறிந்த செய்யுட்கள் தலைவி வன்புறை எதிரழிந்து தானே கூறிவை. இனி வரும் பாடல்கள் தலைவியின் அழுகைக்கான காரணத்தைத் தன் எண்ணத்தில் தோழி விளக்குகிறாள். தோழி தலைவன் தலைவியின் களவு வாழ்வில் முக்கிய இடம் பெறுகிறாள். தோழி பற்றி அ. இராமகிருட்டிணன் குறிப்பிடுகையில்,

“அகத்திணை மாந்தர்களை இணைத்து நிற்கும் இணைப்புப் பாலம் தோழி”[17] என்கிறார்.

அவர் குறிப்பிடுவதைப் போல, தலைவனின் பிரிவின் போது பல நிலைகளில், தலைவியின் துயரைத் தலைவனுக்கு எடுத்துரைத்துக் கற்பு வாழ்விற்கு வழிகாட்டுபவள் தோழியே.

அவ்வகையில் கீழ்வரும் நற்றிணைப் பாடலில் தோழி தலைவனிடம், இனிய கடற்கரைக்குத் தலைவனே! உன்னால் விரும்பப்பட்ட தலைவியின் கண்களில் உன் பிரிவினால் கலங்கிக் கண்ணீர் வீழ்ந்தபடி உள்ளது. நீ திருமணம் செய்தால் அவளது துயர் தீரும் என வேண்டினாள்.

**அருளாயாகலோ, கொடிதே! ........................**

**..............................................................................**

**பல் இதழ் தயங்கிய கூம்பா நெய்தல்**

**ஈரிய கலுழும், நீ நயந்தோள் கண்ணே** (நற். 195: 1–9)

மற்றுமொரு நற்றிணைப் பாடலில் புலவர் உலோச்சனாரின் பார்வையில் பகற்குறி வந்து மீளும் தலைவனிடம் தலைவியின் நிலையை அறிவுறுத்தும் தோழி,

தலைவா! நீ பிரிந்தால் வருந்துவாள் என்பதை முன்பே உணர்ந்து நாளும் பகற்குறி வந்து மீள்கிறாய். இரவு முழுவதும் உன் நினைவால் மென்மையான நின் காதலி; தன் மார்பு நனையுமாறு அழகுடைய குவளை மலர் போன்ற கண்களிலிருந்து நீர் கொண்டு வடித்தவளாய் அழுகிறாள். இவள் நிலையை நீயே ஆற்றுதல் வேண்டும் என உரைக்கிறாள்.

**சொல்லாள் மெல்லியல் சிலவே– நல் அகத்து**

**யாணர் இள முலை நனைய**

**மாண் எழில் மலர்க் கண் தென்பனிக் கொளவே** (நற். 398: 8 – 10)

மேற்கண்ட பாடல் போல கீழ்வரும் பாடலிலும் பகற்குறி வந்து மீளும் தலைவனிடம் தோழி சொல்கிறாள் புலவர் நக்கீரர் கவி வரிகளில்.

தலைவனே! மிக்க நாணத்தையும், ஐம்பொறியானும் நுகரும் மென்மைத் தன்மையும் உடைய எம் தலைவி, மாட்சிமைப்பட்ட தன் அழகு கெட, உன் மீது கொண்ட ஏக்கத்தால், குளிர்ச்சி பொருந்திய கண்கள் கலங்க இடையறாது அழத் தொடங்கிவிட்டாள் என்கிறாள் என தலைவியின் அழுகைக்கான காரணத்தை விளம்புகிறார் புலவர் நக்கீரர்.

**மதர் எழில் மழைக்கண் கலுழ, இவளே**

**பெருநாண் அணிந்த சிறுமென் சாயல்**

**மாண்நலம் சிதைய ஏங்கி, ஆனா,**

**அழல் தொடங்கினளே – பெரும!** (அகம். 120: 6–9)

மேற்சுட்டிய பாடல்களில் பகற்குறி வந்து மீளும் தலைவனிடம் பேசிய தோழி, கீழ்வரும் அகநானூற்றுப் பாடலில் இரவுக் குறி வந்து மீளும் தலைவனிடம் எதிர்ப்பட்டுக் கீழ்வருமாறு பகர்கிறாள்.

நெய்தல் நிலத் தலைவனே! நெய்தல் பூ போன்ற தலைவியின் கண்கள் அழ அவளை நீ பிரிந்து செல்லக் கருதுவையாயின் பெரிதும் அரியதனை

மேற்கொண்டனை ஆவாய் எனத் தலைவிக்காக வேண்டுவதாகப் பாடல் செய்துள்ளார் நெய்தற் திணை கவினுறப் பாடவல்ல அம்மூவனார்.

**.......................................... மெல்லம் புலம்ப!**

**நெய்தல் உண்கண் பைதல கலுழ**

**பிரிதல் எண்ணினை ஆயின், நன்றும்** (அகம். 110: 4–6)

பகலிலும் இரவிலும் வந்த தலைவனின் களவு வெளிப்பட்ட நிலையில், வரையாது பொருள்வயிற் பிரிந்தான். அவனிடம் தோழி தலைவியது ஆற்றாமையைக் கூறுகிறாள் நல்லந்துவனாரின் கவித்துவத்தில்:

சேர்ப்ப! இவ்வூர் அலர் தூற்றுகின்றது; இவள் துன்பத்தை அறியாதவனாய் நீ இருக்கின்றாய்; நி அவளைத் துறந்தமையின் தன் ஆற்றலையும் அழகையும் இழந்து நீர் நின்று உகும்படியாக நெடிய கண்கள் அழும்படியாக நீ செய்துவிட்டாய் என்கிறாள்.

**இன்று இவ்ஊர் அலர் தூற்ற, எய்யாய், நீ துறத்தலின்,**

**..............................................................................................**

**வென்ற வேல் நுதி ஏய்க்கும் விறல் நலன் இழந்து, இனி**

**நின்று நீர் உகக் கலுழும் நெடும் பெருங்கண் அல்லாக் கால்**

(கலித். 124: 13–16)

மேல் கண்ட பாடல்களில் தோழி தலைவியின் அழுகைக்கான காரணத்தை மென்மையாகத் தலைவனிடம் எடுத்துரைத்தாள். கீழ்வரும் வரிகளில் தலைவி அழுவதற்கான காரணத்தைத் தோழி தலைவனிடம் கடிந்து சொல்லுவதாகச் செய்யுளை அமைத்துள்ளார் நல்லந்துவனார்,

கொண்கனே! மகிழ்ச்சி தரும் இனிய மொழியாளை, அவளுடைய மையுண்ட கண்களில் இருந்து கண்ணீர்த் துளித்துளியாக விழவும் அது கண்டு நீ அவளுக்கு அன்பு செய்யாது கைவிட்டாய்; என் தலைவியின் துன்பத்திற்குக் காரணமான நீ மிகவும் கொடியவன் எனச் சினமுறுகிறாள் தோழி.

**மகிழ் செய்தே மொழித்..........................................**

**.................................. அவள் உண்கண்**

**அவிழ் பனி உறைப்பவும், நல்காது விடுவாய்!**

**இமிழ் திரைக் கொண்க! கொடியை காண் நீ,** (கலித். 125: 8–11)

அடுத்து ஒரு பாடலில், தலைவன் பரத்தையர் சேரியில் தங்கியிருந்தான்; அவனது பிரிவினால் ஏற்பட்ட தலைவியின் வருத்தத்தைப் பாணனிடம் உரைக்கிறாள் தோழி புலவர் கருவூர்ப் பூதஞ்சாத்தனார் பாடலில்.

பாணனே! வீட்டினைச் சார்ந்துள்ள பனைமரத்தில் வாழும் அன்றில்கள் துணை சிறிது பிரியினும் கண் உறங்கா; இதனை நெஞ்சே காண்பாயாக! என்பாள் தலைவி கண் நிறைந்த நீர் கொண்டு, தன் அழுகையைப் பிறர் அறியாது மறைத்து. அவளது ஆற்றாமையைத் தலைவனுக்கு நீ உள்ளபடி உரைக்கவேண்டும் எனக் கடிவதாகப் பாடல் செய்துள்ளார் கவிஞர்.

**மனைசேர் பெண்ணை மடிவாய் அன்றில்**

**துணை ஒன்று பிரியினும் துஞ்சாகாண் என**

**கண் நிறை நீர்கொடு கரக்கும்**

**ஒண் நுதல் அரிவை, யான் என் செய்கோ?** (அகம். 50: 11–14)

**தலைவனின் பிரிவால் தலைவிக்கு ஏற்படும் காமம்**

தலைவனின் பிரிவினால் வாடும் தலைவிக்கு அவன் அருகாமை கிடைக்காமையால் காமவேட்கை ஏற்படுகிறது. பிரிவானது நீளும்போது அவளது காம உணர்வானது தன்னிலை மறக்கச் செய்கிறது. பசி, தாகம் போன்ற மற்ற உணர்வுகளை வெளிப்படுத்த இயலும். ஆனால், காம உணர்வைப் பிறரிடம் வெளிப்படுத்த இயலாது. இக்காம உணர்வைத் தலைவி சில வேளைகளில் அண்மையில் உள்ள தோழியிடம் சொல்லுவாள். தோழியிடமும் எல்லா நிகழ்வுகளையும் கூறமுடியாது. இந்நிலையில் என் துன்பம் களைய ஆள் இல்லையா என ஏங்குவாள். வெளியில் சொல்ல முடியாத இக்காம உணர்வுக்கும் தலைவனைப் பிரிந்து துயருறும் தலைவியின் மனத்திற்கும் நடக்கும் போர் புலவன் கவனிப்பிலும் வாழ்வியலிலும் எண்ணங்களாக வெளிப்படுகின்றன. தலைவியின் காம உணர்வை வெளிப்படுத்தி நிற்கும் ஒப்பில்லாச் சங்கப் பாடல்கள் பல. அவற்றில் சிலவற்றைக் காணலாம்.

பெண்பாற் புலவர் ஔவையாரின் கவிவரிகளில் தலைவனின் பிரிவினால் வருந்திய தலைவியைத் தேற்றுவிக்க முயல்கிறாள் தோழி. அதற்குத் தலைவி மறுமொழி பகர்கிறாள்.

தோழி! தலைவனின் பிரிவானது எனக்குக் காமநோயைத் தந்தது. அக்காமநோயானது எம்மைச் சாகும்படி வருந்தச் செய்து வானத்திலும் தோய்வது போன்ற பெருக்கத்தையுடையதாக உள்ளது என்கிறாள்.

**................................................... வருந்தி**

**வான் தோய்வற்றே, காமம்** (குறுந். 102: 2–3)

மேலே கண்ட பாடல் போல, கீழ்வரும் பாடலிலும் தலைவியிடம் தோழி தலைவனை நினைத்து வருந்தாதே என்கிறாள். அதற்குத் தலைவி உரைக்கிறாள்.

தோழி! தலைவன் நெடுங்காலம் பிரிந்து சென்றுவிட்டான். அவனால் உண்டான காம நோயைப் பொறுத்துக் கொள் என்கின்றாய்; பொறுத்துக் கொள்ளத் தெருட்டுவோர், தாம் அதனைப் பொறுத்துக்கொள்வதற்குரிய வழி வகைகளை அறிவார்களோ? அவ்வுபாயத்தின் மூலம், காமநோயைப் பொறுத்துக் கொள்ளும் மனவலிமையை உடையவரோ? எனக் காமநோயின் துன்பத்தை எடுத்துரைப்பதாகப் பாடல்செய்துள்ளார் பாடலால் பெயர்பெற்ற புலவர் கல்பொரு சிறுநுரையார்.

**காமம் தாங்குமதி என்போர் தாம் அஃது**

**அறியலர் கொல்லோ? ..................................** (குறுந். 290: 1–2)

இப்பாடலில், அலையால் மோதிச் சிறுநுரை எவ்வாறு இறுதியில் இல்லாமல் போகுமோ; அதுபோல தலைவிக்கு காமநோய் தருகின்ற துன்பம் அவளைச் சிறிதுசிறிதாக அழித்து இறுதியில் உயிரைப் போக்கிவிடும் என்ற உவமையுடன் ஒப்பிட்டு முடிக்கிறார் புலவர்.

மற்றொரு பாடலில், தலைவி தோழியிடம் காமம் தன்னை உறங்க விடாது துன்புறுத்துகிறது எனப் பகர்வதாகப் பாடல் செய்துள்ளார் வடம வண்ணக்கன் பேரி சாத்தனார்.

தோழி! துன்பம் மிகுந்த காரணத்தால் இயல்பாய் கழியும் இரவுப் பொழுது நெடியதாய்த் தோன்றுகிறது. நெஞ்சு மிக்க காமம் உறக்கமிலாது விழித்திருக்கச் செய்கிறது என்கிறாள்.

**யாமமும் நெடிய கழியும்; காமமும்**

**கண்டலீ யாது பெருகும்; ..............** (நற். 378: 1–2)

அடுத்து ஒரு பாடலில், மதுரை ஆருலவிய நாட்டு ஆலம்பேரி சாத்தனார் எந்நேரமும் தலைவனை நினைத்துக் கொண்டு இருக்கும் தலைவியின் காம உணர்வைப் பின்வருமாறு கூறுவார். வேட்கை தாங்ககில்லாளாய்த் தலைவி தோழியிடம்,

தோழி! அன்றிலின் வருத்தம் தரக்கூடிய குரலைக் கேட்கும்தொறும் நான் காமநோயில் உறங்காமல் உடல்மெலிந்து துன்புற்றுக் கொண்டிருக்கிறேன். நான் இவ்வாறு துன்புறுவேன் என்ற எண்ணம் என் தலைவனுக்கு உண்டாகுமோ? ஆராய்ந்து சொல்வாயாக என்கிறாள்.

**துணை புணர் அன்றில் உயவுக் குரல் கேட்டொறும்**

**துஞ்சாக் கண்ணள், துயர் அடச் சாஅய்**

**நம்வயின் வருந்தும், நன்னுதல் என்பது**

**உண்டுகொல்? வாழி, தோழி! ..................** (நற். 303: 5–8)

அன்றிலின் குரல் கேட்டு வருந்திய தலைவி, கீழ்வரும் பாடலில் நாரையின் குரல் கேட்டு வருந்துகிறாள். நல்லந்துவனாரின் கவித்துவத்தில் எந்நேரமும் தலைவனின் நினைவில் வாடிய தலைவி தோழியிடம்,

தோழி! தாழையின் கொம்பில் அமர்ந்திருக்கும் நாரை, நம் தோளைத் துறந்து அருளாத தலைவன் போல, நடுஇரவில் நம்மேல் இரக்கம் இன்றி, காமநோய் நம்மை வருத்த, மாறாமல் நரலுகின்றது எனப் பகர்கிறாள்.

**ஆடு கோட்டு இருந்த அசை நடை நாரை**

**நளி இருங் கங்குல், நம் துயர் அறியாது**

**அளி இன்று, பிணி இன்று, விளியாது நரலும்** (கலித். 128: 3–5)

மேலே கண்ட பாடல்களில் தன்னை வருத்தும் காம நோய் பற்றித் தோழியிடம் கூறிய தலைவி, கீழ்வரும் பாடல்களில் மீதூர்ந்த காமஉணர்வின் காரணமாகத் தனக்குத் தானே கூறிக்கொள்கிறாள்.

நற்றிணைப்பாடல் ஒன்றில், தலைவி நடு இரவில் காமநோய் வருத்தத் தவிக்கிறாள். அவளது தவிப்பு எவ்வாறெனில்,

வேப்ப மரத்தில் வசிக்கும் கூகை இரவு முழுவதும் குழறி ஒலி எழுப்பியது; அந்த இரவில் தீராதநோய் துன்புறுத்துவதால் தலைவி வருத்தமுற்றிருந்தாள்.

ஊர் அடங்கித் துயிலும் வேளையில் கூகை குழறியது. அவ்வமைதியான சூழலில் காமநோய் வருத்தத் துன்புற்றிருந்தாள்.

**பராரை வேம்பின் படு சினை இருந்த**

**குராஅற் கூகையும் இராஅ இசைக்கும்;**

**ஆனா நோய் அட வருந்தி** ...................... (நற். 218: 7–9)

மற்றொரு நற்றிணைப் பாடலில், தலைவி தான்உற்ற காமநோயைத் தீர்ப்பதற்கு அவர் அருகில் இல்லை என இரங்குகிறாள்.

தலைவனைப் பிரிந்து நான் அடைந்த காமநோயோ வரம்பு கடக்கும்படி பெருகிற்று; நோய் தீர்ப்பவரான தலைவன் இல்லாததால் எங்ஙனம் ஆற்றுவேன் என இரங்குவதாகப் பாடல் செய்துள்ளார் திணைப் பெயரால் பெயர் பெற்ற புலவர் நெய்தல் தத்தனார்.

**வையக வரையளவு இறந்த**

**எவ்வ நோய்; பிறிது உயவுத் துணை இன்றே** (நற். 130: 11–12)

பெண்பாற் புலவர் வெள்ளிவீதியார் பாடலில், தலைவி தனக்கு உண்டான காமநோயைத் தீர்ப்பதற்குத் தலைவன் அருகில் இல்லை என ஏங்குகிறாள்.

**காமம் பெரிதே; களைஞரோ இலரே!** (நற். 335: 11)

இன்னுமோர் பாடலில் பொருள் வயிற் பிரிந்து சென்றான் தலைவன். அவனை நினைந்து தலைவிக்குக் காம உணர்வு ஆறாக ஊற்றெடுக்கத் தாங்கவியலாத தலைவி மனமலிந்து புலம்புகிறாள்.

இமயமலையின் உச்சியினிடத்து வானிலிருந்து பெயல் வீழ்ந்தால் உண்டாகும் வெளிய அருவியையுடைய பெரிய கங்கையாற்றைக் கரைகடந்து நீர் இறங்கி வந்து அணையை உடைக்கும் வெள்ளம் போன்று, என் நிறையை அழிக்கும் காமமாகிய வெள்ளத்திலிருந்து நான் எவ்வாறு நீந்துவேன்; நான் எவ்வாறு பிழைப்பேனோ? எனத் துயறுருகிறாள்.

**கங்கை அம்பேர் யாற்றுக் கரை இறந்து இழிதரும்**

**சிறை அடு கடும்புனல் அன்ன, என்**

**நிறை அடு காமம் நீந்துமாறே** (நற். 369: 9–11)

இப்பாடலில், வெள்ளம் அழிவை ஏற்படுத்தக்கூடியது. காமத்தை வெள்ளத்துடன் ஒப்பிட்டுத் தலைவியின் சொல்லொணாப் பிரிவுத் துயரைக்

காட்சியாக்கியுள்ளார் சங்கப் புலவர் மதுரை ஓலைக் கடையத்தார் நல்வெள்ளையார்.

தலைவிக்கு உடலில் பெருகிய காம உணர்வை அழிக்கும் வெள்ளத்துடன் ஒப்பிட்டுப் பாடல் படைத்ததைப் போல, தன்னைச் சார்ந்த பொருள்கள் யாவற்றையும் எரிக்கவல்ல திறம்பெற்ற தீயை விடக் கடியதாய் உடலைவருத்தும் காமம் தலைவிக்கு இருப்பதாகத் தமது பாடல் வரிகளில் குறிப்பிடுகிறார் நெய்தல் திணையைத் திளைத்துப் பாடவல்ல புலவர் நல்லந்துவனார்.

**தீயினும் கடிது, அவர் சாயலின் கனலும் நோய்** (கலித். 137: 22)

மற்றொரு பாடலில், தலைவன் வரைவிடை வைத்துப் பிரிந்து சென்ற நிலையில், தலைவனின் பிரிவினைத் தாங்கவியலாத் தலைவி மனமலிந்து உள்ளம் கலங்கிக் கண்டோரிடம் கூறுகிறாள்.

நிறைந்த வளைகள் கழலும்படி செய்தவன் தந்த பிரிவு எனும் வருத்தத்தாலே சந்துதொறும் சந்துதொறும் காமத் தீ மூண்டது. இதன் வெம்மை ஆற்றும்படி, கடலிலே முகந்து, என் மேலே, சேர இடைவிடாமல் வானமே நின்று நீ பொழிதல் வேண்டும் எனப் பாடி காமநோயையுடைய நெஞ்சிலே அடித்துக்கொண்டு வருந்தி அழுதாள். கரைகாண இயலாக் கடல் நீரையே வானம் முகந்து அவள் ஊடலில் பொழிந்து கொழுந்து விட்டெரியும் காமத் தீயை அணைக்கவேண்டும் எனத் தலைவி வேண்டுவதாகப் பாடல் வரி செய்துள்ளார் நல்லந்துவனார். இப்புலவரின் கவனிப்பில் வெளிப்படுத்த இயலாத தலைவியின் காமம் எத்துயர் தருவது என்பதை இவ்வரிகளைவிட எடுத்துக்கூற இயலாத சிறப்பான கற்பனையுடையது ஆகும்.

**கனைஇருள் வானம்! – கடல் முகந்து என்மேல்**
**உறையொடு நின்றீயல் வேண்டும், ஒருங்கே–**
**நிறைவளை கொட்பித்தான் செய்த துயரால்**
**இறை இறை பொத்திற்றுத் தீ**
**எனப்பாடி,**
**நோயுடைய நெஞ்சத்து எறியா, இனைபு, ஏங்கி**
**யாவரும் எம்கேள்வற் காணிரோ என்பவட்கு** (கலித். 145: 55–61)

மேல்கண்ட பாடல்போல, கீழ்வரும் பாடலும் நல்லந்துவனாரின் எண்ணத்தில் வரைவிடை வைத்துப் பிரிந்த தலைவனின் பிரிவு தலைவியை வாட்ட, கண்டோரிடம் பிதற்றிக் கூறுகிறாள்:

சான்றோரே! என் உடம்பின் கண் நின்று எரியும் காம நோய், மேகம் எல்லாம் திரண்டு எழுந்து என்னிடத்தே நின்று பெய்தாலும், நோய் தீர்வது போல் இல்லை; இந் நோய் தீர்வதற்கான உபாயத்தினை நானே கூறுகிறேன். காமமாகிய எந்நோய் தணியும்படி உலகத்திலுள்ள நீரை எல்லாம் என்னிடத்தே நிறையும்படி அடைத்து வைத்து என் உயிரைப் பாதுகாப்பீர்! என இறைஞ்சுகிறாள் தலைவி.

**பேர் ஊர் மறுகில் பெருந்துமிற் சான்றீரே!**

**நீரைச் செறுத்து, நிறைவுற ஓம்புமின்**

**கார்தலைக் கொண்டு மொழியினும் தீர்வது**

**போலாது, என் மெய்க் கனலும் நோய்** (கலித். 146: 42–45)

தலைவியைத் துயர்படுத்தும் காமநோயின் தன்மையை நெய்தல் புலவர் நல்லந்துவனாரைவிட ஆழமாகச் சொல்ல முடியாது என்றே கூறவேண்டும். அவ்வகையில் மற்றொரு பாடலிலும், காமநோயின் வெம்மையைத் தலைவியானாவள் கூறுகிறாள்:

ஊரிலுள்ளீர்! என்னைப் பிரிந்து சென்ற தலைவனைப் பற்றிக் கேட்காதீர். எந்நாளும் என் கண்கள் தூக்கம் அற்றுப்போகச் செய்தவன் தந்த நோய், மடாக்கள்ளை உண்டவர் போல மயங்கும்படி விடாது. அது போல, என் உடலையும் வாழவிடாது; என் உயிரோடு அதுவும் கூடிக் கலந்து விட்டது. இவ்வுயிரைக் காக்கும்வழி உண்டாயிற் காப்பீராக என்று வேண்டுவதாகப் பாடல் செய்துள்ளார்.

**வினவன்மின் ஊரவிர்! என்னை, எஞ்ஞான்றும்**

**மடாஅ நறவு உண்டார் போல, மருள**

**விடாஅது உயிரொடு கூடிற்று – என் உண்கண்**

**படாஅமை செய்தான் தொடர்பு** (கலித். 147: 53–56)

மேற்கண்ட பாடலில், மடாக்கள்ளைப் போல மயக்கமடையச் செய்த காமநோய், நல்லந்துவனாரின் வெளிப்பாட்டில் கீழ்வரும் பாடலில், வரைவிடை வைத்துப் பிரிந்த தலைவி காமநோயின் துயரைக் கடலிடம் விளக்குகிறாள்.

ஒஒ! கடலே ஊரையெல்லாம் தனக்குள் ஆக்கிக்கொண்டு கரந்தும், கடிய நெருப்பு, தன்னை அவிக்கும் நீரைச் சொரியச் சினம் தணியும்; அதுபோலன்றி அருளில்லாத என் தலைவன் என்னிடத்து உண்டாக்கிய இக்காமமாகிய நெருப்பு தனக்குப் பகையாகிய நீருள்ளே புகுந்தாலும் சுடாநிற்கும். எந்நிலையிலும் அவியாமல் எரிந்து எம்மை நலிவடையச் செய்யும் கொடியது என வேதனையுறுகிறாள் தலைவி.

**ஒஒ! கடலே! ஊர் தலைக்கொண்டு கனலும் கடுந் தீயுள்**

**நீர் பெய்தக்காலே சினம் தணியும்; மற்று இஃதோ**

**ஈரம் இல் கேள்வம் உறீஇய காமத்தீ**

**நீருள் புகினும் சுடும்** (கலித். 144: 59–62)

நல்லந்துவனார் தன் பாடல்கள் பலவற்றில் தலைவனின் பிரிவினால் உண்டாகிய காமத்தை நெருப்புடன் ஒப்புமை கூறியுள்ளார். உலோகத்தைக் கூட உருக்கக் கூடியது நெருப்பு. அந்நெருப்பைப் போன்ற காமத்தீ பூப்போன்ற தலைவியின் மென்மையான உடலை அழித்து விடும் எனப் பல பாடல்களில் எடுத்தாண்டுள்ளார். கீழ்வரும்பாடலிலும் வரைவிடை வைத்துப் பிரியும் தலைவனின் பிரிவுத்துயரில் வருந்திய தலைவி தன் உடலில் ஏற்பட்ட காமமாகிய தீ பற்றி ஞாயிறிடம் பேசுகிறாள்.

ஞாயிறே! எம் தலைவனைத் தேடிப்பிடித்துக் கொண்டு வருக! என் கண் முன்னே நிறுத்தி என் கையிலே உன் கையை நீட்டித் தப்பாமல் தருவை ஆயின் உயிர்த்தீயாக, என் நெஞ்சமாகிய அகலிலே கொளுத்திய காமத்தீ அவியும் என வேண்டுகிறாள்.

**கதிர் பகா ஞாயிறே! கல் சேர்தி ஆயின்,**

**அவரை நினைத்து, நிறுத்து என்கை நீட்டித்**

**தருகுவை ஆயின், தவிரும் – என் நெஞ்சத்து**

**உயிர் திரியா மாட்டிய தீ** (கலித். 142: 37–40)

காமத்தை தீயாக எரியக் கூடிய நெருப்பு எனக் குறிப்பிட்டார் கவிஞர் நல்லந்துவனார். அக்காம நோயின் எல்லையைக் குறிப்பிடுகிறார் புலவர் நெய்தல் தத்தனார். தலைவி வன்புறை எதிரழிந்து வெளிப்படுத்துகையில்,

தலைவன் பிரிவு தந்த காமநோயோ விரிந்த கடற்பரப்புடைய நிலவுலகின் எல்லையைக் கடந்த வண்ணம் பெருகி நிற்கிறது. உசாவியறியும் துணை ஏதுமில்லாத நான் எவ்வண்ணம் இனி உய்வது என மனமலிந்து இயம்புகிறாள்.

**.................................................. விரிநீர்**

**வையக வரையளவு இறந்த**

**எவ்வ நோய்; பிறிது உயவுத் துணை இன்றே** (நற். 130: 10–12)

இக்காமநோயின் எல்லையற்ற துயர் தலைவியின் எழில் நலத்தைச் சிதைத்து ஆழ்ந்த துன்பத்தைத் தருவது என்பதை மீண்டும் நல்லந்துவனாரின் வரிகளில், தலைவி வன்புறை எதிரழிந்து கண்டோரிடம் உரைக்கிறாள்:

வளமாய் இருந்த நிலத்தில் பெய்யாது அதனை வறட்சி மிகுந்ததாக மாற்றிவிட்ட மேகத்தைப் போலே, அவன் எனக்குக் காமநோயைச் செய்துவிட்டான்; நீர் பெருகி, என் உயிரை மாய்க்கும் ஒரு வெள்ளம் போலவும் தலைவன் என்னை வருத்துவானாயினன் என்கிறாள்.

**வறந்தெற மாற்றிய வானமும் போலும்;**

**நிறைந்து என்னை மாய்ப்பது ஓர் வெள்ளமும் போலுஞ்**

**சிறந்தவன் தூ அற நீப்ப, பிறங்கி வந்து**

**என்மேல் நிலைஇய நோய்** (கலித். 146: 14–17)

தலைவி காமநோயில் உழல்வதைக் கண்ணுற்ற தோழி, அவளின் துயரைத் தலைவனிடம் சுட்டிக்காட்டிப் புலப்படுத்தும் பாடல்களும் பல அப் பாடல்களில் எல்லாம் தோழி தலைவனிடம் தலைவியை விரைவில் மணந்து ஆற்றுவிக்கவேண்டும் என வலியுறுத்துவாள். சான்றாகக் கலிப்பாடலில் தோழி தலைவனிடம் வலியுறுத்துவது நல்லந்துவனாரின் படைப்பில் காட்சியாக்கப்பட்டுள்ளது.

சேர்ப்ப! உன் பிரிவினால் ஊரில் உள்ளார் அலர் தூற்றுகின்றனர்; நீ அவளது துன்பத்தை அறியாதவனாக இருக்கின்றாய்; நீ இவளைக் கைவிடுத்தமையின், இணை இல்லா வருத்தத்தை உடைய காமநோயை என்னையும் உட்பட மறைத்தாள் எனக் கூறி திருமணம் செய்து கொள் என அறிவுறுத்தினாள்.

**இணை இவ்வூர் அலர் தூற்ற, எய்யாய், நீ துறத்தலின்**

**புணை இல்லா எவ்வநோய் என்னையும் மறைத்தாள் மன்**

(கலித். 124: 8–9)

மற்றொரு பாடலிலும், நல்லந்துவனாரின் வரிகளில் தோழி தலைவியின் மனத்துயரை முறையிடுகிறாள் தலைவனிடம்,

துறைவ! தலைவியின் வருத்தத்தை உடைய காம நோய் தீரும்படியாக, விரைந்து நீ திருமணம் செய்து கொள்ள வேண்டும் என எடுத்துரைத்தாள்.

**இறைவளை நெகிழ்ந்த எவ்வ நோய் இவள் தீர,**

--------------------------------------------------------------------------------

--------------------------------------------------------------------------------

**உரவு நீர்ச் சேர்ப்ப! அருளினை அளிமே** (கலித். 127: 19–22)

அடுத்த பாடலும் நல்லந்துவனார் எண்ணத்தில் தோழி தலைவனிடம் எதிர்ப்பட்டுக் கூறியது.

தலைவனே! அடும்பங்கொடிகள் படர்ந்துள்ள இடுமணலிலே தலைவியிடம் நீ, நின்னை யான் பிரியேன் இதனைத் தெளிவாயாக என்று கூற, உனது பேச்சை மெய்யென்று நம்பி மிகுகின்ற காமநோயிலே அழுந்தித் துன்புறுகின்றாள். அவளது துன்பத்தைக் களையவேண்டும் என வேண்டினாள்.

**பொறை ஆற்றா நுசும்பினால் பூ வீந்த கொடி போன்றாள்**

**மறை பிறர் அறியாமை மாணா நோய் உழந்ததை?** (கலித். 132: 18–19)

**தலைவனின் பிரிவினால் தலைவி ஒப்பனையில் ஆற்றியிருத்தல்**

தலைவனைப் பிரிந்த தலைவி ஒப்பனையில் நாட்டம் செலுத்தவில்லை. தலைவனைக் காணச் சென்ற போது தன்னை அலங்கரித்துக் கொண்டு அழகுப் பதுமையாய்ச் சென்றவள்; அவன் பிரிந்த பின்பு அவன் தந்த துயர் மேலிட அணிகளைத் துறந்தாள்; மலரைத் துறந்தாள், திலகத்தை நீத்தாள். ஒப்பனை செய்து கொள்ளாமல் பிரிவுத் துயரில் தலைவி உழன்றதை நெய்தல் புலவர் நல்லந்துவனார் கலித்தொகைப் பாடல் காட்சிகளில் இரண்டு இடங்களில் சுட்டிக்காட்டியுள்ளார்.

தலைவன் வரைவிடை வைத்துப் பிரிவ நீட்டித்த இடத்து, ஆற்றாத தலைவி, உள்ளம் கலங்கி, வேதனையில் உழந்தாள். அவன் நீங்கிய பின்பு

பகற்பொழுதின்கண் ஒளியாழ்பட்ட மதிபோல ஒளிகெட்டு விளங்கினாள்; அழகுடன் விளங்கிய நுதலிடத்திருந்த திலகத்தை நீத்தாள்.

**பகல் ஆங்கண் கையென்ற மதியம் போல், நகல் இன்று**

**நல்லுதல் நீத்த திலகத்தள், –..........................................** (கலித். 143: 2–3)

மற்றொரு பாடலில், நல்லந்துவனாரின் வரிகளில் தலைவனின் பிரிவினால் தலைவி தான் அணிந்திருந்த அணிகளைத் துறந்தனள்;

**துன்னி அகல, துறந்த அணியளாய்** (கலித். 146: 5)

**தொகுப்புரை**

இவ்வியலிலை ஆராய்ந்ததன் வழிப் பெறப்பட்ட முடிவுகளாகப் பின் வருவனவற்றைக் கொள்ளலாம்.

1. நெய்தல் திணைப் பாடல்களைப் பலபுலவர்கள் பாடியுள்ளதற்கேற்ப பல மனநிலைகளில் தலைவியும், தோழியும் விளக்கம் பெறுகின்றனர்.
2. கவிஞர்களின் படைப்புத்திறம் துலக்கமாக வெளிப்படுகிறது.
3. காதல் என்னும் பேருணர்வினால் ஆற்றலும் திறமும் அழிந்தவளாகத் தலைவி காணப்படுகிறாள்.
4. தலைவியின் காதல் உணர்வு வரம்புக்கு உட்பட்டு வெளிப்படுகிறது.
5. நாகரிகம், பண்பாட்டுச் சிதைவு எதுவும் ஏற்படாதவாறு தலைவியைப் புலவர்கள் மிகுந்த எச்சரிக்கையுடன் படைத்துள்ளனர்.

## அடிக்குறிப்புகள்

1. தொல். களவு. 1.
2. இரா. சுகுமார், சங்க இலக்கிய பதிவும் பார்வையும், ப. 10.
3. பச்சையப்பன் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர்கள், தமிழ் ஆராய்ச்சி வரலாறு முதல் தொகுதி, ப. 56.
4. தி. முத்து கண்ணப்பன், கடற்கரை காதலர், முன்னுரை.
5. தொல்.பொருள். அகத். நூ. 14.
6. தி.முத்து கண்ணப்பன், மு. நூ, முன்னுரை.
7. ச. சாம்பசிவன், தமிழ் இலக்கியத்தில் நெய்தல் நிலம், ப. 16.
8. முனைவர் பாக்கியமேரி, வகைமை நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு, ப. 47.
9. தி.முத்து கண்ணப்பன்,சங்க இலக்கியத்தில் நெய்தல் நிலம், ப. 259.
10. மேலது,ப. 258.
11. மேலது, ப. 258.
12. அ.வெ. சுப்பிரமணியன், தமிழ் கவிஞன் தேர்திறன், பதிப்புரை.
13. அ. இராமகிருட்டிணன்,அகத்திணை மாந்தர் ஓர் ஆய்வு, ப. 107.
14. வி. கல்யாணி, சங்க இலக்கியத்தில் தலைவி, ப. 18.
15. குறள், 1224.
16. P. Gurray, The appreciation of poetry, P. 20.
17. அ. இராமகிருட்டிணன், அகத்தினை மாந்தர் ஓர் ஆய்வு, ப. 107.

# இயல் ஆறு

# நெய்தல் திணை கட்டமைக்கும் பரதவப் பெண்

பெண் என்பவள் உலகில் மிகப்பெரிய சக்தியாகத் திகழ்கிறாள். பெண் இல்லையேல் பரந்த உலகம் இல்லை.குடும்ப உறவுகளில் பெண் மனைவியாகத், தாயாக, மகளாக உறவுகளில் மிளிர்கிறாள். இந்த மூன்று இடங்களிலும் பெண்ணின் பங்கு மகத்தானது. ஒரு பெண் குடும்பக் கடமைகளில் ஈடுபடும்போது, அவளுள் அனைத்து குணங்களும் அடக்கம். அவளை அடையாளப்படுத்துவது முதலில் தோற்றம், அடுத்தது அவளது மென்மையான குணங்கள், பேதைமைத் தன்மை மற்றும் பிறர் நலம் பேணல், குழந்தை வளர்ப்பு, கணவனுடன் உறவு ஆகியவை. இவ்வனைத்து பண்புகளிலும் தன்னலமற்ற அவளது தியாக உணர்வு பெருமிதமானது ஆகும் .

இவற்றுடன் ஒரு பெண்ணிடம் வன்மையான குணங்களும் இருக்கும். துணிவு, பேச்சாற்றல், மதிநுட்பம், நிலம் சார்ந்த அறிவு, உலகியல் அறிவு, ஆண் பெண் உறவு, குழு உணர்வு ஆகிய அனைத்து குணங்களும் நிரம்பி இருக்கும் அற்புத சக்தி பெண். அவ்வகையில் கடல் சார்ந்த இடத்தை வாழ்க்கையின் ஆதாரமாகக் கொண்டு வாழ்ந்த சங்ககால நெய்தல் நிலப் பெண்களிடம் மேற்கண்ட குணங்கள் எத்தகைய நிலையில் இருந்தது என்பதையும், கடலை ஒட்டி வாழும் வாழ்வு துயரமானது, தங்கள் நில வாழ்வை எந்நிலையில் தாழ்வாக உயர்வாக எண்ணியிருந்தனர்? எனும் அப்பெண்களின் எண்ணத்தையும் நெய்தல் பாடல்கள் பாடிய புலவனின் கவி வரிகளில் நெய்தல் பெண் எவ்வாறு கட்டமைக்கப் பெறுகிறாள் என்பதையும் இவ்வியலில் விளக்கமாகக் காணலாம்.

**தோற்றம்**

ஒரு மனிதனை நினைத்தவுடன் அவனது தோற்றமே நமக்கு முதலில் நினைவுக்கு வருகிறது. அவனது குணங்கள் செயல்களைப் பற்றி நோக்கும்போதும் தோற்றமே முதன்மைப்படுத்தப்படுகிறது. ஆண் பெண் என்ற தோற்றத்தின் அடிப்படையில் நோக்கும்போது ஆண்களைவிடப் பெண்களுக்கு மென்மையான உடல் அமைப்பு காணக்கூடியதாக உள்ளது. அவ்வகையில் சங்க காலநெய்தல் நிலப் பெண்களின் தோற்றத்தைப் பற்றிக் காண்போம். அவற்றில் உடலின் நிறம் முதன்மை பெறுகிறது. பற்கள், கூந்தல், கைகள், கண்கள்,

தோள்கள் மற்றும் ஒரு சேரப் பரதவப் பெண்களின் அழகு நெய்தல் பாடல்கள் வழி அறியலாம்.

**நிறம்**

மனிதனின் தோல் நிறம் பொதுவாகக் கருப்பு, மாநிறம், சிவப்பு போன்ற பல நிறங்கள் காணக்கூடியதாக உள்ளன. அவற்றில் கடற்கரையை ஒட்டி வாழ்ந்த பரதவப் பெண்கள் பொதுவாகவே கருமை நிறத்தைப் பெற்றிருந்தனர். அவர்கள் இந்நிறம் பெறுவதற்கு அறிவியல் ரீதியான காரணமும் உண்டு. உப்புக் கலந்த கடல் காற்று உடலில் படுவதால் கருமை நிறம் ஏற்படுகிறது. இத்தகைய காரணத்தால் பரதவப் பெண்கள் பெரும்பான்மை கருமை நிறம் பெற்றிருந்தனர் எனத் தோன்றுகிறது. நெய்தல் பாடல்கள் வழி பரதவப் பெண்கள் கருமை மங்கிய மாநிறத்தில் இருந்தனர் எனப் பல பாடல்கள் எடுத்துரைக்கின்றன. பாடல் வரிகளின் வழி மாவின் தளிர் போன்ற நிறத்தைப் பெற்றிருந்தனர் பரதவப் பெண்கள் என உணரமுடிகிறது.

சான்றாகத் தலைவியின் நிறம் பற்றி விளக்கும் சங்க பாடல் வரிகள்,

**மாவின தளிர் போலும் ...............**[1]

**நல் மா மேனி ..........**[2]

**அம்மா மேனி தொல்நலம் தொலைய**[3]

எனக் குறிப்பிடுகிறது. தலைவியின் நிறத்தைக் குறிப்பிட்ட வரிகள் தலைவியின் தாயும் மாநிறத்துடன் இருந்துள்ளாள் என்பதையும் எடுத்துரைக்கிறது.

**யாய் ஆகியளே மா அ யோளே**[4]

மேலும், நுளையர் மகளிர் பெரும்பான்மையோர் மாநிறத்துடன் விளங்கியுள்ளனர் என்பதையும் நெய்தல் பாடல்கள் பல விளக்குகின்றன. அவை,

**மாயோள் .......... ...........**[5]

**.......... ........... மாமைக் கவினே**[6]

**............... என் மாமைக் கவினே**[7]

**தான் வந்தன்று, என் மாமைக் கவினே**[8]

என்ற இவ்வரிகள் உணர்த்துகின்றன. மேற்கண்ட பாடல் வரிகளால் பரதவப் பெண்கள் மாநிறத்துடன் இருந்துள்ளனர் என்பதை அறியலாம்.

**பற்கள்**

முகத்தின் அமைப்பில் முக்கிய அங்கம் பற்களாகும். இப்பற்களின் வெண்மைக்கு முத்தை ஒப்பிடுவர். பற்கள் பெரிதாகவும் இல்லாமல் சிறியதாகவும் இல்லாமல் சரியான அளவில் அமைந்தால் அழகான முகத்தோற்றத்தைப் பெறுவர். சங்க கால பரதவப் பெண்கள் எத்தகைய பல் அமைப்பைப் பெற்றிருந்தனர் என்பதைக் கீழ்வரும் நெய்தல் பாடல்கள் வழி உணர்வோம்.

முல்லை அரும்பை ஒக்கும் ஒளி விளங்கும் பற்களை மகளிர் பெற்றிருந்தனர் என்பதை,

**முகை ஏர் இலங்கு எயிற்று இன்நகை மாதர்**[9]

கலித்தொகை உணர்த்துகின்றது. இப்பற்கள் வெண்மை நிறத்துடன் விளங்கியுள்ளது என்பதை,

**.................. வால் எயிற்று அமர் நகை**[10]

ஐங்குறுநூறு வரிகள் உணர்த்துகிறது. இவ்வாறு வெண்ணிறப் பற்களைப் பெற்ற பரதவ மகளிருக்கு அப்பற்கள் விளங்கித் தோன்றும் தோற்றமுடன் இருந்துள்ளது.

**இலங்கு எயிற்று ஏஎர் இன்நகை மகளிர்**[11]

முகத்தில் விளங்கித் தோன்றிய பற்கள் கூர்மையாக முள் போன்றும் இருந்துள்ளது. இதனை,

**முள் எயிற்று முறுவல் திறந்தன**[12]

**................. ................ வை எயிற்று**[13]

என நற்றிணையும் அகநானூறும் எடுத்துரைக்கின்றன. எடுப்பான பற்களைப் பெற்ற பரதவப் பெண்கள் நகைக்கும் போது பல்லின் நுனி தோன்றாமல் தன் உதடுகளால் மறைத்து முறுவல் கொண்டு அதனை உள்ளடக்கிய நிலையில் இருந்துள்ளனர்.

**முள்நுனை தோன்றாமை முறுவல் கொண்டு அடக்கி தன்**
**கண்ணினும் முகத்தினும் நகுபவள் ..............**[14]

மேற்கண்ட பாடல் வரிகளால் பரதவப் பெண்கள் வெண்மையான பற்களைப் பெற்றிருந்ததோடு, கூர்மையான முள்போன்ற பற்களைப் பெற்றிருந்தனர் என்பதை அறியலாம்.

**கூந்தல்**

பெண்கள் அழகான தோற்றத்தைக் கொண்டவர்கள். அவ்வழகுக்கு அழகு சேர்ப்பது கூந்தலாகும்.கூந்தலைப் புலவர்கள் கார்மேகத்தோடு ஒப்பிடுவர்.பெண்களின் முக அழகில் கூந்தல் ஒப்பனையும் சிறப்பிடம் பெறுகிறது. அவ்வகையில் பரதவ மகளிர் எத்தகைய கூந்தலைப் பெற்று இருந்தனர் என்பதும், அதன் அழகு பற்றியும் நெய்தல் பாக்கள் வழி அறியலாம். நெய்தல் பாடல்களில் பரதவ மகளிர் கருமையான, அடர்ந்த, சுருண்ட கூந்தலைப் பெற்று இருந்தனர் என விளக்குகிறது .

சான்றாகப், பரதவப் பெண்களின் கருமையான கூந்தலைப் பற்றிக் குறிப்பிடும் நெய்தல் புலவர்கள் கீழ்வருமாறு விளக்குவர்.

**............... ............... இரும் பல் கூந்தல்[15]**

இருளினும் கரிய கூந்தலைப் பெற்றிருந்தனர் என்பதை,

**இருள் உறழ் இருங்கூந்தல் மகளிரோடு[16]**

**மாரிவீழ் இருங்கூந்தல் ...............[17]**

**இருளுறு கூந்தலாள் ...............[18]**

என்னும் பாடல்வரிகள் உணர்த்துகின்றன. மேலும், மயில் பீலியில் காணப்படும் கண்ணைப் போன்ற கருமையான கூந்தலையும் பெற்றிருந்தனர்.

**மயிற்கண் அன்ன மாண்முடிப் பாவை[19]**

இவ்வாறு கருமையான கூந்தலைப் பெற்றிருந்த பரதவ மகளிருக்கு அக்கூந்தல் அடர்ந்து, கொத்தாக இருந்துள்ளது.

**............... ............... கொழும் பல் கூந்தல்[20]**

**குரற் கூந்தால் ............... ...............[21]**

கருமையான அடர்ந்த இக்கூந்தல் நுளையர் மகளிரின் முதுகுவரை நீண்டு, தாழ்ந்து விளங்கி அப்பெண்களுக்கு அழகு சேர்ந்துள்ளது.

**நல்நெடுங் கூந்தல் நாடுமோ மற்றே?[22]**

**மைஈர் ஓதி வாள் நுதல் குறுமகள்![23]**

இத்தகைய நீண்ட கூந்தலை மகளிர் பின்னித் தங்களை அழுங்கரித்துள்ளனர்.

**வணர்ந்து ஒலி ஐம்பாலாள்[24]**

**புறம் தாழ்பு இருளிய பிறங்குரல் ஐம்பால்**

மேலும், இக் கூந்தலுக்கு நெய் பூசியும், நறுமணமூட்டியும் பராமரித்துள்ளனர். இதனை,

**ஐதுவீழ் இகுபெயல் அழகுகொண்டு, அருளி**

**நெய் கனிந்து இருளிய கதுப்பின் ................[25]**

**கதுப்பு உலறும் கவினையாய் .............[26]**

என்ற இவ்வரிகள் உணர்த்துகின்றன. மேற்கண்ட வரிகளால் பரதவ மகளிர் கருமையான அடர்ந்த, நீண்ட கூந்தலைப் பெற்றிருந்தனர் என்பதும், அக்கூந்தலைப் பின்னியும், நறுநெய் பூசியும் பராமரித்துள்ளனர் என்பதையும் அறியலாம்.

**கைகள்**

மென்மையான உடல் வாகு கொண்ட பரதவப் பெண்களின் கைகள் அழகுடன் விளங்கியதோடு அக்கைகளின் முன்பகுதியில் மென்மையான மயிரினைப் பெற்று இருந்துள்ளார். இதனை,

**............ ............... மயிர் வார் முன் கை[27]**

**அறாஅல் இன்று அரி முன்கைக் கொட்கும்[28]**

இவ்வரிகள் புலப்படுத்துகின்றன.

**கண்கள்**

முகத்தில் முக்கிய உறுப்பு கண்களாகும். ஒரு மனிதன் சிரிக்கும் போதும், அழும் போதும் கண்களே அவ்வுணர்வை வெளிப்படுத்தும் ஆற்றல் பெற்றவையாக உள்ளன. நெய்தல் நிலத்தில் வாழ்ந்த பரதவப் பெண்களின் கண்கள் புலவனின் பார்வையில் பூவைப் போல அழகாக இருந்துள்ளது.இதனை,

**......... .......... ............... நின் மகள்**

**பூப்போல் உண்கண் மரீஇய[29]**

**........ ............. ........... பூங்கண்[30]**

இப்பாடல் வரிகள் புலப்படுத்துகின்றன.இவ்வாறு பூப்போல் அழகாக இருந்த பரதவப் பெண்களின் கண்ணின் கண்பாவை கருமையாக இருந்ததோடு, சிலருக்கு இக்காலங்களில் நீலநிறம், பொன் நிறத்தில் இருப்பது போல அக்காலத்திலும் கண்பாவை நீலநிறத்தில் இருந்துள்ளது.

உதாரணமாக அகநானூற்று வரிகளில், நெய்தல் பூவின் நீலமணியைப் போன்ற அழகிய தலைவியின் கண்கள் தலைவனின் பிரிவால் அந்நிறத்தினை இழந்து, பொன் போல் நிறம் பெற்றுப் பொலிவிழந்தன எனப் பகர்கிறது.

**சுரும்பு உண மலர்ந்த பெருந்தண் நெய்தல்**

**மணிஏர் மாண்நலம் ஒரீஇ**

**பொன்நேர் வண்ணம் கொண்ட என் கண்ணே?[31]**

**தோள்கள்**

நெய்தல் நிலத்தில் வாழ்ந்த பரதவ மகளிர் பருத்த வலிமையான தோள்களைப் பெற்று இருந்தனர். நெய்தல் பாடல் வரிகள் மூங்கிலைப் போன்ற பருத்த தோளினை அப்பெண்கள் பெற்றிருந்தனர் என விளக்குகிறது. இதனை,

**தொண்டி அன்ன பணைத் தோள்[32]**

**........... ............ பணைத் தோளாள் .........[33]**

**ஆயம் ஆய்ந்த சாய் இறைப் பணைத்தோள்[34]**

இவ்வரிகள் புலப்படுத்துகின்றன.

**அழகு**

இயற்கையின் நுட்பமான அற்புதப் படைப்பு பெண். இப்பெண்களின் அழகினைப் பாடாத கவிஞர்கள் இல்லை எனலாம். அவ்வகையில் நெய்தல் நிலத்தில் வாழ்ந்த பரதவப் பெண்களின் பொதுவான தோற்றத்தைப் பாடிய புலவர்களின் உற்று நோக்கலில் நுளையர் மகளிர் கீழ்வருமாறு சித்தரிக்கப்படுகின்றனர்.

சான்றாக ஐங்குறுநூற்றுப் பாடலில், தோழியிடம் தலைவன் தலைவியின் அழகு பற்றி விளக்குகையில், பரதவனின் இளமகள் கொற்கைத் துறைமுகத்தின் விளக்கமுடைய முத்தை ஒத்த பற்களைக் கொண்டவள் என்றும், பவளம் போன்ற வாயை உடையவள், யாழ் நரம்பில் இருந்து எழும் இசைபோல் இனிய சொற்களை உடையவள் என்றும் புகழ்கிறான்.

**இலங்கு முத்து உறைக்கும் எயிறு கெழு துவர் வாய்**

**.............. ........... ........... .....................**

**நரம்பு ஆர்த்தன்ன தீங் கிளவியளே[35]**

மற்றொரு பாடல், பரதவரின் இளமைமிக்கப் பெண் அகன்ற அல்குலையும், மெல்லிய இடையையும் மான் போன்ற மருண்ட பார்வையையும் உடையவள் என்று பெண்ணின் வடிவழகை இயம்புகிறது.

**அகன்ற அல்குல் ஐது அமை நுசும்பின்**

**மீன் எறி பரதவர் மடமகள்**

**மான் அமர் நோக்கம் காணா ஊங்கே**[36]

**மென்மை**

பெண்மைக்கும் மென்மைக்கும் நெருங்கிய தொடர்புண்டு. பெண்கள் மென்மையான உடல்வாகு கொண்டதோடு மென்மையான குணங்களையும் கொண்டவர்கள். நெய்தல் நிலத்தில் வாழ்ந்த பரதவப் பெண்களும் மென்மையான குணங்கள் கொண்டவர்களாக இருந்துள்ளனர். சிறிது துன்பம் ஏற்பட்டால் கூட மிகவும் வருந்தக்கூடிய மனம் கொண்டவர்களாக, தான் அன்பு கொண்ட தலைவனால் ஏற்படும் பிரிவைத் தாங்க இயலாத மென்மையான குணம் கொண்டு மிகவும் துன்புற்றுள்ளனர். ஏக்கம் கொண்டு அழுதுள்ளனர்.

சான்றாக அகநானூற்றுப் பாடலில், தலைவனின் பிரிவால் வாடிய தலைவி, இரவெல்லாம் பிரிவாற்றாது வருந்தியதோடு, மாட்சிமைப்பட்ட தன் அழகு கெட ஏக்கங் கொண்டவளாய்க் குளிர்ச்சி பொருந்திய கண்கள் கலங்க, இடைவிடாது அழுத வண்ணம் இருந்துள்ளாள்.

**மதர் எழில் மழைக்கண் கலுழ, இவளே**

**பெரு நாண் அணிந்த சிறுமென் சாயல்**

**மாண்நலம் சிதைய ஏங்கி, ஆனாது**

**அழல் தொடங்கினளே ...............**[37]

மற்றொரு பாடலில், தலைவனின் பிரிவை ஆற்றாத தலைவி, தோளின் பழைய இயற்கை அழகு கெட, செயற்கை அழகும் தேய, துன்பத்தையுடைய உள்ளத்தோடு, இரவிலும் கண் துயிலாமல், உடம்பு பசலையாகி வேறுபட்டு உயிர் நீங்கும் அளவுக்கு வருந்தியுள்ளாள்.

**தொல்கவின் தொலைந்து , தோள்நலம் சாஅய்**

**அல்லல் நெஞ்சமோடு அல்கலும் துஞ்சாது**

**பசலை ஆகி விளிவது கொல்லோ!**[38]

மேற்கண்ட வரிகளால், பரதவப் பெண்களின் துன்பம் தாளாத இளகிய மனத்தை அறியலாம். கீழ்வரும் பாடலில்,

பரதவப் பெண்ணின் மென்மையான உள்ளமும், விட்டுக் கொடுக்கும் குணமும் உணர்த்தப்படுகிறது.

பரத்தையர் வீடு சென்று திரும்பிய தலைவன் மீது ஊடுதற்குரிய காரணம் இருந்தும் தலைவி அவனை ஏற்றுக் கொண்டாள். ஏன் ஏற்றுக் கொண்டாய் எனக் கடிகிறாள் தோழி. அத்தோழிக்குப் பதிலளிக்கையில் தலைவி கூறுகிறாள்.

தோழி! தலைவனைக் கண்ட பொழுதில் சினம் கொண்டு ஊடுவேன், இல்லத்துட் புகாது தடுப்பேன் என்றும் உறுதி கொண்டு இருந்த நான், அவனைக் கண்ட மாத்திரத்தில் அனைத்தையும் மறந்து பேசமுடியாதவளாய் சிற்பம் போல நின்றுவிட்டேன் என்கிறாள்.

**(ஐங்.48: 1–4)**[39]

இவ்வரிகளில் தன்னைத் துறந்து பரத்தையர் இல்லம் சென்று திரும்பி வந்த கணவனைக் கண்ட மாத்திரத்தில் தான் உற்ற துன்பம் அனைத்தையும் மறந்து மன்னித்து ஏற்றுக் கொள்ளும் மென்மை உள்ளம் படைத்த பரதவர் மனைவியின் மென்மையான விட்டுக்கொடுக்கக்கூடிய பண்பை அறியலாம்.

**பேதைமைத் தன்மை**

மென்மையான குணங்கள் கொண்ட நுளையர் மகளிர் கள்ளங் கபடம் அற்ற பேதைமைத் தன்மையுடன் இருந்து உள்ளனர். இத்தகைய வெள்ளை உள்ளம் படைத்த இப்பெண்கள் முடிவு எடுப்பதில் சில நேரங்களில் தடுமாற்றத்துடன் இருந்துள்ளனர். உதாரணமாகத் தலைவியின் கள்ளங் கபடமற்ற உள்ளம் பற்றித் தலைவன் தன் தோழனிடம் விளக்குகையில்,

கடற்கரையிடத்து நண்டைப் பிடிக்க ஆற்றாது தளரும் இளமையும் பேதைமையும் உடையவள் தலைவி. அவளிடம் என் பிரிவை உணர்த்திய போது, அவள் மிக வருந்தி, நெஞ்சுறு துயரைச் சொல்லால் வெளிப்படுத்த இயலாமல் ஞாழல் மரத்தின் பூங்கொத்துக்களைத் தரை பார்த்து உதிர்த்தாள். அத்தகைய மடமைத் தன்மை உடையவள் தலைவி என்றான்.

**ஆடு வரி அலவன் ஓடுவயின் ஆற்றாது**

**அசைஇ, உள் ஒழிந்த வசை தீர் குறுமகட்கு**

**உயவினென் சென்று, யான், உள் நோய் உரைப்ப**

**மறுமொழி பெயர்த்தல் ஆற்றாள், நறு மலர்**

**ஞாழல் அம் சினைத் தாழ் இணர் கொழுதி**

**முறி திமிர்ந்து உதிர்த்த கையள்**

**அறிவு அஞர் உறுவி ஆய் மட நிலையே?[40]**

மற்றொரு பாடலில், தலைவன் பொருள் தேட பிரிந்து செல்கிறேன் என்று பலமுறை உணர்த்தினான். அவன் கூறிய சொற்களின் தன்மை அறியாத தலைவி அவன் முன்பு கூறிய மாயச்செலவு என்று கருதினாள்.ஒரு நாள் உண்மையில் பிரிந்து சென்றான். அவ்வாறு உண்மையில் பிரிந்த தலைவனை நினைத்து தனிமையில் வருந்திய தலைவி அவனை நினைந்து அழுது அழுது அவளது கண்ணீர் பெரியகுளம் நிரம்பும் அளவு பெருகுவதாயிற்று.

**சேறும் சேறும் என்றலின் பண்டைத் தம்**

**மாயச் செலவாச் செத்து ..................**

**............. .............. ................ அன்னோ**

**ஆசு ஆகு எந்தை யாண்டு உளன் கொல்லோ?**

**கருங்கால் வெண்குருகு மேயும்**

**பெருங்குளம் ஆயிற்று என் இடைமுலை நிறைந்தே[41]**

மேற்கண்ட வரிகளால் மனைவியானவள் பிரிவை உணர்த்திய தலைவனின் உணர்வை புரிய முடியாத பேதமைத் தன்மையில் இருந்த திறத்தை அறியலாம்.

**பிறர் நலம் பேணல்**

பிறருடைய நலனில் அக்கறை கொண்டு பரிவுடன் செயல்படுவது பெண்களுக்கே உரிய உயர்வான குணமாகும். தனக்கு நெருக்கமானவர்களின் நிறை குறைகளைச் சீர்தூக்கிப் பார்த்து, அவர்களுக்கு எது நலம் பயக்குமோ அச்செயலுக்கு அவர்களை வலியுறுத்துவதும், தன்னைச் சார்ந்தவர்கள் மட்டுமல்லாமல் தன்னைச் சாராதவர்கள் மேலும் அன்பும் அக்கறையும் செலுத்தக்கூடிய தாயன்பு மகளிரிடம் காணப்படும் மிகச்சிறந்த குணமாகும்.

பழந்தமிழ் நெய்தல் பாடல்கள் வழி இத்தகைய பிறர்நலம் பேணக்கூடிய பெரும்பண்பு பற்றித் தோழி மற்றும் செவிலி பாத்திரங்கள் மூலம் பரதவப் பெண்களின் பரிவு கொண்ட உள்ளம் அறியப்படுகிறது.

சான்றாகக் கலித்தொகைப் பாடலில்,

தலைவனைப் பிரிந்து துன்புற்ற தலைவியிடம் அவளது நலனில் அக்கறையுள்ள உயிர்த் தோழியானவள் விளக்கத்தால் பரிவு கொண்ட பரதவப் பெண்களின் மனத்தை உணரலாம்.

தலைவி! தலைவன் பரத்தையரை நாடிச் சென்று உனக்குப் பொருந்தாத குறைகளைச் செய்துள்ளான். தவறுதான் ஆனாலும், நீ அக்குறைகளையே பலவும் நூறுமாக அடுக்கிக் கூறி அதிலே சுட்டிக்காட்டிப் பிடிவாதமாக இருந்துவிட்டாய்; அவன் வந்த போதும் அவனைச் சந்திக்க மனமின்றித் திருப்பி அனுப்பிவிட்டாய். இப்பொழுது அவன் பிரிவினால் வருந்தி அழுகின்றாய்; நீ மனந்தடுமாறுதலை உடையவளாக இருக்கின்றாய் என்கிறாள்.

**காதல் செய்து அருளாது துறந்தார் மாட்டு ஏது இன்றி**
**சிறிய துனித்தனை, துன்னா செய்து அமர்ந்தனை;**
**பலவும் நூறு அடுக்கினை; இனைபு ஏங்கி அழுதனை;**
**அலவலை உடையை என்றி – தோழீ![42]**

இவ்வரிகளால், தோழியானவள் தலைவியிடம் நீ உன் குறைகளைத் தலைவனிடம் பேசித் தீர்த்துக் கொள்ளவேண்டும். அவனைப் போக விட்டுவிட்டு பின்பு வருந்தித் துன்புறாதே என்ற பொருளில் கூறுகிறாள். இவளது பேச்சில் அத்தலைவியைப் பேணக்கூடிய தாயன்பு வெளிப்படுகிறது.

மற்றொரு பாடலில், தலைவனைப் பிரிந்து வருந்திய தலைவியை ஆற்றுவிக்க முடியவில்லையே! எனத் துன்புறுகிறாள் தோழி. அவளது துன்பத்தைப் பொறுக்காத தலைவி தன் துன்பத்தை மறைத்துக் கொண்டு தோழியிடம் விளம்புகிறாள் கீழ்வருமாறு,

தோழி! தலைவனின் பிரிவினால் வருந்தியிருக்கும் நாம், நம் அரிய உயிர் நம்மை விட்டு நீங்கிப் போவதாயினும், அத்துன்பம் புறத்தார்க்குப் புலனாகாதவாறு மறைத்துக் கொள்ளவேண்டும். எனவேதான் நான் வருந்தாது ஆற்றியிருக்கின்றேன். எனவே நீயும் வருந்தாதே என்கிறாள்.

**துறந்தோர் தேஎத்து இருந்து, நனி வருந்தி**
**ஆர் உயிர் அழிவது ஆயினும் – நேரிழை!**
**காத்தல் வேண்டுமால் மற்றே[43]**

மேற்கண்ட பாடல் வரிகளில், தலைவி வருந்த வேண்டாம் எனத் தோழியும், தோழி தனக்காக வருந்தக்கூடாது எனத் தலைவியும் ஒருவர் மீது ஒருவர் கொண்ட பரிவை இப்பாடல் வரிகள் புலப்படுத்துகின்றன. இவ்வாறு நெய்தல் நிலப் பெண்கள் தன்னைச் சார்ந்தவர்கள் மேல் அக்கறை கொண்டிருந்தனர். அதோடு முன்பின் அறியாத முற்றிலும் புதியவர்களின் நலனிலும் விருப்புக் கொண்டு செயல்பட்டுள்ளனர்.

எடுத்துக்காட்டாக, நெய்தல் நிலத்தின் வழி கடந்து செல்லக்கூடிய வழிப்போக்கர்களின் பசியைப் போக்கும் தாராள மனப்போக்கும் பரதவப் பெண்களிடம் இருந்துள்ளது.

(குறுந். 118:3–5) [44]

வருவீர் உளீரோ? என்ற வரிகள் மூலம் எத்தனை பேர் வந்தாலும் அவர்களின் பசியைப் போக்கி இளைப்பாறச் செய்து பேணக்கூடிய பெரும்போக்கான தொண்டுள்ளம் பரதவப் பெண்களிடம் இருந்துள்ளது.

**குழந்தை வளர்ப்பு**

பரதவக் குடும்பங்களில் குழந்தையை வளர்க்கும் பொறுப்பில் பெரும்பங்கு பெண்களுக்கே இருந்துள்ளது. இக்குடும்பப் பெண்கள் ஆண் குழந்தைகளை விடப் பெண் குழந்தைகளைப் பரிவோடும் அக்கறையோடும் கண்காணிப்போடும் வளர்த்துள்ளனர். பருவ வயதை அடையும் முன்பு வரை கட்டுப்பாடு இன்றி வளர்க்கப்பட்ட பெண் பிள்ளைகள், பருவ வயதை அடைந்தவுடன் தாயின் மனதில் மகளைப் பற்றிய அச்ச உணர்வை ஏற்படுத்தியுள்ளது. எல்லாக் காலங்களிலும் உள்ளது போலச் சங்க காலத்திலும் தாயின் உள்ளம் தன் மகள் காதல் வயப்பட்டு விடக்கூடாது என்றும்,அவளை ஒழுக்கமாக வளர்த்துத் திருமணம் செய்து கொடுக்க வேண்டும் என்றும், அத்தாயின் எண்ணம் மனதில் பயம் கலந்த பாசமாக உருவெடுக்கிறது.அத்தாயின் உள்ளத்தைப் பிரதிபலிக்கும் நெய்தல் பாடல்கள் பல.

அவற்றில் அகநானூற்றுப் பாடலில், தாயானவள் தன் மகளின் பின்னும்படி வளர்ந்து நெளிந்த கூந்தலையும், பொன் போல மார்பிலே தோன்றிய தேமலையும், கச்சு இற்றுவிடும்படியாகக் கண்ணுடன் உருக்கொண்டு விம்மி எழுந்த முலையினையும் நோக்கி, நீ பெரிதும் அழகுடன் தோன்றுகின்றாய் எனப் பலபடப்

பாராட்டி, அவளுடைய தோளை முழுவதும் தழுவி, நெடிது நினைந்துப் பார்த்து அவளை அரிய காவலில் வைத்துள்ளாள்.

**பின்னுவிட நெறித்த கூந்தலும், பொன்னென**

**ஆகத்து அரும்பிய சுணங்கும், வம்புவிடக்**

**கண்உருத்து எழுதரு முலையும் நோக்கி;**

**எல்லினை பெரிது எனப் பல்மாண் கூறி,**

**பெருந்தோள் அடைய முயங்கி, நீடுநினைந்து**

**அருங்கடிப் படுத்தனள் யாயே; ..................**[45]

மேலே வரும் வரிகளால், தாயானவள் பேரழகுடன் திகழும் தன்மகள் காதல் வயப்பட்டு விடுவாளோ? என்று எழுந்த அச்சத்தால் காவலை ஏற்படுத்தினாள் எனலாம்.

மற்றொரு பாடலில், மகளானவள் தினமும் கடற்கரைக்கு விளையாடச் செல்கிறாள். ஒரு நாள் அவளைத் தடுத்து நிறுத்தித் தாயானவள் கூறுகிறாள். கடற்கரைக்கு ஒரு தேர் பலநாளும் வந்து செல்கிறதாம். எனவே நீயும் உன் தோழிகளும் அங்கு செல்லாதீர்கள் என அறிவுறுத்தியுள்ளாள்.

**பல் கால் வரூஉம் தேர் என,**

**செல்லாதீமோ என்றனள் யாயே**[46]

இவ்விரண்டு பாடல்களிலும், தாயின் தற்காப்பு எண்ணம் வெளிப்படுகிறது.

பழந்தமிழ் நெய்தல் பாடல்கள் வழி பரதவப் பெண்கள் ஆண் குழந்தைகளை எவ்வாறு வளர்த்தனர் என்பது பற்றிய அதிக செய்திகளை அறிய இயலவில்லை. பெண் குழந்தைகளை வளர்த்த முறை பற்றியே நிறைய பாடல்களில் அறியமுடிகிறது. பெண் குழந்தைகளும் பருவ வயதிலேயே தாயால் அதிகம் கவனிக்கப்பட்டுள்ளனர்.

**கணவனுடன் உறவு**

பரதவப் பெண்கள் கணவன் மீது பேரன்பு கொண்டு இருந்துள்ளனர். கணவனுடன் எப்பொழுதும் பிரியாமல் இருக்க விழைந்துள்ளனர். கணவன் அவர்களைப் பிரிந்து சென்று பொருள் தேடுவதை விட உடன் உறைவதையே விரும்பியுள்ளனர். கணவனுடனான அம்மகளிரின் பாச உணர்வை வெளிப்படுத்தும் நெய்தல் வரிகளைப் பின்வருமாறு அறியலாம்.

நற்றிணைப் பாடலில், பொருள் காரணமாகப் பிரிந்து செல்கிறான் கணவன். அவனது பிரிவைத் தன்னுள் கடிகிறாள் அக்கணவனின் அன்புடை மனைவி பின்வருமாறு,

பழமையான நமது ஊரில் தமதாகச் செய்யும் இல்லறப் பொருளினும் காட்டில் வேறு ஒரு பொருளும் உண்டோ? என்னைப் பிரிந்து செல்ல அவருக்கு எத்தகைய மனம் வந்தது என வருந்துகிறாள்.

**செந் நீர்ப் பொது வினைச் செம்மல் மூதூர்த்**

**தமது செய் வாழ்க்கையின் இனியது உண்டோ?[47]**

இவ்வரிகளால் பொருள் சிறிதாயினும் உடன் உறையும் வாழ்வே இன்பமானது. பிரிந்து சென்று பெரும் பொருள் ஈட்டி வந்தாலும், பிரிவுடைய அக்காலம் துன்பம் நிறைந்தது என்னும் பொருளில் கூறுகிறாள். இவற்றால் பொருள் மீது பற்றுக் கொள்ளாமல் தங்கள் கணவன் மீது பேரன்பு கொண்டிருந்தனர் பரதவ மனைவிமார் என்பதை அறியலாம்.

**வன்மையான குணங்கள்**

அன்பு, அமைதி, பரிவு, பாசம், பற்று இவை அனைத்தும் மனித குணங்களில் அடக்கம். இத்தகைய மென்மையான குணங்களோடு சில வன்மையான குணங்களும் அனைவருள்ளும் இருக்கும். நெய்தல் நிலப்பெண்களும் இதற்கு விலக்கல்ல. அவர்களது வன்மையான குணங்கள் பற்றிப் பின்வருமாறு அறியலாம். சான்றாகப், பரதவன் மகளொருத்தி காளை ஒருவனொடு களவொழுக்கத்தில் ஒழுகியபோது அயலோர் அவள் தமர்பால் பெண்கேட்டு வந்தனர். அதனை விரும்பாத பரதவனின் மகள் தான் காதலித்த ஆடவனையே மணக்க வேண்டும் என்ற உறுதியில் உணவும் உறக்கமும் இன்றி மெலிந்தாள்.

(ஐங். 168:4)[48]

இவ்வரிகளால் பரதவப் பெண்கள் தான் விரும்பிய ஆணையே திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்ற கருத்தில் உறுதியுடன் இருந்துள்ளனர் என்பதும், அவர்களது கற்பின் திறமும், உறுதியான மனமும் அறியப்படுகிறது.

மற்றொரு பாடலில், பரத்தையிற் பிரிந்த தலைவன் தலைவியின் ஊடல் தீர்க்கத் தான் நேரில் செல்லாமல், தோழனைத் தூதாக அனுப்புகிறான். அவன் தலைவியின் உற்ற தோழியைச் சந்தித்துத் தலைவனின் எண்ணத்தை

உரைக்கிறான். தலைவியின் மீது பேரன்பு கொண்ட தோழி தனது உள்ளக் கொதிப்பைத், தலைவன் மீது கொண்ட கோபத்தைத், தலைவி உறும் பிரிவின் துன்பத்தைப், பாணனிடம் கொட்டுகிறாள்.அச்செய்தி வருமாறு:

பாணா! குளிர்ச்சி மிக்க கடற்கரைக்குத் தலைவன் உன்னையா? தூதாக அனுப்பினான். நீயோ பெரும் பயனுக்குத் தக்கவாறு கூறும் செய்தியை உடையவன். உன் வாயிலிருந்து வெளிப்படும் மெல்லிய பொய்ம்மொழிகள் பலவாகும் எனக் கடிகிறாள்.

**தண்ணம் துறைவன் தூதொடும் வந்த**

**பயன் தெரி பனுவற் பை தீர் பாண!**

**நின் வாய்ப் பணி மொழி களையா**[49]

மேற்கண்ட பாடல்களின் வரிகளால் பரதவப் பெண்களிடம் இருந்த விடப்பிடியான குணமும், கோபத்தை வெளிப்படுத்தும் திறமும் அறியமுடிகிறது.

**துணிவு**

தன்னைச் சார்ந்தவர்கள் உறும் துன்பத்தைக் கண்ணுற்ற பரதவப் பெண்கள் அவர்கள் வருத்தத்தைப் போக்கும் வகையில் செயல்பட்டுள்ளனர். அவர்கள் நலனுக்காக மிகத் துணிச்சலான முடிவுகளை எடுத்துள்ளனர். எடுத்துக்காட்டாக,

தலைவனின் பிரிவால் வருந்திய தலைவியின் மெலிவுக்குத் தெய்வக் குற்றமே காரணம் எனக் கருதிப் பூசை முதலான ஏற்பாடுகளைச் செய்கிறாள் செவிலி. இவ்வேற்பாடுகளைத் தடுக்கும் விதமாக உண்மையான காரணத்தைத் துணிவுடன் எடுத்துரைக்கிறாள் தோழி.

தலைவியின் மெலிவுக்குக் காரணம் நெய்தல் நிலத் தலைவனே. மையுண்ட கண்கள் நீரால் நிரம்பி வழியக் காரணமானவனும் அவனே. எந்தத் தெய்வமும் அன்று பூசைக்குரிய ஏற்பாடுகளைச் செய்யவேண்டாம் என்கிறாள்.

**மெல்லம் புலம்பன் மன்ற – எம்**

**பல் இதழ் உண்கண் பனி செய்தோனே**[50]

**மதி நுட்பம்**

'பெண் புத்தி பின் புத்தி' என்பார்கள். பின்னால் நடக்கக் கூடிய நிகழ்வுகளை முன்கூட்டியே உணரக்கூடிய ஆற்றல் பெண்களுக்கு உண்டு என்பதால் தான் இம்மொழி உண்டாயிற்று எனலாம். அவ்வகையில் ஒரு செயலைச் செய்யும் போது

அதனால் ஏற்படும் பின் விளைவுகளை நுட்பமான முறையில் பகுத்துப் பார்க்கக்கூடிய ஆற்றல் பரதவப் பெண்களிடம் இருந்துள்ளது.

எடுத்துக்காட்டாக தலைவன் வரும் வழியின் ஏதம் குறித்துக் கவலைப்படாத தலைவி, அவனின் வருகையை உவந்து ஏற்பவளாக இருந்தாள். அறிவு நுட்பம் நிறைந்த தோழி அவன் வரும் வழியின் துன்பங்களை ஆராய்ந்து பார்த்து, இரவில் இடையூறுகளுக்கிடையே அவளைச் சந்திக்க வரவேண்டாம் என்கிறாள். எவ்வாறெனில்,

தலைவா! வளைந்த கால்களையுடைய முதலை, பிற உயிர்களைப் பற்றுதலில் வல்ல ஆண், தான் உள்ள வழியில் பிற உயிர்களை இயங்குதலை ஒழிக்கும். இத்தகைய நீர்த்துறைக் கண் திரளாகிய மீன்களையுடைய கரிய கழியை நீந்திக் கடந்து நீ இவள்பால் உள்ள விருப்பத்தால் வருகின்றாய். உனது துன்பத்தை அவள் அறியாதவள். ஆனால், நான் இத்தகைய இடையூறுகளை எண்ணி அஞ்சுகிறேன். எனவே நீ வரவேண்டாம் என்கிறாள்.

**கொடுந்தாள் முதலைக் கோள்வல் ஏற்றை**
**வழிவழக்கு அறுக்கும் கானல் அம் பெருந்துறை**
**இனமீன் இருங்கழி நீந்தி, நீ நின்**
**நயன் உடைமையின் உவக்கும் யான் அது**
**அஞ்சுவல் – பெருமா! என் நெஞ்சத்தானே**[51]

பின் விளைவுகளை ஆராயக் கூடிய திறன்அவர்களிடையே இருந்துள்ளது என்பதை இப் பாடல் அறிவிக்கிறது. இப்பெண்களின் மதிநுட்பத்தை மற்றொரு பாடல் மூலமும் அறியலாம்.

தோழி, தலைவனிடம் பகற்குறி மறுத்து இரவுக்குறி நேர்கிறாள். இரவுக் குறியிலும் யாரும் அறியாமல் எவ்வாறு வரவேண்டும் என்ற உபாயத்தையும் கூறுகிறாள்.

தலைவா! உயர்ந்து தோன்றும் பனைமரங்களின் நடுவில் உள்ளது எமது ஊர். ஆயத்தாரும் அவர்களுள் தோழியாகிய யானும், ஒருவரை ஒருவர் அறியா வண்ணம் அவ்விடத்தில் இருப்போம். புன்னை மரங்களில் உதிர்ந்த மகரந்தமாகிய தாதினை ஊதுகின்ற பெண்வண்டுகளோடு ஆண் வண்டுகளும் சேர்ந்து ஒலித்தலால் உண்டாகும் இனிய இசை மிக்கொலிக்கும். அவ்வொலி மிகுதியால்

நீ ஏறிவருகின்ற திண்மையான தேர் மணிகளின் ஓசையைப் பிறர் கேட்பது இயலாது. நீ அங்கு வருதற்குரிய வழியும் இதுவேயாகும். ஆகவே மறவாமல் நீ வருவாய்! என்று நுட்பமாகக் கூறுகிறாள் தோழி.

**ஓங்கித் தோன்றும், தீம் கள் பெண்ணை**

**.......... .................. ............ ......................**

**ஆயமும் யானும் அறியாது அவண**

**மாய நட்பின் மாண் நலம் ஒழிந்து**

**................. ................. ............. ...............**

**................. ............. சிறுகுடிப் பாக்கம்;**

**புலி வரிபு எக்கர்ப் புன்னை உதிர்த்த**

**மலி தாது ஊதும் தேனோடு ஒன்றி**

**வண்டு இமிர் இன் இசை கறங்க, திண் தேர்த்**

**தெரிமணி கேட்டலும் அரிதே;**

**வரும் ஆறு ஈது; அவண் மறவாதீமே**[52]

பரதவப் பெண்களின் மதிநுட்பத்திற்கு இப்பாடலே மிகச் சிறந்த எடுத்துக்காட்டு எனலாம்.

**பேச்சாற்றல்**

பரதவப் பெண்கள் பேசுவதிலும் தேர்ச்சி பெற்றிருந்துள்ளனர். சரியான முறையில் சரியான இடத்தில் சொற்களை பயன்படுத்தியுள்ளனர். கடுமையாகப் பேச வேண்டிய இடத்தில் கடுமையான சொற்களால் பேசித் தங்கள் குறைகளைப் பதிவு செய்துள்ளனர்.

சான்றாக நற்றிணைப் பாடலில், தலைவன் தலைவியுடன் மணம்புரியும் எண்ணமின்றிக் களவு வாழ்வில் ஒழுகினான். அவனது களவு வாழ்வைக் கண்டித்துத் தலைவியை மணம்புரிய வலியுறுத்தும் தோழியின் பேச்சாற்றல் பின்வருமாறு விளக்கப்படுகிறது.

தோழனே! நீ யாரை நட்பாகக் கொண்டனை? நீ எமக்கு யாராகும் உறவு கொண்டனை; நீ எமக்கு உறவின் முறையும் இல்லை நம்மிடையே பொருந்திய உறவினை நினைத்து ஆராய்ந்தால் அயலானே. எம்மை விரும்பி நீ

நடக்கவில்லை. ஆகவே நின்னால் யாம் இழந்த எம் நலனைத் தந்து பின் செல்க என்கிறாள்.

**யாரை, எலுவ? யாரே, நீ நமக்கு**

**யாரையும் அல்லை; நொதுமலாளனை**

**அனைத்தால் கொண்க, நம்மிடையே நினைப்பின்;**

------------- ------------------ ---------------------- -------------

---------- -------------- -------------- ----------------

**வேட்டனை அல்லையால் நலம் தந்து சென்மே**[53]

இப்பாடலில் தலைவனிடம் பேசும் தோழி, உறவே இல்லாத ஒருவரிடம் உரையாடுவது போலப் பேசி அவனின் குறையைச் சுட்டிக்காட்டி மணம் புரிய வலியுறுத்தியுள்ளாள்.

பரதவ மகளிரின் சொல் திறனை வெளிப்படுத்தும் மற்றொரு பாடலில், பரத்தை காரணமாகப் பிரிந்த தலைமகன், தன் மனை திரும்ப விரும்பி அதற்குத் தலைவியின் உடன்பாடு பெறப் பாணனைத் தூது அனுப்புகிறான். தூது வந்த பாணனிடம் தன் மனதில் தலைவன் மேல் உள்ள கோபத்தைக் கொட்டித் தீர்க்கிறாள் தலைவி.

பாணா! தலைவன் பொருட்டு நன்மொழிகளை மிகுதியாகப் பேசுகின்றனையாகலான் மெய்யாகவே நீ பெரிதும் நாணிலியாவாய்! நாணில்லாத தலைவனுக்கு நீ மிக நல்ல நண்பன் என்று புகழ்வது போல அவன் குறைகளை இடித்துரைத்தாள் தலைவி.

**நாண் இலை மன்ற, பாண! நீயே**

**--------------------------------------------------**

**கானல் அம் துறைவற்குச் சொல் உகுப்போயே!**[54]

**நிலம் சார்ந்த அறிவு**

வசிக்கக்கூடிய இடம் சார்ந்த பொதுவான அறிவு அனைவருக்கும் இருப்பதோடு தாங்கள் வசிக்கக் கூடிய நிலத்தின் சூழல் மற்றும் அங்கு வாழக்கூடிய உயிரினங்கள் பற்றிய தெளிவான அறிவும் அவர்களுக்கு இருக்கும். அவ்வகையில் பரதவப் பெண்கள் தாங்கள் வாழ்ந்த நிலத்தின் தன்மை மற்றும் உயிரினங்கள் பற்றிய தெளிவான அறிவுடன் இருந்துள்ளனர்.

நற்றிணைப் பாடலில், தாங்கள் வாழக்கூடிய நிலத்தின் தன்மையினைத் தோழி காட்சியாக விளக்குகிறாள்.அது பின்வருமாறு:

பகலில் மலர்ந்து நின்ற மலர்களை இரவில் கழிநீர் மூழ்கடிக்கும். அந்நீரில் தன் துணையோடு சுறாமீன்கள் இயங்கவும் செய்யும். பொங்குகின்ற பிசிரையும், முழவு இசைப்பது போன்ற ஒலியையும் கொண்ட அலை, எழுந்து உடைந்து விழுகின்ற கடற்கரையில் உள்ள நெய்தல் நிலத்தில் நாங்கள் வாழுகின்றோம் என்கிறாள்.

**கணைக் கால் மா மலர் கரப்ப, மல்கு கழித்**

**துணைச் சுறா வழங்கலும் வழங்கும்; ..........**

**...........................................................................................**

**............................................. பொங்கு பிசிர்**

**முழவு இசைப் புணரி எழுதரும்**

**உடை கடற் படப்பை எம் உறைவின் ஊர்க்கே?**[55]

இவ்வரிகளால், கடல் நீர் ஏறி இறங்கக் கூடிய தன்மையினையும், அந்நிலத்தில் வசிக்கக் கூடிய கொடிய சுறா மீன் பற்றியும், அலையின் விடாத ஓசையையும் விளக்குவதால் மகளிருக்கு இருந்த நிலம் பற்றிய அறிவு வெளிப்படுகிறது.

மற்றொரு பாடலில், கழியில் நீர் வருவதும் போதுவமாய்த் தடுமாறும் இயல்பு பற்றித் தலைவி கூறுகையில்,

**இருங்கழி ஓதம் போல் தடுமாறி**[56]

என்று அதன் தன்மையை விளக்குகிறாள். கடல் மற்றும் கழியின் தன்மை பற்றி அறிந்திருந்த நெய்தல் நிலப் பெண்கள் அங்கு வாழும் கொடிய சுறா மீனின் கொல்லும் இயல்பினையும் விதத்தையும் தெரிந்து வைத்திருந்தனர்.

சுறாமீனின் கொடுந்தன்மையைக் கூறும் தோழி, தன் இனமான மீன்களுள் தன்னை எதிர்த்த அனைத்தையும், மாறுபாடு கெடத் தாக்கி வென்ற சினத்தை உடையது எறிசுறா மீன் என்கிறாள்.

**இனமீன் இகல்மாற வென்ற சினமீன்**

**எறிசுறா ........... .......... ..............................**[57]

மேலும், ஆளை எறிய வல்ல சுறா மீனின் வலிமையையும், அது மாலை நேரத்தில் அவ்வழிப் போவாரை வழிமறிக்கும் துயரையும் கூறுகிறாள்.

**வயச்சுறா வழங்கு நீர் அத்தம்**[58]

**கொல் ஏற்றுச் சுறவினம் கடிகொண்ட மருள் மாலை**[59]

**உலகியல் அறிவு**

உலகில் நடைபெறும் பொதுவான நிகழ்வுகள் பற்றிய அறிவு பரதவப் பெண்களிடம் மிகுதியாக இருந்துள்ளது. எது அறம், எது அறமற்ற செயல் என்பதை நுட்பமாகப் பகுத்துணர்ந்து அம்மகளிர் அறிந்திருந்தனர். பழந்தமிழ் நெய்தல் பாடல்கள் வழி தோழியானவள் அறிவு முதிர்ச்சியுடன் தலைவனுக்கு உலகியல் அறங்களை எடுத்துக் கூறுவதன் மூலம் அம்மகளிரின் உலகியல் பற்றிய ஆழமான அறிவை அறியலாம்.

சான்றாகக் கலித்தொகையில் தோழியின் நுட்பமான அறிவை விளக்கும் பாடல் கருத்து வருமாறு: தோழி தலைவனிடம், வரைவு நீட ஆற்றாத தலைவியின் நிலையை உரைக்கையில்,

தலைவா! உணராதவர்கள் உலகத்துள் தாம் செய்யும் காரியங்களுள், தாமே உணர்ந்து செய்யலாகாதது இது என்று மீளவேண்டும்; தடுப்பவர் இன்றியே தீயது இது என ஒதுங்கவேண்டும்; அப்படி இன்றி, கண்டவர் யாரும் இல்லையே என்று தாம் நெஞ்சறியவே செய்த கொடிய தீயவினைகளைப் பிறர் அறியாமல் மறைத்தலும் செய்வர்; தாம் செய்தமையை அறிந்தவர் அவர்களுடைய நெஞ்சத்துக்கு என்றும் மறைக்க முடியாது; நெஞ்சத்தைக் காட்டிலும் அணுக்கமான சாட்சி வேறில்லை; இதை நான் கூற வேண்டிய தேவை இல்லை, அதனால் தலைவனே விரைவில் மணந்து கொள் என வலியுறுத்துகிறாள். உன் நெஞ்சிற்கும் தெரியும் நீ கொண்ட காதல். எனவே தலைவியைக் காக்கவைக்காமல் விரைவில் மணந்துகொள் என வலியுறுத்துகிறாள்.

**கண்டவர் இல் என, உலகத்துள் உணராதார்,**
**தங்காத தகைவு இன்றித் தாம் செய்யும் வினைகளுள்**
**நெஞ்சு அறிந்த கொடியவை மறைப்பினும், அறிபவர்**
**நெஞ்சத்துக் குறுகிய கரி இல்லை ஆகலின்,**
**வண் பரி நவின்ற வயமான் செல்வ!**
**நன்கு அதை அறியினும், நயன் இல்லா நாட்டத்தால்**
**'அன்பு இலை' என வந்து கழறுவல்; ஐய! கேள்;** [60]

மற்றொரு பாடலிலும், தலைவியைத் தலைவன் விரைவில் மணம்புரிய வலியுறுத்திப் போற்றத்தக்க உயர்வான அறங்களைத் தோழி எடுத்தியம்புகிறாள்.

தலைவனே! தனக்குக் கற்பித்த ஆசான், தன்னிடமிருந்து ஒன்றும் பெறாமல் மனம் வருந்திய காலை, தன்கைப் பொருளைப் பகுத்துக் கைமாறாகக் கொடுத்து உண்ணாதவன் செல்வம்; தான் கற்ற வித்தையைத் தவறான வழியில் பயன்படுத்துபவனுடைய செல்வம்; தனக்கு ஒரு வருத்தம் உற்ற இடத்து உதவினவர்கட்கு ஒரு வருத்தம் ஏற்பட்ட காலை உதவாதவனுடைய செல்வம் ஆகிய இவையெல்லாம் தாமாகவே தேய்ந்து அழியநிற்பன. அதுமட்டுமின்றி, அவனுடைய செய்நன்றிக் கேடு, உடம்பினை ஒழித்து உயிர்போன இடத்தும் அது நுகராமற் செல்லாது என்று உலகப் பொது அறத்தைச் சுட்டிக்காட்டி விரைவில் திருமணம் செய்துகொள் என எடுத்துரைத்தாள்.

**கற்பித்தான் நெஞ்சு அழுங்கப் பகர்ந்து உண்ணான் விச்சைக்கண்**

**தப்பித்தான் பொருளே போல், தமியவே தேயுமால்**

**ஒற்கத்துள் உதவியார்க்கு உதவாதான்; மற்று அவன்**

**எச்சத்துள் ஆயினும் அஃது எறியாது விடாதே காண்**[61]

இன்னும் ஒரு பாடலில், தோழியைப் போல தலைவியும் பொதுவான அறத்தை விளக்குகிறாள். பரத்தை மாட்டுப் பிரிந்து வந்த தலைமகன் கேட்கும் அண்மையனாக நிற்கத் தோழியிடம் தலைவி கூறுகிறாள்.

தோழி! நாம் இழந்த பெண்மை நலத்தை மீண்டும் பெறுவோம் என்று நீ கூறுகின்றாய், நீ கூறியவாறே பெறுவோம் ஆயினும், இரப்பவரை உற்ற வறுமைத் துன்பத்திற்கு அஞ்சி அவர்கள் விரும்பிக் கேட்ட பொருளைத் தந்து, பின்னர் அவர்களிடம் கொடுத்த அப்பொருள்களை மீண்டும் தருக என அவர்களிடம் சொல்வதைக் காட்டிலும், நம்முடைய இனிய உயிரை இழத்தல் இன்னாமையைத் தருவதாகுமோ? என்கிறாள்.

**தண்ணம் துறைவற் தொடுத்து, நம்நலம்**

**கொள்வாம் என்றி – தோழி! – கொள்வாம்;**

**இடுக்கண் அஞ்சி இரந்தோர் வேண்டிய**

**கொடுத்து 'அவைதா' எனக் கூறலின்**

**இன்னாதோ, நம் இன் உயிர் இழப்போ?**[62]

**குழு உணர்வு**

ஒரு கை தட்டினால் ஓசை வராது; கைகள் பல ஒன்று சேர்ந்து தட்டும் போது மிகப்பெரிய ஒலியாக உருவெடுக்கிறது. அதுபோல பலர் ஒன்று சேர்ந்து செயல்படும் குழு உணர்வு தமிழன் தோன்றிய காலத்திலேயே தோன்றியது எனலாம். சிறிய இன்பத்தைக் கூடப் பலரிடம் பகிர்ந்து கொள்ளும் போது அது பன்மடங்கு மகிழ்ச்சியளிக்கிறது. இதன் அடிப்படையிலேயே விளையாட்டுக்களும் பொழுதுபோக்குகளும் தோன்றியது எனலாம். குழுவாகச் சேர்ந்து விளையாட்டுக்களில் பணிகளில் ஈடுபடும் போது மகிழ்ச்சி பிறக்கிறது; இன்பம் ஊற்றெடுக்கிறது; பணிச் சுமை பாதியாகக் குறைக்கப்படுகிறது. இத்தகைய இன்பத்தை ஏற்படுத்தும் குழு உணர்வு பரதவப் பெண்களிடையே பெரும்பான்மையாகக் காணப்படுவதைச் சங்க நெய்தற் பாடல்கள் உணர்த்துகின்றன.

சான்றாக பரதவ மகளிர் விளையாட்டுக்களில் ஈடுபடும்போது குழுவாகவே ஈடுபட்டுள்ளனர். இக்கருத்தைப் புலப்படுத்தும் பாடல் சிலவற்றை அறியலாம்.

ஐங்குறுநூற்றுப் பாடலில், நீரால் நனைந்த நாரைகள், தம் அலகுகளால் தம் சிறகைக் கோதி உலர்த்துவது போலப் பெண்கள் குழுவாக நின்று தம் நீர் ஒழுகும் கூந்தலை உலர்த்தினர்.

**நாரை நல் இனம் கடுப்ப, மகளிர்**
**நீர் வரர் கூந்தல் உளரும் துறைவ![63]**

நாரைகள் திரளாக நின்று சிறகை உலர்த்தும். அதுபோல பரதவப் பெண்கள் கூட்டமாக நின்று கூந்தலை உலர்த்தினர் என்பதை இப்பாடல் வரிகள் உணர்த்துகின்றன.

மற்றொரு பாடலில், பரதவப் பெண்கள் மாலை போன்று தொடர்ந்து தோழியர் கூட்டத்தோடு ஒன்று சேர்ந்து கடலில் ஆடினர்; சிற்றில் புனைந்தனர்; சிறுசோறு ஆக்கிக் குவித்து விளையாடினர்; இங்ஙனம் ஆடி வருந்திய வருத்தம் திருமாறு இளைப்பாறியும் குழுவாக இணைந்து மகிழ்ந்துள்ளனர்.

**................... ................... ............. கானல்**
**தொடலை ஆயமொடு கடல் உடன் ஆடியும்**
**சிற்றில் இழைத்தும். சிறு சோறு குவைஇயும்**

**வருந்திய வருத்தம் தீர, யாம் சிறிது**

**இருந்தனமாக .......... ......... ................** [64]

இன்னும் ஒரு பாடலில், ஒள்ளிய நுதலினை உடைய நுளையர் பெண்கள் எல்லோரும் ஒருசேரக் குழுவாகக் கூடி விளையாடினர்.

**ஒன்னுதல் ஆயத்தார் ஓராங்குத் திளைப்பினும்**[65]

இவ்வாறு குழுவாக விளையாட்டுக்களில் ஈடுபட்ட பரதவப் பெண்கள், பூப்பறிக்கும் பணியில் ஈடுபடும் போதும் கூட்டமாகப் பறித்துள்ளனர்.

**ஓங்கல் வெண்மணல் தாழ்ந்த புன்னைத்**

**தாதுசேர் நிகர்மலர் கொய்யும்**

**ஆயம் எல்லாம் ......... ................. .................**[66]

மேலும், கோயில்களுக்கு வழிபாட்டுக்குச் செல்லக் கூடிய நுளையர் மகளிர் தங்கள் தோழியருடன் குழுவாகச் சென்று வணங்கி மகிழ்ந்துள்ளனர்.

(அகம். 240: 7–9)[67]

**நிலம் பற்றிய தாழ்வு**

கடற்கரையை ஒட்டி வாழும் நெய்தல் நில வாழ்க்கை துன்பம் நிறைந்தது ஆகும். கடற்கரையில் பரதவர் குடியிருப்புகள் அமைந்திருப்பதால் கடல் நீர் மனையின் உள்ளே வரக்கூடிய துன்பியல் நிறைந்தது. இரவு நேரத்தில் கடலின் முழக்கம் சீற்றத்துடன் காணப்படும். இவ்வேளையில்தான் பரதவர் கடல் வேட்டம் செல்வர். அமைதியான சூழலில் கடலின் முழக்கம் மற்றும் பறவைகளின் ஒலி, இவற்றிற்கு மேலாகத் தங்கள் ஆருயிர்க் கணவனைக் காதலனைப் பிரிந்த தனிமைத் துயர் பரதவப் பெண்களை தூக்கமின்றி மிகவும் துன்புறச் செய்துள்ளது. சூழல் அவர்களைத் துன்பத்தில் ஆழ்த்தியுள்ளது எனலாம்.

இத்தகைய துன்பம் நிறைந்த தங்கள் நில வாழ்க்கையைப் பரதவப் பெண்கள் தாழ்வாக எண்ணியுள்ளனர். அவர்களது தாழ்மையான உணர்வை வெளிப்படுத்தும் நெய்தல் பாடல்கள் சில:

தலைவனை இரவில் விருந்தினனாகத் தங்கச் சொல்லும் தோழி தமது ஊரைப் பற்றி விளக்குகையில்,

தலைவா! எமது ஊர் புல்லால் வேயப்பட்ட குடிசைகளையுடைய புலால் நாறும் சேரி ஆகும். காண்போர் இஃது ஊர் என்று நினைப்பதற்கு இல்லாச்

சிறுமையுடையது; நீரால் சூழப்பட்டுத் துன்பத்தைத் தரும் தங்கும் இடத்தினைக் கொண்டது என்கிறாள்.

**புலால் அம் சேரி புல்வேய் குரம்பை**

**ஊர்என உணராச் சிறுமையொடு, நீர் உடுத்து**

**இன்னா உறையுட்டு ஆயினும் ........................**[68]

மற்றொரு பாடலில், வரைவின் ஆற்றாத தலைமகள் வன்புறை எதிரழிந்து கூறுகையில், கடலானது மாலைப் பொழுதில் சீற்றத்துடன் அலை உடையதாய்க் காணப்படுகிறது. கரிய கழியின் நீர் வெள்ளம் நம் மனையெல்லையைக் கடந்து நிறைவனவாய் வருகின்றது. இத்தகைய துன்பமான மாலைப் பொழுதில் தலைவனின் பிரிவும் வருத்துகிறது என்கிறாள்.

**பெருங் கடல் முழங்க ............. .................**

**இருங்கழி ஓதம் இல் இறந்து மலிர**

**.................. ............... .............. .............**

**புலம்பொடு வந்த புண்கண் மாலை**[69]

இவ்வரிகளால், கடற்கரையையொட்டிக் குடிசையமைத்து வாழ்ந்த பரதவர் வீட்டினுள்ளே கடல் நீர் புகுந்து அவர்களைத் துன்பப்படுத்தியுள்ள நிலையை அறியலாம்.

மேலும், இயற்கையின் மிகப் பெரிய சக்தி கடல். கடலின் சீற்றம் தாங்க இயலாத துன்பம் நிறைந்தது. நோக்கிய திசையெல்லாம் கடல் நீரும், மணல் குன்றுகளும் நிறைந்த நீரால் சூழப்பட்ட வாழ்வு பரதவப் பெண்களுக்கு சலிப்பை ஏற்படுத்தியது. அதன் காரணமாகவே இத்தாழ்மையான உணர்வு ஏற்பட்டது என்பதை அறிய முடிகிறது.

**நிலம் பற்றிய உயர்வு**

நெய்தல் நிலப் பெண்களிடையே தங்கள் நிலம் பற்றிய தாழ்வான உணர்வு நிலவிய போதிலும், மழை இருந்தாலும் இல்லாவிட்டாலும் எதற்காகவும் வருந்தாத வருவாயை உடையது தாம் வாழும் நிலம் என்ற உயர்வான மன உணர்வும் இருந்துள்ளது.

எடுத்துக்காட்டாக நற்றிணைப் பாடலில் தோழி உரைக்கிறாள், நேரிய இடத்தையுடைய சிறிய உப்புப் பாத்திகளில் கடல்நீரை ஊற்றி மழையை எதிர்பாராது செய்யும் வேளாண்மையை உடையது எமது நிலம் என்கிறாள்.

**வானம் வேண்டா உழவின் எம்**

**கானல்அம் சிறு குடிச் சேந்தனை செலினே**[70]

மற்றொரு பாடலில் தோழி கூறுகிறாள், கடற்கரையை உடைய இவ்வூர் மழைபெய்யாமல் வறண்டு போனால் கழிநீரிடத்து முள்ளிச் செடியின் மலர்கள் உதிரப் பெற்று, பரந்து கிடந்த சேறெல்லாம் ஒரு சேரக் காய்ந்து கருமையான அந்தச் சேற்றிடமெங்கும் வெண்மையான உப்பு விளையும். இத்தகைய பெருமையுடையது நம்மூர் எனப் பெருமிதத்துடன் கூறுகிறாள்.

**.................. மாநீர் முண்டகம் தா அய்ச் சேறு புலர்ந்து**

**இருங் கழிச் செறுவின் வெள் உப்பு விளையும்**

**அழியா மரபின் நம் மூதூர் நன்றே**[71]

இப்பாடல்களின் வரிகளால், மற்ற நிலங்களின் வாழ்க்கை மழை இல்லையேல் வறண்டு வறுமை ஏற்படும். ஆனால் மழை இருந்தாலும் இல்லாவிட்டாலும் எதனையும் எதிர்பாராது நிரந்தரமான வருவாயை உடையது நெய்தல் நிலம் இதனை நிறைவாகவும் பெருமையாகவும் எண்ணினர் பரதவ மகளிர் என்பது அறியப்படுகிறது.

**தொகுப்புரை**

பரதவப் பெண்களைப் பற்றிய கட்டமைப்பு இருநிலைகளில் அறியத்தக்கது.

1. உரிப்பொருள் விளக்கத்தால் அறியலாகும் தலைவி, நற்றாய், தோழி போன்ற பாத்திரப் படைப்புகளின் உளவியல், படைப்பாளர்களாகிய புலவர்களின் உளவியலோடு இணைந்து உருவானது. நெய்தல் நில உரிப்பொருளுக்கேற்ப, இரங்களையும் இரங்கல் நிமித்தப் பாடுகளையும் புலவர்கள் நெஞ்சுருக நெக்குருக விவரித்துள்ளனர். அருகு தரையோடு தரையாக வீழ்ந்து கிடந்தாலும் நிலத்தில் ஆழ வேர் இறக்கித் தன் செழுமையையும் உயிர்ப்பையும் புல்லிதழில் காட்டிப் புன்னகைப்பதைப் போல் எளிய நெய்தல் நில வாழ்க்கை மேற்கொண்டாலும் செழுமையான எண்ணம் கொண்டவர்களாகப் புலவர்கள் பரதவப் பெண்களைப் படைத்துள்ளனர் இது முதல் கட்டமைப்பு.

2. உரிப்பொருளை விடுத்து, சமூக நிலையில் பரதவப் பெண்களின் வாழ்வியல் நிலைகளை அறியும் போது, அவர்கள் எளிய, கண்ணியம் குறையாத, சமூகக் கட்டமைப்புக்கு உட்பட்டு வாழ்வியலை மேற்கொள்பவர்களாக உணரமுடிகிறது. குடும்பம், குடும்ப உறவுகள், சமூகம், சமூக உறவுகள் என்னும் நிலைகளில் இசைந்த மனநிலை உடையவர்களாகத் தோற்றமளிக்கின்றனர். அன்பு, பரிவு, பாசம் உடையவர்களாக அவர்கள் ஆக்கப்பட்டிருக்கிறார்கள். சமூகக் கட்டுடைப்பு என்பதை எத்தகைய பெண் பாத்திரப் படைப்புகளின் வழியும் அறியமுடியவில்லை. இதற்குக் காரணம், கடுமையான பண்பாட்டுச் சீரழிவையோ , போர்ச்சீரழிவையோ அதிகம் கண்டிராத நெய்தல் நிலம், எளிய வாழ்வை மேற்கொண்டாலும் ஆர்பாட்டமில்லாத அமைதியான வாழ்க்கையை மேற்கொண்டதே ஆகும்.

## அடிக்குறிப்புகள்

1. கலித். 132:11.
2. ஐங். 23:3.
3. அகம். 270:10.
4. குறுந். 9:1.
5. ஐங். 145:3.
6. ஐங். 144:3.
7. ஐங். 146: 3.
8. ஐங். 134:3.
9. கலித். 139:28.
10. ஐங். 198:1.
11. நற். 267:3–4.
12. நற். 155:9.
13. அகம். 230:4.
14. கலித். 142:7–8.
15. ஐங். 191:2.
16. கலித். 122:12.
17. கலித். 131: 21.
18. கலித். 140: 33.
19. குறுந். 184:5.
20. ஐங். 196:1.
21. கலித். 144:12.
22. ஐங். 153:5.
23. அகம். 230: 5.

24. கலித். 140: 23.

25. சிறு. 13–14.

26. கலித். 150:18.

27. ஐங். 191:1.

28. கலித். 147: 36.

29. ஐங். 105: 3–4.

30. கலித். 140: 22.

31. அகம். 290: 14–16.

32. ஐங். 171:3.

33. கலித். 141:16.

34. அகம். 220:20.

35. ஐங். 185: 1–4.

36. நற். 101: 7–9.

37. அகம். 120: 6–9.

38. குறுந். 381: 1–3.

39. ஐங். 48: 1–4.

40. நற். 106: 3–9.

41. குறுந். 325: 1–6.

42. கலித். 122: 3–6.

43. நற். 382: 5–7.

44. குறுந். 118:3–5.

45. அகம். 150: 1–6.

46. ஐங். 186: 4–5.

47. நற். 130: 4–5.

48. ஐங். 168:4.

49. நற். 167: 5–7.

50. ஐங். 190: 3–4.

51. குறுந். 324: 1–7.

52. நற். 323: 1–11.

53. நற். 395: 1–10.

54. ஐங். 136:1–3.

55. நற். 67: 6–12.

56. கலித். 123:18.

57. கலித். 131: 6–7.

58. குறுந். 230: 5.

59. கலித். 123:9.

60. கலித். 125:1–7.

61. கலித். 149: 4–7.

62. குறுந். 349: 3–7.

63. ஐங். 186: 1–2.

64. அகம். 110: 5–9.

65. கலித். 142: 6.

66. குறுந். 311: 5–7.

67. அகம். 240: 7–9.

68. அகம். 200: 2–4.

69. நற். 117: 1–7.

70. நற். 254: 10–11.

71. நற். 311: 3–5.

## முடிவுரை

கடலும் கடல் சார்ந்த பகுதியும் நெய்தல் நிலமாகக் கருதப்படுகிறது. இந்நிலத்தில் மலிந்து கிடந்த நெய்தல் பூக்களால் நெய்தல் என்ற பெயர் நிலத்திற்கு ஏற்பட்டது என்பது தெளிவுபடுத்தப்பட்டுள்ளது.

இந்நிலம் கண்ணுக்கு எட்டிய தூரம் வரை நீலக் கடலும், கரைய அழித்துச் செல்லும் அலைகளும், மணல் மேடுகளும் உள்ள தோற்றத்தையுடையது என்பது அறியப்பட்டது.

நெய்தல் நிலத்தைச் சூழ்ந்து காணப்பட்ட மரம் செடி கொடிகளைப் பற்றிப் பார்க்கும் போது, புன்னை, ஞாழல், பெண்ணை,தில்லை, நாவல், வேம்பு, செருந்தி, குரவம், புன்கு போன்ற மரங்களும், அடும்பு, தாழை, ஈங்கை போன்ற கொடி வகைகளும், முண்டகம் என்ற செடியும் காணப்பட்டுள்ளது.

நீரால் சூழப்பட்ட நெய்தல் நிலத்தில் அன்னம், அன்றில், சிறுவெண் காக்கை, குருகு, நாரை, கொக்கு, ஆந்தை, வௌவால் போன்ற பறவைகளும்; சுறா, இறா, சிறுமீன்கள் போன்ற மீன் இனங்களும்; கரை வாழ் உயிரியான அலவன், கடல் ஆழத்தில் வசித்த முத்துச் சிப்பிகள், யாமை, இப்பிகள், அலைகளால் ஒதுக்கப்பட்ட சங்குகள், தாலி போன்றவையும், நீர்நாய், முதலை போன்ற விலங்குகளும் வசித்தன என்பதையும் அவற்றின் தோற்றம் மற்றும் உடல் அமைப்பும் விளக்கப்பட்டுள்ளது.

கடற்கரையை ஒட்டி நெய்தல் நிலக் குடியிருப்புகள் சிறுசிறு கும்பலாக அமைக்கப்பட்டன. இக்குடியிருப்புகள் சேரி என அழைக்கப்பட்டன. இக்குடியிருப்புகளின் ஊர்கள் சீறூர், சிற்றூர் எனவும் வழங்கப்பட்டுள்ளன. இந்நிலத்திலுள்ள நகரம் பாக்கம் எனவும் பட்டினம் எனவும் அழைக்கப்பட்டுள்ளது. குடிசை அமைப்பு காய்ந்த ஓலைகளாலும் புல்லாலும் வேயப்பட்டன.

நெய்தல் நில மக்கள் நுளையர், திமிலர், பரதவர் என அழைக்கப்பட்டனர். கடலையே ஆதாரமாகக் கொண்டு வாழ்ந்த பரதவமக்கள் மீன் பிடித்தலையே தலையாயத் தொழிலாகக் கொண்டிருந்தனர். கடலிலும் கழியிலும் மீன்பிடித்ததோடு உப்பும் விளைவித்து செழிப்பான வாழ்வு வாழ்ந்துள்ளனர் என்பன போன்ற செய்திகள் சுட்டிக்காட்டப்பட்டுள்ளன.

நெய்தல் திணை பாடிய புலவர்கள், அவர்கள் பாடியுள்ள பாடல்களின் எண்ணிக்கை தெளிவாக விளக்கப்பட்டுள்ளது. இப்பாடல்களில் தலைவி, தலைவன், தோழி, செவிலி, நற்றாய், பாங்கன், கண்டோர் ஆகிய கூற்றுக்கள் மற்றும் துறைகளின் எண்ணிக்கை தெளிவாகக் குறிப்பிடப்பட்டுள்ளன .

நெய்தல் திணைப்பாடல்களை ஆதாரமாக வைத்து ஆய்வு செய்த அறிஞர்களின் ஆய்வுகள் பற்றிய செய்தியும் தரப்பட்டுள்ளன.

பரதவ மகளிர் குடும்ப வாழ்வில் மிகுந்த பற்றுடையவராக விளங்கியுள்ளனர். குடும்ப வாழ்வில் அவர்களைப் பிணைத்தது திருமணமாகும். இத்திருமணம் களவு கற்பு நிலைகளில் நிகழ்ந்துள்ளது. பரதவப் பெண்களைக் களவு வாழ்வில் தலைவனுடன் இணைத்தது விளையாட்டுக்கள் ஆகும்.

பரதவக் குடும்பங்களில் பெண்களின் திருமணத்தில் ஆடவர் அப்பெண்களுக்கு விலையாக அருங்கலம் கொடுத்துத் திருமணம் புரிந்துள்ளனர்.

திருமணத்தின் மூலம் கணவனுடன் இணைந்த பரதவ மகளிர் கணவனே தங்கள்வாழ்வின் ஆதாரமாகப் பாவித்து வாழ்ந்துள்ளனர். அக்கணவனும் தம் மனைவி மீது அன்புடன் இருந்து குடும்பத்தைப் போற்றியுள்ளான் என்பன போன்ற செய்திகளை அறியமுடிகிறது.

கணவன் மீது பற்றுக் கொண்ட நுளையர் மகளிர், ஒழுக்கம் தவறி பரத்தையர் இல்லம் சென்ற கணவன் மீது பழைய அன்பில் பிழை ஏதும் ஏற்படாமல் அன்பு பாராட்டியுள்ளனர்.

தன் கணவன் பரத்தையர் இல்லத்தில் தங்கிய நிலையிலும் பரதவ மகளிர் குடும்பத்தை இனிது போற்றியுள்ளனர். பரத்தையர் இல்லம் சென்ற கணவன் நீண்ட நாட்கள் வராத நிலையில் தானே விட்டுக் கொடுத்துப் பாணனைத் தூது அனுப்பி கணவனுடன் இணைய முற்படும் மென்மையான குணம் பரதவ மகளிரிடம் இருந்துள்ளது. பரத்தையர் இல்லத்திலிருந்து திரும்பி வந்த கணவனைக் கடிந்தும், இன்பம் பொங்க ஏற்றுக்கொண்டும், பல பிறவிகளில் அவனுடனான நட்புத் தொடரவேண்டும் என்று எண்ணும் பல குணங்கள் நிறைந்த மகளிர் இருந்துள்ளனர்.

இல்லறச் சிறப்புக்களில் ஒன்றாகிய விருந்தோம்பலைச் சிறப்புடன் போற்றியுள்ளனர் பரதவ மகளிர். தங்கள் இல்லங்களில் விருந்தினர்க்காக உணவு தயார் செய்துவிட்டு அவர்களுக்காகக் காத்திருக்கும் பரந்த மனது அறியப்படுகிறது. குடும்பத்தை இனிது போற்றிய பரதவ மகளிரின் மகப்பேறு அவர்தம் கணவன் இல்லங்களிலேயே நடைபெற்றுள்ளது.

கணவன் மீதும் குடும்பத்தின் மீதும் பேரன்பு கொண்ட மீனவ மகளிர் இல்லப் பணிகள் பரந்துபட்டது. தம் குடும்பத்திற்குத் தேவையான நீர் எடுத்து வருதல், உணவு சமைத்தல், பரிமாறுதல், காய்கறி பயிரிடல், இல்லப்பராமரிப்பு என்பதோடு, மீன் உணக்கல் முக்கிய பணியாக இருந்துள்ளது என்பது விளக்கப்பட்டுள்ளது.

மீனவக் குடும்ப அமைப்பில் தனிக்குடும்பம், பெருங்குடும்பம், விரிந்த குடும்ப அமைப்புகள் இருந்துள்ளன. இவற்றில் தனிக்குடும்பமே மிகுதியாக இருந்துள்ளன. இத்தனிக்குடும்பத்தில் பெண்ணின் செயல்பாடுகளே மிகுதியாகப் பேசப்பட்டுள்ளன. தாய்–சேய் உறவு முறை, குடும்ப உறுப்பினர்களின் மீது குடும்பத் தலைவியின் பற்று, பாசம் என்பன போன்ற செய்திகள் அறியப்படுகின்றன.

நெய்தல் நிலச் சமூகத்தில் பெண்கள் விளையாட்டுப் பருவம் நீங்காத இளமைப் பருவத்திலேயே காதல் வாழ்வில் ஒழுகியுள்ளனர்.

புறம்பேசுதல் என்ற கொடிய பண்பானது நெய்தல் நிலப் பெண்கள் மத்தியில் நிலவியுள்ளது. இப்பெண்களின் பேச்சில் நெய்தல் நில இளமகளிரின் களவு வாழ்வே கருவாக இருந்துள்ளது.

காதலுக்கு இடையூறு ஏற்படும் நிலையில் உடன்போக்கு மேற்கொள்ளும் துணிச்சலான முடிவைப் பரதவப் பெண்கள் எடுத்துள்ள திறம் அறியப்பட்டுள்ளது.

பரதவ சமூகத்தில் திருமண நிகழ்வானது மடலேறியும், அருங்கலம் கொடுத்தும், தலைவியின் தந்தைக்குப் பணிவிடை செய்தும், வேறு நில ஆடவர்களுடனும் நடந்துள்ளன.

பரத்தமையொழுக்கம் ஆண்களிடம் தவறான செயலாகக் கருதப்படவில்லை. பரத்தையை நாடிச் சென்ற கணவனுடன் பரதவப் பெண்கள் சிறிது ஊடினாலும்,

அக்கணவன் மீது பேரன்பும் பாசமும் கொண்டு ஒழுகிய மென்மையான பண்பு அறியப்பட்டது.

மகளிர் தொழில்கள் என்று பார்க்கும்போது மீன் விற்றும், உப்பு விற்றும் தம் கணவர்க்கு உதவியாக வருவாய் ஈட்டித் தந்தும் தம் குடும்பத்தைச் சீர்தூக்கியுள்ளனர்.

பரதவப் பெண்கள் தொழில் சார்ந்து வேற்று நிலங்களுக்குச் செல்லும்போது அந்நில உயிர்களாலும்,ஆடவர்களாலும்,சூழல்களாலும் பலவித இடர்பாடுகளை அடைந்துள்ளனர் என்பதை அறிய முடிகிறது.

கடலை வாழ்க்கையின் ஆதாரமாகக் கொண்ட பரதவக் குடும்பங்களில் வாழ்ந்த பெண்கள் பலவற்றில் நம்பிக்கை கொண்டிருந்தனர். கடல் மற்றும் கழியில் தெய்வம் உறைவதாகவும், மரத்திலும் அத்தெய்வம் உறைவதாகவும் நம்பினர். பேய், அணங்கு போன்றவற்றிலும் நம்பிக்கை கொண்டிருந்தனர். ஞாயிற்றைத் தெய்வமாக வணங்கியதோடு சிவன் மற்றும் திருமால் போன்ற தெய்வங்களின் மீது கொண்டிருந்த அவர்களின் நம்பிக்கை குறிப்பிடப்பட்டுத் தெளிவுபடுத்தப்பட்டுள்ளது.

தெய்வ நம்பிக்கையோடு ஊழ், பிறவி, நல்வினை, தீவினையில் பரதவப் பெண்கள் மிகுந்த நம்பிக்கை கொண்டிருந்தனர். ஆறு கடலில் கலக்கும் இடத்தில் நீராடினால் தீவினை அகலும் என நம்பி நீராடியுள்ளனர். தும்முதல் புரையேறுதல், கனவு ஆகியவற்றிலும் அம்மக்கள் கொண்டிருந்த நம்பிக்கை தெளிவாக உணர்த்தப்பட்டுள்ளது.

பழக்க வழக்கங்களைப் பொருத்தவரை, பரதவப் பெண்கள் மாலையில் விளக்கேற்றுதல், ஆடிப்பாடுதல் போன்றவற்றை வழக்கமாகக் கொண்டிருந்ததுடன்; வழிபாடு, விழாக்களைச் சிறப்பாகக் கொண்டாடுதல், காக்கைக்குப் பலியிடல் போன்ற பழக்கவழக்கங்களையும் கடைபிடித்துள்ளனர் என்பன போன்ற செய்திகள் ஆராயப்பட்டுள்ளன.

நெய்தல் நிலப் பெண்கள் பைஞ்சாய் எனப்படும் ஒரு வகைக் கோரையால் பாவை செய்து ஓரைப்பாவை ஆடியுள்ளனர். இவ்வாட்டத்தைத் தோழியருடனும், சில நேரங்களில் தலைவனுடனும் ஆடியுள்ளனர்.

வண்டல் பாவை விளையாட்டை மகளிர் களிமண் மற்றும் மணலால் செய்து விளையாடியுள்ளனர். அப்பாவையை ஒப்பனை செய்து பார்த்த மகளிர் பாசமுடன் அதனைத் தாய்மை உணர்வோடு மகளாகப் பாவித்தும் உள்ளனர். இவ்விளையாட்டை மகளிர் பலர் சேர்ந்து ஆடியுள்ளனர் போன்ற செய்திகள் அறியப்பட்டுள்ளன.

பரதவ மகளிர் மாலை நேரங்களில் கடற்கரையில் நண்டைப் பிடித்து விளையாடியுள்ளனர். இவ்விளையாட்டில் ஈடுபட்ட மகளிர் நண்டையும் வருத்தி, தானும் களைத்துச் சோர்வுற்றனர் என்ற செய்திகள் நெய்தல் பாடல்கள் வழி உணரப்பட்டது .

கடற்கரைச் சோலையில் உள்ள மரங்களில் தாழை நாரால் கயிராகக் கட்டிச் சுறாவின் மருப்பைப் பலகையாக்கிப் பரதவ மகளிர் ஊஞ்சல் ஆடியுள்ளனர். ஒருவர் ஆட்ட மற்றொருவர் ஆடினர். இவ்வாறு ஆட்டும்போது பாடலும் பாடியுள்ளனர்.

கடற்கரையில் தலைவி தன் தோழியருடன் பொழுதுபோக்கியதுடன், கடற்கரையில் மலிந்து காணப்படும் மணல் மேடுகளிலும் ஏறி விளையாடியுள்ளாள் என்ற செய்திகள் புலப்படுத்தப்பட்டுள்ளன .

பரதவப் பெண்கள் கடற்கரை மேட்டில் அமர்ந்து கொண்டு கரை திரும்பும் படகுகளை எண்ணியுள்ளனர். இவற்றோடு நில்லாமல் கரை திரும்பும் அலையில் கால் நனைத்தும், கடலில் இறங்கி அச்சமின்றி அலையில் பாய்ந்து நீராடியும் உள்ளனர். பல்வேறு விளையாட்டுக்களில் ஆடித் திளைத்த மகளிர் இறுதியாகத் தம் தோழியர் கூட்டத்துடன் குரவையும் ஆடியுள்ளனர்.

மகளிர் ஆடிய இவ்விளையாட்டுக்கள் அனைத்திலும் தலைவன் கலந்துகொண்டு விளையாடியுள்ளான் போன்ற செய்திகள் ஆராயப்பட்டுள்ளன.

நெய்தல் நில மகளிர் தழையாடையை அணிந்துள்ளனர். அத்தழையாடைக்குத் தேவையான இளந்தளிர்களைத் தங்கள் நிலத்தில் பெற்றுள்ளனர். அவ்வாறு பறிக்கப்பட்ட தழைகளை காலையில் சென்று பறித்துள்ளனர் என்பதும் அறியப்படுகிறது.

மலர்களைப் பறித்துத் தழையுடன் சேர்த்துத் தொடுத்து தழையாடையாக அணிந்துள்ளனர். ஞாழல் மற்றும் நெய்தல் தழைகளைப் பரதவப் பெண்கள்

விரும்பி அணிந்தனர். விழாக் காலங்களில் சிறப்புடன் விளங்க நெய்தல் மலர்களைப் பறித்துத் தழையுடன் தொடுத்து அணிந்துள்ளனர்.

இத்தழையாடையை அணிந்த இளமகளிர் தங்கள் உடலில் அல்குலினைச் சுற்றி அணிந்துள்ளனர். பரதவப் பெண்கள் மார்பில் அணியக்கூடிய ஆடையாக வம்பு விளங்கியது என்பன போன்ற செய்திகள் அறியப்பட்டுள்ளன.

பரதவ மகளிர் அழகுக்கு அழகுசேர்க்க அணிகலன்களை அணிந்துள்ளனர். மேனியில் நுண்ணிய வேலைப்பாடு மிக்க அழகிய அணிகளை அணிந்துள்ளனர். அவை இழை என்றே வழங்கப்பட்டுள்ளன.

பரதவ மகளிர் காதில் அணிந்த அணி குழை என அழைக்கப்பட்டது. இம்மகளிர் காலில் அணியக்கூடிய அணியாகச் சிலம்பு விளங்கியுள்ளது. அதுவும் ஒலிக்கும் தன்மையில் அவர்களால் அணியப்பட்டது என்ற செய்திகள் பெறப்பட்டுள்ளன.

நெய்தற் பாடல்கள் வழி மீனவப் பெண்கள் வளையல்களை விரும்பி அணிந்துள்ளனர். அவை செறிவாகவும், சிலவாகவும், ஒளிமிக்கதாவும், சங்கினை அறுத்துச் செய்ததாயும் விளங்கியுள்ளது. இம்மகளிர் தோளில் அணிந்த அணிகலன்கள் வளை, தொடி, இழை என அழைக்கப்பட்டுள்ளது என்பன போன்ற செய்திகள் ஆராயப்பட்டுள்ளன.

மீனவப் பெண்கள் வாழ்வில் ஒப்பனை சிறப்பிடம் பெற்றிருந்தது. தங்கள் நிலத்தில் கிடைத்த நெய்தல், அடும்பு, மற்றும் தும்பை மலர்களைப் பயன்படுத்தி மாலைகளாகத் தொடுத்துக் கழுத்தில் அணிந்துள்ளனர்.

பரதவ மகளிர் மார்பில் தொய்யில் மற்றும் கரும்பு எழுதி மகிழ்ந்துள்ளனர். இத்தொய்யில் கரும்பைத் தலைவனும் தலைவிக்கு வரைந்துள்ளான். பரதவ மகளிரின் கண்கள் எப்போதும் மைதீட்டப் பெற்ற சிறப்பைப் பெற்றிருந்தன. உண்கண் என்ற சொற்றொடர் இதன் சிறப்பை உணர்த்துவதாக உள்ளது.

பரதவ மகளிர் கூந்தலைப் பின்னியும், மலரணிந்தும் மணமூட்டியும் பேணியுள்ளனர். தங்கள் கூந்தலில் அடும்பு, புன்னை, கழிமுள்ளி, இன்னபிற மலர்களையும் அணிந்து அழகுபடுத்தியுள்ளனர். கூந்தலில் நெய் பூசியும் மணமூட்டியும் தங்களை ஒப்பனை செய்துள்ளனர் பரதவப் பெண்கள் போன்ற செய்திகள் அறியப்பட்டன.

நெய்தல் அகப்பொருட் பாடல்கள் விழுமிய காதலை மையமாகக் கொண்டு பாடப்பட்டுள்ளன. இப்பாடல்களில் காதலானது ஒரு நாடகக் காட்சி போல இடம்பெற்றுள்ளது.

ஐந்திணைகளில் ஒன்றாகிய நெய்தலுக்கான உரிப்பொருள் இரங்கல், இரங்கலை வைத்ததற்கான காரணம் ஆழமான முறையில் விளக்கப்பட்டுள்ளது. களவு இடையீடுபட்டும், வரைவிடை வைத்தும், பரத்தை காரணமாகவும் தலைவன் பிரிவான். அவனது பிரிவில் காத்திருக்கும் தலைவியின் உள்ளத்தவிப்பு ஒப்பற்ற சங்கப் புலவர்களின் எண்ணங்களில் சுட்டிக்காட்டப்பட்டுள்ளது.

தலைவனைப் பிரிந்து ஆற்றியிருந்த தலைவிக்கு மாலைப்பொழுது புன்கண் மாலையாக, மருள் மாலையாக, பையுள் மாலையாக இருந்தது. இம்மாலைப் பொழுதில் தலைவி எவ்வாறு ஆற்றியிருந்தாள் என்பதைக் கவிஞர்களின் பாடல் வரிகளில் விளக்கமாக எடுத்துக்காட்டப்பட்டுள்ளன.

தலைவனைப் பிரிந்து துயருற்ற நெய்தல் தலைவி தனது பிரிவின் துயரை இயற்கைச் சக்திகளோடு ஒப்பிட்டுப் பேசினாள். அவை மரம், கடல், காற்று, ஞாயிறு, திங்கள் ஆகும். இச்சக்திகளுடன் பேசியதோடு அல்லாமல் பறவைகளுடனும் பேசினாள். அன்றில், நாரை, வண்டு ஆகியவற்றோடும் உணர்த்த இயலாப் பிரிவை உரையாடுவதன் மூலம் ஆற்றுவிப்பதாகப் பாடல் செய்துள்ள புலவர்களின் பாடல் வரிகள் எடுத்து ஆராயப்பட்டுள்ளன.

பிரிவினால் வருத்தமுற்றிருந்த தலைவி தான் துன்புற்றிருக்கும் வேளையில் ஊரும் துன்புற்றிருக்கவேண்டுமென நினைக்கிறாள். அவளது எண்ணத்திற்கு மாறாக இருந்த ஊரோடும் உலகோடும் பகை கொண்ட விதம் சுட்டிக்காட்டப்பட்டுள்ளன.

பேரன்பு கொண்ட தலைவனின் பிரிவு தலைவியை இரவில் உறங்கவிடாது தவிப்படையச் செய்துள்ளது. தலைவியின் உள்ளத் தவிப்பும் உறங்கா இரவுகளும் நாவலனின் எண்ணங்களில் அறியப்பட்டுள்ளன.

உறக்கமில்லாது தலைவனின் நினைவால் தவித்த தலைவியின் முகத்திலும் உடம்பிலும் படர்ந்திருந்த பசலை பற்றிக் கவிஞர்களின் கற்பனை கண்டறியப்பட்டுள்ளன.

தலைவனின் நினைவால் எந்நேரமும் தவித்த தலைவியின் நிலையைக் கண்டோர் பலவாறு பழித்துக் கூற, தலைவி அழுது அரற்றினாள். தலைவியின் தாழாத அழுகை கவிஞர்களின் எண்ணங்களில் எடுத்துக்காட்டப்பட்டுள்ளன.

தலைவனுடன் உடல் ஒன்றிய நட்பில் பிரிவு ஏற்பட, பிரிவைத் தாங்கவியலாத் தலைவி மீதூர்ந்த காமத்தால் பிதற்றினாள். பிரிவு எனும் தீயில் அல்லலுற்ற தலைவியின் வெளிப்படுத்த இயலாக் காமஉணர்வை நெய்தல் புலவர்களின் சொல் எனும் ஓவியத்தில் நாகரிகமான முறையில் வெளிப்படுத்தியுள்ள திறம் அறியப்பட்டுள்ளன.

தலைவனைப் பிரிந்து பலவாறு துன்புற்றிருந்த தலைவி தன்மேல் கவனம் செலுத்தாமலும் ஒப்பனை செய்யாமலும் அவனுக்காகக் காத்திருந்தாள். மேற்கூறிய அனைத்தும் நெய்தல் திணையைக் கவினுறப் பாடிய புலவர் பெருமக்களின் பாடல்களில் எடுத்தாளப்பட்டு விளக்கமாக ஆராயப்பட்டுள்ளன.

பரதவ மகளிர் உடலின் நிறம் மாநிறமாகவும் கருப்பாகவும் கொண்டிருந்தனர்; அவர்களின் பற்கள் வெண்மையாகவும், முள்போன்று கூர்மையாகவும் இருந்தது; கூந்தல் கருமையாகவும் அடர்த்தியாகவும் முதுகுவரை தாழ்ந்து விளங்கியுள்ளது. அக்கூந்தலைப் பின்னலிட்டும் நெய்பூசியும் பேணியுள்ளனர். பரதவப் பெண்களின் கண்கள் பூப்போலவும், தோள்கள் பருத்தும், பொலிவான தோற்றத்துடன் விளங்கியுள்ளனர்.

மனநிலையைப் பொறுத்தவரை பரதவப் பெண்கள் சிறிய துன்பம் ஏற்பட்டால் கூடத் தாங்கவியலாது உடல் மெலிந்து ஏக்கங் கொண்டு அழுதுள்ளனர். இப்பெண்கள் முடிவெடுப்பதில் சில நேரங்களில் தடுமாற்றத்துடன் இருந்துள்ளனர். பிறர் நலம் பேணக்கூடிய தாயுள்ளமும், தன்னைச் சார்ந்தவர்களின் நலனில் அக்கறை கொண்டதோடு, முன்பின் அறியாதவர்களிடமும் பரிவு கொண்டு அவர்களின் பசி போக்கி இளைப்பாற்றும் தயாள குணமும் பரதவப் பெண்களிடம் இருந்துள்ளது என்பது உணர்த்தப்பட்டுள்ளது.

குழந்தை வளர்ப்பதில் பரதவ மகளிர் ஆண் குழந்தைகளைவிடப் பெண் குழந்தைகள் மேல் பாசத்தோடும் அன்போடும் இருந்ததோடு, அவர்கள் வளர்ச்சியில் கண்காணிப்புடனும் அச்ச உணர்வுடனும் வளர்த்துள்ளனர். இஃது அவர்களின் தாயன்பைக் காட்டுகிறது.

கணவன் மீது பாசத்துடனும் பேரன்புடனும் இருந்த பரதவப் பெண்கள், பொருள் தேடிக் கணவன் பிரிவதை விரும்பாமல் உடன் உறைவதையே விரும்பியுள்ளனர். அக்கணவன் நோயுற்ற காலத்தில் அவனுடன் உடன் இருந்து பணிவிடை செய்துள்ளனர்.

பரதவ மகளிர் தாம் விரும்பிய ஆணையே திருமணம் செய்து கொள்ளவேண்டும் என்ற கருத்தில் உறுதியுடன் இருந்ததோடு, அவ்வெண்ணம் ஈடேற உண்ணாமலும், உறங்காமலும் தான் கொண்ட எண்ணத்தில் உறுதியொடு இருந்துள்ளனர்.

தனக்கு நன்மை ஏற்பட வேண்டுமெனில் யாரைப் பற்றியும் அஞ்சாமல் துணிச்சலுடன் முடிவு எடுக்கக்கூடிய திறன் பரதவ மகளிரிடம் இருந்துள்ளது என்பதையும் அறியமுடிகிறது.

ஒரு செயலால் ஏற்படும் விளைவுகளை நுட்பமான முறையில் ஆராய்ந்த பரதவப் பெண்கள் மதிநுட்பத்துடன் செயல்பட்டுள்ளனர். அவர்களின் பேச்சாற்றலும் அறியப்பட்டுள்ளது.

பரதவப் பெண்கள் தாங்கள் வசித்த நிலத்தைப்பற்றிய முழுமையான அறிதலுடன் இருந்துள்ளனர். உலகியல் பற்றிய பொதுவான அறிவும் பெற்றிருந்துள்ளனர்.

நுளையர் மகளிர் விளையாடும் இடங்களிலும், பணிகள் செய்யும் போதும், வழிபாட்டிலும் குழுவாகச் செயல்பட்டுள்ளனர் என்பதும் அறியமுடிகின்றது.

பரதவப் பெண்களிடம் துன்பம் நிறைந்த நீரால் சூழப்பட்ட கடலோர வாழ்க்கை பற்றிய தாழ்வான உணர்வு இருந்துள்ளது. அதேபோல மழையை எதிர்பாராது உழாமலே உப்பு விளைவிக்கக்கூடிய சிறப்புடைய உயர்வான வாழ்க்கை நெய்தல் நில வாழ்க்கை என்ற நிலம் பற்றிய உயர்வான உணர்வும், எண்ணமும் இருந்தது போன்ற செய்திகள் ஆராயப்பட்டன.

**மேனிலை ஆய்வுக்காக**

சங்க கால நெய்தல் மகளிர் குறித்த இவ்வாய்வின் அடுத்த நிலையில், இவ்வாய்வில் குறிக்கப்பட்ட செய்திகளை மையமாகக் கொண்டும், தரவுகளாகக் கொண்டும் நெய்தல் நில மக்களை இன வரைவியல் பார்வையில் ஆராயலாம்.

## முதன்மை நூல்கள்


சங்க இலக்கியம் (18 நூல்கள்) — சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, பதிப்பு – 2007.

” — நியூ செஞ்சுரி புக்ஹவுஸ், சென்னை, பதிப்பு – 2004.


## துணை நூற்பட்டியல்


அழகம்மை, கேபி., — சமூக நோக்கில் சங்க மகளிர், மணிவாசகர் பதிப்பகம்,சென்னை, பதிப்பு– 2001.

அழகு கிருஷ்ணன், பொ., — சிலப்பதிகாரம் காட்டும் பண்பாடும் சமுதாய வரலாறும், ஐந்திணைப் பதிப்பகம், சென்னை, முதல் பதிப்பு – அக். 1988.

அனந்தராமையர், இ.வை., — நெய்தல் கலி ஆராய்ச்சிக் குறிப்புரை, நோபில் அச்சுக் கூடம், பதிப்பு –1931.

ஆறுமுகம், அ., — சங்க இலக்கியத்தில் குடும்பம் , உடைமை , அரசு,பாவேந்தர் பதிப்பகம், திருச்சி. பதிப்பு –நவ 1994

இராகவையங்கர், மு., — விலங்கு போர் விளையாட்டு, ஆராய்ச்சித் தொகுதி, சென்னை. இரண்டாம் பதிப்பு – 1964.

இராசமாணிக்கனார், மா., — பத்துப்பாட்டாராய்ச்சி, சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை – 1970.

இராசரெத்தினம்,கு., — சங்க இலக்கியத்தில் பொது மக்கள், நாம் தமிழர் பதிப்பகம்,சென்னை, பதிப்பு – 2004.

இராசாராம், சு., — சங்க இலக்கியத்தில் நடைமுறை வாழ்க்கை,காரைக்குடி. பதிப்பு – 2007.

இராமகிருட்டிணன், அ., அகத்திணை மாந்தர் ஓர் ஆய்வு, சரவணாபதிப்பகம், மதுரை,முதல் பதிப்ப – 1982.

இராமநாதன், ஆறு., நாட்டுப்புறப் பாடல்கள் காட்டும் தமிழர் வாழ்வியல், மணிவாசகர் நூலகம், சிதம்பரம் – 608001.

இலக்குவனார், சி., வள்ளுவர் கண்ட இல்லறம் அல்லது காதல் வாழ்க்கை, வைரம் பதிப்பகம், சென்னை, பதிப்பு – 1971.

கலியாண சுந்தரனார், திரு. வி., உள்ளொளி, அரசி புக் டிப்போ,சென்னை, பதிப்பு –ஜனவரி 1969.

கனகசபை, வி.,
அப்பாதுரை, கா. (மொ. பெ) ஆயிரத்து எண்ணூறு ஆண்டுகட்கு முற்பட்ட தமிழகம், சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,சென்னை, பதிப்பு – 1956.

காந்தி, க., தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும்,உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், தரமணி, சென்னை. பதிப்பு – 1980.

கோபால கிருஷ்ணன், ம.சு., மானிடவியல், தமிழ் வெளியீட்டுக் கழகம், முதல் பதிப்பு – 1963.

சசிவல்லி, வி. சி., பண்டைத் தமிழர் தொழில்கள், உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, பதிப்பு – நவம்பர் 1989.

மேற்படி தமிழர் திருமணம், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, பதிப்பு –2003.

சடகோபராமாநுஜாசாரியார்.வை.மு., நாலடியார் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, பதிப்பு – 1980.

சண்முகம் பிள்ளை, மு., சங்கத் தமிழர் வாழ்வியல், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், தரமணி, பதிப்பு – 1977.

மேற்படி சங்கத் தமிழரின் வழிபாடும் சடங்குகளும், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, பதிப்பு – 2003.

சாம்பசிவன், ச., தமிழ் இலக்கியத்தில் நெய்தல் திணை, மீனாட்சி புத்தக நிலையம், மதுரை, பதிப்பு – 1964.

சாமி, பி. எல்., சங்க இலக்கியத்தில் செடி கொடி விளக்கம், கழக வெளியீடு, பதிப்பு – 1970.

சாமிநாத சர்மா, வெ., பிளாட்டோவின் அரசியல் (அ) நீதியைப் பற்றி ஆராய்ச்சி, பிரபஞ்ச ஜோதி பிரசுராலயம், சென்னை, பதிப்பு – 1948.

சுப்பிரமணியன், அ. வெ., சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, பதிப்பு – 1989.

சுப்பிரமணியன், பெ ., பழந்தமிழ் நூல்களில் ஊழ், குருவருள் பதிப்பகம், தஞ்சாவூர், முதல் பதிப்பு –செப்டம்பர் 1999.

நமசிவாயம்,சே., தமிழர் உணவு , உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, பதிப்பு – 2003.

பகவதி , கு., மணப்பொருட்கள் சிலப்பதிகாரத்தில், மெய்ப்பன்பதிப்பகம்,சிதம்பரம், முதல் பதிப்பு –நவம்பர் 2005.

மேற்படி தமிழர் ஆடைகள், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,சென்னை, பதிப்பு – 2003.

மேற்படி தமிழர் பண்பாட்டு ஒப்பனையியல் சொற்கோவை, உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், பதிப்பு – 2009.

பாக்கியமேரி., வகைமை நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு, நியூ செஞ்சுரி புக் ஹெவுஸ் (பி) லிட், சென்னை,பதிப்பு – 2008.

பாஸ்கல் கிஸ்பர்ட் நாராயணன்., ஜெ.(தமிழாக்கம்) சமூகவியலின் அடிப்படைக் கோட்பாடுகள், தமிழ் வெளியீட்டுக் கழகம், முதல் பதிப்பு – 1964.

பிள்ளை,கே.கே., தமிழக வரலாறு மக்களும் பண்பாடும், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,சென்னை, பதிப்பு – 2008.

பின்னத்தூர் நாராயணசாமி ஐயர்., ஓரை – மகளிராடும் விளையாட்டு, கழக வெளியீடு,சென்னை, மூன்றாம் பதிப்பு – 1962.

பொன்னுசாமி,மு., சங்க இலக்கியத்தில் மெய்ப்பாட்டு இயக்கம், இந்து பதிப்பகம்,கோயம்புத்தூர், பதிப்பு – 1998.

வரதராசன், மு., ஓவச்செய்தி, பாரி நிலையம்,சென்னை, முதல் பதிப்பு – 1946.

மேற்படி பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, பாரி நிலையம்,சென்னை,முதல் பதிப்பு – 1964.

வளவன், சா., நாட்டுப்புறவியல் கட்டுரைகள், மைதிலி பதிப்பகம்,சென்னை, முதற் பதிப்பு – 1985.

செயராமன், நா., நெய்தல் பாடல்கள்,குமரன் பதிப்பகம், மதுரை,பதிப்பு – 1978.

சேதுப்பிள்ளை, ரா.பி., தமிழகம் ஊரும் பேரும், பாரி நிலையம், சென்னை,முதல் பதிப்பு – 2010.

மணிமேகலை, இரா., சங்கத் தமிழ்க் காதல், வெளியிடுவோர் சிந்து தென்றல், காரைக்கால், முதல் பதிப்பு –டிசம்பர் 2006.

மாணிக்கம், வ.சுப., தமிழ்க் காதல், சௌத் இந்தியா பிரஸ், காரைக்குடி, முதல் பதிப்பு – 1962.

மார்க் எங்கெல்ஸ், வி. இ. லெனின்., மார்க்ஸிம்.ந. (மொ.பெ)., குடும்பம் தனிச்சொத்து அரசு கண்ணன், ஆகியவற்றின் தோற்றம், முன்னேற்றப் பதிப்பகம், மாஸ்கோ, பதிப்பு – 1976.

முத்து கண்ணப்பன், தி., கடற்கரைக் காதலர், கங்கைபுத்தக நிலையம், சென்னை, முதல் பதிப்பு – 1977.

மேற்படி சங்க இலக்கியத்தில் நெய்தல் நிலம், அதிபத்தர் பதிப்பகம், சென்னை, முதல் பதிப்பு – ஆகஸ்டு 1978.

முத்துக் கிருஷ்ணன்,செ.அ., தமிழர்விழாக்களும் பொழுதுபோக்குகளும், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, பதிப்பு – நவம்பர் 1988.

முருகானந்தம்,ச., தலையணி, சித்ரா நிலையம், சென்னை, பதிப்பு – 2000.

## இலக்கண நூல்கள்

இளம்பூரனார் உரை தொல்காப்பியம் (பொருள்), வ.உ. சிதம்பரம் பிள்ளை பதிப்பு, பதிப்பு – 1919.

இராமசுப்பிரமணியன்,வ.த., தொல்காப்பியம் (பொருளதிகாரம்), பூம்புகார் பதிப்பகம், சென்னை, முதல் பதிப்பு –மார்ச் 2008.

சண்முகம் பிள்ளை, மு., தொல்காப்பியம் பொருளதிகாரம், முல்லைநிலையம், சென்னை, முதல் பதிப்பு – டிசம்பர் 1995.

சுந்தரமூர்த்தி,கு., தொல்காப்பியம் சொல்லதிகாரம், திருப்பனந்தாள்,பதிப்பு – 1970.
சேனாவரையர் உரை.

நச்சினார்க்கினியர் உரை. தொல்காப்பியம் பொருளதிகாரம், பவானந்தம் பிள்ளை பதிப்பு, பதிப்பு – 1916.

## ஆய்வேடுகள்

கல்யாணி, வி., சங்க இலக்கியத்தில் தலைவி, சென்னைப் பல்கலைக் கழகம், சென்னை, மே – 1986.

புனிதப் பொற்கொடி, நா., சங்ககாலச் சமுதாயத்தில் நம்பிக்கைகளும் சடங்குகளும், சென்னைப் பல்கலைக் கழகம், சென்னை, டிசம்பர் – 1987.

ரேகா பானு, ந., சங்க இலக்கியத்தில் விருந்தோம்பல், திரு கொளஞ்சியப்பர் அரசு கலைக் கல்லூரி,விருத்தாசலம்,அக்டோபர் – 1994.

ரேணுகா,ச., சங்க இலக்கியம் காட்டும் மனித உறவுகள், சென்னைப் பல்கலைக் கழகம், சென்னை – 2001.

## அகராதிகள்

கதிரைவேற்பிள்ளை,நா., தமிழ் – தமிழ் அகராதி, ஏஷியன் எஜீகேஷனல் சர்வீஸஸ், புதுதில்லி,சென்னை ஆறாம் பதிப்பு – 1990.

கழகத் தமிழ் அகராதி, சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை – 1969.

சிங்காரவேல் முதலியார்., அபிதான சிந்தாமணி, ஏஷியன் எஜீகேஷனல் சர்வீஸஸ், புதுதில்லி, பதிப்பு – 1983

தமிழ்ப் பேரகராதி, சென்னைப் பல்கலைக்கழகம், தொகுதி – 1 (பகுதி– ), பதிப்பு – 1956.

தமிழ் லெக்சிகன், தொகுதி – 1, சென்னைப் பல்கலைக் கழகம், பதிப்பு – 1982.


## இதழ்கள்


சாமி, பி.எல்., சங்க நூல்களில் பஞ்சாய், செந்தமிழ்ச் செல்வி, அப்பர் அச்சகம், சென்னை – 1983.

சுப்பிரமணியம் பிள்ளை, கே., பண்டைய விளையாட்டுக்கள், மதுரை தமிழ்ச் சங்க பொன்விழா மலர், மதுரை – 1956.


## கட்டுரைகள்


கண்ணகி கலைவேந்தன், (பதிப்பாசிரியர்) ., தமிழ் இலக்கியத்தில் மருத்துவம், தமிழய்யா வெளியீட்டகம், திருவையாறு, முதல் பதிப்பு – ஜீன் 2005.

குருமூர்த்தி, இராம., சங்க இலக்கிய சிந்தனைகள் (தொகுதி–2), மெய்ப்பன் பதிப்பகம், சிதம்பரம், முதல் பதிப்பு – டிசம்பர் 2009.

சந்திரசேகரன்,இரா., சங்க இலக்கிய பன்முகநோக்கு, மகாகவி பாரதியார் நூலகம், பதிப்பு – ஜீன் 2001 .

சந்திரசேகரன்,இரா., (பதிப்பாசிரியர்) சங்க இலக்கியம் இலக்கிய வளமும் வாழ்வியல் அறமும் , பாரதியார் பல்கலைக் கழகம், கோயம்புத்தூர், முதல் பதிப்பு – டிசம்பர் 2002.

சந்திரசேகரன்,கா.பெ., சங்கத் தமிழ் இன்பம், சேகர் பதிப்பகம், சென்னை, பதிப்பு – 2006.

சுகுமார், இரா., (பதிப்பாசிரியர்). சங்க இலக்கிய பதிவும் பார்வையும், அருமா பதிப்பகம், கொரடாச்சேரி, பதிப்பு – 2008.

தமிழ்ப் பேராசிரியர்கள் தமிழ் ஆராய்ச்சி வரலாறு (முதல் தொகுதி) , பச்சையப்பன் ஆய்வரங்கம், சென்னை,வெளியீடு – டிசம்பர் 1998.

முருகையன், மு ., (பதிப்பாசிரியர்). சங்க இலக்கிய ஆய்வுகள், சென்னை, பதிப்பு – 2000.

ஜானகி, த., செம்மொழித் தமிழில் மகளிர் மாட்சி, அன்னை தெரசா மகளிர் பல்கலைக் கழகம், கொடைக்கானல், முதல் பதிப்பு – 2007.

ஜெகதிசன்,இரா., ஐங்குறுநூறு ஆய்வுக் கோவை (முதல் தொகுதி), சங்க இலக்கிய ஆய்வு மையம், மதுரை, பதிப்பு – 2008.


## ஆங்கில நூல்கள்


Adinarayan, S.P., The human mind, Hutchinsons university library, London. reprint - 1956.

Gurray.p., The appreciation of poetry, Oxford University press, print - 1968.

Medard Bosc — The analysis of dreams, (Translatedby arnold), pomerans rider -company, London -1957.

Merietta kettunen., — Fundamentals of dress, MC- Grew - Hill book company, INC New york and London - 1941.

Subramaniam. N., — Sangam polity, Asia publishing house, Newyork – 1966

Walfred Anderson — Society its organization and operation van nostrand company , Canada – 1966

William kepbart .M — The family society and individual (second editiion) Houghton miffin company Boston Newyork Geneva,3 Paloalto

Will Durant — The story of civilization (part 1 ) (our oriental heritage ) simon and Schuster, Newyork, 1964.

### ஆங்கில அகராதி


Borrow T & Emeneae.M.B Dravidian Etymological Dictionary
Oxford -1961


### கலைக் களஞ்சியம்


தமிழ் கலைக் களஞ்சியம்
தொகுதி நான்கு
தமிழ் வளர்ச்சிக் கழகம்
சென்னை – 1957.

கலைக் களஞ்சியம்
தொகுதி ஆறு
தமிழ் வளர்ச்சிக் கழகம்
சென்னை – 1959.

கலைக் களஞ்சியம்
தொகுதி எட்டு
சென்னை தமிழ் வளர்ச்சிக் கழக வெளியீடு
முதல் பதிப்பு – 1961.


### வாழ்வியற் களஞ்சியம்


வாழ்வியற் களஞ்சியம் , ( தொகுதி – இரண்டு )
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தமிழ்ப் பல்கலைக் கழக வெளியீடு
முதல் பதிப்பு – 1986.

# சங்க இலக்கியத்தில் நெய்தல் நில மகளிர்

முனைவர் (பிஎச்.டி.) பட்டப்பேற்றிற்காகச்
சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு
அளிக்கப்பட்ட ஆய்வேடு

ஆய்வாளர்
சா. வனிதா எம்.ஏ.,எம்.ஃபில்.,

மேற்பார்வையாளர்
முனைவர் கு. மங்கையர்க்கரசி
எம்.ஏ.,பி.எட்.,எம்.ஃபில்.,பிஎச்.டி.
இணைப்பேராசிரியர்
தமிழ்த்துறை
எத்திராஜ் மகளிர் கல்லூரி(தன்னாட்சி)
சென்னை – 600 008



தமிழ்த்துறை
எத்திராஜ் மகளிர் கல்லூரி(தன்னாட்சி)
சென்னை – 600 008

ஏப்ரல் – 2013

## முடிவுரை

கடலும் கடல் சார்ந்த பகுதியும் நெய்தல் நிலமாகக் கருதப்படுகிறது. இந்நிலத்தில் மலிந்து கிடந்த நெய்தல் பூக்களால் நெய்தல் என்ற பெயர் நிலத்திற்கு ஏற்பட்டது என்பது தெளிவுபடுத்தப்பட்டுள்ளது.

இந்நிலம் கண்ணுக்கு எட்டிய தூரம் வரை நீலக் கடலும், கரைய அழித்துச் செல்லும் அலைகளும், மணல் மேடுகளும் உள்ள தோற்றத்தையுடையது என்பது அறியப்பட்டது.

நெய்தல் நிலத்தைச் சூழ்ந்து காணப்பட்ட மரம் செடி கொடிகளைப் பற்றிப் பார்க்கும் போது, புன்னை, ஞாழல், பெண்ணை,தில்லை, நாவல், வேம்பு, செருந்தி, குரவம், புன்கு போன்ற மரங்களும், அடும்பு, தாழை, ஈங்கை போன்ற கொடி வகைகளும், முண்டகம் என்ற செடியும் காணப்பட்டுள்ளது.

நீரால் சூழப்பட்ட நெய்தல் நிலத்தில் அன்னம், அன்றில், சிறுவெண் காக்கை, குருகு, நாரை, கொக்கு, ஆந்தை, வெளவால் போன்ற பறவைகளும்; சுறா, இறா, சிறுமீன்கள் போன்ற மீன் இனங்களும்; கரை வாழ் உயிரியான அலவன், கடல் ஆழத்தில் வசித்த முத்துச் சிப்பிகள், யாமை, இப்பிகள், அலைகளால் ஒதுக்கப்பட்ட சங்குகள், தாலி போன்றவையும், நீர்நாய், முதலை போன்ற விலங்குகளும் வசித்தன என்பதையும் அவற்றின் தோற்றம் மற்றும் உடல் அமைப்பும் விளக்கப்பட்டுள்ளது.

கடற்கரையை ஒட்டி நெய்தல் நிலக் குடியிருப்புகள் சிறுசிறு கும்பலாக அமைக்கப்பட்டன. இக்குடியிருப்புகள் சேரி என அழைக்கப்பட்டன. இக்குடியிருப்புகளின் ஊர்கள் சீறூர், சிற்றூர் எனவும் வழங்கப்பட்டுள்ளன. இந்நிலத்திலுள்ள நகரம் பாக்கம் எனவும் பட்டினம் எனவும் அழைக்கப்பட்டுள்ளது. குடிசை அமைப்பு காய்ந்த ஓலைகளாலும் புல்லாலும் வேயப்பட்டன.

நெய்தல் நில மக்கள் நுளையர், திமிலர், பரதவர் என அழைக்கப்பட்டனர். கடலையே ஆதாரமாகக் கொண்டு வாழ்ந்த பரதவமக்கள் மீன் பிடித்தலையே தலையாயத் தொழிலாகக் கொண்டிருந்தனர். கடலிலும் கழியிலும் மீன்பிடித்ததோடு உப்பும் விளைவித்து செழிப்பான வாழ்வு வாழ்ந்துள்ளனர் என்பன போன்ற செய்திகள் சுட்டிக்காட்டப்பட்டுள்ளன.

நெய்தல் திணை பாடிய புலவர்கள், அவர்கள் பாடியுள்ள பாடல்களின் எண்ணிக்கை தெளிவாக விளக்கப்பட்டுள்ளது. இப்பாடல்களில் தலைவி, தலைவன், தோழி, செவிலி, நற்றாய், பாங்கன், கண்டோர் ஆகிய கூற்றுக்கள் மற்றும் துறைகளின் எண்ணிக்கை தெளிவாகக் குறிப்பிடப்பட்டுள்ளன .

நெய்தல் திணைப்பாடல்களை ஆதாரமாக வைத்து ஆய்வு செய்த அறிஞர்களின் ஆய்வுகள் பற்றிய செய்தியும் தரப்பட்டுள்ளன.

பரதவ மகளிர் குடும்ப வாழ்வில் மிகுந்த பற்றுடையவராக விளங்கியுள்ளனர். குடும்ப வாழ்வில் அவர்களைப் பிணைத்தது திருமணமாகும். இத்திருமணம் களவு கற்பு நிலைகளில் நிகழ்ந்துள்ளது. பரதவப் பெண்களைக் களவு வாழ்வில் தலைவனுடன் இணைத்தது விளையாட்டுக்கள் ஆகும்.

பரதவக் குடும்பங்களில் பெண்களின் திருமணத்தில் ஆடவர் அப்பெண்களுக்கு விலையாக அருங்கலம் கொடுத்துத் திருமணம் புரிந்துள்ளனர்.

திருமணத்தின் மூலம் கணவனுடன் இணைந்த பரதவ மகளிர் கணவனே தங்கள்வாழ்வின் ஆதாரமாகப் பாவித்து வாழ்ந்துள்ளனர். அக்கணவனும் தம் மனைவி மீது அன்புடன் இருந்து குடும்பத்தைப் போற்றியுள்ளான் என்பன போன்ற செய்திகளை அறியமுடிகிறது.

கணவன் மீது பற்றுக் கொண்ட நுளையர் மகளிர், ஒழுக்கம் தவறி பரத்தையர் இல்லம் சென்ற கணவன் மீது பழைய அன்பில் பிழை ஏதும் ஏற்படாமல் அன்பு பாராட்டியுள்ளனர்.

தன் கணவன் பரத்தையர் இல்லத்தில் தங்கிய நிலையிலும் பரதவ மகளிர் குடும்பத்தை இனிது போற்றியுள்ளனர். பரத்தையர் இல்லம் சென்ற கணவன் நீண்ட நாட்கள் வராத நிலையில் தானே விட்டுக் கொடுத்துப் பாணனைத் தூது அனுப்பி கணவனுடன் இணைய முற்படும் மென்மையான குணம் பரதவ மகளிரிடம் இருந்துள்ளது. பரத்தையர் இல்லத்திலிருந்து திரும்பி வந்த கணவனைக் கடிந்தும், இன்பம் பொங்க ஏற்றுக்கொண்டும், பல பிறவிகளில் அவனுடனான நட்புத் தொடரவேண்டும் என்று எண்ணும் பல குணங்கள் நிறைந்த மகளிர் இருந்துள்ளனர்.

இல்லறச் சிறப்புக்களில் ஒன்றாகிய விருந்தோம்பலைச் சிறப்புடன் போற்றியுள்ளனர் பரதவ மகளிர். தங்கள் இல்லங்களில் விருந்தினர்க்காக உணவு தயார் செய்துவிட்டு அவர்களுக்காகக் காத்திருக்கும் பரந்த மனது அறியப்படுகிறது. குடும்பத்தை இனிது போற்றிய பரதவ மகளிரின் மகப்பேறு அவர்தம் கணவன் இல்லங்களிலேயே நடைபெற்றுள்ளது.

கணவன் மீதும் குடும்பத்தின் மீதும் பேரன்பு கொண்ட மீனவ மகளிர் இல்லப் பணிகள் பரந்துபட்டது. தம் குடும்பத்திற்குத் தேவையான நீர் எடுத்து வருதல், உணவு சமைத்தல், பரிமாறுதல், காய்கறி பயிரிடல், இல்லப்பராமரிப்பு என்பதோடு, மீன் உணக்கல் முக்கிய பணியாக இருந்துள்ளது என்பது விளக்கப்பட்டுள்ளது.

மீனவக் குடும்ப அமைப்பில் தனிக்குடும்பம், பெருங்குடும்பம், விரிந்த குடும்ப அமைப்புகள் இருந்துள்ளன. இவற்றில் தனிக்குடும்பமே மிகுதியாக இருந்துள்ளன. இத்தனிக்குடும்பத்தில் பெண்ணின் செயல்பாடுகளே மிகுதியாகப் பேசப்பட்டுள்ளன. தாய்–சேய் உறவு முறை, குடும்ப உறுப்பினர்களின் மீது குடும்பத் தலைவியின் பற்று, பாசம் என்பன போன்ற செய்திகள் அறியப்படுகின்றன.

நெய்தல் நிலச் சமூகத்தில் பெண்கள் விளையாட்டுப் பருவம் நீங்காத இளமைப் பருவத்திலேயே காதல் வாழ்வில் ஒழுகியுள்ளனர்.

புறம்பேசுதல் என்ற கொடிய பண்பானது நெய்தல் நிலப் பெண்கள் மத்தியில் நிலவியுள்ளது. இப்பெண்களின் பேச்சில் நெய்தல் நில இளமகளிரின் களவு வாழ்வே கருவாக இருந்துள்ளது.

காதலுக்கு இடையூறு ஏற்படும் நிலையில் உடன்போக்கு மேற்கொள்ளும் துணிச்சலான முடிவைப் பரதவப் பெண்கள் எடுத்துள்ள திறம் அறியப்பட்டுள்ளது.

பரதவ சமூகத்தில் திருமண நிகழ்வானது மடலேறியும், அருங்கலம் கொடுத்தும், தலைவியின் தந்தைக்குப் பணிவிடை செய்தும், வேறு நில ஆடவர்களுடனும் நடந்துள்ளன.

பரத்தமையொழுக்கம் ஆண்களிடம் தவறான செயலாகக் கருதப்படவில்லை. பரத்தையை நாடிச் சென்ற கணவனுடன் பரதவப் பெண்கள் சிறிது ஊடினாலும்,

அக்கணவன் மீது பேரன்பும் பாசமும் கொண்டு ஒழுகிய மென்மையான பண்பு அறியப்பட்டது.

மகளிர் தொழில்கள் என்று பார்க்கும்போது மீன் விற்றும், உப்பு விற்றும் தம் கணவர்க்கு உதவியாக வருவாய் ஈட்டித் தந்தும் தம் குடும்பத்தைச் சீர்தூக்கியுள்ளனர்.

பரதவப் பெண்கள் தொழில் சார்ந்து வேற்று நிலங்களுக்குச் செல்லும்போது அந்நில உயிர்களாலும்,ஆடவர்களாலும்,சூழல்களாலும் பலவித இடர்பாடுகளை அடைந்துள்ளனர் என்பதை அறிய முடிகிறது.

கடலை வாழ்க்கையின் ஆதாரமாகக் கொண்ட பரதவக் குடும்பங்களில் வாழ்ந்த பெண்கள் பலவற்றில் நம்பிக்கை கொண்டிருந்தனர். கடல் மற்றும் கழியில் தெய்வம் உறைவதாகவும், மரத்திலும் அத்தெய்வம் உறைவதாகவும் நம்பினர். பேய், அணங்கு போன்றவற்றிலும் நம்பிக்கை கொண்டிருந்தனர். ஞாயிற்றைத் தெய்வமாக வணங்கியதோடு சிவன் மற்றும் திருமால் போன்ற தெய்வங்களின் மீது கொண்டிருந்த அவர்களின் நம்பிக்கை குறிப்பிடப்பட்டுத் தெளிவுபடுத்தப்பட்டுள்ளது.

தெய்வ நம்பிக்கையோடு ஊழ், பிறவி, நல்வினை, தீவினையில் பரதவப் பெண்கள் மிகுந்த நம்பிக்கை கொண்டிருந்தனர். ஆறு கடலில் கலக்கும் இடத்தில் நீராடினால் தீவினை அகலும் என நம்பி நீராடியுள்ளனர். தும்முதல் புரையேறுதல், கனவு ஆகியவற்றிலும் அம்மக்கள் கொண்டிருந்த நம்பிக்கை தெளிவாக உணர்த்தப்பட்டுள்ளது.

பழக்க வழக்கங்களைப் பொருத்தவரை, பரதவப் பெண்கள் மாலையில் விளக்கேற்றுதல், ஆடிப்பாடுதல் போன்றவற்றை வழக்கமாகக் கொண்டிருந்ததுடன்; வழிபாடு, விழாக்களைச் சிறப்பாகக் கொண்டாடுதல், காக்கைக்குப் பலியிடல் போன்ற பழக்கவழக்கங்களையும் கடைபிடித்துள்ளனர் என்பன போன்ற செய்திகள் ஆராயப்பட்டுள்ளன.

நெய்தல் நிலப் பெண்கள் பைஞ்சாய் எனப்படும் ஒரு வகைக் கோரையால் பாவை செய்து ஓரைப்பாவை ஆடியுள்ளனர். இவ்வாட்டத்தைத் தோழியருடனும், சில நேரங்களில் தலைவனுடனும் ஆடியுள்ளனர்.

வண்டல் பாவை விளையாட்டை மகளிர் களிமண் மற்றும் மணலால் செய்து விளையாடியுள்ளனர். அப்பாவையை ஒப்பனை செய்து பார்த்த மகளிர் பாசமுடன் அதனைத் தாய்மை உணர்வோடு மகளாகப் பாவித்தும் உள்ளனர். இவ்விளையாட்டை மகளிர் பலர் சேர்ந்து ஆடியுள்ளனர் போன்ற செய்திகள் அறியப்பட்டுள்ளன.

பரதவ மகளிர் மாலை நேரங்களில் கடற்கரையில் நண்டைப் பிடித்து விளையாடியுள்ளனர். இவ்விளையாட்டில் ஈடுபட்ட மகளிர் நண்டையும் வருத்தி, தானும் களைத்துச் சோர்வுற்றனர் என்ற செய்திகள் நெய்தல் பாடல்கள் வழி உணரப்பட்டது .

கடற்கரைச் சோலையில் உள்ள மரங்களில் தாழை நாரால் கயிராகக் கட்டிச் சுறாவின் மருப்பைப் பலகையாக்கிப் பரதவ மகளிர் ஊஞ்சல் ஆடியுள்ளனர். ஒருவர் ஆட்ட மற்றொருவர் ஆடினர். இவ்வாறு ஆட்டும்போது பாடலும் பாடியுள்ளனர்.

கடற்கரையில் தலைவி தன் தோழியருடன் பொழுதுபோக்கியதுடன், கடற்கரையில் மலிந்து காணப்படும் மணல் மேடுகளிலும் ஏறி விளையாடியுள்ளாள் என்ற செய்திகள் புலப்படுத்தப்பட்டுள்ளன .

பரதவப் பெண்கள் கடற்கரை மேட்டில் அமர்ந்து கொண்டு கரை திரும்பும் படகுகளை எண்ணியுள்ளனர். இவற்றோடு நில்லாமல் கரை திரும்பும் அலையில் கால் நனைத்தும், கடலில் இறங்கி அச்சமின்றி அலையில் பாய்ந்து நீராடியும் உள்ளனர். பல்வேறு விளையாட்டுக்களில் ஆடித் திளைத்த மகளிர் இறுதியாகத் தம் தோழியர் கூட்டத்துடன் குரவையும் ஆடியுள்ளனர்.

மகளிர் ஆடிய இவ்விளையாட்டுக்கள் அனைத்திலும் தலைவன் கலந்துகொண்டு விளையாடியுள்ளான் போன்ற செய்திகள் ஆராயப்பட்டுள்ளன.

நெய்தல் நில மகளிர் தழையாடையை அணிந்துள்ளனர். அத்தழையாடைக்குத் தேவையான இளந்தளிர்களைத் தங்கள் நிலத்தில் பெற்றுள்ளனர். அவ்வாறு பறிக்கப்பட்ட தழைகளை காலையில் சென்று பறித்துள்ளனர் என்பதும் அறியப்படுகிறது.

மலர்களைப் பறித்துத் தழையுடன் சேர்த்துத் தொடுத்து தழையாடையாக அணிந்துள்ளனர். ஞாழல் மற்றும் நெய்தல் தழைகளைப் பரதவப் பெண்கள்

விரும்பி அணிந்தனர். விழாக் காலங்களில் சிறப்புடன் விளங்க நெய்தல் மலர்களைப் பறித்துத் தழையுடன் தொடுத்து அணிந்துள்ளனர்.

இத்தழையாடையை அணிந்த இளமகளிர் தங்கள் உடலில் அல்குலினைச் சுற்றி அணிந்துள்ளனர். பரதவப் பெண்கள் மார்பில் அணியக்கூடிய ஆடையாக வம்பு விளங்கியது என்பன போன்ற செய்திகள் அறியப்பட்டுள்ளன.

பரதவ மகளிர் அழகுக்கு அழகுசேர்க்க அணிகலன்களை அணிந்துள்ளனர். மேனியில் நுண்ணிய வேலைப்பாடு மிக்க அழகிய அணிகளை அணிந்துள்ளனர். அவை இழை என்றே வழங்கப்பட்டுள்ளன.

பரதவ மகளிர் காதில் அணிந்த அணி குழை என அழைக்கப்பட்டது. இம்மகளிர் காலில் அணியக்கூடிய அணியாகச் சிலம்பு விளங்கியுள்ளது. அதுவும் ஒலிக்கும் தன்மையில் அவர்களால் அணியப்பட்டது என்ற செய்திகள் பெறப்பட்டுள்ளன.

நெய்தற் பாடல்கள் வழி மீனவப் பெண்கள் வளையல்களை விரும்பி அணிந்துள்ளனர். அவை செறிவாகவும், சிலவாகவும், ஒளிமிக்கதாவும், சங்கினை அறுத்துச் செய்ததாயும் விளங்கியுள்ளது. இம்மகளிர் தோளில் அணிந்த அணிகலன்கள் வளை, தொடி, இழை என அழைக்கப்பட்டுள்ளது என்பன போன்ற செய்திகள் ஆராயப்பட்டுள்ளன.

மீனவப் பெண்கள் வாழ்வில் ஒப்பனை சிறப்பிடம் பெற்றிருந்தது. தங்கள் நிலத்தில் கிடைத்த நெய்தல், அடும்பு, மற்றும் தும்பை மலர்களைப் பயன்படுத்தி மாலைகளாகத் தொடுத்துக் கழுத்தில் அணிந்துள்ளனர்.

பரதவ மகளிர் மார்பில் தொய்யில் மற்றும் கரும்பு எழுதி மகிழ்ந்துள்ளனர். இத்தொய்யில் கரும்பைத் தலைவனும் தலைவிக்கு வரைந்துள்ளான். பரதவ மகளிரின் கண்கள் எப்போதும் மைதீட்டப் பெற்ற சிறப்பைப் பெற்றிருந்தன. உண்கண் என்ற சொற்றொடர் இதன் சிறப்பை உணர்த்துவதாக உள்ளது.

பரதவ மகளிர் கூந்தலைப் பின்னியும், மலரணிந்தும் மணமூட்டியும் பேணியுள்ளனர். தங்கள் கூந்தலில் அடும்பு, புன்னை, கழிமுள்ளி, இன்னபிற மலர்களையும் அணிந்து அழகுபடுத்தியுள்ளனர். கூந்தலில் நெய் பூசியும் மணமூட்டியும் தங்களை ஒப்பனை செய்துள்ளனர் பரதவப் பெண்கள் போன்ற செய்திகள் அறியப்பட்டன.

நெய்தல் அகப்பொருட் பாடல்கள் விழுமிய காதலை மையமாகக் கொண்டு பாடப்பட்டுள்ளன. இப்பாடல்களில் காதலானது ஒரு நாடகக் காட்சி போல இடம்பெற்றுள்ளது.

ஐந்திணைகளில் ஒன்றாகிய நெய்தலுக்கான உரிப்பொருள் இரங்கல், இரங்கலை வைத்ததற்கான காரணம் ஆழமான முறையில் விளக்கப்பட்டுள்ளது. களவு இடையீடுபட்டும், வரைவிடை வைத்தும், பரத்தை காரணமாகவும் தலைவன் பிரிவான். அவனது பிரிவில் காத்திருக்கும் தலைவியின் உள்ளத்தவிப்பு ஒப்பற்ற சங்கப் புலவர்களின் எண்ணங்களில் சுட்டிக்காட்டப்பட்டுள்ளது.

தலைவனைப் பிரிந்து ஆற்றியிருந்த தலைவிக்கு மாலைப்பொழுது புன்கண் மாலையாக, மருள் மாலையாக, பையுள் மாலையாக இருந்தது. இம்மாலைப் பொழுதில் தலைவி எவ்வாறு ஆற்றியிருந்தாள் என்பதைக் கவிஞர்களின் பாடல் வரிகளில் விளக்கமாக எடுத்துக்காட்டப்பட்டுள்ளன.

தலைவனைப் பிரிந்து துயருற்ற நெய்தல் தலைவி தனது பிரிவின் துயரை இயற்கைச் சக்திகளோடு ஒப்பிட்டுப் பேசினாள். அவை மரம், கடல், காற்று, ஞாயிறு, திங்கள் ஆகும். இச்சக்திகளுடன் பேசியதோடு அல்லாமல் பறவைகளுடனும் பேசினாள். அன்றில், நாரை, வண்டு ஆகியவற்றோடும் உணர்த்த இயலாப் பிரிவை உரையாடுவதன் மூலம் ஆற்றுவிப்பதாகப் பாடல் செய்துள்ள புலவர்களின் பாடல் வரிகள் எடுத்து ஆராயப்பட்டுள்ளன.

பிரிவினால் வருத்தமுற்றிருந்த தலைவி தான் துன்புற்றிருக்கும் வேளையில் ஊரும் துன்புற்றிருக்கவேண்டுமென நினைக்கிறாள். அவளது எண்ணத்திற்கு மாறாக இருந்த ஊரோடும் உலகோடும் பகை கொண்ட விதம் சுட்டிக்காட்டப்பட்டுள்ளன.

பேரன்பு கொண்ட தலைவனின் பிரிவு தலைவியை இரவில் உறங்கவிடாது தவிப்படையச் செய்துள்ளது. தலைவியின் உள்ளத் தவிப்பும் உறங்கா இரவுகளும் நாவலனின் எண்ணங்களில் அறியப்பட்டுள்ளன.

உறக்கமில்லாது தலைவனின் நினைவால் தவித்த தலைவியின் முகத்திலும் உடம்பிலும் படர்ந்திருந்த பசலை பற்றிக் கவிஞர்களின் கற்பனை கண்டறியப்பட்டுள்ளன.

தலைவனின் நினைவால் எந்நேரமும் தவித்த தலைவியின் நிலையைக் கண்டோர் பலவாறு பழித்துக் கூற, தலைவி அழுது அரற்றினாள். தலைவியின் தாழாத அழுகை கவிஞர்களின் எண்ணங்களில் எடுத்துக்காட்டப்பட்டுள்ளன.

தலைவனுடன் உடல் ஒன்றிய நட்பில் பிரிவு ஏற்பட, பிரிவைத் தாங்கவியலாத் தலைவி மீதூர்ந்த காமத்தால் பிதற்றினாள். பிரிவு எனும் தீயில் அல்லலுற்ற தலைவியின் வெளிப்படுத்த இயலாக் காமஉணர்வை நெய்தல் புலவர்களின் சொல் எனும் ஓவியத்தில் நாகரிகமான முறையில் வெளிப்படுத்தியுள்ள திறம் அறியப்பட்டுள்ளன.

தலைவனைப் பிரிந்து பலவாறு துன்புற்றிருந்த தலைவி தன்மேல் கவனம் செலுத்தாமலும் ஒப்பனை செய்யாமலும் அவனுக்காகக் காத்திருந்தாள். மேற்கூறிய அனைத்தும் நெய்தல் திணையைக் கவினுறப் பாடிய புலவர் பெருமக்களின் பாடல்களில் எடுத்தாளப்பட்டு விளக்கமாக ஆராயப்பட்டுள்ளன.

பரதவ மகளிர் உடலின் நிறம் மாநிறமாகவும் கருப்பாகவும் கொண்டிருந்தனர்; அவர்களின் பற்கள் வெண்மையாகவும், முள்போன்று கூர்மையாகவும் இருந்தது; கூந்தல் கருமையாகவும் அடர்த்தியாகவும் முதுகுவரை தாழ்ந்து விளங்கியுள்ளது. அக்கூந்தலைப் பின்னலிட்டும் நெய்பூசியும் பேணியுள்ளனர். பரதவப் பெண்களின் கண்கள் பூப்போலவும், தோள்கள் பருத்தும், பொலிவான தோற்றத்துடன் விளங்கியுள்ளனர்.

மனநிலையைப் பொறுத்தவரை பரதவப் பெண்கள் சிறிய துன்பம் ஏற்பட்டால் கூடத் தாங்கவியலாது உடல் மெலிந்து ஏக்கங் கொண்டு அழுதுள்ளனர். இப்பெண்கள் முடிவெடுப்பதில் சில நேரங்களில் தடுமாற்றத்துடன் இருந்துள்ளனர். பிறர் நலம் பேணக்கூடிய தாயுள்ளமும், தன்னைச் சார்ந்தவர்களின் நலனில் அக்கறை கொண்டதோடு, முன்பின் அறியாதவர்களிடமும் பரிவு கொண்டு அவர்களின் பசி போக்கி இளைப்பாற்றும் தயாள குணமும் பரதவப் பெண்களிடம் இருந்துள்ளது என்பது உணர்த்தப்பட்டுள்ளது.

குழந்தை வளர்ப்பதில் பரதவ மகளிர் ஆண் குழந்தைகளைவிடப் பெண் குழந்தைகள் மேல் பாசத்தோடும் அன்போடும் இருந்ததோடு, அவர்கள் வளர்ச்சியில் கண்காணிப்புடனும் அச்ச உணர்வுடனும் வளர்த்துள்ளனர். இஃது அவர்களின் தாயன்பைக் காட்டுகிறது.

கணவன் மீது பாசத்துடனும் பேரன்புடனும் இருந்த பரதவப் பெண்கள், பொருள் தேடிக் கணவன் பிரிவதை விரும்பாமல் உடன் உறைவதையே விரும்பியுள்ளனர். அக்கணவன் நோயுற்ற காலத்தில் அவனுடன் உடன் இருந்து பணிவிடை செய்துள்ளனர்.

பரதவ மகளிர் தாம் விரும்பிய ஆணையே திருமணம் செய்து கொள்ளவேண்டும் என்ற கருத்தில் உறுதியுடன் இருந்ததோடு, அவ்வெண்ணம் ஈடேற உண்ணாமலும், உறங்காமலும் தான் கொண்ட எண்ணத்தில் உறுதியொடு இருந்துள்ளனர்.

தனக்கு நன்மை ஏற்பட வேண்டுமெனில் யாரைப் பற்றியும் அஞ்சாமல் துணிச்சலுடன் முடிவு எடுக்கக்கூடிய திறன் பரதவ மகளிரிடம் இருந்துள்ளது என்பதையும் அறியமுடிகிறது.

ஒரு செயலால் ஏற்படும் விளைவுகளை நுட்பமான முறையில் ஆராய்ந்த பரதவப் பெண்கள் மதிநுட்பத்துடன் செயல்பட்டுள்ளனர். அவர்களின் பேச்சாற்றலும் அறியப்பட்டுள்ளது.

பரதவப் பெண்கள் தாங்கள் வசித்த நிலத்தைப்பற்றிய முழுமையான அறிதலுடன் இருந்துள்ளனர். உலகியல் பற்றிய பொதுவான அறிவும் பெற்றிருந்துள்ளனர்.

நுளையர் மகளிர் விளையாடும் இடங்களிலும், பணிகள் செய்யும் போதும், வழிபாட்டிலும் குழுவாகச் செயல்பட்டுள்ளனர் என்பதும் அறியமுடிகின்றது.

பரதவப் பெண்களிடம் துன்பம் நிறைந்த நீரால் சூழப்பட்ட கடலோர வாழ்க்கை பற்றிய தாழ்வான உணர்வு இருந்துள்ளது. அதேபோல மழையை எதிர்பாராது உழாமலே உப்பு விளைவிக்கக்கூடிய சிறப்புடைய உயர்வான வாழ்க்கை நெய்தல் நில வாழ்க்கை என்ற நிலம் பற்றிய உயர்வான உணர்வும், எண்ணமும் இருந்தது போன்ற செய்திகள் ஆராயப்பட்டன.

**மேனிலை ஆய்வுக்காக**

சங்க கால நெய்தல் மகளிர் குறித்த இவ்வாய்வின் அடுத்த நிலையில், இவ்வாய்வில் குறிக்கப்பட்ட செய்திகளை மையமாகக் கொண்டும், தரவுகளாகக் கொண்டும் நெய்தல் நில மக்களை இன வரைவியல் பார்வையில் ஆராயலாம்.